அகிம்சையை நோக்கி புனித

# யாத்திரை






## விநோபா உரைகளிலிருந்து தொகுப்பு

25.01/95

# அகிம்சையை நோக்கி புனித யாத்திரை

(விநோபா உரைகளிலிருந்து தொகுத்தவை)


தொகுப்பாசிரியர் : காளிந்தி

தமிழாக்கம் : டாக்டர். மு. ஞானம்







சர்வோதய இலக்கியப் பண்ணை

32/1, மேல வெளி வீதி

மதுரை - 625 001.

*சர்வோதய இலக்கியப் பண்ணை வெள்ளி விழா சிறப்பு வெளியீடு*

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அகிம்சையை நோக்கி புனித யாத்திரை |
| தொகுப்பாசிரியர் | : | காளிந்தி |
| தமிழாக்கம் | : | டாக்டர். மு. ஞானம் |
| பொருள் | : | வாழ்க்கை வரலாறு |
| வெளியிட்டோர் | : | சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை–1. |
| அச்சுக்கோப்பு | : | லேசர் உலகம், மதுரை–1. |
| அச்சிட்டோர் | : | வைகை அச்சகம், மதுரை–1. |
| பதிப்பு | : | முதற் பதிப்பு – செப்டம்பர் 1994 |
| பிரதிகள் | : | 3000 |
| விலை | : | ரூ. **25/-** |

*Sarvodaya Ilakkiya Pannai Silver Jubilee Special Publication*

| | | |
|---|---|---|
| Title | : | Ahimsaiyai Nokki Punitha Yatirai. |
| Editor | : | Kalinthi |
| Translator | : | Dr. M. Gnanam |
| Subject | : | Life History |
| Publishers | : | Sarvodaya Ilakkiya Pannai, Madurai-1. |
| Typesetting | : | Laser World, Madurai-1 |
| Printers | : | Vaigai Achagam, Madurai-1. |
| Edition | : | First - `September, 1994 |
| Copies | : | 3000 |
| Price | : | Rs. 25/- |

பரம்தாம் பதிப்பகத்தின் அனுமதியுடன் இந்நூல் வெளியிடப்பெறுகிறது.

With kind permission from Paramdham Publications

## பதிப்புரை

இரண்டாவது உலக மகா யுத்தம் 1939ஆம் ஆண்டு தொடங்கியது. இந்திய மக்களைக் கலந்து கொள்ளாமலேயே பிரிட்டிஷ் பேரரசு இந்தியாவை யுத்த களத்தில் இறக்கி விட்டது. பிரிட்டிஷ் ஆட்சியின் இந்தச் செயலைக் கண்டித்து காந்தியடிகள் யுத்த மறுப்பு இயக்கம் ஒன்றை ஆரம்பிக்க முடிவு செய்தார். இந்திய சுதந்திரப் போராட்ட வரலாற்றில் நெருக்கடியான காலகட்டம். பிரிட்டிஷ் பேரரசின் தலைமையில் இயங்கிய நேச நாடுகளும், பாசிச ஜெர்மன் நாட்டுத் தலைமையில் இயங்கிய அச்சு நாடுகளும் உலக வரலாற்றில் மிக மோசமான வன்முறை யுத்தத்திற்குத் தயாராகிக் கொண்டிருந்த நேரம். இந்த யுத்தத்தின் முடிவு மனித வர்க்கத்தையே அழித்துவிடக்கூடும் என்ற அச்சம் உலகெங்கும் பரவியிருந்தது. இந்திய தேசிய காங்கிரஸ் இந்த யுத்தத்தில் பிரிட்டிஷ் பேரரசை ஆதரிக்க வேண்டுமென்ற கருத்தும், அதே நேரத்தில் 'நம் எதிரிக்கு எதிரி நம் நண்பன்' என்ற மிகச் சாதாரண அரசியல் கொள்கையின் அடிப்படையில் ஜெர்மனியை ஆதரிப்பதின் மூலம் நாட்டு விடுதலை விரைவில் கிட்டும் என்ற கருத்தும் இருந்தன. இந்தக் காலகட்டத்தில் அகிம்சையின் வழியில் நின்று இந்தப் போரை எதிர்ப்பது என்று காந்தியடிகள் முடிவெடுத்தார். அதற்கு வன்முறையின் ஆற்றலுக்கு எதிராக அகிம்சையின் ஆற்றல் சிறந்தது என்பதை உலகத்திற்கு எடுத்துக்காட்ட இது ஒரு சந்தர்ப்பம் என காந்தியடிகள் கருதினார். இத்தகைய ஒரு அகிம்சைப் போராட்டத்திற்கு யார் தலைமை தாங்குவது என்ற நிலை ஏற்பட்டது. அந்த அகிம்சைப் போராட்டமானது ஆன்மீக சக்தியைப் பெருக்கி அகிம்சையின் ஆற்றலை வெளிக்காட்டுவதற்குத் தன்னை முழுமையாகப் பக்குவப்படுத்தி சர்வபரித் தியாகத்திற்குத் தன்னைத் தயார்ப்படுத்திய ஒருவரைத் தேர்ந்தெடுக்க காந்திஜி விரும்பினார். தாம் இந்தப் போராட்டத்தில் ஈடுபடப்போவதில்லை என காந்திஜி முடிவு செய்தார். அவர் பின்வருமாறு கூறுகிறார்: "நான் இம்முறை இந்த சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபடப்போவதில்லை. ஏற்கனவே குறிப்பிட்டபடி போராட்டத்தில் ஈடுபட்டு நான் கைது செய்யப்பட்டால், அதனால் அரசுக்குப் பெரிய தர்மசங்கடமான நிலை ஏற்படும். மேலும் வெளியில் நான் இருப்பதன் மூலம் தனி நபர் சத்தியாகிரகத்தினால் ஏற்படும் பின் விளைவுகளைச் சந்திக்க முடியும். நான் சிறை செல்வதினால் காங்கிரஸ்காரர்கள் அனைவரும் என்னைப் பின்பற்றிச் சிறை செல்ல வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விடும். அடுத்து நிலைமை எவ்வாறு சிர்குலையும் என்பதுபற்றி என்னால் அனுமானிக்க முடியவில்லை. அந்நிலையில் பிரிட்டிஷ் பேரரசு எவ்வித நிலையை எடுக்கும் என்றும் என்னால் கூற முடியாது. நான் கடவுளின் மீது முழு பாரத்தையும் போட்டு விட்டு அடுத்த நடவடிக்கைக்கு நாட்டைத் தயாராக்க வேண்டியவனாய் இருக்கிறேன்".

இந்தச் சூழலில் நம் நாட்டின் வரலாற்றிலே ஒரு இக்கட்டான தருணத்தில் முதல் சத்தியாகிரகி யார் என்பதை காந்திஜி முடிவு செய்கிறார்.

நாடே காந்திஜியின் முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. அன்றைய சூழலில் காந்திஜியின் நம்பிக்கைக்குப் பாத்திரமான, நாட்டு மக்களின் இதயங்களிலே குடிகொண்டிருந்த, காந்தியடிகளாலே இந்த நாட்டின் முடிசூடா மன்னன் என்று அழைக்கப்பட்ட பண்டித ஜவஹர்லால் நேருவைத்தான் முதல் சத்தியாகிரகியாக காந்திஜி தேர்ந்தெடுப்பார் என அனைவரும் எதிர்பார்த்தனர். ஆனால் காந்திஜி அவர்கள் ஆச்சார்ய விநோபா பாவே அவர்களை முதல் சத்தியாகிரகியாகத் தேர்ந்தெடுத்தார். அதற்கான காரணத்தை 20-10-1940ஆம் தேதியிட்ட 'ஹரிஜன்' பத்திரிகையில் அறிக்கையாக வெளியிட்டிருந்தார். மிக நீண்ட அறிக்கையின் முக்கியப் பகுதி வருமாறு: "இந்த விநோபா பாவே என்பவர் யார்? அவர் ஏன் முதல் சத்தியாகிரகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்? விநோபா பாவே அவர்களை நான் யாரென்று அறிமுகப்படுத்த வேண்டியது அவசியமாகிறது. நாம் இப்போது நடத்தப் போகும் இந்த சட்டமறுப்பு இயக்கம் அநேகமாகக் கடைசி இயக்கமாக இருக்கும். எனவே இப்போராட்டம் யாரும் குறை சொல்ல முடியாதபடி இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். இப்போராட்டத்தில் கலந்து கொள்பவர்களின் எண்ணிக்கையை விட இப்போராட்டத்தின் தரம் உயர்ந்ததாய் இருக்கவேண்டுமென்று கருதுகிறேன். விநோபா அவர்கள் சிறந்த சமஸ்கிருதப் புலவர். ஆசிரமம் ஆரம்பித்த காலத்திலேயே அதன் ஊழியராகச் சேர்ந்தவர். தோட்டி வேலையிலிருந்து சமையல் வேலை வரை எந்த வேலையையும் மிகுந்த ஈடுபாட்டோடு செய்தார். தன்னுடைய இதயத்திலிருந்து தீண்டாமை என்ற எண்ணத்தை அறவே ஒழித்துவிட்டிருந்தார். எல்லா மதங்களும் சமம் என்ற கொள்கையில் நான் எவ்வளவு உறுதியாக இருந்தேனோ அதே அளவுக்கு விநோபா அவர்களும் உறுதியாக இருந்தார். இஸ்லாம் மதத்தைப்பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்வதற்கு ஓராண்டு காலம் புனித குரானை அரேபிய மொழியிலேயே கற்றறிந்தார். இதற்காக அரபு மொழியையும் கற்றார். உலக வரலாற்றைப்பற்றித் தெளிவாக உணர்ந்த வரலாற்று மாணவர். நம் நாட்டின் அரசியல் சுதந்திரத்தின் அவசியத்தை நன்கு உணர்ந்தவர். இதற்கு முன்பு நடந்த சத்தியாகிரகம் அனைத்திலும் பங்கு கொண்டவர். ஆனாலும் கூட அரசியலைப் பொறுத்தவரையில், தன்னை முன்னிலைப் படுத்திக் கொள்ளாமல் பணிவாக இருந்தவர். நிர்மாணப் பணியுடன் சேர்ந்து செய்யும் சட்டமறுப்பு இயக்கம்தான் ஆரவாரமான அரசியல் ஆர்ப்பாட்டங்களை விடச் சிறந்த பயனைக் கொடுக்கும் என்ற திடமான நம்பிக்கை கொண்டிருந்தார் விநோபா. மேலும் நிர்மாணப் பணியில் நம்பிக்கையில்லாத போதும், அதில் ஆழ்ந்து ஈடுபடாத போதும், அகிம்சை வழியான சட்ட மறுப்பு என்பது சாத்தியமில்லாதது என்று நம்பினார்.

"விநோபா முழுக்க முழுக்க யுத்த எதிர்ப்பாளர். மனச்சாட்சியின் அடிப்படையில் யுத்த ஆயத்தங்களுக்கு உதவி செய்வது தவறு என்று எண்ணக்கூடியவர். எனவே இந்த சத்தியாகிரகப் போராட்டத்திற்கு நான் அவரை முதல் சத்தியாகிரகியாகத் தேர்ந்தெடுக்க எண்ணியுள்ளேன். அவரை முதல் சத்தியாகிரகியாகத் தேர்ந்தெடுத்ததற்கான காரணங்களை நாட்டு மக்களுக்கு நான் விளக்கியாக வேண்டும். நான் நடத்தவிருக்கும் சத்தியாகிரகப் போராட்டத்தின் வரிசையிலே இப்போது நடக்க இருக்கும்

போராட்டம்தான் கடைசியாக இருக்கக் கூடும். எனவே இப்போராட்டம் பற்றி எவ்வண்ணமும் குறை வராதவாறு இருக்க வேண்டுமென்று எண்ணுகிறேன். இந்த ஒரே காரணத்திற்காகவே உன்னதமான ஒரு சத்தியாகிரகியை நான் தேர்ந்தெடுக்க விரும்புகிறேன். அவர்தான் விநோபா.

நாட்டு மக்களிடையே அரசியல்ரீதியாக அவ்வளவு தூரம் அறிமுகமில்லாத விநோபா இப்போராட்டத்தின் மூலம் உலகெங்குமுள்ள மக்களின் கவனத்திற்கு உரியவராக விளங்கினார். பேராற்றல் மிக்க ஆத்ம சக்தியான அகிம்மையின் ஆற்றலை உலகிற்கு எடுத்துக்காட்ட ஒப்பற்றதொரு சத்தியாகிரகி தோன்றிவிட்டார்.

மேற்கண்ட செய்திகள் விநோபாவைப்பற்றி காந்தியடிகள் கொண்டிருந்த கருத்தாகும். தம்முடைய குருவான காந்தியடிகள்பற்றி விநோபாஜி கொண்டிருந்த கருத்தை அறிந்துகொள்வது நமக்கெல்லாம் பயனுள்ளதாக இருக்கும். "அஸ்ஸாமில் தோன்றிய மாதவ தேவர் என்னும் ஒரு பெரும் ஞானி மனிதர்களை நான்கு பிரிவாகப் பிரிக்கின்றார். மற்றவர்களிடத்தில் குறைகளைத் தவிர நிறையையே காணாதவர்கள் ஒரு வகை; மற்றவர்களிடத்தில் குறையையும் நிறையையும் சமமாகக் காண்பவர்கள் இன்னொரு வகை; மூன்றாம் வகையைச் சேர்ந்தவர்கள் மற்றவர்களிடத்தில் நிறைகளை மட்டுமே காண்பவர்கள். இவர்களை "நல்லவர்கள்" என்று மாதவ தேவர் குறிப்பிடுகின்றார். நான்காவது வகையைச் சேர்ந்தவர்கள் இதைவிட உயர்ந்தவர்கள். அவர்கள் ஒருவரிடத்தில் சிறிதளவே நல்ல குணங்கள் இருந்தாலும் அவற்றை நூறு மடங்கு பெரிதாக்கிப் பாராட்டும் குணம் உள்ளவர்கள். காந்தியடிகள் இந்த நான்காவது வகையைச் சார்ந்தவர். என்னிடமுள்ள சில நல்ல குணங்களையே பலமடங்கு பெரிதாக்கிக் காட்டி என்னை மக்கள் மத்தியில் உயர்ந்த மனிதனாக அறிமுகப்படுத்திவிட்டார்".

காந்தியடிகளின் உயர்ந்த குணங்களைப்பற்றி விநோபாஜி கொண்டிருந்த மேற்கூறிய கருத்தினைத் தமது 75 ஆவது வயது பிறந்த நாளையொட்டி சேவா கிராமத்தில் 1969ஆம் ஆண்டு நடைபெற்ற விழாவில் மிகவும் நன்றியுணர்ச்சியோடு கண்ணீர் மல்கக் குறிப்பிட்டார்.

காந்தியடிகளும் விநோபா பாவேயும் இந்த மனித சமுதாயத்தை மேம்படுத்தவந்த யுக புருஷர்கள். ஆச்சார்ய விநோபா பாவேக்கு மகாத்மாகாந்தி குரு; அதே போன்று மகாத்மா காந்திக்கு விநோபா பாவே சிஷ்யர். நமது நாட்டில் வழிவழி வந்த குரு - சிஷ்ய பாவனைக்கு இதைவிடச் சிறந்ததொரு எடுத்துக்காட்டு இருக்க முடியாது. ஒரு யுக புருஷருக்கு மற்றொரு யுகபுருஷர் சீடர். இருவரும் சத்தியத்தை நாடிப் புனிதயாத்திரை செய்தவர்கள். சத்தியத்தை நாடிச் செல்பவருக்குரிய இலக்கணத்தை காந்திஜி கூறும்பொழுது, "சத்தியத்தை நாடிச் செல்பவர் தூசிக்கும் தூசியாகப் பணிவு கொள்ளவேண்டும். உலகம் தூசியைக் காலின் கீழ் வைத்து நசுக்குகிறது. ஆனால் சத்தியத்தை நாடுகிறவரோ அந்தத் தூசியும் தம்மை நசுக்குமளவு பணிவுள்ளவராக இருக்க வேண்டும்" என்று கூறுகிறார்.

சத்தியத் தேட்டத்தை நோக்கிப் பயணம் செய்த இந்த இரு யுக புருஷர்களின் வாழ்க்கை மாபெரும் இலக்கியமாகத் திகழ்வதைக் காண்கிறோம்.

சத்தியத்தை நோக்கித் தாம் செய்த யாத்திரையைப் பற்றி காந்திஜி சத்திய சோதனை என்ற தலைப்பில் சுயசரிதை எழுதியுள்ளார். ஆனால் ஆச்சார்ய விநோபா அவர்கள் தம்முடைய சுயசரிதையை எழுத வில்லை என்பது மட்டுமல்ல, சுயசரிதை எழுதுவதில் விருப்பமுமில்லாதவர். ஆனால் கிட்டத்திட்ட கால்நூற்றாண்டு காலம் நடைபெற்ற பூமிதான யாத்திரையின் போது விநோபாஜி அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவு- களிலிருந்து அவரது வாழ்க்கை வரலாற்றினை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. அதை விநோபா அடிகளின் பவுனார் ஆசிரமத்தைச் சார்ந்த காளிந்தி அவர்கள் ஒரு நூலாகத் தொகுத்து அளித்துள்ளார். ஹிந்தி மொழியிலே உருவாக்கப்பட்ட அந்த நூலை டாக்டர். மு. ஞானம் அவர்கள் தமிழிலே மொழிபெயர்த்துள்ளார். தமிழ்கூரும் நல்லுலகம் விநோபா அடிகளின் புரட்சி வாழ்க்கையை அறிந்து கொள்ள வேண்டும் என்பது எங்கள் உள்ளக்கிடக்கை. விநோபா அடிகளின் நூற்றாண்டு விழாவினை யொட்டி வெள்ளி விழாக் காணும் சர்வோதய இலக்கியப் பண்ணை இந்நூலை வெளியிடுவதில் பெருமைப்படுகிறது.

இந்நூல் அழகிய முறையில் அச்சாகி வெளிவர உதவிய வைகை அச்சக உரிமையாளர் திரு. S. கிருஷ்ணசாமி அவர்களுக்கும் மூல நூலின் தமிழாக்கத்தை வெளியிட அனுமதி தந்த பரம்தாம் பதிப்பகத்தாருக்கும் நன்றி தெரிவித்துக்கொண்டு இந்நூலை தமிழ் மக்கள் முன் படைக்கிறோம்.

மதுரை
11-9-1994

*மு. மாரியப்பன்*
தலைவர்
சர்வோதய இலக்கியப் பண்ணை

# பொருளடக்கம்

# தொடக்கத்தில்

நான் ஒரு வித்தியாசமான மனிதன். என் உலகமே அலாதியானது. என் மனத்தில் வற்றாத அன்பு ஊற்று இருக்கிறது என்பது என் உறுதியான கருத்து. அதை நான் எப்போதும் உணர்கிறேன். எனக்கு சித்தாந்தங்கள் கிடையாது; சிந்தனைகளே உண்டு. சிந்தனைகளைப் பரிமாறிக் கொள்கிறேன். அவை நான்கு சுவர்களுக்கு இடையே அடைபட்டவை அல்ல. நல்லோர்களுடன் உரையாடி அவர்களின் சிந்தனைகளைப் பெறலாம். நம் சிந்தனைகளை அவர்களுக்குத் தரலாம். இவ்வண்ணம் சிந்தனை வளர்ச்சி பெறுகின்றது. இதை நான் அனுபவ பூர்வமாக உணர்கிறேன். எனவே நான் எந்த வாதத்திற்கும் 'இய'த்திற்கும் பிரதிநிதியல்ல. யார் வேண்டுமானாலும் என் கருத்தை ஏற்கலாம். அன்பிற்கும் சிந்தனைக்கும் இருக்கும் ஆற்றல் எந்த சித்தாந்தத்திற்கும், எந்த சாஸ்திரத்திற்கும், எந்த ஆயுதத்திற்கும், வேறு எதற்குமே கிடையாது. எனவே உண்மையான ஆற்றல் என்பது அன்பிலும், சிந்தனையிலுமே இருக்கிறது என்று நான் நம்புகிறேன். எனவே உறுதியான, மாற்றிக் கொள்ள முடியாத சித்தாந்தங்கள் எதையும் என்னிடம் எதிர்பார்க்க வேண்டாம். சிந்தனைகளையே எதிர்பாருங்கள். நான் எந்த வினாடியும் மாறக்கூடியவன். யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் என்னுடன் மோதி, தன் கருத்தை ஏற்கச் செய்து என்னை ஆட்கொள்ள முடியும். கருத்தை ஏற்கச் செய்யாமல் என்னைப் பணியச் செய்துவிட எந்தச் சக்தியாலும் முடியாது.

நான் வெறும் மனிதன். என் நெற்றியில் "லேபில்" எதுவும் கிடையாது. நான் எந்த ஸ்தாபனத்தின் அங்கத்தினரும் அல்ல. அரசியல் கட்சிகளுக்கும் எனக்கும் தொடர்பு கிடையாது. ஆக்கவேலைகளை நான் விரும்புகிறேன். நான் பிராமணனாகப் பிறந்தேன். ஆனால் உச்சிக் குடுமியை அகற்றி என் பிராமணத்துவத்தையே முடித்து விட்டேன். என்னைச் சிலர் ஹிந்து என்கிறார்கள். ஆனால் நான் ஏழேழுமுறை திருக்குர்ஆனையும் பைபிளையும் படித்திருக்கிறேன். ஒரு வகையில் என் ஹிந்துத்துவமே போய்விட்டது எனலாம். என் கருத்துக்கள் மக்களுக்குப் பிடித்திருப்பதற்குக் காரணம் அவற்றிற்கு அடிப்படையில் அன்பும், கருணையும், சிந்தனையும் உள்ளதே ஆகும். என்னிடம் இருப்பதெல்லாம் சிந்தனைகளேயன்றி சித்தாந்தங்கள் அல்ல. ஒருவகையில் என்னை நம்பவே முடியாது. இன்று ஒன்று சொல்வேன்; நாளை இன்னொன்று சரியென்று பட்டால் அதைச் சொல்லத் தயங்கமாட்டேன். நேற்று இருந்த நான் வேறு, இன்று இருக்கும் நான் வேறு. நான் ஒவ்வொரு வினாடியும் புதிதாகச் சிந்திக்கிறேன். நான் எப்போதும் மாறக்கூடியவன்.

நான் எல்லோருக்கும் உரியவன், எல்லோரும் எனக்கு உரியவரே. யாரையாவது கூடுதலாகவோ, குறைவாகவோ நேசிக்க எனக்குக் காரணம் எதுவும் இல்லை. இறைதூதர் முகம்மது நபிநாயகம் அவர்களின் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி வருகிறது. அதில் அபூபக்கரைப் பற்றி முகம்மது நபி "ஒருவனை விட மற்றவனை அதிகம் நேசிக்க வேண்டாம் என்பது இறைகட்டளை. இல்லாவிட்டால் நான் அவரை (அபூபக்கரை) அனைவரிலும் அதிகமாக நேசிப்பேன்" என்று கூறுகிறார். அதாவது ஒருவனைவிட மற்றவனை அதிகம் நேசிப்பதை இறைவன் தடை செய்திருக்கிறார். இல்லாவிட்டால் அபூபக்கரை அனைவரிலும் அதிகமாக நேசிப்பேன் என்கிறார்.

இதுதான் என் உள்ளத்தில் இருப்பதும். நேசிப்பதில் வேற்றுமை பாராட்ட என்னால் முடியாது.

லூயி பாஸ்சரின் ஒரு ஓவியம் பார்த்தேன். அதன் கீழ் "உன் மதம் என்ன என்று நான் அறிந்துகொள்ள விரும்பவில்லை; உன் நினைவுகள் எப்படிப்பட்டவை என்றும் நான் அறிந்து கொள்ள விரும்பவில்லை; உன் துன்பங்கள் என்ன என்பதையே நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன். அவற்றை அகற்றுவதில் உதவி செய்ய விரும்புகிறேன்" என்று எழுதியிருந்தது. இப்படிச் செயலாற்றுபவர்களே மனிதனாகப் பிறந்த கடமையைச் செய்கிறார்கள்; என் முயற்சியும் அதுவே.

நான் எந்தச் செயலை எடுத்துக் கொண்டாலும் அதன் ஆழத்தில் சென்று அதன் அடிப்படையைக் காணத் தவறுவதில்லை. நான் என் வாழ்க்கையின் முப்பது ஆண்டுகளைத் தனிமைச் சிந்தனையில் கழித்திருக்கிறேன். அதற்கிடையிலேயே என்னால் முடிந்த தொண்டுகளைச் செய்து வந்திருக்கிறேன். ஆனால் என் வாழ்க்கையை சேவாமயமாக்க எவ்வளவோ முயன்றும் கூட அடிப்படையில் பார்த்தால் அது சிந்தனை மயமாகவே இருந்து வந்துள்ளது. சமுதாயத்தில் செய்யவேண்டிய மாற்றங்களின் அடிப்படையை ஆராய அந்தச் சிந்தனை தேவைப்பட்டது. இப்போது அடிப்படை விஷயங்களில் நான் தெளிவாக இருக்கிறேன். எந்தப் பிரச்சினையும் என்னை அச்சுறுத்துவது இல்லை. எவ்வளவு பெரிய பிரச்சினையும் என் முன்னால் சின்னதாகிவிடுகிறது. பிரச்சினை எதுவாகத்தான் ஆகட்டுமே, மனித இயல்புக்குள்ளிருந்து தானே வருகிறது? மனித அறிவினால் அதைத் தீர்த்து விடலாம்.

நான் ஆசிரமத்தில் தொண்டாற்றிய போதும் சரி, வெளியே செயல்பட்ட போதும் சரி, என் மனதில் இருந்த ஒரே யோசனை நமது சமூக மற்றும் தனி மனிதப் பிரச்சினைகளுக்கு அஹிம்சைத் தீர்வு எங்ஙனம் காண்பது என்பதேயாகும். இதுதான் என் தலையாய வேலை. இதற்காகவே நான் தெலிங்கனா போனேன். அந்த வேலையைத் தட்டிக் கழித்திருந்தால் நான் என் அஹிம்சை மற்றும் சாந்திசேனைப் பணி செய்யும் என் பிரதிக்ஞையை முறித்ததாகி இருக்கும். சுதந்திரம் அடைந்த பின் இந்த நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அஹிம்சை மீது அவநம்பிக்கை கொள்ளச் செய்து விட்டன. பல்வேறு வன்முறைச் சக்திகள் இந்தியாவில் தோன்றி

விட்டன. காந்திஜியின் மறைவுக்குப்பின் அஹிம்சையின் சமுதாய மதிப்பை உருவாக்குவதே என் வேலையாயிற்று.

என் ஈடுபாடு மஹாவீரரின் செயல்முறையை ஒட்டியது; ஆனால் என் செயல்பாடோ புத்தரின் செயல்முறையை ஒட்டியது. இரண்டு பேரின் செயல்முறையிலும் முரண்பாடு எதுவும் இல்லை. மஹாவீரர் எந்த ஒரு பிரச்சினையையும் எடுத்துக்கொண்டு ஒரு கருத்தைப் பரப்பவில்லை. போகும் இடத்தில் உரையாடி எதிரேயிருப்புவரின் கருத்தை அறிந்து வாழ்க்கைக்கு ஒரு வழிகாட்டுவார். யாருக்கு எந்த சாஸ்திரத்தில் நம்பிக்கை இருக்கிறதோ அந்த சாஸ்திரத்தின் அடிப்படையில் அறிவுரை கூறுவார். எந்த சாஸ்திரத்திலும் நம்பிக்கை இல்லாவிட்டாலும், சாஸ்திரங்களின் துணை இன்றியே அறிவுரை கூறுவார். எப்படியும் அஹிம்சையை மையப் பொருளாக வைத்தே அறிவுரை வழங்குவர்ர். புத்தரோ அஹிம்சையைப் பரப்ப சமுதாயப் பிரச்சினையை எடுத்துக் கொண்டார்.

எதையாவது ஆதாரமாக வைத்துக் கொள்ளலாமா, கூடாதா என்பது வேறு விஷயம். ஆனால் ஆதாரமே முக்கியமாகி விடக்கூடாது. எந்த உட்பொருள் விளக்கத்திற்காக அந்த ஆதாரம் எடுத்துக்கொள்ளப் படுகிறதோ அந்த உட்பொருள் முக்கியத்துவம் இழந்துவிடக் கூடாது. ஆதாரம் முக்கியமாக அதன் உட்பொருள் முக்கியத்துவம் இழக்கும்போது அது அபாயமாகி விடுகிறது. அதேசமயம் ஆதாரமே எடுத்துக் கொள்ளாவிட்டால் கருத்து சிதறிவிடுகிறது. நல்லெண்ணம் என்பது உருவமின்றியே பரவக்கூடியது. ஆனால் நற்சிந்தனையோ உருவமின்றி ஒருமைப்படுவதில்லை; சாதாரண மக்களைக் கவர்வதில்லை, இப்படியாக ஒரு ஆதாரத்தை மேற்கொள்ளுவதில் ஒரு அபாயம் என்றால், மேற்கொள்ளாமல் இருப்பதிலும் ஒரு அபாயம் இருக்கிறது. ஆதாரத்தை மேற்கொள்ளுவதில் ஒரு குணம் இருக்கிறது என்றால் அதை மேற்கொள்ளாமல் இருப்பதில் வேறொரு குணம் இருக்கிறது. நான் பிரச்சினையை ஆதாரமாக எடுத்துக் கொண்டேன். ஆனாலும் சாம்ய யோகத்தையும், அன்பையும் உணர்த்துவதே என் உண்மையான நோக்கம். அறிவின் சொற்படி ஒரு ஆதாரத்தை எடுத்துக்கொண்டேன். என்றாலும் என் மனம் அந்த ஆதாரத்தினின்றும் மேலெழுந்து சிந்திக்கிறது. அதிலேயே அது லயிக்க விழைகின்றது. அதே சமயம் ஆதாரத்தையும் நான் விட்டுவிடுவதில்லை.

வாழ்க்கையில் எதையெல்லாம் செய்யலாம் என்று எனக்குத் தோன்றியதோ அவற்றில் சாஸ்திரங்களுக்குப் பிறகு எனக்குத் துணை என்று நான் கருதுவது மூவரை: ஆதிசங்கரர், ஞானதேவர், காந்திஜி. காந்திஜியின் கருத்துக்களையும் நூல்களையும் படித்ததுடன், அவருடன் சேர்ந்திருக்கும் பேறும் எனக்குக் கிடைத்தது. அவர் ஏற்படுத்திய தொண்டு, பணிகள் சிலவற்றைச் 'செய்வதில் என் இளமை கழிந்தது. நல்லோர்தம் சேர்க்கை, அவர்தம் உரை கேட்டல், தொண்டாற்றும் பேறு மூன்றும் சேர்ந்து அந்த மாமனிதர் உறவு முழுமை பெறுகிறது. அது எனக்குக் கிடைத்ததுஅவர் எனக்குச் செய்த உபகாரம் மிகப்பெரிது. அவ்வண்ணமே ஆதிசங்கரரும்

எனக்குப் பெரும் உபகாரம் செய்திருக்கிறார். தர்க்க மனத்தில் எழும் வேதாந்த சந்தேகங்கள் என் மனத்திலும் எழுந்தன. அவற்றை ஆதிசங்கரர் தீர்த்து வைத்தார். அவருடைய சிந்தனை வளத்திற்கு நான் என்றும் கடன்பட்டவன். மூன்றாமவரான ஞானதேவர் எனக்கு செய்திருக்கும் உபகாரம் பற்றிச் சொல்ல என்னிடம் வார்த்தைகளே இல்லை. அவர் என் சிந்தனை, இதயம், செயல் முறை மூன்றையும் மாற்றியிருக்கிறார். என் உடலில் கூட அவருடைய தாக்கம் இருக்கிறது என்பது என் கருத்து. அவ்வளவு தூரம் சகலவிதத்திலும் அவர் என்னைக் கவர்ந்திருக்கிறார். அடிப்படையில் நான் முரடன், ஒரு கரடுமுரடான கல்; இந்தக் கல்லில் உறுதி சேர்த்தவர் சங்கராச்சாரியார். காந்திஜி இந்தக் கல்லில் வேலைப்பாடுகள் செய்து உருவம் கொடுத்தார். ஆனால் இந்தக் கல்லிலிருந்து தண்ணீரை வரவழைக்கும் சாமர்த்தியம் யாருக்காவது இருந்தது என்றால், என் வாழ்விலும் நெஞ்சத்திலும் இனிமை சேர்க்கும் திறன் யாருக்காவது இருந்தது என்றால், அது ஞானேஸ்வரருக்குத்தான் இருந்தது.

நான் யார், எனக்கு வாய்ந்தவை என்ன என்று யோசிக்கும் போது சில விஷயங்கள் நெஞ்சில் ஓடுகின்றன. சாதாரணமாகத் தோன்றும் அவை உண்மையில் பெரும் பேறுகளாகும். எனக்குக் கிடைத்த பெற்றோர்கள் அசாதாரணமானவர்கள் என்றே எல்லோரும் சொல்கிறார்கள். எனக்குக் கிடைத்த சகோதரர்களும் அசாதாரணமானவர்கள் என்றே சொல்ல வேண்டும். எனக்குக் கிடைத்த வழிகாட்டிகளோ சந்தேகமில்லாமல் மஹாத்மாக்கள். என் நண்பர்கள் அனைவருமே இனியவர்கள். என் மாணவர்களைப் பார்த்து நானே மனத்தைப் பறிகொடுத்திருக்கிறேன். இப்படியாக நான்பெற்ற பேறுகள் ஏராளம். அத்துடன் எனக்குப் பல மொழிகள் தெரிந்திருப்பதால் பல சாது மகாத்மாக்களின் சிந்தனை விருந்தைச் சுவைக்கும் வாய்ப்பும் கிடைத்தது, கிடைத்தும் வருகிறது. இதுவும் ஒரு பாக்கியமே. இப்படியாக நான் பெற்ற நற்பேறுகள் ஏராளம். ஆனால் இவையாவும் நாம் கற்பித்துக் கொள்ளுபவையேயாகும். நான், நீங்கள், அனைவரும் பெற்ற பெரும் பேறு நாம் அனைவரும் இறைவனின் அங்கங்கள். அந்த மஹா சாகரத்தில் எழுந்த அலைகள் அவை. நாம் அனைவரும் இறைவனில் அடக்கம். இதை உணர்வதே கடைத்தேறும் மிகப்பெரும் பேறாகும்.

# இளமைப் பருவம்

என் குழந்தைப் பிராயம் கொங்கணத்தில் (குலாபா மாவட்டம், மஹாராஷ்டிரம்) கழிந்தது. காகோதே மிகச்சிறிய ஊர். ஊரில் பள்ளிக் கூடம் கிடையாது. எழுத்தறிவென்பது குறிப்பிட்டுச் சொல்லுமளவிற்கு யாருக்கும் கிடையாது. காலையில் மாவரைக்க ஆரம்பித்து விடுவார்கள். அதன்பிறகு முற்றம் கூட்டி, சாணம் கரைத்துத் தெளிக்கும் வேலை ஆரம்பிக்கும். கூடவே இறைவனை நினைத்து பஜனைப் பாடல்களையும் இனிய குரலில் பாடுவார்கள். சூழ்நிலை காலை நேரத்தையே புனிதமாகக் கொண்டிருக்கும்.

எங்கள் தாத்தா இனாம்தாரர் (ஜமீன்தார் போன்றவர்). பெரிய வீடு. வீட்டுக்கு முன் பெரிய முற்றம். சிறுவயதில் நான் இங்கே விதம் விதமான தவளைகளைப் பார்த்திருக்கிறேன். இரவெல்லாம் அவை கத்தும் இரைச்சல் கானம் நடக்கும். முதலில் இவ்வளவு தவளைகளை ஒரே இடத்தில் பார்க்கும் போது வின்யா (வினோபாஜியை அவரது தாயார் வின்யா என்று அழைப்பது வழக்கம்) பயந்து விடுவது வழக்கம். பிறகு வேதத்தில் தவளைகளைப் பற்றிப் படித்தேன். வசிஷ்டரின் சுலோகத்தில் அது வருகிறது. ஒரு தவளை மாடு அளவு பெரிது. இன்னொன்று ஆடு அளவு. மற்றொன்று திட்டுத்திட்டானது. அவை கத்தும்போது அந்தணர்கள் வேதம் ஓதுவது போல இருக்கிறது என்று அதில் வருகிறது. கோடையில் தவம் செய்யும் பிராமணர்களைப் போல அவை இளைத்து உடல்காய்ந்து விடுகின்றன. மழையில் புத்துணர்ச்சி பெற்று உற்சாகத்துடனும், மகிழ்ச்சியுடனும் சப்திக்கின்றன என்று எழுதுகிறார். தவளைகளை வேதாந்தமாகப் பார்த்த கண்ணோட்டம் அது.

இப்போது அங்கே அதில் கால்வாசி தவளைகள் கூட இல்லையாம். அவற்றின் கால்கள் அமெரிக்காவில் இருக்கும் மக்களுக்கு மிகவும் பிடித்துள்ளதால் தவளைகளைப்பிடித்து அவற்றின் கால்களை பிய்த்து அனுப்புகிறார்கள் கொங்கண வாசிகள். "பாபா காகோதே எப்போது வருவீர்கள்?" என்று கேட்கும்போது, "அந்த முற்றத்தில் முன்போலத் தவளைகள் இருக்கும்போது" என்று நான் பதில் சொல்லுவதுண்டு.

காகோதேயில் ஒரு குளம் இருக்கிறது. மிகப்பெரிய குளம். அதற்கு அருகில் ஒரே நெடிதுயர்ந்த மரமும், ஒரு பெரிய கோயிலும் இருந்தன. பல ஆண்டுகள் கழித்து நாற்பது வயதில் அங்கு போனபோது அந்தக்குளம், மரம், கோயில் எல்லாம் சிறியவையாகத் தோன்றின. இக்கரையிலிருந்து அக்கரைக்குக் கல் எறியும் அளவு குளம் சிறியதாக இருந்தது. சாதாரணமாக

இருக்கிற அளவுதான் மரமும் இருந்தது. குழந்தைக் கண்களுக்கு அவை அத்தனை பெரியதாகத் தோன்றியிருக்கின்றன. அவ்வளவுதான்.

ஊரில் வின்யா அங்கும் இங்கும் சுற்றித் திரிவது வழக்கம். கூலியாட்கள் வேலை செய்வதை வேடிக்கை பார்ப்பான். ஒரு பெரிய கல்லை உடைக்கும் வேலை நடந்து கொண்டிருந்தது. வின்யா நின்று வேடிக்கை பார்ப்பது வழக்கம். "கல் உடைக்கிறாயா" என்று கூலியாட்கள் கேட்டால் வின்யா "உம்" என்பான். கூலியாட்கள் கல்லை அடித்து, அடித்து அது உடைய இருக்கும் சமயத்தில் சுத்தியலை வின்யாவிடம் கொடுப்பார்கள். வின்யா அடிக்கும்போது கல் உடைந்துவிடும். உடனே கூலியாட்கள் வின்யாவைக் குதூகலப்படுத்த "ஜமீன்தார் பையன் கல்லை உடைத்து விட்டான். வின்யா கல்லை உடைத்துவிட்டான்" என்று கூச்சலிடுவார்கள்.

காகோதே வீட்டில் ஏதாவது விசேஷங்களுக்கு பிராமணர்கள் வந்து வேதம் ஓதுவார்கள். அதைக்கேட்டுக் கேட்டு வின்யாவும் மராட்டியில் வேதம் படித்துக் கொண்டான். பிராமணர்கள் வேதங்களின் மந்திரங்களைக் குறில், நெடில், அளவு உயிர்களுடன் (முறையே ஒன்று, இரண்டு, மூன்று மாத்திரை உயிர்கள்) ஒலிப்பதுபோலவே வின்யாவும் வேதத்தை ஓதுவான்.

காகோதே கிராமத்து வீட்டில் ஒரு குருட்டு சித்தப்பா இருந்தார். அவர் நல்ல உழைப்பாளி. நல்ல இயல்புகள் கொண்டவர். வீட்டில் அவருக்கு மிகுந்த கவனத்துடன் பணிவிடைகள் செய்வார்கள். நாங்கள் எல்லோரும் தந்தையுடன் பரோடா வந்துவிட்டபோது அவர் காகோதேயிலேயே தங்கிவிட்டார். ஒருநாள் காகோதேயிலேயே குருட்டு சித்தப்பா இறந்து விட்டார் என்று கடிதம் வந்தது. காகோதேயிலிருந்து எந்தச் சாவுச்செய்தி வந்தாலும் எங்கள் அம்மா எங்கள் அனைவரையும் குளிப்பாட்டி தானும் குளிப்பாள். ஆனால் அந்தச் சாவுக்கு அவள் அப்படியெல்லாம் ஒன்றும் செய்யவில்லை. நான் அம்மாவிடம் "குருட்டுச் சித்தப்பா செத்துப் போய் விட்டதாகச் செய்தி வந்திருக்கிறதே, நாம் எல்லோரும் ஏன் குளிக்கவில்லை?" என்று கேட்டேன். "தம்பி அவர் நம் உறவினர் இல்லை. கஷ்ட தசையில் இருந்தார். கவனிப்பார் இல்லாமல் அநாதையாக இருந்தார். அதனால் நாம் அவரை நம்முடன் வைத்துக் கொண்டோம்" என்று அம்மா பதில் சொன்னார். குருட்டு சித்தப்பா, எங்கள் உறவினர் இல்லை என்கிற செய்தி அவர் இறந்த பின்புதான் எங்களுக்கு தெரிய வந்தது.

என் வாழ்க்கையில் முதல் ஒன்பது ஆண்டுகள் அந்தக் கிராமத்தில், அந்த வீட்டில் கழிந்தன. பிறகு நாங்கள் அப்பாவுடன் பரோடா போய் விட்டோம். (1905-ல்). அப்பாவுக்கு அங்கே வேலை, விடுமுறையில் நாங்கள் காகோதே வந்து தாத்தா பாட்டியுடன் இருப்போம். நாளாவட்டத்தில் கிராமத் தொடர்பு ஒரு வகையில் அற்றுப்போனது. பிற்காலத்தில் நான் வீட்டையே துறந்து வெளிக் கிளம்பிவிட்டேன். 1935-ல் ஒருமுறை காகோதே போனேன். இரண்டு மூன்று நாட்கள் அங்கே தங்கினேன். ஒரு நாள் ராட்டையைப் பற்றி காந்திஜிக்கு எழுத வேண்டியிருந்தது. நள்ளிரவு வரை விழித்திருந்து எழுதினேன். அதன்பின் சற்று நேர சிந்தனைக்குப்பின் தூங்க ஆயத்தமானேன். அதற்குள் அருகிலிருந்த கோவில் ஒன்றில் ஊர்மக்கள் கூடி

பஜனை செய்யும் ஒலி கேட்டது. நான் மௌனமாக எழுந்து போய் அவர்களிடம் உட்கார்ந்து விட்டேன். ஓரிரு மணி நேரம் பஜனை நடந்தது. அவர்கள் உச்சரிப்பு மகா அபத்தமாக இருந்தது. நியாயமாக என் இலக்கணபுத்திக்கு அது சகிக்க முடியாததாக இருந்திருக்க வேண்டும். ஆனால் பக்திக்கு முன்னால் அது ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. நான் ஆனந்தக்கடலில் திளைத்தேன். அன்றைய தினம் அவர்களுடைய பாடல் ஒன்று என்னை மிகவும் கவர்ந்தது. அது இன்னும் எனக்கு நினைவில் இருக்கிறது. அதன் பொருள்:

"இவ்வுலகில் எங்கும் இன்பம் இல்லை. எனவே வீணாகப் பேராசைப் படாதீர்கள். உலகமே துன்பக் கட்டுக்கள்தான். இங்கே இன்பம் என்ற சிந்தனையே கிடையாது".

80-85 வீடுகளே கொண்ட சின்னஞ்சிறு ஊர் அது. பயங்கர ஏழ்மை! வெறும் கோவணம் அணிந்த மக்கள்! எலும்புக்கூடாக உடல்! ஆனால் அவர்களால் பஜனையில் ஆழ்ந்து விட முடிந்தது. அந்தக் காட்சி மகிழ்ச்சியில் என்னை ஆழ்த்திற்று. பள்ளிக் கூடமில்லாத ஊரில், எழுத்து வாசனையற்ற ஊரில் மக்களுக்கு இவ்வளவு ஞானம் எப்படி வந்தது என்று யோசித்தேன். துகாராமின் பாடல்களை இன்றும் பக்தியுடன் அவர்கள் பாடுகிறார்கள். இதனால்தான் அவர்களிடம் இந்த அளவு ஞானம் உள்ளது என்று நினைத்தேன். இது நம் பலமாகும்.

துகாராம் சுவாமிகள் வீட்டில் மிகுந்த வறுமை. அவரது மனைவி பட்டினியினால் இறந்த போது, "இறைவனே துன்பம் இல்லாவிட்டால் உன்நினைவு எனக்கு வருவதில்லை" என்று அவர் கூறுகிறார். "துன்பங்களுக்கு இடையில் என்னுள் அளவற்ற ஆனந்தம் உள்ளது. அன்பும் இறை நாமமும் பொங்கிவழிகிறது" என்று பரவசப்படுகின்றார்.

நம் நாட்டில் காணப்படும் இந்த பக்தியினால் பரம ஏழ்மையிலும் மக்கள் முகத்தில் சிரிப்பு காணப்படுகிறது. அந்த வறிய காகோதே ஊரைச் சேர்ந்த காய்ந்து உலர்ந்த உடலைக் கொண்ட மக்களின் மனத்தில் பக்திரசம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது.

வார்தாவில் தென்பட்ட அதே நட்சத்திரங்கள் காகோதேயிலும் காணப்பட்டன. ஆனால் அங்கே இருந்த மலையை எவ்வளவு நேரம் பார்த்தாலும் சலிப்பு ஏற்படுவதில்லை. நான் ஒரு மலைவாழ் பிராணியாக இருந்திருக்க வேண்டும். யாரோ ஒரு ரிஷியுடன் வசிக்கும் மானாகவோ, புலியாகவோ இருந்திருக்க வேண்டும். தவறுதலாக இந்த ஜன்மத்தில் மனிதனாகப் பிறந்து விட்டேன். இன்னும் எனக்கு பூராவாக "நாகரிகம்" வரவில்லை. எண்ணெயில் பொரித்து, சீனியில் போட்டாலும் பாகற்காய் பாகற்காய்தான். அது போல காந்திஜி என்கிற எண்ணெயில் பொரிக்கப்பட்டு ஜம்னாலால் பஜாஜ் என்கிற சீனியுடன் தோய்ந்தும் வினோபா வினோபாவாகவே இருந்தான்.

அப்போது (1935-ல்) நான் ஒரு கடிதத்தில் "ஒரு பக்கத்தில் மலை, மறுபக்கத்தில் என் தாய்; இவர்களுக்கிடையில் இவ்வுலக சிருஷ்டிகள்

அனைத்தும் என்னுடன் உறவு கொண்டாடுகின்றன" என்று எழுதினேன். அம்மாவின் நினைவு அந்த நாட்களில் பல முறை வந்திருக்கும். கீதை, என் தாய், தக்ளி இம்மூன்றும் என் வாழ்க்கையின் திரிமூர்த்திகள். இம்மூன்றில் என்னுடன் விஷ்ணு சகஸ்ரநாமமும் அடங்கும்.

**எங்கள் தாத்தா**

எங்கள் தாத்தா (சம்புராப் பாவே) பக்திமான்; தினமும் காலையில் சிவபூஜை செய்வார். பூஜை மணிக்கணக்கில் நடக்கும். குழந்தைகளாகிய நாங்கள் தோட்டத்திலிருந்து பூக்கள் முதலியன பறித்து தாத்தாவின் பூஜைக்குக் கொண்டு வருவோம். தாத்தா வின்யாவை சந்தனம் அரைக்கச் சொல்வார். அவர் இடைவிடாது மந்திரம் ஜபித்துக் கொண்டிருப்பார். வின்யா பக்கத்தில் உட்கார்ந்திருப்பான். இடையில் மணியகாரர் போன்ற யாராவது பார்க்க வந்தால் தாத்தா அவருடன் உரையாடுவார். அவர் போன பின்பு மீண்டும் ஜபம் துவங்கி விடும். இடையில் ஜபத்தை எங்கே விட்டோம் என்று நினைவு வரவில்லை என்றால், "என்னடா வின்யா? எங்கே விட்டேன்?" என்று கேட்பார். வின்யாவுக்கு நினைவு இருந்தால் சொல்லுவான். இல்லாவிட்டால் ஆரம்பத்திலிருந்து துவங்குவார். இப்படியாக அவர் ஜபம் மணிக்கணக்கில் நீடிக்கும்.

அப்போது நான் ஏழெட்டு வயதுச் சிறுவன். ஒரு நாள் வழக்கம்போல தாத்தா பூஜையில் அமர்ந்திருந்தார். எங்கிருந்தோ ஒரு தேள் வந்து சுவாமி விக்ரகத்தின் மீது ஏறிக்கொண்டது. பார்த்தவர்கள் எல்லோரும் தேள், தேள், அடியுங்கள் அடியுங்கள் என்று கத்தினார்கள். தாத்தா அவர்களைத் தடுத்து, "தேள் இறைவனிடம் சரணாகதி அடைந்துள்ளது, அதை அடிக்காதீர்கள்" என்று சொன்னார். அவர் பூஜையை முறையாக முடித்தார். தேள் அங்கேயே அமர்ந்திருந்தது. விக்ரகத்தின் மீது பூ, சந்தனம், ஜலம் எல்லாம் சொரியப் பட்டன. சிறிது நேரம் கழித்து தேள் அங்கிருந்து இறங்கிப்போய் விட்டது. வின்யாவின் மனத்தில் இறைவனிடம் தஞ்சம் புகுந்தவன் போற்று தலுக்குரியவன் என்ற கருத்து ஆழமாகப் பதிந்தது.

ஒரு முறை எங்கள் வீட்டில் ஒரு சிறுவன் திருடியது என் நினைவுக்கு வருகிறது. பாட்டி தாத்தாவிடம், அவன் வெல்லம் திருடித் தின்று விட்டான் என்று புகார் சொன்னாள். அதைக் கேட்டு தாத்தா, "அவன் திருடவில்லை. கேட்காமல் வெல்லத்தை எடுத்திருக்கிறான். இந்த வீடு அவனுடைய வீடும்தான். வெல்லம் அவனுக்கும் உரியதுதான். கேட்டிருந்தாலும் அவனுக்குக் கிடைத்திருக்கும், கேட்காமலும் அவனுக்குக் கிடைத் திருக்கிறது. இதைப்போய் திருட்டு என்பதா?" என்றார். பிறகு அந்தப் பையனை அருகே அழைத்து, "இதோ பார், உனக்கு அது வேண்டும் போது கேள், கொடுக்கிறோம். கையைக் கழுவிக்கொண்டு எடுத்தாயா?" என்று கேட்டார். பையன் இல்லை என்றான். தாத்தா "கையை சுத்தமாக்கிக் கொண்டு வெல்லம் எடுக்க வேண்டும்" என்று சொன்னார். அந்தப் பையனிடம் மெல்ல மெல்ல திருட்டுப் பழக்கம் போய்விட்டது.

எங்கள் ஆசிரமத்தில் ஒரு பையன் திருட்டுத்தனமாக பீடி புகைத்து வந்தான். அவன் முதலில் மாணவர் விடுதி ஒன்றில் இருந்து வந்தான். அங்கே

அவனுக்கு அந்தக் கெட்ட பழக்கம் ஏற்பட்டது. ஆசிரமத்தில் இவன் மிகவும் நல்ல பெயர் எடுத்தான். ஆனால் இந்தப் பழக்கத்தை மறைத்து வைத்திருந்தான். திருட்டுத்தனமாக பீடி குடித்ததை ஆசிரமத்தைச் சேர்ந்த ஒரு சகோதரர் பார்த்து விட்டார். அவனை என்னிடம் கொண்டு வந்தார்கள். பையன் மிரண்டு போனான் என்பதை நான் கவனித்தேன். நான் கூறினேன், "பயப்படாதே, பெரிய பெரிய மனிதர்கள் எல்லோரும் பீடி குடிக்கிறார்கள். நீ ஒன்றும் பெரிய கெடுதல் செய்யவில்லை. உனக்கு ஒரு அறை ஏற்பாடு செய்து தருகிறேன். அங்கே போய் நீ பீடி குடிக்கலாம். வாராவாரம் உனக்கு வேண்டிய பீடி நான் தருகிறேன்". சில ஆசிரம-வாசிகளுக்கு இந்த முறை விசித்திரமாகப்பட்டது. நான் ஒரு குட்டிப் பிரசங்கம் செய்து விளக்கினேன். "பீடி குடிப்பது கெடுதல் என்பது இவனுக்குத் தெரியும். மற்றவர்கள் குடிப்பதால் இவனுக்கு இந்தப் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. ஆனால் மறைப்பது தவறு. அதே சமயத்தில் சமுதாயத்-தில் எல்லோருக்கும் முன்பு குடிப்பதும் தவறு. எவனுக்கும் தன் கெட்ட பழக்கத்தை விட்டுவிட ஒரு வாய்ப்புத் தரவேண்டும். இது அஹிம்சை, அஹிம்சையில்; பொறுத்துப் போதலும் உண்டு. எனவே சிறு சிறு விஷயங்களில் கட்டாயப்படுத்துதல் கூடாது."

ஒருமுறை தாத்தா பூஜையில் அமர்ந்திருந்தார். திடீரென்று அவருடைய உடல் நடுங்க ஆரம்பித்தது, உடம்பு சிலிர்த்து விட்டது. அவருக்கு காய்ச்சல் வந்துவிட்டது. அவருடைய பூஜையோ சுமார் 2-3 மணிநேரம் நடக்கும். பூஜையில் இந்த இடையூறு எவருக்கும் பொறுக்க வில்லை. நடுக்கம் ஆரம்பித்தவுடன் அவர் எழுந்துபோய் கிணற்றில் குதித்தார். இது என்ன திடீரென்று இப்படிச் செய்கிறார் என்று பாட்டிக்கு யோசனையாகப் போய்விட்டது. ஆனால் அவருக்கு நன்றாக நீச்சல் தெரியும். ஏழெட்டு நிமிடங்கள் நன்றாக நீந்திவிட்டு மேலே வந்தார். உடம்பை துவட்டிக் கொண்டு மீண்டும் பூஜையில் அமர்ந்தார். இந்த நிகழ்ச்சி நான் கண்ணால் பார்த்தது. என்னுடைய பாதயாத்திரையில் நானும் தண்ணீரில் நனைவதால் தீமை ஏதும் இல்லை என்பதைக் கண்டிருக்கிறேன். ஏனெனில் தண்ணீரில் எல்லா மூலிகைகளும் அடக்கம். இதனால்தான் வேதம் தண்ணீருக்கு உலகமருத்துவன் என்று பட்டம் தந்திருக்கிறது.

கணேச சதுர்த்தி அன்று எங்கள் வீட்டில் கணேசரின் உருவம் பிரதிஷ்டை செய்வார்கள். தாத்தா குழந்தைகளாகிய எங்கள் உதவியுடன் தானே பிள்ளையார் பிடிப்பார். நாங்கள் சந்தனம் இழைப்போம். அப்புறம் பிரதிஷ்டை செய்து தினமும் பூஜை புனஸ்காரங்கள் நடைபெறும். 14 நாட்கள் வீட்டில் உற்சவமாக இருக்கும். 14-வது நாள் மூர்த்தியை விசர்ஜனம் செய்து விடுவார்கள். அதாவது தண்ணீரில் விட்டுவிடுவார்கள். இவ்வளவு கஷ்டப்பட்டு செய்த சிலையை, 10-12 நாள் பூஜை எல்லாம் செய்து சிலையை தண்ணீரில் போட்டு விடுவது, அதுவும் ஆடிப்பாடிக் கொண்டு மேளதாளத்துடன் போட்டு விடுவது, எனக்கு மிகவும் கஷ்டமாக இருக்கும். பிறகுதான் அதன் உட்பொருள் புரிந்தது. இந்து மதத்தில் உருவ வழிபாட்டுடன் உருவத்தின் முக்கியமின்மையும் உணர்த்தப்படுகிறது. உருவத்தை நாம் உடைத்தெறிவது இல்லை, அதை விட்டுவிடுகிறோம்.

பிரதிஷ்டை செய்வதும் விசர்ஜனம் செய்வதும் மிக அழகிய ஒரு ஏற்பாடாகும். படைத்ததை விட்டுவிடும் ஆற்றலும், பற்றின்மையும் நமக்கு வேண்டும்.

தாத்தாவின் விரதங்களும் உபவாசங்களும் இடைவிடாது நடப்பவை. அவர் சந்திராயண விரதம் இருப்பார். அந்த விரதத்தில் பிரதமை அன்று ஒரு கவள உணவு மட்டுமே உண்டு, பிறகு சந்திர கலை வளர வளர தினத்திற்கு ஒன்றாக ஏற்றி, பௌர்ணமி அன்று 15 கவளம் சாப்பிட்டு, பிறகு தினம் ஒரு கவளமாகக் குறைத்து அமாவாசையன்று அதே ஒரு கவளத்திற்கு வரவேண்டும். சந்திராயண விரதத்தின் போது சந்திரோதயத்திற்குப் பிறகே தாத்தா அன்றைக்கு எத்தனை கவளங்கள் உண்ணவேண்டுமோ அவற்றை மாத்திரம் உண்பார். சந்திரோதயம் தினமும் ஒரே நேரத்தில் நடப்பதில்லையே! சில சமயங்களில் மாலையிலும், சில சமயம் இரவிலும் சில சமயம் பின்னிரவிலும் அல்லவா சந்திரோதயம் நடக்கும்! ஆகவே பல சமயங்களில் சந்திரோதயத்தின் போது வின்யா தூங்கிப் போயிருப்பான். தாத்தா அவன் அம்மாவிடம் அவனை எழுப்பச் சொல்லுவார். அம்மா வின்யாவை படுக்கையிலிருந்து எழுப்பி தாத்தாவுக்கு அருகில் உட்கார வைப்பாள். வின்யா அரைத்தூக்கத்தில் இருப்பான். ஆனால் தாத்தாவின் பூஜை முடிந்தவுடன் சட்டென்று அவன் கை பிரசாதத்துக்காக நீண்டு விடும். தாத்தா தன்னுடைய கவளத்திலிருந்து ஒரு பகுதியை வின்யாவின் கையில் வைப்பார்.

என்னிடம் இருக்கும் ஓரளவு தூய்மைக்குக் காரணம் என் தாத்தா ஆவார். அதுவே என் தாத்தா எனக்கு விட்டுச் சென்ற பெரிய சொத்தாகும். நல்ல பண்டங்களை ஊட்டி வளர்க்கும் வகையிலும் அவர் என்னை வளர்த்தார். ஆனால் நள்ளிரவிலும் சுவாமி தரிசனத்திற்கு என்னை எழுப்பி என் மனத்தில் விதைத்த பண்பாடும், அவர் கொடுத்த சுவாமி பிரசாதமும் என்னால் மறக்க முடியாதவை. அது அவர் எனக்குச் செய்த பேருபகாரமாகும்.

**வின்யாவின் தாய்**

என் மனத்தில் என் தாய் வளர்த்த பண்பாட்டுக்கு ஈடு எதுவும் இல்லை. எனக்கு பல சான்றோர்களின் சேர்க்கை கிடைத்திருக்கிறது. பல பெரியோர்களின் அனுபவங்கள் நிறைந்த புத்தகங்களை நான் படித்திருக்கிறேன். அவற்றையெல்லாம் ஒரு தட்டில் வைத்து அம்மாவிடமிருந்து எனக்கு கிடைத்த பக்தி என்னும் பாடத்தை ஒரு தட்டில் வைத்தால், இரண்டாவது தட்டே தாழ்கிறது. அதன் நிறை அதிகம்

**பரம பக்தை**

அம்மா பரமபக்தை. வீட்டில் அனைவருக்கும் உணவளித்து விட்டு வீட்டு வேலைகளை எல்லாம் முடித்துவிட்டு, சாப்பிடாமலேயே சுவாமிக்கு முன் உட்கார்ந்து விடுவார். சுவாமிக்கு சாங்கோபாங்கமாக பூஜை நடக்கும். தீபாராதனை, பூ சாற்றுவது ஆகிய எல்லாம் முறையாக எல்லோரும் செய்வது போலத்தான் செய்வார். ஆனால் பூஜை முடிந்து சுவாமியை வணங்கும்

போதுதான் அவருடைய பக்தி தெரியும். வணங்கி தன் காதுகளைப் பற்றிக் கொண்டு "அனந்த கோடி பிரம்மாண்ட நாயகா! என் குற்றங்களை மன்னித்துவிடு" என்று இறைஞ்சும் போது இரண்டு கண்களிலிருந்தும் கண்ணீர் ஆறாகப் பெருகும். அந்தக் கண்ணீர்ப்பெருக்கு எவரும் சொல்லி வருவதல்ல. நெஞ்சில் பக்தி நிரம்பியிருந்தால் மட்டுமே அது வரமுடியும். விசேஷ தினங்களில் ஒரு வேளை நம் கண்களிலும் கண்ணீர் வரக்கூடும். உதாரணமாக ராமநவமி, கோகுலாஷ்டமி பண்டிகை களின் போது சுவாமி உருவம் பிரதிஷ்டை செய்யப்படுகிறது. அதைப் பார்க்கும்போது கண்ணீர் பெருகலாம். ஆனால் அன்றாட பூஜையின் போது கண்ணீர் பெருகுவதை என் அம்மாவிடம் நான் பார்த்திருக்கிறேன். இது ஆழ்ந்த பக்தியின்றி நடைபெற முடியாது. என் நெஞ்சில் தாய் பற்றிய நினைவுகளிலேயே மிகச் சிறந்தது இந்த நினைவுதான்.

எங்கள் அம்மா சாதாரண உலகியல் காரியங்களில் கடமை உணர்வுடன் ஈடுபட்டிருந்தார்; நாள் பூராவும் வேலை செய்து கொண்டிருப்பார். ஆனால் அவரது சித்தம் இறைவனின் பால் லயித்திருக்கும். அவர் உலகத்தில் இருந்தார். ஆனால் அவரது பேச்சிலும், நினைவிலும் உலகம் இருக்கவில்லை. அவரது வாயிலிருந்து கடுஞ்சொற்கள் வந்ததே இல்லை. காலையில் எழுந்தவுடனேயே இறைவன் நாமத்தை ஜபிக்க ஆரம்பித்து விடுவார். திரிகையில் மாவரைக்கத் துவங்கும் போது பஜனையும் கூடவே துவங்கிவிடும். அவர் பாடும் பாடல்கள் யாவும் இறைவனின் பாடல்களே. ஆழ்ந்த பக்தியுடனும், அன்புடனும் பாடுவார். இனிய குரலில் தன்னை மறந்து பாடுவது அவரது தனிச்சிறப்பு. ஒரு தடவை நான் அம்மாவிடம் "புதிது புதிதாக பாடு அம்மா, நேற்று பாடியதை இன்று பாடாதே, இன்று பாடியதை நாளை பாடாதே" என்றேன். ஆறு மாதம் வரை அப்படியே நடந்தது. அவர் எனக்கு தினமும் புதிய பஜனைகள் பாடிக்காட்டினார். அவருக்கு அவ்வளவு பாடல்கள் தெரியும். அவர் கர்நாடகத்தைச் சேர்ந்தவர். அவருடைய தாய் வீடு அங்கிருந்தது. எனவே அவருக்கு கன்னட பஜனைப் பாடல்களும் தெரியும். புரந்தரதாசரின் ஒரு பாடலை அவர் மிக நன்றாகப் பாடுவார்.

"எனக்கும் ஆணை. இறைவா உனக்கும் ஆணை, நம் இருவருக்கும் பக்தர் ஆணை. உன்னைவிட்டு வேறு எவரையும் ஆராதித்தால் என் மீது ஆணை, என்னைவிட்டு நீ போனால் உன் மீது ஆணை."

இன்னொரு மராட்டியப் பாடலும் நினைவில் இருக்கிறது.

"கறுப்புக் கம்பளி, கறுப்புத் தடி, கழுத்தில் கறுப்புக் கயிறு, மஹார் (மராட்டியத்தில் ஒரு தாழ்ந்த குலத்தினர்)களின் மராட்டிப் பேச்சு, உடலில் கோவணம், கால்களில் காலணி, மகா சாமர்த்தியசாலி, பதிதபாவனன் என்ற பெயருடையவன்" ராமாஜி சுவாமிகளுக்காக இறைவன் மஹார் இனத்தவராகத் தோன்றிய கதை).

அவர் குளித்துக் கொண்டிருந்தாலும், சமைத்துக் கொண்டிருந்தாலும் உள்ளுக்குள் ஏதாவது பக்திப்பாடலைப் பாடிக் கொண்டே இருப்பார். பல

சமயங்களில் சமைக்கும்போது இரண்டு தடவை உப்புபோட்டு விடுவார். அவர் எல்லோரும் சாப்பிட்டபின் பூஜையை முடித்த பின்தான் சாப்பிடு-வார். நான் எல்லோருக்கும் முன்பாக சாப்பிடுவேன். ஆனால் சாப்பாட்டின் மீது எனக்கு கவனம் அவ்வளவாக இருக்காது. போட்டதைச் சாப்பிட்டு-விட்டுப்போய் விடுவேன். அப்புறம் அப்பா சாப்பிட உட்காருவார். அவர்தான் கறியில் உப்பு அதிகம் என்பார். மாலையில் அம்மா என்னிடம், "கறியில் உப்பு அதிகம் என்று ஏன் சொல்லவில்லை" என்று கேட்பார். "நீயே முதலிலேயே ஏன் சுவைத்து பார்த்து விடக் கூடாது" என்று நான் திரும்பக்கேட்பது வழக்கம். ஆனால் இறைவனுக்கு பூஜை செய்து, நைவேத்தியம் செய்யாமல் அவரால் அதை எப்படிச் சுவைத்துப் பார்க்க முடியும்? இது அவருக்கு ஏற்புடையதல்ல.

அம்மாவுக்கு அப்பாவின் மீது மரியாதை அதிகம்தான். ஆனாலும் என் பேச்சை அதிகமாகக் கேட்பார். ஒரு முறை அவர் சுவாமிக்கு ஒரு பட்சம் தானிய அர்ச்சனை செய்வதாக நேர்ந்து கொண்டார். தினமும் அரிசி மணிகளை எண்ணி எண்ணி அர்ச்சனை செய்வார். அவர் அரிசி மணிகள் எண்ணுவதைக் கண்ட அப்பா "இது என்ன வீண்வேலை, ஒன்று- செய், ஒரு தோலா அரிசியை நிறுத்துக்கொள், அதில் இருக்கும் மணிகளை எண்ணிக்கொள், அந்த கணக்கின் படி ஒரு லட்சம் மணிக்கு எத்தனை தோலா என்று பார்த்து அத்தனை தோலா அரிசி எடுத்துக்கொள், எதற்கும் எண்ணிக்கை குறைந்து விடக்கூடாது என்பதற்காக அரை தோலா அதிக-மாகவே எடுத்துக்கொள்", என்பார். அம்மாவுக்கு பதில் பேச ஒன்றும் தோன்றவில்லை. வீடு வந்தபின் என்னிடம் "வின்யா, உங்கள் அப்பா இப்படி சொல்கிறார். எது சரி என்று நீ சொல்கிறாய்?" என்று கேட்டாள். "நீ அர்ச்சிக்கும் ஒரு லட்சம் அரிசி மணிகள் கணக்கு பார்த்துப் போடுவ-தில்லை. இது பக்தி, பெரியோர்களையும், இறைவனையும் ஸ்மரிக்கும் வகை இது. ஒவ்வொரு மணியாக எண்ண எண்ண மனத்தில் இறை நாமம் ஜபிக்கப்படவேண்டும். ஆகவே எண்ணிப் போடுவதுதான் சரி" என்றேன். அவருக்கு ஒரே சந்தோஷமாகப் போய்விட்டது. அப்பாவுக்கு அந்த பதிலையே அவர் சொல்லி விட்டார்.

நாகபஞ்சமியின் போது அம்மா நாகபூஜை செய்வார். அன்றைக்கு அவர் என்னிடம் நாகதேவனின் படம் வரைந்து தரச் சொல்வார். "கடைத்-தெருவில் அழகான நாகதேவனின் படம் கிடைக்குமே?" என்றால் "அழகாக இருந்தாலும் அது எனக்கு வேண்டாம். எனக்கு உன் கையால் வரைந்தது-தான் வேண்டும்". என்பார். மகனை மனத்தில் அவ்வளவு தூரம் மதித்து வந்தார். நான் சிறிய பலகையில் குங்குமத்தால் நாகதேவனின் படம் வரைந்து கொடுப்பேன்.

தினமும் இரவில் பாலுக்கு உறை ஊற்றும் போது அவர் கடவுள் பெயரை உச்சரிப்பார். நான் ஒரு நாள் "அம்மா பாலுக்கு உறை ஊற்றும்-போது ஏன் கடவுள் பெயரைச் சொல்கிறாய்?" என்று கேட்டேன். அவர் "நாம் நம்மைப் பொறுத்தவரை எல்லாம் செய்து விட்டாலும் இறைவன் அருள் இருந்தால்தானே பால் உறையும்? அதனால்தான் கடவுள் பெயரைச்

சொல்கிறேன்" என்று சொன்னார். பக்தனின் முயற்சி, இறைவனின் திருவருள், இரண்டைப் பற்றியும் அவருக்கு ஞானமிருந்தது.

**நன்னெறி கற்பித்தவர்**

சிறு வயதிலேயே அம்மா என்னை தினமும் துளசிச்செடிக்குத் தண்ணீர் வார்க்கும் பழக்கத்தை ஏற்படுத்தினார். ஒருமுறை நான் குளித்த பின் நேரே சாப்பாட்டுக்கு மணையில் உட்கார்ந்து விட்டேன். துளசிக்கு தண்ணீர் ஊற்றினேனா என்று அம்மா கேட்டார். நான் இல்லை என்றதும், "முதலில் துளசிக்கு தண்ணீர் ஊற்றி விட்டு வா, பிறகுதான் சாப்பாடு" என்று சொல்லிவிட்டார். இத்தகைய நன்னெறிப் பழக்கம் அவர் எனக்கு செய்த பேருபகாரமாகும். பாலூட்டி, உணவளித்து, நோய் நொடியின் போது பணிவிடைகள் செய்தது எல்லாம் உபகாரங்களே. ஆனால் அவற்றைவிட மனித நன்னெறி பயிற்றுவித்தது பெரிய உபகாரமாகும்.

காகோதேயில் எங்கள் வீட்டு முற்றத்தில் ஒரு பலாமரம் இருந்தது. நான் சின்னப்பையன்தானே! மரத்தில் பலா காய்த்தவுடன், "அம்மா எப்போது பலாப்பழம் தருவாய்" என்று கேட்க ஆரம்பித்து விடுவேன். பலாப்பழம் பழுத்தவுடன் அம்மா அதைப்பறித்து இலைத் தொன்னைகளில் பலாச்சுளைகளை வைத்து முதலில் அக்கம் பக்கத்தினருக்கு கொடுத்து விட்டு வரச்சொல்லுவாள். எல்லா வீடுகளுக்கும் கொடுத்தபின் தன்னருகில் அமரச் செய்து எனக்குக் கொடுப்பார். "வின்யா, முதலில் கொடுத்துவிட்டு பிறகுதான் நாம் சாப்பிடவேண்டும்," என்பார். எவ்வளவு ஆழ்ந்த தத்துவ ஞானத்தை அவர் எனக்கு போதித்தார்! "கொடுப்போர் தேவர், தனக்கெனச் சேமித்து வைப்போர் அரக்கர்" என்று வேடிக்கையாக அவர் வியாக்கியானம் செய்வார். இந்த போதனையில் ஆழ்ந்த தாக்கம் இல்லாவிட்டால் பூதானம் என்கிற உணர்வே எனக்கு வந்திராது.

அக்கம்பக்கத்தில் யாராவது பெண்மணிகள் உடல்நலம் குன்றி விட்டால் அம்மா அவர்கள் வீட்டுக்குப்போய் சமைத்துக் கொடுத்துவிட்டு வருவார். பெரும்பாலும் முதலில் தன் வீட்டுச் சமையலை முடித்துவிட்டு பிறகுதான் பிறர் வீட்டுச் சமையலுக்குப் போவார். நான் ஒரு முறை "அம்மா நீ சுயநலக்காரி, முதலில் தன் குழந்தைகளையும். தன் வீட்டினரையும் கவனித்துக் கொள்கிறாய், பிறகுதான் மற்றவர்களை கவனிக்கிறாய்" என்றேன். அப்போது அவள் சிரித்துவிட்டு "முன்னதாக சமைத்துவிட்டால் ஆறிவிடும், அவர்கள் சூடாக சாப்பிடவேண்டுமே என்றுதான் சரியான சமயத்தில் அவர்களுக்கு சமைக்கிறேன். இங்கே முன்னதாக சமைத்து விடுகிறேன். இதில் சுயநலம் எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்.

சிறுவயதில் வின்யாவுக்கு ஒரு முறை பேய், பூதம் பற்றிய பயம் ஏற்பட்டது. அம்மா, "கடவுள் பக்தர்களை பேய், பூதம் ஒன்றும் செய்யாது. பூதம் பற்றிய பயம் வந்தால் லாந்தர் எடுத்துக் கொண்டு ராமநாமம் சொல்லிக்கொண்டு போ, பூதம் கீதம் எல்லாம் ஓட்டம் பிடித்துவிடும்" என்று எடுத்துச்சொன்னார். ஒரு நாள் இரவு சுவற்றில் நான் பெரிய நிழலைப் பார்த்தேன். என் நிழல்தான்! அது மிகவும் பெரியதாக இருந்தது!

இவ்வளவு உயரமான மனிதனை நான் பார்த்ததே இல்லை. நான் அம்மாவிடம் ஓட்டமாக ஓடினேன். அம்மா சொன்னார் "இதில் பயப்பட என்ன இருக்கிறது? இது உன் அடிமை அல்லவா! நீ சொன்னபடி கேட்கும். நீ நின்றால் அதுவும் நிற்கும், நீ உட்கார்ந்தால் அதுவும் உட்காரும்." செய்து பார்ப்போமே என்று நான் உட்கார்ந்தபோது அதுவும் உட்கார்ந்தது, நான் நின்றபோது அதுவும் நின்றது, நான் நடந்தபோது அதுவும் நடந்தது, நான் படுத்தபோது அதுவும் படுத்தது. அப்புறம் தான் இது என் அடிமை, இதனிடம் பயம் வேண்டாம் என்கிற எண்ணம் வந்தது. இவ்வாறு அம்மா பூதம் பற்றிய அச்சத்தை பக்தியாலும், நிழல் பற்றிய அச்சத்தை அறிவினாலும் போக்கினார்.

**இறை வடிவத்தைக் காண்பித்தவர்**

எங்கள் வீட்டிற்கு வந்த எந்த பிச்சைக்காரரையும் அம்மா வெறுங்கையாக அனுப்புவதில்லை. ஒருநாள் ஒரு வாட்டசாட்டமான பிச்சைக்காரன் வந்தான். அம்மா அவனுக்கு பிச்சை போடப் போனாள். நான் அம்மாவிடம் "இவன் நன்றாக வாட்டசாட்டமாக இருக்கிறான். இவர்களுக்கெல்லாம் பிச்சை கொடுத்துக் கொண்டே போனால் நாட்டில் சோம்பேறித்தனம் வளர்ந்து விடும். பாத்திரமறிந்து பிச்சையிடாவிட்டால், பிச்சை எடுப்பவருக்கும் கேடு, பிச்சை இடுபவருக்கும் கேடு" என்று கூறிவிட்டு, இடம், காலம், பாத்திரம் அறிந்து தரும் தானம் சாத்வீகமானது என்கிற கீதை சுலோகத்தைச் சொன்னேன். அம்மா கேட்டுவிட்டு "வின்யா பிச்சையிடத் தக்கவர், தகாதவர் என ஆராய்ந்து பார்க்க நாம் யார்? நம்மைப் பொறுத்தவரை வாசலுக்கு வந்தவரை கடவுளாகவே கருதி முடிந்ததைக் கொடுக்க வேண்டியது தான் தர்மம். அவரை ஆராய்ந்து பார்க்க நான் யார்?" என்று கூறிய அம்மாவின் இந்த வாதத்திற்கு எதிர்வாதம் இன்று வரை என் அறிவுக்கு உதிக்கவில்லை.

எங்கள் அப்பா அடிக்கடி யாராவது ஒரு ஏழை மாணவனை வீட்டில் வைத்து ஆதரிப்பார். ஒரு முறை ஒரு ஏழை மாணவன் அவ்வண்ணமே எங்கள் வீட்டில் இருந்தான். வீட்டில் எப்போதாவது பழைய உணவு மீந்துவிட்டால் அம்மாதான் சாப்பிடுவாள். அதிகமாக இருந்தால் வின்யாவுக்குக் கொடுப்பாள். அந்த மாணவனுக்கோ எப்போதும் புது உணவே தருவாள். இதனை தினமும் பார்த்த நான் ஒரு நாள் அம்மாவிடம் "அம்மா, எல்லோரையும் சமமாக பாவிக்கவேண்டும் என்பாயே! ஆனால் உன்னிடம் பேதபாவம் போகவில்லையே! அந்தப் பையனுக்கு நீ பழைய உணவே பரிமாறுவதில்லை. எனக்கு பரிமாறுகிறாய். இந்த அளவாவது உன்னிடமும் பேதபாவம் இருக்கிறது இல்லையா?" என்று கேட்டேன்.

அம்மா "நீ சொல்வது சரிதான், இன்னும் என்னிடம் நீ வேறு, அவன் வேறு என்கிற வேற்றுமை இருக்கிறது. இது தான் உன்னிடம் வைத்த பற்று. நான் உன் மீது வைத்துள்ள பற்றினால் நீ எனக்கு மகனாகப் பிறந்திருக்கிறாய். அவனோ எனக்கு இறைவனாகத் தோன்றுகிறான். நீயும் என்று எனக்கு இறைவனாகத் தோன்றுகிறாயோ, அன்று இந்த வேற்றுமை மறைந்துபோகும்" என்றாள்.

சாப்பிடும் போது எப்போதும் கொஞ்சம் அவி கொடுக்கவேண்டும் என்கிற வழக்கம் இருக்கிறது. ஒரு நாள் நான் தரவில்லை. "மறந்து விட்டாயா?" என்று அம்மா கேட்டாள் "இல்லை, மறக்க வில்லை. ஆனால் ஐந்து அவிக்கும் மொத்தம் கால் தோலா அரிசி ஆகும். ஒரு மாதத்திற்கு சுமார் 7 தோலா. இந்தியாவில் 30 கோடி அந்தணர்கள் உள்ளனர். அப்படியானால் ஒரு வருடத்திற்கு முப்பது கோடி சேர் அரிசி வீணாகும். நாட்டில் இவ்வளவு ஏழைகள் இருக்கும் நிலையில் 30 கோடி சேர் அரிசியை வீணாக்குவது சரியில்லை" என்று பதில் சொன்னேன். அம்மா "நீ பண்டிதன், கணக்கு போட்டால் சரியாகத்தான் இருக்கும், ஆனால் என் கணக்கு வேறு, கொஞ்சம் சாதத்தை தட்டிற்கு வெளியே வைத்துவிட்டால் ஈக்கள் அதில் உட்காரும், உன் தட்டில் உட்காராது. அந்தச் சமயத்தில் அவைகளுக்கு சோறிட்ட மாதிரியும் இருக்கும். ஜீவராசிகளுக்குத் தொண்டு செய்ததுமாகும்" என்று சொன்னதில் இருந்த சிறப்பம்சம் என் மனத்தில் பதிந்தது.

ஒரு நாள் என் கையில் ஒரு கழி இருந்தது. வீட்டின் தூண் ஒன்றை அதனால் தட்டிக் கொண்டிருந்தேன். அம்மா என்னைத் தடுத்து "அதை ஏன் அழவைக்கிறாய். அதுவும் இறைவனின் வடிவம்; அதற்கு ஏன் கஷ்டம் கொடுக்கிறாய்?" என்றாள். நான் நிறுத்தி விட்டேன். ஒரு தூணுக்கும் கூட தீங்கு விளைவிக்காத மனப்பான்மை இந்த மண்ணில் இருக்கிறது. சகலத்திலும் இறை உணர்வு கொள்ளும் பான்மையை அம்மா எனக்குக் கற்பித்தாள்.

சிறுவயதில் நான் அடிக்கடி உடல்நலம் குன்றுவது வழக்கம். எனவே டாக்டர் மருத்துவமும் அடிக்கடி நடக்கும். மருந்து கொடுக்கும் போது அம்மா என்னை ஒரு சுலோகம் சொல்லச் செய்வாள். ஒரு நாள் அதன் பொருள் என்ன என்று கேட்டேன். "மருத்துவரை இறைவனாகக் கருது. அவர் கொடுக்கும் மருந்தை கங்காஜலமாகக் கொள்" என்று அம்மா பொருள் சொன்ன போது நான் "அதற்குக் கொள்ளும் பொருள் வேறு. அதாவது இறைவனே வைத்தியன், கங்காஜலமே மருந்து என்று நான் பொருள் கொள்கிறேன்" என்று சொன்னேன். "உன் பொருளும் சரி. ஆனால் அப்படி நினைக்க ஒரு தகுதி வேண்டும். இன்றைய தினத்தில் நீ வைத்தியரை இறைவனாகக் கருதுவதே சரி" என்றாள் அம்மா. இவை இருவேறு கண்ணோட்டங்கள். இரண்டிலும் பொருள் நிறைந்திருக்கிறது.

எங்கள் அம்மா படித்தவள் அல்ல. ஆனால் பக்தவிஜயம் போன்ற புத்தகங்களைப் பற்றி தெரிந்து வைத்திருந்தாள். ஒரு நாள் பக்தவிஜயம் படிக்கும் போது நான் "இது போன்ற மகாத்மாக்கள் எல்லாம் பழங்காலத்தில்தான் இருந்திருக்கமுடியும்" என்று சொன்னேன். அதற்கு அம்மா "மகாத்மாக்கள் இன்றும் இருக்கிறார்கள், நமக்குத் தெரியவில்லை, அவ்வளவுதான். மகாத்மாக்களும், சான்றோர்களும் இல்லையென்றால் இந்த உலகம் வேறு யாரால் வாழ்கிறதாம்" என்றாள். என்ன அற்புதமான நம்பிக்கை! என்ன ஈடுபாடு! இந்த நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு அவள் புகட்டிய கல்வி என் வாழ்நாள் முழுவதும் பயன்பட்டது.

அம்மாவுக்கு வின்யாதான் எழுதப்படிக்கக் கற்றுத்தந்தான். ஒருநாள் அவள் "பக்திமார்க்க பிரதீபம்" என்கிற நூலைப் படித்துக் கொண்டிருந்தாள். ஒவ்வொரு எழுத்தாகக் கூட்டிப் படிப்பதில் அவருக்கு ஒரு பாடலை முடிக்க பதினைந்து நிமிடங்கள் பிடித்தன. நான் மேலே அறையில் அமர்ந்து அவள் வாசிப்பதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். கடைசியில் நானே கீழே வந்து பாடல் முழுவதையும் சொல்லிக் கொடுத்தேன். பிறகு தினமும் கொஞ்சம் கொஞ்சமாக புத்தகம் முழுவதையும் முடித்தேன்.

**கீதாயி எழுதத் தூண்டுகோல்**

ஒரு நாள் காலை நான் மாடி அறையில் ஆங்கிலக் கவிஞர் வோர்ட்ஸ் வொர்த்தின் ஒரு கவிதை படித்துக் கொண்டிருந்தேன். அம்மாவின் காதில் விழுந்தவுடன் "வின்யா, என்ன இது காலையிலேயே தஸ், புஸ்ஸென்று?" என்று கேட்டாள். நான் கவிதையின் பொருளைச் சொல்லிவிட்டு, நான் நல்ல புத்தகம்தான் படிக்கிறேன் என்று சொன்னேன். அதற்கு அம்மா, "நீ கெட்ட புத்தகம் படிக்கமாட்டாய் என்று எனக்குத் தெரியும். ஆங்கிலத்திலும் நல்ல புத்தகங்கள் இருக்கும். ஆங்கிலம் படிப்பது தவறல்ல. அதுவும் படிக்க வேண்டியதுதான். ஆனால் காலையில் சமஸ்கிருதம் படிக்க வேண்டும். அதாவது வேறு எப்போது வேண்டுமானாலும் மற்றதைப் படிக்கலாம். காலையின் புனிதமான பொழுதில் சமஸ்கிருதம்தான் படிக்கவேண்டும்" என்று சொன்னாள்.

சமஸ்கிருதம் படிக்க அவள் தான் என்னைத் தூண்டினாள். நான் உயர்நிலைப்பள்ளி செல்லவிருந்தபோது இரண்டாம் மொழியாக நான் எதை எடுப்பது என்ற பேச்சு வந்தது. அப்பா பிரெஞ்சு எடுக்கலாம் என்றார். நான் சரி என்று சொல்லி விட்டேன். அம்மாவுக்கு அதில் அதிகமாக ஆர்வம் இல்லை. ஆனால் எங்கள் பேச்சை அவள் கேட்டுவிட்டாள். மாலையில் பள்ளியிலிருந்து வந்து சாப்பிட அமர்ந்ததும் என்னருகில் வந்து உட்கார்ந்து "என்ன பாடம் எடுத்தாய்?" என்று கேட்டாள். நான் பிரெஞ்சு என்றேன். அதைக் கேட்டு "பிராமணப்பையன் சமஸ்கிருதம் படிப்பதில்லையா?" என்று கேட்டாள். அதற்கு நான் "பிராமணப் பையன் தானாகவே சமஸ்கிருதம் படித்துக் கொள்வான், பள்ளியில்தான் படிக்க வேண்டும் என்பதில்லை" என்று சொல்லிவிட்டேன். ஆனால் அம்மாவின் வாக்கியம் என் மீது ஏற்படுத்திய தாக்கத்தை என்னால் விவரிக்க முடியாது. அதன்பின் நான் சமஸ்கிருதம் படிக்கத் துவங்கினேன். நான் பத்துப் பதினைந்து மொழிகள் கற்றிருக்கிறேன். ஆனால் ஒழுங்காகப் பயின்றது மராட்டிக்கு அடுத்தபடியாக சமஸ்கிருதம் தான். சமஸ்கிருதத்தை நான் பள்ளியிலோ, கல்லூரியிலோ பயிலவில்லை. எனக்கு நானே ஆசான்.

1915 ஆம் வருடம் என்று நினைக்கிறேன். பரோடாவில் ஒரு உபன்யாசகர் வந்திருந்தார். அவர் கீதைபற்றி விரிவுரை ஆற்றி வந்தார். அம்மா தினமும் இரவில் அவருடைய விரிவுரை கேட்கப் போவது வழக்கம். இரண்டு மூன்று நாட்கள் கழித்து அவள் என்னிடம் "வின்யா, அவர் கீதை பற்றி பேசுகிறார். எனக்குப் புரிய மாட்டேன் என்கிறது, எனக்கு ஒரு

மராட்டி கீதை வாங்கி வாயேன்!" என்றாள். அந்நாட்களில் திராவிட சாஸ்திரி என்பவரின் மராட்டி வசன கீதை கிடைத்து வந்தது. அப்போது அதன் விலை இரண்டரை அணா, அதை நான் அம்மாவுக்காக வாங்கி வந்தேன். அதைப் படித்துவிட்டு "இது வசனமாக இருக்கிறதே, பாடலாக வாங்கித்தா" என்றாள். வசனத்தை விட பாடல் படிப்பது எளிதாகத் தோன்றியிருக்க வேண்டும். வாமன பண்டிதரின் சம்ஸ்லோகி கீதா என்கிற கீதையின் மராட்டி மொழிபெயர்ப்பு கிடைத்தது. அதைக்கொண்டு வந்து அம்மாவுக்குக் கொடுத்தேன். சில நாட்கள் கழித்து, "இது கஷ்டமாக இருக்கிறதடா, புரியவில்லை" என்றாள். "இனி என்ன செய்வது, இதைவிட எளிய மொழிபெயர்ப்பு இல்லையே?" என்றேன். அப்போது அவள் சட்டென்று, "நீயே எனக்காக ஏன் கீதையை எளிய மராட்டியில் மொழி பெயர்க்கக் கூடாது? உன்னால் இது முடியும்!" என்றாள். அம்மாவின் இந்த நம்பிக்கையே கீதாயி உருவாகக் காரணமாகும்.

**துறவு மனப்பான்மையை விதைத்தவள்**

சிறுவயதில் எனக்கு சில கிறுக்குத்தனங்கள் இருந்தன. பிரம்மச்சரியம் காக்க வேண்டும் என்று மெத்தையில் தூங்குவதில்லை, பூட்ஸ் அணிவதில்லை, என்றெல்லாம் கட்டுப்பாடுகள் வைத்திருந்தேன். ஒருநாள் அம்மா "நன்றாக நீ துறவற நாடகம் ஆடுகிறாய். நான் ஆணாக இருந்தால் துறவு என்பது என்ன என்பதைக் காட்டியிருப்பேன்" என்று என்னிடம் சொன்னாள். வீட்டில் எங்கள் தந்தையார் அனைவருக்கும் முழுச்சுதந்திரம் கொடுத்திருந்தபோதும் சமுதாயத்தில் காணப்படும் பெண்ணடிமை பற்றிய குறிப்பு அவள் கூற்றில் காணப்பட்டது. அம்மா சொன்னபடி செய்வாள் என்கிற நம்பிக்கை பாபா (வினோபாஜி)வுக்கு உண்டு. அவளுடைய மூன்று மகன்களும் பிரம்மச்சாரிகளாயினர். "இல்லறத்தை சரிவர நடத்தினால் ஒரு தலைமுறை கடைத்தேறும். ஆனால் பிரம்மச்சரியத்தை மேற்கொண்டாலோ நாற்பத்தி இரண்டு தலைமுறை கடைத்தேறும், வின்யா" என்பாள். என்தாய் 30 வயதினளாக இருந்தபோது என் பெற்றோர்கள் பிரம்மச்சரியம் மேற்கொண்டனர். அதற்கு என் தாயே தூண்டுகோலாக இருந்தார். அம்மா காலமானபின் என் தந்தையார் இதை என்னிடம் கூறியிருக்கிறார்.

தமது 42ஆவது வயதில் (24-10-48) அவர் காலமானார். அம்மா துகாராம் சுவாமிகளின் பஜனைகளை நிறைய படிப்பது வழக்கம். அவரும் 42ஆவது வயதில்தான் காலமானார். அவள் இறக்கும்போது நான் உடனிருந்தேன். அவள் அமைதியாக இறந்தாள் என்றே நம்புகிறேன். "முழு சமாதானம் அடைந்திருக்கிறாயா?" என்று நான் அவளை வினவினேன். அவள் சொன்னாள் "எனக்கு முழு சமாதானம்தான். ஒன்று நீ பெரியவனாகி விட்டாய், உன்னைப் பற்றி கவலையில்லை. நீ சகோதரர்களை கவனித்துக்கொள்வாய். அதனால் அவர்களைப்பற்றியும் கவலையில்லை. இன்னொரு விஷயம், இரண்டு மாதங்களுக்கு முன் கடவுளை தரிசித்து விட்டேன்" என்றாள். இரண்டு மாதங்களுக்கு முன்பு அவள் டாகோர் நாதரை தரிசித்து வந்திருந்தாள். டாகோர் பரோடாவிலிருந்து நான்கு மணிநேர நடை தூரத்திலிருந்தது. ஆனால் பன்னிரண்டு வருடங்களாக

வீட்டு வேலைகள் காரணமாக அவளால் அங்கு போக முடியவில்லை. அவளது அந்த ஒரு அவாவும் பூர்த்தியாகி விட்டது.

அம்மாவின் அந்திமக்கிரியைகள் பற்றிய விஷயம் எழுந்தபோது புரோகிதர்களிடம் அதை விடாமல் நானே செய்ய விரும்பினேன். மற்றவர்கள் ஆட்சேபித்தார்கள். "அம்மாவுக்கு எது விருப்பமாக இருக்கும் என்று யோசித்துப் பார்"என்றார் அப்பா, "இப்படிப்பட்ட புரோகிதர்களை விட என் கையால் அந்திமக்கிரியைகள் செய்யப்படுவதையே அவள் விரும்புவாள்" என்று நான் சொன்னேன். ஆனால் அது ஏற்கப்படவில்லை. எனவே நான் அந்திமக்கிரியைகளுக்கு சுடுகாடு செல்லவில்லை. அன்றிலிருந்து நான் வேதத்தை தாயாக மதித்து சேவிக்க ஆரம்பித்தேன். குளித்துவிட்டு வேதம் படிக்க ஆரம்பித்தேன்.

அம்மாவின் சில கூற்றுக்கள் என்னை மிகமிகக் கவர்ந்தன. அவற்றை நான் என் கருத்துக்கோவையில் பதித்து வைத்திருக்கிறேன்.

❖ வின்யா, அதிகமாகக் கேட்காதே. கொஞ்சமானால் இனிமை, அதிகமானால் கயமை.

❖ வயிறார உணவு, மானத்தை மறைக்கத் துணி, இதற்கு மேல் எதுவும் தேவையில்லை.

❖ மகாத்மாக்கள் கூற்றுக்களைத் தவிர வேறு எவர் கூற்றினையும் கேட்டு நடக்க வேண்டியதில்லை.

❖ தேசத்தொண்டில் இறைத்தொண்டும் வந்துவிடுகிறது. ஆயினும் கொஞ்சம் பஜனையும் தேவை.

❖ ஹரிஜனங்கள் கீழோர் அல்லர், இறைவன் ஹரிஜனாக வரவில்லையா?

அம்மா அவளுடைய இந்த மகனை பெரிதும் நம்பினாள். அவளது இந்த நம்பிக்கையே என்னை உருவாக்கிற்று. நான் வீட்டைத் துறந்து போய்விட்ட போது நான் சில நாட்களில் வந்துவிடுவேன் என்று அப்பா அம்மாவிடம் சொல்லியிருக்கிறார். அம்மா "வின்யா சொன்னால் சொன்னதுதான், மாறமாட்டான்"என்று சொல்லி விட்டாள். அக்கம் பக்கத்து சகோதரிகள் "இந்தக்காலத்துப் பையன்களே இப்படித்தான், பெற்றோரைப் பொருட்படுத்துவதே இல்லை"என்றார்கள். அம்மா "என் வின்யா நாடகம்-கூத்து என்றா வீட்டை விட்டுப்போனான்? அவன் செய்வது எதுவும் கெட்டதாக இருக்காது" என்று பதில் சொல்லிவிட்டாள். என் தாயார் இன்றும் என்னுடனேயே இடைவிடாது இருக்கிறாள் என்பதே என் அபிப்ராயம்.

அன்னையே! எவரும் கொடுக்காததை நீ எனக்குக் கொடுத்தாய். ஆனால் உயிருடன் இருந்தபோது கொடுக்காததையும் இறந்தபின் நீ கொடுத்துக்கொண்டிருக்கிறாய். ஆன்மா அழிவற்றது என்பதற்கு இதுவே எனக்குப் போதிய ஆதாரம்.

**தவயோகித் தந்தையார்**

தந்தையாரின் செயல்கள் யாவும் விஞ்ஞான முறைப்படி நடக்கும். அவர் உணவுப் பழக்கம் மாறாத கட்டுத்திட்டங்கள் உடையது. மாலை ஒரு கிண்ணம் தயிர், மூன்று கோதுமை ரொட்டிகள், பத்து தோலா கறிகாய். காலையில் கால் சேர் பால். இதில் மாற்றமே நேர்ந்தது கிடையாது. காலை மாலை உணவை அவரே தீர்மானித்து விட்டிருந்தார். மதிய உணவைத் தீர்மானிப்பதை அவர் அம்மாவிடம் விட்டு விட்டார். அம்மா எதைச் சமைத்தாலும் சாப்பிடுவார். ஆனால் எவ்வளவு சாப்பிடுவது என்று தீர்மானிப்பது அவர்தான்.

தந்தையாருக்கு நீரிழிவு நோய் இருந்தது. அவர் தன் உணவை ஆராய்ந்து எல்லாவிதமான சர்க்கரைப் பொருளையும் விட்டுவிடத் தீர்மானித்தார். பாலிலும் சர்க்கரைச் சத்து இருக்கிறது. அதனால் பாலுக்குப் பதிலாக பாலாடைக் கட்டி சாப்பிட ஆரம்பித்தார். கோதுமை முதலிய அனைத்து தானியங்களையும் விட்டுவிட்டார். சோயாபீன்ஸ் சாப்பிட ஆரம்பித்தார். சோயாபீன்ஸில் மிக அதிகமாக புரதம் உள்ளது. இருபது சதம் கொழுப்பு, கார்போஹைட்டிரேட் மிகவும் குறைவு. சோயாபீன்ஸை அவர் எப்படி தம் உணவில் அதிகப்படுத்தினார் என்பது சுவாரஸ்யமானது. முதல்நாள் சோயாபீன்ஸ் ஒரு பருப்பு, அதற்கு ஈடாக மூன்று கோதுமை தானிய மணி குறைத்துக்கொள்வது, மறுநாள் சோயாபீன்ஸ் இரண்டு, கோதுமை மணி ஆறு அதற்கு ஈடாக குறைப்பது. இப்படி படிப்படியாகக் குறைத்து, சாப்பிட்டு வந்துமொத்த கோதுமையில் 40% ஐ சோயாபீன்ஸாக மாற்றிவிட்டார். இவ்வாறு குறைப்பதில் ஒன்றறை மாதம் பிடித்தது. கடைசியில் 15 தோலா சோயாபீன்ஸ் வரை வந்து சேர்ந்தார். அதனுடன் கொஞ்சம் கறிகாய். அவ்வளவு தான், வந்த நோய் அவரை விட்டு நீங்கியது.

அவருக்கு மூலவியாதியும் இருந்தது. ஒரு நாள் ஒருவர் வீட்டுக்குச் சாப்பிடப் போனோம். அங்கே பூரியும், பாகற்காய் கறியும் சாப்பிட்டோம். இரண்டாம் நாள் மலம் கஷ்டமில்லாமல் நன்கு போயிற்று. இது எதனால் விளைந்தது? பூரியினாலா, பாகற்காயினாலா? என்று யோசித்தார். மறுநாள் வெறும் பூரி மட்டும் சாப்பிட்டுப் பார்த்தார், பயன் ஒன்றும் இல்லை. மறுநாள் பாகற்காய் கறி மட்டும் சாப்பிட்டுப் பார்த்தார். அது வயிற்றை சுத்தமாக வைத்துக் கொள்ள உதவுவது தெரிந்தது. அதை உட்கொள்ளத் துவங்கினார். அவர் செய்வதெல்லாம் இப்படி விஞ்ஞான பூர்வமாகவும், பரிசோதனைக்குட்பட்டதாகவும் இருக்கும்.

அம்மா போன பின்பு அவர் முப்பதாண்டுகள் உயிரோடு இருந்தார். அப்போது சுமார் இருபது வருடங்கள் வெறும் பால் மட்டுமே உண்டு வாழ்ந்தார். இடையே சோயாபீன்ஸ் உண்டு வந்தார்.

அம்மா போன பின்பு ஒரு நாள் பாலகோபா (வினோபாஜியின் தம்பி) அவரிடம் "அம்மா போனது உங்களை எப்படி பாதித்தது" என்று வினவினான். அதற்கு அவர் "அம்மா போன பின்பு என் உடல்நலம் நன்றாக இருக்கிறது. நான் கட்டுப்பாட்டுடன் விஞ்ஞான பூர்வமாக இருக்க

வேண்டும் என்கிற ஆள். ஆனாலும் ஒருவேளை மட்டும் உங்கள் அம்மாவின் பொறுப்பில் இருந்தது. அவள் போடுவதை சாப்பிட்டு வந்தேன். நல்லது, கெட்டது பார்த்தது இல்லை. இப்போது என் உடல் நலத்திற்கு ஏற்றதாக யோசித்துச் சாப்பிடுகிறேன்" என்று பதில் சொன்னார்.

பாலகோபா இந்த விஷயத்தை என்னிடம் சொன்னபோது உருகிப்போய்விட்டேன். என்ன திடசித்தம்! கிட்டத்தட்ட துகாராம் சுவாமிகள் சொன்னது போன்ற பதில். "சாவினால் மனைவிக்கு விடுதலை கிடைத்தது, எனக்கு மாயையும் அகன்றது."

என் தந்தையார் ஒரு யோகி, கணித விற்பன்னர், விஞ்ஞானி. அவர் ஒரு ரசாயன சாஸ்திர வண்ணங்கள் சம்பந்தமாக பரிசோதனைகள் செய்து கொண்டே இருப்பார். சிறிய சிறிய துணித்துண்டுகளை சாயம் தோய்த்து எது கெட்டிச்சாயம், எது வெயில் தாங்கும், எது தண்ணீரில் போகாது என்று பரிசோதனை செய்து கொண்டே இருப்பார். அந்த சிறு துண்டுகளை எல்லாம் ஒரு புத்தகம் போல் தயாரித்து ஒட்டி வைப்பார். ஒவ்வொரு துண்டுக்கும் எதிரில் அதன் நிறத்தில் பெயரை எழுதி வைத்திருப்பார்.

ஒருநாள் அம்மா "இப்படி சிறிய சிறிய துண்டுகளாக சாயம் தோய்க்கிறீர்களே, இத்தனையில் ஒரு புடவையை தோய்த்தாலும் எனக்கும் பயன்படும்" என்றாள்.

அப்பா "பரிசோதனை வெற்றி பெற்றால் ஒன்றல்ல பல புடவைகள் கிடைக்கும். பரிசோதனை வெற்றி பெறாதவரை இப்படி சிறிய துண்டுகளாகத் தான் நம் கையில் இருக்கும்" என்றார்.

அப்பா சின்னச்சின்ன கைத்துண்டுகள் தயாரித்த அரிச்சுவடி முழுவதையும் வீட்டிலேயே அச்சடித்து வைத்திருந்தார். நாங்கள் பள்ளிக்கூடப் புத்தகங்களை அதில் சுற்றி எடுத்துப்போவோம். திருவிழா நாட்களில் அப்பா சொற்படி. வின்யா அக்கைத்துண்டுகளை சந்தையில் விற்க எடுத்துப்போய் "ஒரு அணாவிற்கு அரிச்சுவடித் துண்டு, அரிச்சுவடித் துண்டு" என்று கூவி விற்பான்.

பரோடாவில் முதல் மில் துவங்கியபோது அப்பாவுக்கு பேரானந்தம் உண்டாயிற்று. அன்று வீட்டுக்கு வந்து மிகுந்த குதூகலத்துடன் எங்களுக்கு அதுபற்றி விவரித்தார். அவருக்கு இருந்த மகிழ்ச்சியைப் பார்த்து "வின்யா பிறந்தபோதுகூட இவ்வளவு மகிழ்ச்சி அடைந்திருக்கமாட்டீர்கள் போலிருக்கிறதே" என்றாள். புதிய சிந்தனையாளர்களுக்கு நவீனயந்திரங்களைக் கண்டால் புதியயுகம் பிறந்தது போலிருக்கும். பழைய கருவிகளைத் தூக்கி எறிந்துவிடலாம் என்று பெரும் மகிழ்ச்சி உண்டாகிறது. குஞ்சு முட்டையை விட்டு வெளியே வந்து வானத்தை முட்ட பறக்க அவாவுவதைப் போல இதுவரை பழைய கருவிகள் என்னும் முட்டையில் அடைபட்டிருந்தோம். இனி வெளியேறலாம். உயர உயரப் பார்க்கலாம் என்று புதிய சிந்தனையாளர்கள் நினைக்கிறார்கள். எங்கள் அப்பா இந்தியாவை நவீனப்படுத்த வேண்டும் என்று எப்போதும் சொல்லி வந்தார்.

ஆனால் காந்திஜி கிராமத் தொழில்கள் சங்கம் துவங்கியபோது அந்தக் கருத்து அவருக்கு மிகவும் பிடித்தது. காந்திஜியின் அழைப்பின் பேரில் அவர் மகன்பாபு துவங்கிய காகிதத் தொழிலைப் பார்வையிட்டார். "காகிதக் கூழ் தயாரிக்க மட்டும் இயந்திரங்களைப் பயன்படுத்தலாம், மற்றவை யாவற்றையும் கையால் செய்யலாம்" என்று யோசனை சொன்னார். அது 1934-35 வாக்கில் நடந்தது. அப்போதெல்லாம், எதையும் கையால் செய்யும் ஆர்வம் தலைதூக்கி நின்றது. எனவே அவரது யோசனை அப்போது ஏற்கப்படவில்லை. பிறகு ஏற்றுக்கொண்டார்கள். இப்போது கைவினைக்-காகிதத் தொழிற்கூடங்களில் காகிதக்கூழ் யந்திரத்தின் உதவியால்தான் செய்கிறார்கள்.

அப்போது அப்பா எனக்கு ஒரு கடிதம் எழுதினார். துரதிஷ்டவசமாக அக்கடிதம் இப்போது என்னிடம் இல்லை. அதைப் பாதுகாத்து வைத்-திருக்க வேண்டும். நான் எனக்கு வரும் கடிதங்களை வைத்துக் கொள்வதே இல்லை. அதனால்தான் அதுவும் போய் விட்டது போலும். 10-12 தாள்கள் அடங்கிய கடிதம், பெரிய பெரிய எழுத்துக்களில் எழுதப் பட்டது. காகிதம் சற்று நீல நிறமாக இருந்தது. கடிதத்தில், இக்கடிதம் சம்பந்தப்பட்ட அனைத்தையும் நானே என் கையால் செய்தேன். காகிதம் நான் தயாரித்தது, இதில் பயன்படும் மை நான் தயாரித்தது. கடிதத்தை எழுதும் பேனா நான் தயாரித்தது, கடிதத்தை எழுதுவதும் நானே" என்று தந்தையார் எழுதியிருந்தார். இங்ஙனம் அக்கடிதம் "தன் கையே தனக்குதவி" என்பதற்கு சரியான உதாரணமாக இருந்தது. மேலும் அக்கடிதத்தில், "காகிதம் கொஞ்சம் நீலநிறமாக இருக்கிறது. இதை அகற்றியிருக்கலாம். ஆனால் அதை அகற்றும் பொருளை வெளியிலிருந்து தருவிக்க வேண்டி வரும். எனவே அந்த நீல நிறம் அப்படியொன்றும் மோசமாக இல்லை, இருந்து-விட்டுப் போகட்டும் என்று விட்டுவிட்டேன்" என்று குறிப்பிட்டிருந்தார்.

அக்கடிதத்தில் இதுபற்றி இங்கிலாந்தில் நூற்றைம்பது வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்ட புத்தகங்கள் உள்ளன என்றும் அவற்றைப் படிக்க வேண்டும் என்றும் எழுதியிருந்தது. இங்கிலாந்திலும் முதலில் கையால் நூற்ற நூலையே பயன்படுத்தி வந்தனர். பிறகுதான் மில்கள் தோன்றின. இடைப்பட்ட காலத்தில் பல சோதனைகள் மேற்கொள்ளப்பட்டன. அந்த சமயத்தில் எழுதப்பட்ட நூல்கள் நமக்குப் பயன்படும் என்பது அவர் கூற்றாகும். இப்படிப்பட்ட பழைய நூல்கள் கிடைத்தால் அவர் விலைக்கு வாங்கிக் கொள்வார். இத்தகைய பல அரிய நூல்களை அவர் சேகரித்து வைத்திருந்தார்.

தந்தையார் மிகவும் தற்சார்பு கொண்டவர். தன்னுடைய எந்த சொந்த வேலையையும் அவர் எங்கள் தாயையோ, எங்களையோ செய்யவிட்ட-தில்லை. அம்மா இறந்தபின்பும் மற்ற எவரையும் எந்த வேலையும் ஏவிய-தில்லை. ஒரு முறை சாமான் தேய்ப்பது, வீட்டைக் கூட்டுவது போன்ற வீட்டு வேலைக்கு ஒரு ஆள் வைத்துக்கொள்ளுமாறு சொன்னபோது அவர் சொன்னார், "எவ்வளவு நல்ல வேலைக்காரர் ஆனாலும் ஏதாவது தப்பு செய்துவிடக்கூடும். பிறகு நாம் ஏதாவது கடுமையாக சொல்லி விடுவோம்.

அதைவிட நம் வேலையை நாமே செய்து கொள்வது நல்லது. இதில் சிறிது சிரமப்பட்டாலும் யார் மனதையும் புண்படுத்தி விடக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படாது."

அவருடைய சுயக்கட்டுப்பாடும், நேரம் தவறாமையும் மிகவும் உறுதியானவை. பரோடாவில் அவருக்கு ஒரு நண்பர் இருந்தார். அவர் வீட்டுக்கு தினமும் மாலையில் அவர் சதுரங்கம் ஆடப்போவார். தினமும் அரைமணி நேரம் மட்டுமே விளையாடுவார். இது அவர் தீர்மானம். ஒரு சமயம் அம்மா கர்நாடகத்தில் தம் பிறந்தகம் போயிருந்தபோது, நான் தந்தையாருடன் அந்த நண்பரின் வீட்டுக்கு சாப்பிடப் போவது வழக்கம். ஒருமுறை அப்பா சதுரங்கம் விளையாட வந்தபோது நான் அருகிலிருந்தேன். ஏழு மணிக்குத் திரும்புவது என்று தீர்மானித்து வைத்திருந்தார். எதிரில் கடிகாரத்தை வைத்துக்கொண்டு விளையாட உட்கார்ந்தார். சரியாக ஏழு மணிக்கு எழுந்துவிட்டார். சில சமயங்களில் ஏழு அடித்து விடும். ஆனால் விளையாட்டு முடிவு பெற்றிருக்காது. ஆயினும் அப்பா எழுந்து விடுவார். "இன்னும் வெற்றி தோல்வி தெரிய வில்லை, இன்னும் ஐந்து நிமிடங்களில் முடிந்து விடும், முடித்துவிட்டுப் போங்கள்" என்று நண்பர்கள் சொன்னாலும் கேட்க மாட்டார். "விளையாட்டை நாளை வேண்டுமானாலும் முடித்துக்கொள்ளலாம். இதை இப்படியே விட்டுவைத்திருங்கள். நாளை இதே இடத்திலிருந்து ஆரம்பிப்போம்" என்று சொல்லி விடுவார். யார் சொன்னாலும் கேட்க மாட்டார். அவருடைய வழக்கம் மாறாது.

அவருக்கு சங்கீதத்தில் ஆர்வம். அவருடைய வாழ்நாளில் இறுதி முப்பது ஆண்டுகளில் அவர் இந்திய சங்கீதம் பயின்றார். ஒரு முஸ்லீம் பாடகரிடம் முறையாகப் பாடம் பயின்றார். பதினான்கு மணிநேரம் வரைகூட சாதனை பழகுவார். நம்முடைய பழைமை வாய்ந்த சாஸ்திரீய சங்கீதம் மறைந்து போகக்கூடாது என்று மிகுந்த பிரயாசை எடுத்து நாதிர்கானின் மிருதங்கக் கலை, ஷேக் ராஹத் அலியின் டுமரிப்பாடல்கள் தொகுப்பு இரண்டையும் தம்செலவில் பதிப்பித்தார். இவ்வாறே பதிப்பிக்கத்தக்கதாக எட்டு-பத்து தொகுப்புக்கள் அவரிடம் இருந்தன.

நான் சிறுவயதில் அப்பாவிடம் நிறைய அடி வாங்கியிருக்கிறேன். அவர் அடிப்பதும் விஞ்ஞான ரீதியாக இருக்கும். எலும்பில் படாத வண்ணம் அடிப்பார். ஊரைச் சுற்றி விட்டு தாமதமாக வீடு திரும்புவது என் தினசரி வழக்கம். சாப்பிட்டு தூங்கப்போகும் முன் அப்பாவின் முன் போய் நிற்கவேண்டும். பகற்பொழுதில் ஒன்றில்லாவிட்டால் ஒரு விஷமம் நிச்சயம் செய்திருப்பேன். சில சமயம் அவர் புத்தகத்தை உரிய இடத்தில் வைத்திருக்க மாட்டேன். துணிகளை முறையாக வைத்திருக்க மாட்டேன். எதற்காவது பிடிவாதம் பிடித்திருப்பேன். இப்படி ஒன்றில்லாவிட்டால் ஒன்று கிடைத்து விடும். உதைவிழும். அம்மாவிடம் "நீ ஏன் அம்மா என்னை அடிப்பதில்லை" என்று கேட்டால், "அங்கிருந்து உதை கொஞ்சமாகவா விழுகிறது? நான் வேறு அதை அதிகமாக்க வேண்டுமா" என்பாள்.

ஆனால் ஒரு நாள் எதிர்பாராதது நடந்தது. தினப்படி வழக்கம்போல் சுற்றிவிட்டு வந்தேன். சாப்பாடும் ஆயிற்று. ஆனால் அப்பா கூப்பிட்டு அனுப்பவில்லை. எப்போது கூப்பிடுவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அவர் கூப்பிடவே இல்லை. தூங்கி விட்டார். இன்று அடிகளிலிருந்து தப்பினோம் என்று நினைத்துக் கொண்டேன். ஆனால், இரண்டாவது, மூன்றாவது, நான்காவது நாட்களும் அப்படியே சென்றன. அவர் என்னை அடிக்கவே இல்லை. பிறகு மனுஸ்மிருதி படித்த பின்தான் அந்த மர்மம் புரிந்தது. மனு "ப்ராப்தேசது ஷோடஸேவர்ஷே புத்ர மித்ரவதாசரேர்" என்று கூறியிருக்கிறார். அன்று எனக்கு பதினாறு வயது ஆகியிருந்தது. அதனால்தான் அவர் அடிப்பதை நிறுத்திவிட்டார். அதாவது கல்வியின் ஒரு அங்கமாக நினைத்தே அவர் அடித்தார். என்றைக்கு நிறுத்த வேண்டுமோ அன்று நிறுத்திவிட்டார்.

தந்தையார் காகோதேயிலிருந்து பரோடா வந்த புதிதில் நாங்கள் தாயாருடன் காகோதேயிலேயே இருந்து வந்தோம். இடையிடையே அப்பா காகோதே வந்து போவார். அப்போதெல்லாம் ஏதாவது வாங்கிவருவார். ஒரு சமயம் தீபாவளி விடுமுறையில் அவர் வீடு வரவிருந்தார். அப்பா வரும்போது இனிப்புகள் வாங்கி வருவார் என்று அம்மா என்னிடம் சொல்லி வைத்திருந்தார். நாங்கள் வழி மீது விழி வைத்துக் காத்திருந்தோம். அப்பா வந்தாரோ இல்லையோ, நான் இனிப்புகளை வாங்க விழுந்தடித்துக் கொண்டு ஒடினேன். அவர் என்கையில் ஒரு பாக்கெட்டை அளித்தார். லட்டு போல் உருண்டை உருண்டையாக ஏதாவது அடங்கிய பாக்கெட்டாக இருக்கும் என்று நினைத்தேன். நான் மேலே சுற்றியிருந்த தாளைப் பிரித்தேன். உள்ளே பாலராமாயணமும் பாலமஹாபாரதமும் இருந்தன. அம்மாவிடம் அந்தப்புத்தகங்களைக் கொண்டு போய் காட்டினேன். அப்புத்தகங்களைப் பார்த்ததும் அம்மாவின் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. "அப்பா உனக்கு இன்று கொண்டு வந்த இனிப்பைப் போல இனிப்பு வேறு எதுவும் கிடையாது" என்றாள். அம்மாவின் அந்த வார்த்தைகள் இன்றும் என் நினைவில் நிற்கின்றன. அந்த 'இனிப்பு' எனக்கு மிகவும் பிடித்து விட்டது. இன்றும் அதன் மோகம் விட்டபாடில்லை.

அவர் பிள்ளைகளை வளர்க்கும் முறையே அலாதி. எந்த ஒரு விஷயத்தையும் அறிவு பூர்வமாக எடுத்துச் சொல்ல முயற்சிப்பார். அம்மா, அப்பா இருவருக்குமே சாப்பிடும் போது தட்டில் மீதம் வைத்தால் பிடிக்காது. கொஞ்சம் குறைவாக சாப்பிட்டாலும் பரவாயில்லை, அதனால் தீமையொன்றும் கிடையாது என்பார்கள். அவர்கள் "ஒவ்வொருவனுக்கு உரிய உணவு விதிக்கப்பட்டிருக்கிறது, கொஞ்சமாக சாப்பிட்டால் நீண்டநாள் வரும், நீண்ட நாள் வாழலாம்" என்பாள் அம்மா. என்ன தத்துவ ஞானம்; தந்தையார் அறிவின் அடிப்படையில் விளங்க வைப்பார். "உணவின் ருசி எங்கே தெரிகிறது? ருசி நாக்கில் உள்ளது. எனவே அதிகநேரம் வாயிலேயே வைத்திரு, அவசரம் அவசரமாக வயிற்றுக்குள் தள்ளிவிடாதே, அதாவது மென்று சாப்பிடு. நன்கு மென்று சாப்பிட்டால் குறைவாகத்தான் சாப்பிடமுடியும்." அறிவியலை தந்தையாரும் உபநிஷத்தின் ஆன்மீகத்தை தாயாரும் எடுத்துக் கூறிவிட்டார்கள். இரண்டுமே நினைவில் கொள்ளத் தக்க சாரமுடையவை.

இறுதி நாட்களில் அவர் நோய்வாய்ப்பட்டபோது தம் புதல்வர்களுக்கு அவர் தெரிவிக்கவில்லை. என் நண்பர் மேகே பாபா பரோடா சென்றபோது தந்தையாரைக் காணப்போயிருந்தார். அப்போது தான் அவருக்குத் தெரிந்தது. வார்தா வந்து அவர் எனக்குத் தெரியப்படுத்தினார். அந்நாட்களில் சிவாஜி (விநோபாஜியின் சகோதரர்) துலியாவில் இருந்தான். நான் அவனை அப்பாவிடம் போகும்படி எழுதினேன். அவன் பரோடா போய் மிகவும் வற்புறுத்தி துலியா அழைத்து வந்தான். அங்கே சரத்கால பௌர்ணமியில் அவர் காலமானார் (26-10-1947).

அஸ்தி கரைக்கும் பேச்சு வந்தது. கோதாவரி அருகிலேயே (நாசிக்) இருந்தது. அங்கே கரைக்கலாம் என்றார். அவருடைய அந்திமக் காலத்தில் நான் அங்கே போய்விட்டேன். "அப்பாவின் அஸ்திகளின் மீது கோதாவரிக்கு என்ன உரிமை இருக்கிறது. கோதாவரி தண்ணீர், அஸ்தியோ மண். அதன் மீது தண்ணீருக்கு என்ன உரிமை, மண் மீது மண்ணுக்குத்தான் உரிமை. நெருப்பு நெருப்புடனும், காற்று காற்றுடனும், நீர் நீருடனும், மண் மண்ணுடனும் கலக்கவேண்டும். எனவே தகனக்கிரியை முடிந்தபின் சாம்பலை எங்கள் வீட்டு முற்றத்திலேயே ஒரு பள்ளம் தோண்டி அதில் போட்டு மூடி விட்டோம். அதன் மீது ஒரு துளசிச்செடியை நட்டு விட்டோம். எல்லோருக்கும் நாங்கள் செய்தது விசித்திரமாகப்பட்டது. அஸ்தியை கங்கையில் கரைத்திருக்கவேண்டும் என்று நினைத்தார்கள். நானோ வேதத்திலிருந்து என் செய்கைக்கு ஆதாரம் கொண்டு வந்தேன். வேதத்தில் ஒரு பிரார்த்தனையில் "தாயே, என் சடலத்திற்கு இடம் கொடு" என்று பூமித்தாயிடம் சொல்லியிருக்கிறது. இதைப்பற்றி மேலைநாட்டு உரையாசிரியர்கள் முதலில் புதைத்துவிட்டனரா, எரித்து வந்தனரா என்று வினாவெழுப்பினர். இவ்வாறு வரலாறு ரீதியான முடிவுகள் எடுக்கிறார்கள். ஆனால் எல்லாம் ஊகம்தான். வேதத்தில் ஒரு ஸ்லோகத்திற்கு இரண்டு கருத்துக்கள் வருகின்றன. முதலில் சடலத்தை எரித்து பிறகு மிஞ்சும் சாம்பலை புதைக்கவேண்டும் என்று. வேதப் பொருள் கொண்டு அதன் அடிப்படையில் நாங்கள் தந்தையாரின் அஸ்தியை நதியில் கரைக்காமல் பூமியில் புதைத்து விட்டோம். தந்தையாரின் சமாதி மீது ஒரு கல்லின் மீது சமர்த்த ராமதாசரின் வாக்கை பொறித்து வைத்தோம். அவகே சி சுகீ. அசாவே(ன்) ஹீ வாஸனா (எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டும். இதுவே என் விருப்பம்).

# பிரம்மஞான ஆர்வம்

**மாணவப் பருவம்**

தந்தையார் என்னை பள்ளிக்கு அனுப்பாமல் எனக்கு வண்ணம் தோய்க்கும்7 கலையை கற்பிக்கவிரும்பினார். எனவே 5 - 6 வகுப்பு வரை அவர் எனக்கு வீட்டிலேயே கற்பித்தார். பிறகு பரோடாவில் கலாபவனுக்கு என்னை அனுப்பினார். அங்கே அவருக்கு மிகவும் மதிப்பு இருந்தது. எல்லோரும் என்னை "பாவேஜியின் மகன்" என்று சொல்வார்கள். ஆனால் அங்கே சேர எனக்கு அனுமதி கிடைக்கவில்லை. ஆங்கிலம் எவ்வளவு படித்திருக்கிறாய் என்று கேட்டார்கள். இரண்டு மூன்று வகுப்புகள் படித்திருக்கிறேன் என்று சொன்னேன்.

அங்கே இண்டர்மீடியட் வரை படித்தவர்கள்தான் சேர்வதற்கு வந்திருந்தனர். எனவே என்னைச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஆகவே அப்பா மேலும் எனக்கு வீட்டிலேயே கல்வி அளிப்பது தொடர்ந்தது. ஆனால் எவ்வளவுக்குப் படிக்கிறானோ அவ்வளவுக்கு பையன் ஊர் சுற்றுகிறான் என்பதை அப்பா கண்டார். அதன்பின் நிறைய கணக்குகள் தரத்துவங்கினார். வீட்டில் உட்கார்ந்து கணக்குப் போட்டுக் கொண்டிருப்பான் என்று அவர் நினைத்தார்.

நான் என்ன செய்வேன் தெரியுமா? கணக்குப் புத்தகத்தில் இறுதியில் சிறு எழுத்துக்களில் கடினமான கணக்குகள் தந்திருப்பார்கள். அவற்றை மட்டும் போடுவேன். மற்றவற்றை விட்டுவிடுவேன். அப்பா சும்மா இருந்துவிடுவார். அப்பாவிடம் கணக்கு பயின்ற எனக்கு மெட்ரிகுலேஷன் வரை கணக்குப் பயில வேண்டிய அவசியம் தேவைப்படவில்லை. ஒரு மணிநேரம் ஆங்கிலமும், கணக்கும் படித்து முடித்துவிட்டு நான் ஊர் சுற்றக் கிளம்பி விடுவேன். நான்கு, ஐந்து மணிநேரம் சுற்றுவேன். கடைசியில் வேறு வழியின்றி தந்தையார் என்னைப் பள்ளியில் சேர்த்தார்.

அங்கேயும் நான் என் வேலையைக் காட்டினேன். நான் சுற்றுவதுடன் நண்பர்களையும் இழுத்துக் கொண்டு சுற்றத் துவங்கினேன். அவர்களையும் படிக்கவிடாமல் சுற்றி அடித்தேன். என் நண்பன் மோதிக்பாபா எனக்குப் பயந்து கொண்டு ஒரு கோவிலில் ஒளிந்து கொண்டு படிப்பான். நான் அவனைத் தேடிக் கண்டுபிடித்து இழுத்துப்போவேன். அந்நாட்களில் நான் ஒரு மராட்டிய வாசகம் சொல்வது வழக்கம். "பல்கலைக்கழகத்தின் ஏட்டுச் சுரைக்காய் வருடந்தோறும் வெடித்து நூற்றுக்கணக்கான விதைகள் வெளியே வருகின்றன" என்பேன். பட்டத்திற்கு விதைகள் சிலேடை. "சுரைக்காய்" என்று ஒன்றும் அறியாதவனை வடநாட்டில் கேலியாகத் திட்டுவது உண்டு.

சிறுவயதில் எனக்கு இரு வழக்கங்கள் இருந்தன. ஒன்று படிப்பது, மற்றொன்று ஊர் சுற்றுவது. நேரம் கிடைக்கும் போதெல்லாம் ஊர் சுற்றக் கிளம்பி விடுவேன். என் நண்பர்கள் "உன் காலில் சக்கரம் இருக்கிறதா" என்று கூறுவார்கள். "நீ போன ஜன்மத்தில் புலியாக இருந்திருப்பாய், பகல் முழுவதும் சுற்றுகிறாய். அபாரமான மோப்ப சக்தியும் வைத்திருக்கிறாய். பிடிக்காத நெடியை சிறிதும் பொறுக்க முடியவில்லை உன்னால்" என்பாள் அம்மா. பரோடாவில் எல்லாத் தெருக்களும் எனக்குப்பழக்கம். சுற்றுவதற்கு எந்த சமயமும் எனக்கு உகந்ததே. ஓடுவதும் எனக்குப் பிடிக்கும். நிறைய ஓடுவேன். எவ்வளவு ஓடினேன் என்றே யோசிக்காமல் ஓடிக்கொண்டிருப்பேன்.

ஒரு நாள் இரவு 12.30 மணிக்கு நான் ஓட ஆரம்பித்தேன். பரோடா அரண்மனை வீதியில் ஓடிக்கொண்டிருந்தேன். காவலன் "யாரங்கே" என்று கத்தினான். நான் கவனிக்காமல் ஓடிக்கொண்டேயிருந்தேன். சிறிது நேரம் கழித்து அதே வழியில் திரும்பினேன். இம்முறை காவலன் என்னைப் பிடித்துக்கொண்டுவிட்டான். "ஏன் ஓடுகிறாய்?" என்று கேட்டான். "உடற்பயிற்சிக்காக ஓடுகிறேன்" என்று பதில் சொன்னேன். இரவு ஒரு மணிக்கு யாராவது உடற்பயிற்சிக்காக ஓடுவார்களா? கட்டாயம் ஏதாவது திருட்டு நோக்கம் இருக்கும் என்றான். "திருடுபவன் போன வழியிலேயே திரும்புவானா?" என்று நான் பதிலுக்குக் கேட்டேன். அவனுக்குப் பேசத் தோன்றவில்லை, என்னைப் போக விட்டுவிட்டான்.

ஒரு தீபாவளியன்று யார் வீட்டில் விளக்கு எரிய வில்லை என்று பார்க்கக் கிளம்பினேன். மூன்று மணிநேரம் சுற்றிப் பார்த்து விட்டேன். பரோடா முழுவதிலும் ஒரு வீடுகூட விளக்கில்லாமல் இல்லை. முஸ்லீம்கள் வீட்டில்கூட விளக்குகள் ஏற்றி வைக்கப்பட்டிருந்தன. நான் வெவ்வேறு கோவில்களுக்கும் போவேன். கமாட்டி தோட்டத்திற்கருகிலேயே ஒரு கோவில் இருந்தது. அதற்கு நான் பழிச்சேஷ்வரர் கோவில் என்று பெயர் வைத்திருந்தேன். அதற்கு அருகிலேயே எங்கள் கல்லூரி இருந்தது. பரிட்சை சமயங்களில் அந்தக் கோவிலில் சுவாமி தரிசனம் செய்யவும், பாஸ் செய்துவிட வரம் கேட்கவும் மாணவர்கள் கூட்டம் அலைமோதும்.

பள்ளியிலும், கல்லூரியிலும் எப்போது வகுப்பு முடியும், வெளியே ஓட்டம் பிடிக்கலாம் என்பதிலேயே குறியாக இருப்பேன். ஒருநாள் ஆசிரியர் எங்களுக்கு ஏதோ எழுத "டிக்டேட்" செய்து கொண்டிருந்தார். நான் எழுதாமல் கேட்டுக்கொண்டு மட்டும் இருந்தேன். ஆசிரியர் அதைக் கவனித்து விட்டார். "டிக்டேட்" பண்ணி முடித்தபின் அவர் என்னை எழுந்து என் குறிப்புகளைப் படிக்கச் சொன்னார். நான் எழுந்து நின்று நோட்புக்கை விரித்து வைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்தேன். கேட்டதையெல்லாம் சொல்லிவிட்டேன். ஆசிரியருக்கு ஒரே வியப்பாகப் போய்விட்டது. என் நோட்டைக் காட்டச் சொன்னார். நான் வெற்று நோட்டை நீட்டியவண்ணம், "நான் எழுதியிருப்பதை உங்களால் படிக்க முடியாது" என்று சொன்னேன்.

கணிதம் எனக்குப் பிடித்தமான விஷயம். எனக்கு கணக்கு ஆசிரியராக வந்தவரும் அருமையானவர். அவர் என்மீது அன்பைச்சொரிந்தார். ஒரு நாள் அவர் ஒரு கடினமான கணக்கை விளக்கிக் கொண்டிருந்தார். அவர் கரும்பலகையில் கணக்கு முழுவதையும் போட்டுவிட்டார். ஆனால் விடை புத்தகத்தில் கொடுத்து இருந்த விடைக்கு மாறாக இருந்தது. அவர் திரும்பத் திரும்பச் சரி பார்த்தார். ஆனால் தவறு ஒன்றையும் கண்டு பிடிக்க முடியவில்லை. இறுதியில் என்னைக் கூப்பிட்டு சரிபார்க்கச் சொன்னார். "நான் முன்பே சரி பார்த்துவிட்டேன். புத்தகத்தில் இருக்கும் விடைதவறு, உங்கள் விடை சரி" என்றேன். அப்போதுதான் அவருக்கு நிம்மதியாயிற்று.

அந்த ஆசிரியர் மாணவர்களை நேசித்தார். மிகவும் சிரத்தையுடன் போதித்து வந்தார். ஒருமுறை நான் அவரை கணக்கில் ஒரு கேள்வி கேட்டேன். மிகவும் கடினமான வினா. அவர் யோசித்துவிட்டு மறுநாள் விடையளிப்பதாகச் சொன்னார். அவர் "இத்தனை ஆண்டுகளாக நான் கற்பித்து வந்திருக்கிறேன். ஆனால் இதுவரை இப்படிப்பட்ட வினாவை யாரும் கேட்டதில்லை. நான் வருடக்கணக்காக கணிதம் கற்பித்து வருகிறேன். தூக்கத்தில் எழுப்பிக் கேட்டாலும் சொல்லுவேன். அவ்வளவு பழக்கமாகிவிட்டது. ஆனால் உன் கேள்வி வித்தியாசமானது. இதற்கு நாளை பதில் தருகிறேன்" என்று சொன்னார். அவருடைய இந்த பதில் என்னிடம் ஆழ்ந்த முத்திரையைப் பதித்தது.

கீதைப் பேருரைகளில் நான் ஒரு விஷயம் குறிப்பிட்டிருக்கிறேன். பள்ளியில் ஒரு மாணவனுக்கு ஒரு கணக்கு தெரியவில்லை என்றால் ஆசிரியர் அவன் கன்னத்தில் ஓங்கி அறைகிறார். கணக்கு போடுவதற்கும் கன்னத்தில் ஓங்கி அடிப்பதற்கும் என்ன சம்பந்தம்? கன்னத்தில் அறைந்தால் ரத்த ஓட்டம் அதிகமாகி, மூளை சுறுசுறுப்பாக இயங்கி கணக்குப் போடுமா என்ன? நான் பத்து வயது சிறுவனாக இருந்தபோது படித்த பள்ளியில் பையன்களை மிகவும் அடிக்கும் ஆசிரியர் ஒருவர் இருந்தார். பிரம்பினால் தான் கல்வி புகட்ட முடியும் என்பது இவருடைய உறுதியான கருத்துபோலும். அவரிடம் ஒரு நீண்ட பிரம்பு இருந்தது. அதை அவர் எப்போதும் பூட்டி வைத்திருப்பார்.

பையன்களுக்கு அவர் அடிப்பது பிடிக்கவில்லைதான். ஆனால் அவர்களால் என்ன செய்ய முடியும்? ஒரு நாள் நான் எப்படியோ பூட்டைத் திறந்து பிரம்பைத் தூக்கி எறிந்துவிட்டேன். ஆசிரியர் வந்து பார்த்தபோது பிரம்பைக் காணோம். பையன்களின் விஷமம் என்பதைப் புரிந்து கொண்டார். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. அடுத்த நாள் இன்னொரு பிரம்பு கொண்டு வந்தார். நான் அதையும் தூக்கி எறிந்து விட்டேன். மூன்றாம் நாள் இன்னொரு பிரம்பு கொண்டு வந்தார். அதையும் எறிந்து விட்டேன். அவருக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. இது யார் வேலை என்று மாணவர்களை விசாரிக்க ஆரம்பித்தார். மாணவர்கள் எல்லாம் என்பக்கம். எனவே மௌனமாக இருந்தார்கள். ஆசிரியர் இது யார் செய்த வேலையாக இருக்கும் என்று யோசித்து என்னைக் கண்டுபிடித்து விட்டார்.

செய்த விஷமத்திற்கு தண்டனை கொடுக்க வேண்டுமே! அவர் வின்யாவை ஐநூறு முறை உட்கார்ந்து எழுந்திருக்கச் சொன்னார். ஒரு பையனை எண்ணுவதற்கு நிறுத்தி வைத்தார். அவனோ என் நண்பன். அவன் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஏழு, பத்து என்று எண்ணினான். பிறகு களைத்துப் போய் உட்கார்ந்துவிட்டான். நான் உட்கார்ந்து உட்கார்ந்து எழுந்து கொண்டிருந்தேன். சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு மீண்டும் அவன் எண்ணத் துவங்கினான். இப்படியே விட்டு விட்டு எண்ணினான். ஒரு வழியாக ஐநூறு முடிந்து விட்டதாக கணக்கு சொல்லி விட்டான். நானும் மனத்திற்குள் எண்ணிக் கொண்டிருந்தேன். 123-தான் ஆகியிருந்தது. எனவே தொடர்ந்து செய்து கொண்டிருந்தேன். ஆசிரியர் உட்காரச் சொன்னார். நான் "இன்னும் ஐநூறு முடியவில்லை. 123 தான் ஆயிற்று" என்றேன். ஆசிரியருக்கு பையன் உண்மையே பேசுபவன் என்று தெரிந்துவிட்டது. அவர் "உனக்குத் தெரியவில்லை. பதினெட்டு அதிக- மாகவே செய்துவிட்டாய்" என்றார். நான் போய் உட்கார்ந்து கொண்டேன். ஆனால் ஒன்றும் புரியவில்லை. வெகு நேரம் யோசித்தபின்தான் தெரிந்தது ஐநூறு என்றால் 5+100, 5x100 அல்ல என்று பொருள் கொள்கிறார் என்பது. இந்தக் கணக்கின்படி 18 அதிகமாக ஆயிற்று, இது அந்த ஆசிரியரின் இரக்க குணத்தைக் காட்டிற்று. அப்போதிலிருந்து அந்தக்கணக்கும் எனக்கு மறக்க-வில்லை.

ஒரு முறை ஆங்கில ஆசிரியர் ஒரு கட்டுரை எழுதச் சொன்னார். தலைப்பு "ஏ டிஸ்கிரிப்ஷன் ஆஃப் மேரேஜ் செரிமனி" (ஒரு திருமண நிகழ்ச்சியின் வர்ணனை). நான் எந்தத் திருமணத்திற்கும் போவதில்லை. என்னத்தை வர்ணிப்பது? ஆனால் ஆசிரியர் எழுதச் சொல்லிவிட்டாரே? நான் எப்படி ஒரு இளைஞன் திருமணம் செய்து கொண்டு தானும் அவஸ்தைப் பட்டான், பிறரையும் அவஸ்தைப் படுத்தினான் என்று கற்பனை செய்து எழுதிவிட்டேன். ஆசிரியர் பார்த்துவிட்டு கேட்ட கேள்விக்கான பதில் இல்லை என்றாலும் மூளையை செலவு செய்திருக்-கிறான். எனவே பத்துக்கு ஏழு மதிப்பெண்கள் என்று குறிப்பு எழுதி மார்க் போட்டார். பரோடாவின் மத்திய நூலகம் அக்காலத்தில் இந்தியாவின் பெரிய நூலகங்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. விடுமுறை நாட்களில் தினமும் மதியம் சாப்பிட்டு விட்டு நூலகத்தில் போய் உட்கார்ந்து விடுவேன். இரண்டு மூன்று மணிநேரம் சாதாரணமாக கழிந்துவிடும். நூலகர் நானே புத்தகங்களை தேடி எடுத்துக்கொள்ள அனுமதித்திருந்தார். கோடை நாட்களில் நான் சட்டையைக் கழற்றிவிட்டு திறந்த உடம்புடன் உட்கார்ந்து படிப்பது வழக்கம்.

ஒருநாள் அங்கு வேலை செய்யும் சகோதரர் ஒருவர் "உங்கள் உடை நாகரீகமாக இல்லை. உடை உடுத்தும் முறையை உணர்ந்து கொள்ள-வேண்டும்" என்றார். நான் "கடவுள் எனக்குக் கொடுத்த அறிவுக்கு ஏற்றபடி உடுத்தியிருக்கிறேன்" என்று சொல்லிவிட்டுப் படிப்பில் ஆழ்ந்தேன்.

நூலகத்தின் மேலாளர் ஒரு ஆங்கிலேயர். நூலகத்தின் மூன்றாவது மாடியில் உட்கார்ந்திருப்பார். அவரிடம் கீழே ஒரு பையன் திறந்த மேனியாகப் படிக்கிறான், சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறான் என்று புகார்போயிற்று. நான் மேலே அழைக்கப்பட்டேன். ஆங்கிலேயர்

பாண்ட், சட்டையில் இருந்தார். தலைக்குமேல் மின்விசிறி சுழன்று கொண்டிருந்தது. அவரது நடத்தை அக்காலத்தில் ஆங்கிலேய பாணியி-லேயே இருந்தது. என்னை அவர் முன் நிறுத்தினார்கள். அவர் என்னை-விடப் பெரியவர். எனவே அவர் திறந்தமேனியை சுட்டிக்காட்டி "நாகரீகம் தெரியுமா, தெரியாதா" என்று வினவினார்.

நான் "எங்கள் நாட்டின் நாகரீகத்தை அறிவேன்" என்று பதில் சொன்னேன். "உங்கள் நாட்டு நாகரீகம் என்ன?" என்று கேட்டார். "தான் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, மற்றவர்களை நிற்க வைப்பவரை எங்கள் நாட்டில் நாகரீகம் அற்றவர் என்று கூறுவார்கள்" என்று நான் சொன்னேன்.

என்னைப் போன்ற ஒருவனின் துணிவைக் கண்டு அவர் மகிழ்ந்து போனார். எனக்கு உட்கார ஆசனம் தந்தார். பிறகு அவரிடம் "எங்கள் நாட்டில் இன்னொரு நாகரீகமும் இருக்கிறது. மிகவும் வெப்பமாக இருந்தால் உடலைத் திறந்து வைத்திருப்போம்" என்று சொன்னேன். அவர் என் கூற்றை ஏற்றுக்கொண்டார். பிறகு நான் என்னென்ன படிக்கிறேன் என்று விசாரித்து அறிந்து கொண்டு எனக்குப் புத்தகங்கள் சம்பந்தமான எல்லா வசதிகளையும் செய்து தருமாறு நூலகருக்கு அறிவுறுத்தினார்.

பள்ளியில் படித்துக்கொண்டிருந்தபோது ஒருமுறை நான் நண்பர்-களுடன் சிவாஜி ஜெயந்தி கொண்டாடினேன். எங்கே கொண்டாடலாம் என்று நண்பர்கள் கேட்டார்கள். "விடுதலை விரும்பியாகிய சிவாஜியின் பிறந்தநாளை ஒரு அறையில் அடைபட்டுக் கொண்டாட முடியாது. நாம் மலைமீது அல்லது காட்டுக்குள் போய்விடுவோம். திறந்த வானத்தின் கிழ் கொண்டாடுவோம்" என்று நான் சொன்னேன்.

ஜெயந்தி கொண்டாடுவது என்று தீர்மானித்தாகிவிட்டது. ஆனால் இன்னொரு இடைஞ்சல் வந்துவிட்டது. அன்று பள்ளி விடுமுறை அல்ல. நான் "வரலாற்று வகுப்பில்தானே சிவாஜி பாடம் வருகிறது. நாம் வரலாற்று வகுப்பை விட்டுவிட்டு அந்த பீரியடில் காட்டுக்குப்போய் விடுவோம்" என்றேன். நாங்கள் காட்டில் பக்தி சிரத்தையுடன் சிவாஜி ஜெயந்தி கொண்டாடினோம். திரும்பும்போது நாளைக்கு தண்டனை கிடைக்குமே என்ன செய்வது என்ற பேச்சு வந்தது. "நாளைக்கு அனைவரும் நான்கு அணாக்கள் கொண்டு வந்து அபராதம் கட்டி விடுவோம்"என்று நான் சொன்னேன்.

மறுநாள் வரலாற்று வகுப்பில் ஆசிரியர் "நேற்று எங்கே போனீர்கள்?" என்று கேட்டார். நாங்கள் சிவாஜி ஜெயந்தி கொண்டாடப் போனதாகச் சொன்னோம். "பள்ளியிலேயே கொண்டாட முடியாதா?" என்று கேட்டார். "விடுதலை விரும்பியாகிய சிவாஜியின் பிறந்தநாளை அடிமைக் கொட்டடியில் கொண்டாட முடியாது" என்று நான் பட்டென்று பதில் சொன்னேன். ஆசிரியருக்கு கடும்கோபம் வந்துவிட்டது. "உங்கள் அனைவருக்கும் அபராதம் விதிக்கிறேன்" என்றார். நாங்கள் உடனே பையிலிருந்து நான்கு நான்கணாக்கள் எடுத்து வைத்துவிட்டோம்.

இவ்வாறு விசேஷ நாட்களில் அதுபற்றிய பேச்சு, கலந்துரையாடல்கள் நடந்தே வரும். உரக்க உரையாடிக் கொண்டே ஒன்றாக ஊர்சுற்றப்போவதும் நடைபெற்று வந்தது. நாங்கள் பத்துப் பதினைந்து நண்பர்கள் இருந்தோம். ஏதாவது தொண்டு செய்யவிரும்பினோம். அதற்கு வடிவம் கொடுப்பதற்குத் திட்டமிட்டு வித்யார்த்தி மண்டல் (மாணவர் குழு) ஒன்று ஏற்படுத்தினோம் (1914). சிவாஜி ஜெயந்தி, தாஸ் நவமி போன்றவற்றை முறையாகக் கொண்டாடுவோம். பல்வேறு விஷயங்களைப்பற்றிப் படிப்போம், கலந்துரையாடுவோம். சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்வோம். மெய்யடியார் இலக்கியம், நாட்டுப்பற்று, பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு, குணநலன் வளர்ச்சி ஆகியவை எங்கள் விஷயங்கள் ஆகும். துவக்கத்தில் யார் வீட்டிலாவது குழுமி செயலாற்றி வந்தோம். பிறகு ஒரு நான்கு அல்லது ஐந்து அணா வாடகையில் ஒரு அறையைப் பிடித்தோம். துவக்கத்தில் நானே அம்மாவிடம் காசு வாங்கி வாடகையைக் கொடுத்து விடுவது வழக்கமாக இருந்தது. பிறகு எல்லோரும் சந்தா கொடுத்தோம். பின்பு அங்கேயே ஒரு நூலகமும் உருவாக்கினோம். வரலாறு, அறிவியல், குணநலன்கள், பயணக் குறிப்புக்கள் என சுமார் 1600 புத்தகங்கள் சேர்ந்தன. அங்கே நான் மாஜினியைப் பற்றிப் பேசினேன். அது நண்பர்கள் மனத்தில் ஆழப்பதிந்தது. பெரும்பாலும் நான் தான் சொற்பொழி வாற்றுவேன். மிகுந்த கவனத்துடனும் சிரத்தையுடனும் சொற்பொழிவாற்றுவேன். என் பொதுவாழ்க்கை இந்த வித்யார்த்தி மண்டலிலிருந்துதான் துவங்கியது. பிறகு 1935-ல் கிராம சேவா மண்டல் துவங்கியதற்கு அடிப்படை இந்த வித்யார்த்தி மண்டல்தான் என்றே நான் கருதுகிறேன். வித்யார்த்தி மண்டலில் நான் படித்தவையும், பேசியவையும் எனக்குப் பெரும் பயன் விளைவித்தன. அது மட்டுமின்றி அந்த மண்டலில் பல நண்பர்கள் என் வாழ்க்கை முழுவதும் இணைபிரியா நண்பர்களானார்கள். 1947-ல் இதன் ஆண்டு விழாவை ஒட்டி நான் பரோடா போனபோது ஹிந்தி பிரச்சாரம் செய்யவேண்டும் என்ற என் கருத்தைச் சொன்னேன். நான் காந்திஜிக்குக் கடிதம் எழுதி இந்த அமைப்பு இந்தவேலை செய்யும் என்று சொன்னேன். "நீங்கள் ஹிந்தி பிரச்சார வேலையை மேற்கொண்டுள்ளீர்கள். பரோடாவில் இந்த அமைப்பு அதையொட்டி வேலை செய்யும்" என்று நான் எழுதியிருந்தேன்.

பரோடாவில் எங்கள் வீட்டுக்கருகில் ஒரு கிழவன் தக்ளியில் பூணூல் நூற்பான். அவன் எங்களுக்கெல்லாம் ஒரு வேடிக்கைப் பொருளாக விளங்கினான். நாங்கள் அவனை பழைய பஞ்சாங்கம் என்று சொல்வோம். ஆனால் பிறகு எங்களில் கிட்டத்தட்ட அனைவருமே காந்திஜியிடம் வந்து சேர்ந்து ராட்டையில் நூல் நூற்கத் துவங்கிவிட்டோம்.

**வீட்டைத் துறந்தது**

பத்து வயதில் நான் பிரம்மச்சரிய விரதம் மேற்கொண்டேன். வீட்டைத் துறப்பது என்கிற எண்ணம் சிறுவயதிலேயே என் மனத்தில் இருந்தது. இந்த எண்ணத்தைத் தூண்டி வளர்த்தவர்கள் மூன்று மகான்கள். ஒருவர் வீட்டைத் துறந்த கௌதம புத்தர். அவரைப் போலவே வீட்டைத்-

துறந்த இன்னொருவர் மராட்டியத்தில் மகான் ராமதாசர். அது அடுத்த தூண்டுகோல். மூன்றாமவர் ஜகத்குரு சங்கராச்சாரியார். புத்தர் மனைவியை-யும், மகனையும் விட்டு வெளிக்கிளம்பினார். ராமதாசர் திருமண மேடை-யிலிருந்து துறவு பூண்டு கிளம்பினார். சங்கராச்சாரியாரோ திருமணமே செய்யாமல் எட்டுவயதில் பிரம்மச்சரிய விரதம் பூண்டு வீட்டைவிட்டு வெளிக்கிளம்பினார். இம்மூவரும் எப்போதும் என் மனக்கண்ணின் முன்பு இருந்து வந்தனர். எனவே என்றோ ஒருநாள் வீட்டைத் துறப்பேன் என்கிற நினைவு மனத்தில் இருந்தது. திருமணம் நிச்சயமானவுடனேயே பெண்ணின் மனம் தாய் வீட்டை விட்டு புக்ககம் போய்விடுவதைப்போல என் மனமும் முன்பே வீட்டை விட்டுப்போய் விட்டது. வெளிக் கிளம்பிய பின் வேகாத பாண்டமாக இருந்து விடக்கூடாது என்று நான் பலவகையிலும் என்னைத் தயாரித்துக் கொண்டேன். படிப்பது, சிந்திப்பது தவிர உடலையும் உறுதி செய்வதை ஒரு தவமாக என் அறிவுக்கு எட்டிய வரை செய்து வந்தேன்.

சிறுவயதில் பிரம்மச்சாரிகள் வாழும்வகை குறித்து விவரிக்கப்பட்ட ஒரு நூல் என் கைக்குக் கிடைத்தது. அதில் மனுவின் சில மேற்கொள்கள் கூட இருந்தன. பிரம்மச்சாரிகளுக்கு சில பொருட்கள் தடைசெய்யப்-பட்டிருந்தன. பிரம்மச்சாரி காலணி அணியலாகாது. குடை பிடிக்கக்-கூடாது. மூன்றாவதாக மெத்தையைப் பயன்படுத்தக்கூடாது என்றும் சொல்லப்பட்டிருந்தது. நான் மெத்தையில் தூங்குவதை விட்டுவிட்டேன். அதை விட்டதனால் எனக்கு ஒன்றும் நஷ்டம் உண்டாகவில்லை. ஆனால் பரோடாவின் கடும் வெயிலில் செருப்பை விட்டதால் கண்கள் கெட்டு விட்டன. சுட்டெரிக்கும் மதியத்தில் தார்ரோட்டில் நான் மணிக்கணக்காகச் சுற்றுவேன். மனுவின் காலத்தில் மாணவர்கள் ஆசிரமத்திலேயே இருந்த-தால் செருப்பு அவசியமில்லை போலும்! சிறுவயதில் உடலைப் புடம் போடுவதிலேயே குறியாக இருந்தேன்.

சாப்பாட்டு விஷயத்திலும் பல கட்டுப்பாடுகளை நான் தவறாது கடைப்பிடித்து வந்தேன். திருமணம் போன்ற நிகழ்ச்சிகளில் உணவருந்தப் போவதே இல்லை. எங்களுக்கு ஒரு சகோதரி. சிறுவயதிலேயே அவருக்கு திருமணம் நடந்துவிட்டது. அவள் திருமணச் சாப்பாட்டுக்கும் நான் போக-வில்லை. நான் அம்மாவிடம் திருமணச் சாப்பாடு சாப்பிடுவதில்லை என்று சொல்லிவிட்டேன். அம்மா ஒன்றும் பேசவில்லை. எனக்குத் தனியாக சமைத்து விட்டாள். பிறகு என்னிடம் "வின்யா! திருமணச் சாப்பாட்டில் இனிப்புகள் முதலியன சாப்பிடவேண்டாம். ஆனால் சாதம், பருப்பு சாப்பிடுவதில் என்ன ஆட்சேபம்? அதே சாதமும், பருப்பும்தான் நான் தனியே சமைத்திருக்கிறேன். அப்படியிருக்க அங்கே சாதமும், பருப்பும் சாப்பிடுவதில் என்ன தவறு என்று எனக்குப் புரியவில்லை" என்று சொன்னாள். அதுதான் அம்மாவின் திறமை. முதலில் ஆட்சேபிக்காமல் தனியாக சமைத்து சாப்பாடு போட்டு விட்டாள். பிறகு எடுத்துச் சொன்னாள். பிறகு நானும் சாதம் பருப்பு சாப்பிட ஒப்புக்கொண்டேன்.

என் கருத்துக்களை கவிதையில் வடிப்பதில் எனக்கு ஆர்வம் இருந்தது. நான் எழுதுவேன். ஒரு கவிதை எழுத இரண்டு மூன்று மணிநேரம்

ஆகிவிடும். சில சமயங்களில் நாட்கணக்கிலும் பிடிக்கும். பிறகு அதைப் பாடிப்பார்ப்பேன். குற்றம் குறை இருந்தால் சரி செய்வேன். முழு திருப்தி ஏற்பட்டுவிட்டால் அதை நெருப்பில் போட்டு விடுவேன். ஒருநாள் குளிர் காலத்தில் அடுப்பருகே அமர்ந்து குளிர்காய்ந்தவண்ணம் என் கவிதைகளை எரித்துக் கொண்டிருந்தேன். அம்மா பார்த்துவிட்டு "என்ன எரிக்கிறாய்?" என்று கேட்டாள். நான் உள்ளதைச் சொன்னேன். "நான் அதைப் பார்த்த-தில்லையே" என்றாள். அதன்பிறகு சில சமயங்களில் அவருக்குப் படித்துக் காட்டிவிட்டு எரிக்க ஆரம்பித்தேன். காசி போனபின் கங்கைக்- கரையில் அமர்ந்து இதே போல் எழுதி, திருப்தியடையும்வரை திருத்தி பிறகு கங்கையில் போட்டுவிடுவேன்.

பரோடாவில் எங்கள் வீட்டுக்கு அருகில் ஒரு குயவன் இருந்தான். அவனிடம் கழுதை இருந்தது. இரவில் நான் படிக்க உட்காரும் போது அது கத்த ஆரம்பிக்கும். அது எனக்கு பெரிய தொந்தரவாக இருக்கும். அதிலும் குறிப்பாக கணக்குப்போட உட்காரும் போது, அது கத்த ஆரம்பித்தால் வேறு வினையே வேண்டாம். இதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது ஒரு சுவையான நிகழ்ச்சி நடந்தது. எங்கள் கல்லூரிக்கு ஒரு வெளிநாட்டு சங்கீத வித்வான் வந்திருந்தார். அவருடைய சங்கீத நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நான் கேட்கப் போனேன். ஆனால் அவரது பாட்டு எனக்கு சற்றும் பிடிக்கவில்லை, கர்ணகடூரமாக இருந்தது. அது சங்கீதம்தானே! அந்த நாட்டவர்களுக்கு அது பிடித்துத் தானே இருக்கிறது? எனக்கு அதில் பழக்கமின்மையால் இனிமையாக இல்லை. அதே போல கழுதை கத்துவது எனக்குத் தொந்தரவாக இருக்-கிறது. ஆனால் மற்ற கழுதைகளுக்கு அது எப்படி இருக்கும்? நிச்சயமாக மகிழ்ச்சியாகவே இருக்கும். அதை நன்றாக இல்லை என்று நான் ஏன் சொல்ல வேண்டும்? என்று யோசித்தேன். அன்றிலிருந்து கழுதையின் சத்தத்தை இனிமையானது என்று கருத ஆரம்பித்தேன். கழுதை சத்தம் கேட்டவுடன் படிப்பதை மூடி வைத்துவிட்டு அது இனிமையானது என்று எண்ண முயற்சிப்பேன். சில சமயங்களில் அத்துடன் ஒன்றுவதற்காக அதைப்போலவே அத்துடன் சேர்ந்து நானும் கத்துவேன். பிறகு அந்த இரவில் ஓர் இரக்க உணர்ச்சி தொனிக்க ஆரம்பித்தது. நான் அதற்கு "கர்த்தப (கழுதை) ராகம்" என்று பெயர் வைத்தேன்.

சிறுவயதில் நான் மிகவும் பலகீனமாக இருந்தேன். சில சமயங்களில் கடுமையான தலைவலி ஏற்படும். மிகவும் பொறுக்க முடியாமல் போகும்போது, "வலிக்கின்ற இத்தலை நானல்ல, நான் என்பது தலை அல்ல, நான் வேறு, தலைவேறு" என்று சங்கற்பித்துக் கொண்டு உரக்க உச்சரித்துக்கொண்டும் இருப்பேன். அதனால் மிகுந்த பயன் ஏற்பட்டது.

சிறுவயதில் நான் யோகசாஸ்திரம் கற்றிருந்தேன். சமாதியில் எப்படி அமர்வது என்று அதில் கூறப்பட்டிருந்தது. நான் அதன்படியே ஆசன-மிட்டு உட்காருவேன். சமாதியில் அமர்ந்துவிட்டதாகக் கற்பனை செய்து கொள்வேன். ஆனால் சற்று நேரத்தில் மனம் தறிகெட்டு ஓடும். பரோடா-வில் வெப்பம் அதிகம். எனவே நான் தண்ணீர்க் குழாயின் கீழே ஆசனமிட்டு

அமர ஆரம்பித்தேன். மேலிருந்து சொட்டுச் சொட்டாக தலையில் தண்ணீர் சொட்டிக் கொண்டிருக்கும். "நான்தான் சிவன், சமாதியில் இருக்கிறேன்" என்று எண்ணிக்கொள்வேன். இந்த நாடகத்தில் சமாதி கைகூடிவிட்டது போன்றே தோன்றும். சாஸ்திரப்படி அது சமாதியா இல்லையா என்று எனக்குத் தெரியாது. ஆனால் மனத்திற்கு அளவில்லாத ஆனந்தம் ஏற்பட்டது. மனத்தில் விஷய வாசனைகளே இருப்பதில்லை.

யாஜிராவ் கெய்க்வாட் பரோடாவில் ஒரு தோட்டத்தில் புத்த பகவான் சிலை ஒன்றை நிறுவியிருந்தார். அந்தத் தோட்டத்திற்கு ஜிப்ஸி தோட்டம் என்று பெயர். எனக்கு புத்தர் சிலை மிகவும் பிடிக்கும். ஏனெனில் என் மனத்தில் வீட்டைவிடும் எண்ணம் இருந்தது. இந்த எண்ணம் சுவாமி சமர்த்த ராமதாஸரின் வாழ்வையும், சிந்தனையையும் படித்ததனால் ஏற்பட்டது. சங்கராச்சாரியாரின் கருத்துக்களைப். படித்தபோது இது மேலும் வலுப்பட்டது. அரச போகங்களையும் உலக சுகங்களையும் அற்பம் என்று கருதி, இளமையிலேயே வீட்டைத் துறந்த புத்தரின் திருவுருவம் எனக்கு துறவு பூணும் விருப்பத்தின் ஆதர்சவடிவாகவே திகழ்ந்தது. புத்தர் தோட்டத்தில் தனிமை கிடைக்காது. ஆயினும் அங்கே போய் அச்சிலையைப் பார்த்தவண்ணம் நான் தியானத்தில் ஆழ்ந்துவிடுவேன். அது என்மீது ஏற்படுத்திய தாக்கம் மிகவும் பெரிது.

வீட்டைவிட்டுப் போகும் முன் என் மெட்ரிகுலேஷன் முதலிய எல்லா சான்றிதழ்களையும் எரித்துவிட்டேன். பற்றுக்களை முற்றுமாக அறுத்துவிட விரும்பினேன். அவ்வாறு எரித்ததைப் பார்த்தபோது அம்மாவுக்கு வருத்தமாக இருந்தது. "ஏன் எரிக்கிறாய்?" என்று கேட்டாள். "எனக்கு இனி இவை தேவையில்லை" என்றேன். "இன்றைக்குத் தேவையில்லை என்றாலும் அவை இங்கு கிடந்துவிட்டுப் போகட்டுமே?" என்றாள். "நான் வேலைக்குப் போகப்போவதில்லை" என்று சொன்னேன்.

வீட்டை விட்டு வெளியேறும் எண்ணம் எனக்கு 1912-ல் ஏற்பட்டது. நான்கு வருடங்கள் நான் என்னையே பரிசிலித்து வந்தேன். பிறகு நான் எடுத்த முடிவினின்றும் நான் மாறவே இல்லை. நான் காசிக்குப் போக விரும்பினேன். அதற்கு இரண்டு காரணங்கள். மேலைநாட்டு நூல்களையும், நம்நாட்டு அடியார்களின் சரித்திரத்தையும் படித்ததன் பயனாக சொந்த ஊரை விட்டு வெளியேறி வேறு தலங்களில் வசித்தாலன்றி கல்வி முழுமையடையாது என்ற முடிவுக்கு நான்வந்திருந்தேன். காசி ஞானக்கருவூலம் என்று கருதப்பட்டது. அதிலும் சமஸ்கிருதம், சாஸ்திரங்கள் இரண்டிலும் அது புகழ் பெற்றிருந்தது. அங்கே போய் சாஸ்திரங்கள் பயில வேண்டும் என்று நினைத்தேன். இன்னொன்று காசியிலிருந்து இமயம், வங்கம் இரண்டுக்கும் பாதை இருந்தது. இரண்டுமே என்னைக் கவர்ந்து இழுத்தன. தவ இமயத்து நல்லொழுக்கமும், வங்கத்துப் புரட்சிப் பாதையும் என்னைக் கவர்ந்தன.

வீட்டில் பெற்றோரிடம் எனக்கு மதிப்பும், பக்தியும் இருந்தது. அம்மாவின் மீது எனக்கு எவ்வளவு பற்று இருந்தது என்பதை ஒரு நிகழ்ச்சியின் வாயிலாகக் காணலாம். இறுதியாக அவர் நோய் வாய்ப்பட்டபோது

(1918-ல்) நான் அவரிடம் போயிருந்தேன். அவர் இறந்தபின் அவருடைய இரண்டு பொருட்களை என்னுடன் எடுத்து வந்தேன். ஒன்று அவரது புடவை, அது விலை உயர்ந்தது. அது அவருடைய திருமணப்புடவையாகும். இன்னொன்று அவர் தினமும் பூஜை செய்து வந்த அன்னபூரணி தேவியின் விக்கிரகம். புடவையை நான் தலையணையாகப் பயன்படுத்தினேன். வெகு நாட்கள் அப்புடவை என்னிடம் இருந்தது. பிறகு கதர் இயக்கம் தோன்றிய வுடன் கதரல்லாத அப்புடவையை என்ன செய்வது என்ற பிரச்சினை வந்தது. நான் கயா மற்றும் சபர்மதியில் நீராடி அப்புடவையை சபர்மதி ஆற்றில் விட்டுவிட்டேன்.

அன்னபூரணி தேவி விக்கிரகத்தை சிலநாள் என்னிடம் வைத்திருந் தேன். எப்போதாவது அதன் முன்பு தியானம் செய்வேன். தியானமே பூஜை என்றாலும், தினமும் தீபாராதனை நடந்து வந்த அந்த விக்கிரகத்தை என் தாயைப் போலவே பக்தியுட்ன் பூஜை செய்யும் ஒரு பக்தையிடம் ஒப்படைத்து விட நினைத்தேன். அப்படிப்பட்ட பக்தைகள் பலர் இருந்த-னர். ஆயினும் நான் காசிபென்காந்தியைத் தேர்ந்தெடுத்தேன். அவரிடம் என் தாயாரின் பூஜா விக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு அதற்கு நித்ய பூஜை செய்து வரமுடியுமா என்று கேட்டேன். அவர் மிகுந்த அன்புடனும், பக்தியுடனும் அதை ஏற்றுக்கொண்டார்.

பெற்றோரின் மீது இவ்வளவு பாசம் இருந்தும் அது வீட்டைத் துறப்பதினின்றும் என்னைத் தடுக்கவில்லை. இறை நாட்டத்தின் முன்பு மற்றவை யாவும் மங்கிவிட்டன.

அப்போதெல்லாம் இன்டர் தேர்வு எழுத பம்பாய்க்குப் போயாக வேண்டும். நாங்கள் நாலைந்துபேர் பம்பாய் கிளம்பினோம். ஆனால் நான் இரண்டு நண்பர்களுடன் வழியில் சூரத்தில் இறங்கி காசிக்கு வண்டியேறி விட்டேன். "நான் பரிட்சை எழுத பம்பாய் போவதற்குப் பதிலாக வேறு இடத்திற்குப் போகிறேன். நான் எங்கு போனாலும் தவறான செயல் எதிலும் இறங்க மாட்டேன் என்று நீங்கள் நம்பலாம்" என்று தந்தைக்கு எழுதினேன். வீட்டைத்துறந்த அந்த நாள் 1916ஆம் ஆண்டு மார்ச் மாதம் 25ஆம் தேதியாகும்.

# ஞானிகளின் பாதம் பணிதல்

**காசியில்**

இறை நாட்டத்தினால், நான் வீட்டைத் துறந்து காசி போய்ச் சேர்ந்தேன். காசியில் துர்க்கை கட்டத்திற்கு அருகில் ஒரு கட்டிடத்தின் மூன்றாவது மாடியில் ஒரு அறை கிடைத்தது. என்னுடன் என் இரு நண்பர்-களும் இருந்தனர். அவர்களில் ஒருவன் சில நாட்களிலேயே திரும்பிப் போய்விட்டான். இன்னொருவன் என்னோடு இருந்தான்.

நான் கடந்த காலத்தை மறந்து வருங்காலக் கவலைகளை அகற்றி நிகழ்காலத்தில் இருப்பவனாக இருந்த போதிலும் கடந்த காலத்தின் அழியா நினைவுகளை ஒதுக்கி விட முடியாது. அந்த நண்பனை இழந்ததே காசியின் நினைவுகளில் முக்கியமானது. அவன் பெயர் பேடெகர். நாங்கள் அவனை 'போலா' என்று கூப்பிடுவோம். அவன் சரளமான சுபாவமும், எதற்கும் கவலைப்படாத தன்மையும் வாய்ந்தவன். நல்ல பலசாலி. அவன் என்மீது எதையும் எதிர் பார்க்காத அன்பு வைத்திருந்தான். கங்கையை நீந்திக் கடந்து மீண்டு அவனால் வரமுடியும். நான் கைகட்டிப் பார்ப்பதோடு சரி.

ஒரு சமயம் பரோடாவில் கெட்காம் நாராயணன் சுவாமிகள் வந்திருந்தார். "போய்ப்பார்த்துவிட்டு வருவோம் வா" என்றான் போலா. நான் பொதுவாக விசாரித்து அறியாமல் எவரையும் பெரிய சாமியார் என்று மதித்துப் போய்ப் பார்ப்பதில்லை. போலா மிகவும் வற்புறுத்தியதால் போனேன். அங்கே ஏராளமானவர்கள் குழுமியிருந்தனர். "நாம் தூரத்தி லிருந்தே பார்ப்போம். என்ன பேசுகிறார் என்று கேட்போம்" என்றேன். நான் கூட்டத்தில் ஒருவர் "சுவாமிகள், எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டார். அவர் அதற்கு, "நாராயணனாகிய நான் எங்கும் இருக்கிறேன்" என்று பதில் அளித்தார். இதைக் கேட்டேனோ இல்லையோ, நான் போலாவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு கிளம்பிவிட்டேன். "ஏன்?" என்று கேட்டான். "இதைத்தான் கேட்க வந்தாய் என்றால் இதை விடச்சிறப்பாக நான் உனக்கு உபதேசம் கொடுத்திருப்பேனே? எங்கிருந்து வந்திருக்கிறீர்கள் என்பது ஒரு சாதரணமான கேள்வி. இதற்கு இன்ன ஊரிலிருந்து வந்திருக்கிறேன் என்று நேராக பதில் சொல்ல வேண்டியது தானே" (போலா என்றால் ஏதும் அறியாதவன் என்றே பொருளாகும்) என்று நான் சொன்னேன்.

காசியில் இரண்டே மாதங்களில் போலா நோயில் படுத்துவிட்டான். நோய் கடுமையாகி விட்டது. அவனை அங்கிருந்த ராமகிருஷ்ண மிஷன்

ஆஸ்பத்திரியில் சேர்த்தேன். அவன் குணமடையமாட்டான் என்று தெரிந்தது. அவனும் இதை உணர்ந்து கொண்டான். "வீட்டுக்கு செய்தி அனுப்பட்டுமா?" என்று கேட்டேன். "எதற்கு? வீட்டுக்கும் நமக்கும் இப்போது என்ன சம்பந்தம்? இறந்துபோய் விட்டால் எப்படியும் செய்தி போய் விடும்" என்று சொல்லிவிட்டான். இறந்துபோனால் யார் எரியூட்டுவது என்று பேச்சு வந்தது. "உன் விருப்பம் என்ன?" என்று கேட்டேன். "நீயே எரியூட்டி விடு" என்று சொல்லிவிட்டான். மறுநாள் அவன் இறந்து போனான்.

நான் இதற்கு முன் சாவை எதிர்கொண்டதில்லை. சுடுகாட்டுக்கு எரியூட்ட நான் போனதில்லை. நான் ஒருபள்ளியில் பாடம் கற்பித்து வந்தேன். அதில் கிடைத்த நான்கு ரூபாய்கள் என்னிடம் இருந்தன. அதைக் கொண்டு எத்தனை இறுதிச்சடங்குகள் வேண்டுமானாலும் செய்யலாம் என்பது என் அபிப்ராயம். விறகுதான் முக்கியம். கங்கைக் கரையில் மந்திரங்களை ஓதி அந்திமக் கிரியைகளை முடித்தேன். நாங்கள் உணவருந்தி வந்த அன்னதான சத்திரத்தில் நான் செய்த "இறுதிச்சடங்கை"ப் பற்றி இடித்துரைத்தார்கள். "கங்கையின் பெருமை அளப்பரியது. அதன் கரையில் எரியூட்டினால் காசுமும், சொர்க்கம் போகும்" என்று நான் அனைவருக்கும் பதில் சொல்லி விட்டேன். இப்படியாக போலா என்னை விட்டுப் பிரிந்தான்.

அங்கே ஆரம்பநாட்களில் ஒரு அன்னதான சத்திரத்தில் சாப்பிடுவோம். தட்சிணையாக இரண்டு தம்பிடிகள் கிடைக்கும். மாலையில் அதில் ஒரு பைசாவுக்கு தயிரும், ஒரு பைசாவுக்கு இரண்டு வள்ளிக்கிழங்கும் வாங்கிக் கொள்வேன். அதுவே எனக்குப் போதும்.

அங்கே ஒரு ஆங்கிலப் பள்ளிக்கூடம் இருந்தது. அதன் ஆசிரியருக்கே ஆங்கிலம் வரவில்லை. நான் தினமும் ஓரிரு மணிநேரம் அங்கே போய் சொல்லிக்கொடுக்க ஆரம்பித்தேன். "என்ன சம்பளம் வேண்டும்?" என்று அவர் கேட்டார் "மாதம் இரண்டு ரூபாய்" என்றேன். "இது போதுமா என்ன?" என்று கேட்டார். "நான் அன்னதான சத்திரத்தில் சாப்பிடுகிறேன். எனவே இதை விட அதிகமாக எனக்குத் தேவையில்லை" என்று சொல்லிவிட்டேன். இரண்டு மாதங்கள் சொல்லிக்கொடுத்தேன். நான்கு ரூபாய்கள் கிடைத்தன.

காசியில் மயூயர் சென்ட்ரல் லைப்ரரியில் சமஸ்கிருதம், ஹிந்தி நூல்கள் ஏராளமாக இருந்தன. சில நாட்களிலேயே நான் கிட்டத்தட்ட அங்கிருந்த எல்லா நூல்களையும் படித்து முடித்துவிட்டேன். மணிக்கணக்காக அங்கே உட்கார்ந்து படித்துக் கொண்டிருப்பேன். நான் சமஸ்கிருதம் வேறு படிக்கவேண்டியதிருந்தது. ஒரு பண்டிதரிடம் போய் "சமஸ்கிருதம் படிக்க எவ்வளவு நாள் பிடிக்கும்?" என்று கேட்டேன். அவர் பன்னிரண்டு ஆண்டு ஆகும் என்றார். "அவ்வளவு நாள் அதில் என்னால் செலவழிக்க முடியாது" என்றேன். "எவ்வளவு காலம் கற்றுக்கொள்ள விரும்புகிறாய்?" என்று அவர் கேட்டார். "இரண்டு மாதங்களில்" என்று பதில் சொன்னேன். அவர் வாயடைத்துப் போய்விட்டார்.

தினமும் கங்கைக்கரையில் ஒரு மணிநேரம் கழிப்பேன். சில சமயங்களில் தியானம், சில சமயங்களில் சிந்தனை, சில சமயங்களில் கவிதை எழுதி அவற்றை கங்கையில் போட்டுக் கொண்டிருப்பேன்.

கங்கைக்கரையில் தினமும் பண்டிதர்களின் கலந்துரையாடல்களும், கூட்டங்களும் நடைபெறும். எப்போதாவது கேட்கப்போவேன். ஒருநாள் ஒரு கூட்டத்தில் துவைத, அத்வைதவாதிகளுக்கு இடையே சொற்போர் நடந்தது. அத்வைதிகள் வெற்றி பெற்றனர். நான் எழுந்து நின்று "தலைவர் அவர்களே நான் ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன்" என்றேன். அவர்கள் எனக்கு, அனுமதி தந்தார்கள். "அத்வைதிகள் எப்படித் தோற்றுப் போனார் கள் என்பதைப் பார்த்தீர்கள்?" என்றேன் நான். "இது என்ன உண்மையை மாற்றிப் பேசுகின்றானே இவன்" என்று மக்கள் விழித்தனர். நான் மேலே பேசினேன். "அத்வைதிகள் எப்படி விவாதிக்க முடியும்? அத்- வைதத்தில் விவாதம் ஏது? ஆகவே துவைதிகளிடம் விவாதிக்கத் துவங்கும் முன்பே அவர்கள் தோற்றவர்கள் ஆகிறார்கள். மனத்தில் துவைத பாவம் இருந்தால்தான் விவாதம் என்கிற பேச்சே எழுகின்றது" என்று என் பேச்சை அத்துடன் முடித்துவிட்டு அந்த இடத்தை விட்டு வெளியேறினேன்.

ஒருமுறை எனக்கு ஒரு பூட்டு தேவைப்பட்டது. நான் வாங்கப் போனேன். அன்னதான சத்திரத்திற்குப் போகும் வழியிலேயே பூட்டுக்கடை இருந்தது. நான் பூட்டு விலை கேட்டேன். கடைக்காரன் பத்து அணா என்றான். நான் வாங்கிக்கொண்டேன். பத்து அணாக்களைத் தந்து கொண்டே, "நீ பத்தணா கேட்பதனால் அதைத் தருகிறேன். இதன் உண்மை-யான விலை இரண்டணாதான், மிக அதிகமாகக் கேட்கிறாய்" என்றேன். கடைக்காரன் அப்போதைக்கென்னவோ ஒன்றும் சொல்லாமல் அதை வாங்கிக்கொண்டான். நான் தினமும் அந்த வழியாகத்தான் போவேன். ஆனால் அவனை ஏறெடுத்துப் பார்க்காமல் போய்விடுவேன். இரண்டொரு நாட்கள் கழித்து அவன் என்னைக் கூப்பிட்டு "அன்றைக்கு பூட்டுக்கு அதிகப்பணம் வாங்கி விட்டேன். அது என் தவறுதான்" என்றான். அவன் அதிகப்படியான பணத்தைத் திருப்பித் தந்து விட்டான். இது என் மீது பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. அவன் மீது எனக்கு மதிப்பு உண்டாயிற்று.

வீட்டை விட்டுக் கிளம்பியபோது என்னிடம் ஒரு புத்தகம் இருந்தது. அது ஞானேஸ்வரி. ஒருநாள் இரவு தூக்கத்தில் கனவுகள் வந்தன. மறுநாள் ஞானேஸ்வரியை தலைமாட்டில் வைத்துக்கொண்டு தூங்கினேன். கனவு வருவது நின்று போய்விட்டது.

இங்ஙனம் இரண்டு மாதங்களும் சில நாட்களும் காசியில் கழிந்தன. பின்னர் என் கால்கள் காந்திஜியை நோக்கித் திரும்பின.

**சத்தியாகிரக ஆசிரமம்**

சிறுவயதிலேயே என் நாட்டம் வங்காளத்தின்பாலும், இமயத்தின் பாலும் இருந்தது. இமயம் போவதும், வங்காளம் போவதும் தான் என் வாழ்க்கைக் கனவுகள். ஒரு பக்கம் வங்காளத்தின் வந்தே மாதரப் புரட்சி என்னை இழுத்தது. காசி நகரமானது இமயம், வங்கம் இரண்டுக்கும் போகும் பாதையில் இருந்தது. பூர்வஜன்ம வினைப்பயனாக நான் காசி வந்து சேர்ந்தேன். ஆனால் இமயத்திற்குப் போகவில்லை. வங்கத்திற்கும்

போகவில்லை. ஆனால் என் மனத்தளவில் இவ்விரண்டு இடங்களையும் ஏக காலத்தில் சென்றடைந்து விட்டேன். ஏனெனில் நான் காந்திஜியிடம் போய்ச் சேர்ந்தேன். அவரிடம் எனக்கு இமயத்து அமைதியும் வங்கத்துப் புரட்சியும் கிடைத்தது. அங்கே எனக்கு புரட்சி, அமைதி இரண்டுமே வியக்கத்தக்க வகையில் காத்துக்கிடந்தன.

நான் காசி வந்தபோது அங்கே காந்திஜியின் சொற்பொழிவைப் பற்றி ஒரே பேச்சாக இருந்தது. அங்கே இருந்த ஹிந்து பல்கலைக்கழகத்தில் அவர் அந்தச் சொற்பொழிவை நிகழ்த்தியிருந்தார். அச்சொற்பொழிவில் அகிம்சையைப் பற்றிப் பல விஷயங்களைக் கூறியிருந்தார். எல்லாவற்றைவிட முக்கியமானது, அஞ்சாமையின்றி அகிம்சை சாத்தியமில்லை என்பது. மனத்தில் இம்சையுணர்வை வைத்துக் கொண்டிருப்பதைவிட பகிரங்கமான இம்சை பரவாயில்லை. அதாவது மனத்தில் இருக்கும் அகிம்சையே முக்கியமானது. அது அஞ்சாமையின்றி ஈடேறாது.

அந்தச் சொற்பொழிவில், காந்திஜி அந்தப் பல்கலைக்கழக விழாவிற்கு ஏராளமான நகைகள் அணிந்துகொண்டு வந்திருந்த அரசர்களையெல்லாம் சாடியிருந்தார். நான் அங்கே போனபோது அந்த வரலாற்றுப் புகழ்மிக்க சொற்பொழிவு நடந்து ஒருமாதம் ஆகிவிட்டிருந்தது. ஆனாலும் நகரெங்கும் அதன் புகழ் பரவியிருந்தது. நான் அந்தச் சொற்பொழிவைப் படித்தேன். பல சந்தேகங்களும், வினாக்களும் எழுந்தன. எனவே என் வினாக்களை முன்வைத்து காந்திஜிக்கு நான் கடிதம் எழுதினேன். அவர் அக்கடிதத்திற்கு ஒரு அருமையான பதில் எழுதினார்.

பத்துப் பதினைந்து நாட்கள் கழித்து மீண்டும் அவரிடம் சந்தேகங்கள் கேட்டேன். அதற்கு அவர், "அகிம்சை பற்றிய என் வினாக்களுக்கு தபாலில் பதில் எழுதுவது கடினம். வாழ்க்கையின் மூலம் தான் அதற்குப்பதில் தரமுடியும். எனவே சில நாட்கள் ஆசிரமத்திற்கு வந்திருங்கள். மெல்ல மெல்லப் பேசுவோம். ஐயம் அகலுதல் என்பது பேச்சினால் நடவாது, வாழ்க்கையால் தான் முடியும்" என்று அவர் எழுதிய பதில் என்னைக் கவர்ந்தது.

அந்தப் பதிலுடன் காந்திஜி ஆசிரமத்தின் சட்ட திட்டங்கள் பற்றியும் அறிக்கையும் அனுப்பியிருந்தார். அது என்னை மேலும் கவர்ந்தது. அதில் "இந்த ஆசிரமத்தின் நோக்கம் உலக நன்மைக்கு முரணாக அமையாத வகையில் நாட்டுத் தொண்டு செய்வதாகும். அதற்கு கீழ்க்கண்ட விரதங்கள் அவசியம் என்பது எங்கள் கருத்து" என்று எழுதி சத்தியம், அகிம்சை, பிரம்மச்சரியம், திருடாமை, நிலையாப்பொருள் சேமியாமை, உடலுழைப்பு முதலிய பதினொரு விரதங்கள் எழுதப்பட்டிருந்தன. இது எனக்கு மிகுந்த வியப்பளித்தது. நான் பல வரலாறுகள் படித்திருக்கிறேன். ஆனால் நாட்டுப்பணிக்கு விரதங்கள் வேண்டும் என்று எங்கும் படிக்கவில்லை. விரதம் யோக சாஸ்திரங்களிலும், தர்ம சாஸ்திரங்களிலும், பக்தி வழிகளிலும் சொல்லப்படுகின்றன. ஆனால் நாட்டுத் தொண்டுக்கும் அது அவசியம் என்று அந்த அறிக்கையில் இருந்தது. எனவே என் மனம் அதில்

கவர்ந்திழுக்கப் பட்டது. இந்த மனிதர் நாட்டிற்கு அரசியல் விடுதலை, ஆன்மீக மறுமலர்ச்சி இரண்டையும் சாதிக்க விரும்புகிறார் என்று தோன்றியது. எனக்குப் பிடித்ததும் இதுவே. காந்திஜி அங்கேயே வந்துவிடு என்று எழுதியிருந்தார். நான் அவ்விதமே அவரிடம் போய்ச் சேர்ந்தேன்.

அது 1916ஆம் ஆண்டு ஜுன் மாதம் ஏழாம் தேதி. நான் அகமதாபாத் ரயில் நிலையத்தில் இறங்கினேன். என்னிடம் சாமான்கள் அதிகம் இல்லை. நானே தூக்கிக் கொண்டேன். வழி விசாரித்துக் கொண்டே நடந்தே போய் விட்டேன். எலிஸ் பிரிட்ஜ் வழியாக காலை எட்டு மணிக்கு கொச்ரப் சத்தியாகிரக ஆசிரமம் சென்றடைந்தேன். 'ஒரு புதிய சகோதரர் வந்திருக்கிறார்' என்று காந்திஜிக்கு செய்தி போயிற்று. குளித்து முடித்துவிட்டு சந்திக்க வரும்படி சொன்னார். குளியலை முடித்துக் கொண்டு அவரிடம் போனேன். அவர் கறிகாய் நறுக்கிக் கொண்டிருந்தார். எனக்கு அதுவும் ஒரு புதிய காட்சியாகவே இருந்தது. தேசத் தலைவர்கள் கறிகாயும் நறுக்குவார்கள் என்று நான் கேள்விப்பட்டதே இல்லை. முதல் தரிசனத்திலேயே உடலுழைப்பு என்கிற உபதேசம் கிடைத்துவிட்டது. காந்திஜி ஒரு கத்தியை என் கையிலும் கொடுத்து விட்டார். நான் முன்பு எப்போதும் கறிகாய் நறுக்கியதில்லை. ஆனால் அன்று கற்றுக்கொண்டேன். இதுவே அங்கு எனக்குக் கிடைத்த முதல் உபதேசம்.

கறிகாய் நறுக்கிக்கொண்டே என்னிடம் காந்திஜி பேச்சுக்கொடுத்தார். "உனக்கு இங்கே உள்ள வாழ்க்கை முறை பிடித்திருந்தனவானால், உன் வாழ்நாளை தொண்டில் கழிக்க நீ விரும்பினாயானால் நீ இங்கேயே இருக்கலாம்; நான் வரவேற்கிறேன்" என்றார். என்னுடைய இறை நாட்டத்தை அவர் அறிந்து கொண்டார். "நீ மிகவும் பலகீனமாக இருக்கிறாயா! ஞானிகள் பொதுவாக மெலிந்த உடலினராக இருப்பார்கள். ஆனால் நீயோ உடல்நலமே குன்றியவனாக இருக்கிறாய். ஞானிகள் நோய்வாய்ப்படுவதில்லை" என்றார். இது இரண்டாவது உபதேசம். காந்திஜியின் இச்சொற்களை என்னால் ஒரு போதும் மறக்க முடியாது.

அன்று கறிகாய் நறுக்கும்போது பேசியதோடு சரி, அதன்பின் எல்லாம் காரியார்த்தமான பேச்சுத்தான். மற்ற நேரங்களில் நான் என் வேலைகளில் மூழ்கியிருப்பேன். காந்திஜி பலருடன் உரையாடுவார். நான் கேட்டுக் கொண்டிருப்பேன். காந்திஜிக்கு மட்டும் இவன் நல்லுணர்வு- களுடன் வந்திருக்கிறான் என்று தெரியும். மற்றவர்கள் எல்லோரும் என்னை ஒரு ஜடம் என்றே கருதினர். ஒருநாள் ஒரு சகோதரருடன் பேசிக்கொண்டிருக்கும்போது காந்திஜி "இது மறை பொருளான மொழி" என்று ஒரு கூற்றைச் சொன்னார். "இல்லை இது பக்தி மொழி" என்றேன் நான். காந்திஜி "ஆமாம் நீ சொல்வது சரிதான், இது ஞான மொழி, பக்திமொழிதான்" என்றார். இதுதான் காந்திஜியின் சிறப்பு. என்னைப்- போன்ற ஒரு சிறுவனின் பேச்சுக்கும் முக்கியத்துவம் கொடுத்து ஏற்றுக்கொள்ளும் அகங்காரமின்மை அவரிடம் இருந்தது. அப்போதுதான், இவன் வாய்திறந்து பேசவும் செய்வான் என்று மற்றவர்களுக்குத் தெரிந்தது.

ஆனால் இதுகுறித்து எவரையும் குறை சொல்ல முடியாது. அப்போது நான் ஒரு கரடு முரடான ஆள்தான். 21 வயது இளைஞன். நாகரீகம், பண்பாடு என்கிற விஷயங்கள் எல்லாம் என்னிடம் குறைவு என்று என் நண்பர்களுக்குத் தெரியும். எவரிடமும் பேசக்கூட மாட்டேன். ஒன்று வேலை செய்து கொண்டிருப்பேன் அல்லது படிப்பு, தியானம், சிந்தனை அவ்வளவுதான்.

ஒருநாள் அதிகாலை கருக்கலில் எழுந்த நான் என் அறையில் உபநிஷதம் ஓதிக் கொண்டிருந்தேன். ஆசிரம வாசிகள் காதில் விழுந்தது. இவனுக்கு சமஸ்கிருதம் தெரிகிறது என்று காந்திஜியிடம் போய்ச் சொன்னார்கள். காந்திஜி விசாரித்து அறிந்து கொண்டார். சில சமயங்களில் பிரார்த்தனையில் ஏதாவது சொல்லும்படி பணிப்பார். இப்படியே காலம் போய்க் கொண்டிருந்தது.

காந்திஜி ஒருவாறு என்னைத் தட்டிக்கொட்டி உருவாக்குவது என்று தீர்மானித்துக் கொண்டுவிட்டதாகத் தோன்றியது. யார் வந்தாலும் என்னிடம் அனுப்புவார். வார்தா போன பின்பு சேவாகிராமுக்கு ஆர்வமுடையவர்கள் யார் வந்தாலும் அவர்களிடம் விநோபாவைச் சந்தித்தீர்களா? இல்லையானால் அவசியம் சந்தியுங்கள் என்பார். காந்திஜி ஒருநாள் ஒரு சகோதரரை என்னிடம் அனுப்பினார். அவர். நாட்டில் மிகப்பெரிய புரட்சியாளர் என்ற பெயர் எடுத்தவர். காந்திஜி சொன்னதால் அவர் கால்நடையாக பவனார் வரை வந்திருந்தார். அப்போது நான் வயலில் கொத்திக் கொண்டிருந்தேன். தலைநிமிர்த்திப் பார்த்தேன். அந்தச் சகோதரர் எதிரே நின்று கொண்டிருந்தார்.

"என்ன விஷயம்" என்று கேட்டேன். "சும்மா, பார்த்துவிட்டுப் போகலாம் என்று தான்" என்றார் அவர். அப்புறம் என்னத்தைப் பேசுவது? ஒன்றும் பேசவில்லை. சிறிது நேரம் கழித்து நான் என் வேலையை மீண்டும் தொடர்ந்தேன். பார்வையும் வேலையில் திரும்பிவிட்டது. அந்தச் சகோதரர் நின்று கொண்டேயிருந்தார். ஒன்றும் பேசவில்லை. திரும்பிப்போய் காந்திஜியிடம் "நல்ல ஆளிடம் என்னை அனுப்பினீர்கள், அந்த ஆள் என்னிடம் பேசவே இல்லை" என்று அவர் புகார் செய்தார். காந்திஜி நடந்ததைப் புரிந்து கொண்டுவிட்டார். "நீங்கள் போனபோது அவன் என்ன செய்து கொண்டிருந்தான்?" என்று கேட்டார்.

"நிலத்தைக் கொத்திக் கொண்டிருந்தான்"

"அப்படியானால் இதில் கோபித்துக்கொள்ள என்ன இருக்கிறது? வினோபா தன்னுடைய வேலையை செய்து கொண்டிருந்தான். உங்களிடம் அவன் எப்படிப் பேசுவான்? நல்ல மனிதர் நீங்கள்! யாரையாவது சந்திக்கப் போகும் முன் நேரம் குறித்து வாங்கிக் கொள்ள வேண்டும் என்று தெரியாதா?" என்று காந்திஜி சொன்னார். அவருக்கு அவ்வாறு காந்திஜி சொல்லியாகிவிட்டாலும் என்னைச் சந்தித்தபோது எனக்கும் சரியாக மண்டகப்படி நடந்தது. "நல்ல ஆளப்பா நீ! யாராவது வந்தால்,

வரவேற்பதும், உரையாடுவதும் ஒரு வேலைதானே!" என்றார். இவ்வாறாக அவர் என்னை மெல்ல மெல்ல உருவாக்கினார். நான் இயற்கையில் ஒரு காட்டுமிருகம் போன்றவன். காந்திஜி என்னை வளர்ப்புப் பிராணியாக ஆக்கினார். அவர் திருவடிகளில் அமர்ந்தே நான் ஒரு காட்டுமிராண்டி யிலிருந்து தொண்டனாக ஆனேன். காந்திஜியுடன் இருந்ததால் எனக்கு தொண்டில் ஆர்வம் பிறந்தது. நான் மக்களையே இறைவனாகவும், தொண்டையே ஆராதனையாகவும் கருதுகிறேன்.

காந்திஜி என்னை உரைத்துப்பார்த்தாரா இல்லையா, எனக்குத் தெரியாது. ஆனால் என் அறிவுக்கு எட்டிய வகையில் நான் அவரைப் பல வகையில் உரைத்துப் பார்த்தேன். அதில் சற்றும் அவர் குறைந்திருப் பாரேயானால் நான் அவரிடம் தங்கியிருந்திருக்கமாட்டேன். என்னை அவர் உரைத்துப்பார்த்து என்னிடம் எத்தனை குறைகள் இருந்தன என்றோ, இருக்கின்றன என்றோ கண்டாலும் என்னைத் தம்மிடமே இருத்திக் கொண்டிருப்பார். ஆனால் எனக்கு அவருடைய சத்தியத்தில் சற்றே குறைவோ, களங்கமோ தென்பட்டிருந்தாலும்கூட அங்கே நான் இருந்திருக்கமாட்டேன். முக்தர்கள் என்றும், பூரணர்கள் என்றும் நினைக்கும் பல பெரிய மனிதர்களை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் இப்படிப்பட்டவர்கள் என்னைக் கவரவில்லை. மாறாக தன்னை எப்போதும் முழுமையற்றவர் என்றே கருதிவந்த காந்திஜி என்னைப் பெரிதும் கவர்ந்தார். முழுமையான சத்தியத்தினின்றும் நாம் வெகு தொலைவில் இருப்பதாகவே அவர் கூறிவந்தார். முழுமையடைந்து விட்டதாகப் பறைசாற்றியவர்கள் எவரும் என்னை காந்திஜி அளவு கவரவில்லை.

நான் காந்திஜியை சந்தித்து மயங்கியமைக்குக் காரணம் அவருடைய உள்ளும் புறமும் ஒன்றுபோல் இருந்ததாகும். கர்மயோகத்தின் பாடமும் எனக்கு அவரிடமிருந்து கிடைத்தது. கர்மயோகம் கீதையில் சொல்லப் பட்டிருந்தாலும் அதை நான் நேரில் தரிசித்தது காந்திஜியின் வாழ்க்கையில் தான். கீதையில் கூறப்பட்டுள்ள கர்மயோகத்தை எப்படிக் கடைப்பிடிப்பது என்பதை நான் காந்திஜியிடம் கண்டேன். கீதையில் ஸ்திதப்பிரக்ஞதரிசனம் (நிலைத்த சித்தமுடையவனின் அடையாளங்கள்) கூறப்பட்டுள்ளது. அந்த லட்சணங்கள் பொருந்தியவனை எலும்பும் சதையுமாகக் காணும் வாய்ப்பு பெரும் பாக்கியம் செய்தவர்களுக்கே கிட்டும். இந்த லக்ஷணங்களுக்கு மிக அருகில் சென்ற மாமனிதரை நான் இந்தக் கண்களால் காந்திஜியிடம் கண்டேன்.

காந்திஜியிடம் நான் கண்ட ஆசிரம வாழ்க்கை நெறியில் எனக்குப் பல விஷயங்கள் கிடைத்தன. அதன் பயனாக வாழ்க்கையின் ஒருமையையும், முழுமையையும் நான் உணர்ந்தேன். காந்திஜி ஒருபோதும் தன்னை எவருக்கும் குருவாகக் கருதியதில்லை. அவ்வாறே நானும் குருவின் பெருமையை பெரிதும் போற்றினாலும் எவருக்கும் குருவும் இல்லை, சீடனும் இல்லை. குரு என்றால் ஒரு தீண்டலினால், ஒரு தரிசனத்தினால் அல்ல; ஒரு அருள்வாக்கினால் மட்டுமே கடைத்தேற்றக் கூடியவராக இருக்க வேண்டும். இன்னும் சொல்லப்போனால் மனச்சங்கற்பத்தினாலேயே சீடனைக் கடைத்தேற்றி விடுபவரே முழுமை பெற்ற குரு என்பது என் கருத்து. ஆனால்

இது கற்பனையில் தான் நடக்கமுடியும். நேரடியாக இப்படிப்பட்ட குருவை நான் அறியேன். குருவைப்பற்றிய என் கருத்துக்களை ஒருபக்கம் வைத்துவிட்டு சொல்லப் புகுந்தால் காந்திஜியின் ஆசிரமத்தில் அப்போது கிடைத்ததே இன்றுவரை எனக்குப் பயன்படுகிறது என்றே நான் சொல்வேன். காந்திஜியின் ஆசிரமம் எனக்கு வாழ்க்கைக் கண்ணோட்டத்தை அருளிய தாயகமாகும்.

ஒருமுறை காந்திஜியுடன் உரையாடிக் கொண்டிருந்தேன். கான் அப்துல் கபார்கானின் உதவிக்கு அவர் போவதாக இருந்தது. திரும்பி வரமுடியாமற் போகலாம் என்று அவருக்குள் பட்டது. எனவே கலந்துரையாட என்னை அழைத்திருந்தார். சுமார் பதினைந்து நாட்கள் நாங்கள் பேசினோம். இரண்டு-மூன்று நாட்கள் அவர் கேள்விகள் கேட்பதிலும் நான் பதில் கூறுவதிலும் கழிந்தன. பிறகு ஒரு நாள் அவரிடம் கடவுள்பற்றிய அனுபவம் குறித்து பேச்சைக் கிளப்பினேன். "நீங்கள் சத்தியமே கடவுள் என்கிறீர்கள். அது சரி, ஆனால் உண்ணாவிரதம் இருந்த சமயத்தில் உள்ளிருந்து ஒரு குரல் கேட்டது என்றீர்கள். அது என்ன? அது என்ன மர்மம்?" என்று கேட்டேன்.

அவர் பதில் சொன்னார். "ஆம், அது மர்மம் போலத்தான். இது சாதாரண விஷயமல்ல, எனக்கு அக்குரல் தெளிவாகக் கேட்டது. நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டேன். உண்ணாவிரதம் இருக்கவேண்டும் என்று பதில் கிடைத்தது. எவ்வளவு நாள் உண்ணாவிரதம் இருப்பது என்று கேட்டேன். இருபத்தோரு நாள் என்று பதில் கிடைத்தது".

ஒரு மனிதன் வினவுபவனாகவும் மற்றவன் பதில் அளிப்பவனாகவும் இந்த உரையாடல் அமைந்தது. அதாவது கிருஷ்ணார்ஜுன் உரையாடல் போலவே அமைந்தது என்று சொல்லவேண்டும். காந்திஜி உண்மையையே உரைப்பவர். எனவே அவர் சொன்னதில் மாற்றம் இருக்க முடியாது. இறைவனே என்னிடம் பேசினார் என்றார் அவர். "இறைவனுக்கு வடிவம் உண்டா?" என்று நான் வினவினேன்.

"வடிவம் இருக்கமுடியாது. ஆனால் எனக்கு குரல் தெளிவாகக் கேட்டது" என்று பதில் சொன்னார். "அது எப்படி? வடிவம் அநித்தியம் என்றால், ஒலியும் அநித்தியம்தானே? குரல் இருந்தால் வடிவம் ஏன் இருக்காது?" என்று கேட்டேன். பிறகு நான் உலகத்தில் மற்றவர்களுக்கு ஏற்பட்ட இது போன்ற அனுபவங்களை விவரித்தேன். எனக்கு ஏற்பட்ட சில அனுபவங்களையும் சொன்னேன். இறுதியில் "எனக்கு குரல் கேட்டது, வடிவம் புலனாகவில்லை என்று இருக்கலாம்" என்று அவர் ஒப்புக்கொண்டார்.

காந்திஜியின் சுயசரிதை வெளியாகிக் கொண்டிருந்தபோது ஒருமுறை அவர் என்னிடம் இதுபற்றிக் கேட்டார். "நீங்கள் சத்தியவான், உண்மையல்லாதவற்றை எழுதமாட்டீர்கள். இதனால் யாருக்கும் நஷ்டம் ஏற்படப் போவதில்லை. ஆனால் பயன் என்ன ஏற்படும் என்று சொல்லமுடியாது.

அவரவர்கள் எடுத்துக் கொள்ள விரும்புவதையே எடுத்துக் கொள்வார்கள் என்றேன்". "உன்னுடைய பதிலில் எனக்கு கிடைக்க வேண்டியது கிடைத்து விட்டது" என்று பதில் சொன்னார் "நஷ்டம் ஏற்படாது என்றால் அது போதும். பயனைப் பொறுத்தவரை நாம் செய்வது அனைத்தின் பலனும் பூஜ்யம்தான்" என்று காற்றில் தமது விரலால் பெரிய வட்டம் போட்ட வண்ணம் சொன்னார். மேலும், "தொண்டு செய்துவிட்டு பயனை எதிர் பாராது போய்க் கொண்டே இருக்க வேண்டியது தான்" என்று கூறினார். இது என் மனத்தில் ஆழப்பதிந்து விட்டது. காந்திஜியின் சித்தாந்தம் முழுவதும் இதில் வந்துவிடுகிறது.

**ஓராண்டு விடுமுறை**

*1917*-ல் காந்திஜியிடம் ஒரு ஆண்டு விடுமுறை வாங்கிக்கொண்டு வெளியே கிளம்பினேன். அதற்கு ஒரு காரணம் உடல்நலம் பெறுவது, மற்றொரு காரணம் கல்வி. முதலில் வாயி என்ற இடத்தில் தங்கி சமஸ்கிருதம் படிக்க விரும்பினேன். கீதையின் மீது இருந்த பற்றின் காரணமாக ஒரு வகையில் வீட்டிலேயே நண்பர் கோபால்ராவின் துணையினால் நான் சமஸ்கிருதம் படிக்கத் துவங்கி விட்டிருந்தேன், இப்போது வேதாந்தம், தர்சனம் ஆகியவை ஓத வேண்டியிருந்தன, வாயியில் எனக்கு இதற்கு அருமையான வாய்ப்புக் கிடைத்தது. அங்கே நாராயண சாஸ்திரி மராட்டே என்னும் பிரம்மச்சாரி வித்துவான் வேதாந்தம் முதலிய சாஸ்திரங்கள் கற்பித்து வந்தார். அவரிடம் உபநிஷதங்கள் படிக்கவேண்டும் என்கிற பேரவாவினால் அங்கே கொஞ்சம் அதிகமான நாள் தங்கிவிட்டேன்.

அங்கே நான் உபநிஷதம், கீதை, பிரம்மசூத்திரம், சங்கரபாஷ்யம், மனுஸ்மிருதி, பதஞ்சலியோக தர்சனம் ஆகிய நூல்களைப் பயின்றேன். இது தவிர நியாயம், வைஷேசுஷிகம், யாக்ஞவல்கியஸ்மிருதி, இவற்றையும் படித்தேன். மேலும் அங்கே தங்கிப் படிக்க விருப்பம் ஏற்படவில்லை. இனி நானே நிறையப் படித்துக்கொள்ள முடியும் என்று எனக்குப் பட்டது.

'இரண்டாவது வேலை உடல் நலம் பெறுவது. அதன் பொருட்டு முதலில் நாள்தோறும் 10,12 மைல் நடக்கத் துவங்கினேன். பிறகு அதிலிருந்து எட்டு வீசை வரை மாவு அரைக்க ஆரம்பித்தேன். பிறகு முன்னூறு சூரிய நமஸ்காரம் செய்யத் தொடங்கினேன். அதனால் உடல் தேறியது.

உணவையும் நன்கு யோசித்தே உட்கொண்டு வந்தேன். முதல் ஆறுமாதங்கள் உப்பு சேர்த்துக்கொண்டிருந்தேன். பிறகு அதை விட்டு விட்டேன். மசாலாப் பொருட்கள் சாப்பிடுவதில்லை என உறுதி எடுத்துக் கொண்டிருந்தேன். பால் சாப்பிட ஆரம்பித்தேன். பல பரிசோதனைகளுக்குப்பின் பால் இல்லாமல் முடியாது என்பது தெளிவாயிற்று. ஒரு மாதம் வாழைப்பழம், எலுமிச்சை, பால் மட்டுமே சாப்பிட்டு வந்தேன். உடல் பலம் குறைந்தது. அதன்பின் என் உணவை பால் 1½ சேர், இரண்டு ரொட்டிகள், 4, 5 வாழைப்பழம், ஒரு எலுமிச்சை (கிடைக்கும்போது) என்று வகுத்துக் கொண்டேன்.

ருசிக்காக வேறு எதுவும் சாப்பிட விருப்பம் ஏற்படவில்லை. ஆயினும் இந்த உணவும் படாடோபமாக இருப்பதாகத் தோன்றியது. தினச்செலவு 11 காசுகள் ஆயின. வாழைப்பழமும் எலுமிச்சையும் நான்கு காசுகள், கம்பு இரண்டு காசுகள், பால் ஐந்து காசுகள்.

இவை எல்லாம் என் உடல் நலத்திற்காக இருந்தாலும் 11 விரதங்களைக் கடைப்பிடிக்கும் நோக்கமும் இருந்தது. நான் ஆசிரமத்தினின்றும் தூரத்தில் இருந்தாலும் ஆசிரமவாசி என்ற முறையில் என் ஒழுக்கங்களை வகுக்க முழுமனத்துடன் முயன்று வந்தேன். சுவை பற்றிய நாவடக்கம் போலவே நிலையாப் பொருள் சேமியாமை குறித்தும் முழு கவனம் செலுத்தினேன். அப்போது என்னிடம் மிகக்குறைவான சாமான்களே இருந்தன. மரத்தட்டு, கிண்ணம், ஆசிரமத்துக் குவளை ஒன்று, வேட்டி, கம்பளம், புத்தகங்கள் இவ்வளவே என் உலக உடைமைகள். சட்டை, கோட், தொப்பி முதலியன அணிவதில்லை என்ற விரதம் வைத்திருந்தேன். விதேசிப் பொருட்களுக்கும் எனக்கும் தொடர்பே இல்லை. எனவே சுதேசி விரதம் தானாகவே கை வந்துவிட்டது. சத்தியம், அகிம்சை, பிரம்மச்சரியம் என்கிற விரதங்களைப் பொறுத்த வரை எனக்குத் தெரிந்தவரையில் நான் ஒழுங்காகவே அவற்றைக் கடைப்பிடித்து வந்தேன்.

இவற்றையெல்லாம் செய்ததுடன் தொண்டு நோக்கத்துடன் இன்னும் சில வேலைகளும் செய்து வந்தேன். இலவச கீதை வகுப்பு ஒன்று நடத்தி வந்தேன். அதில் ஆறு மாணவர்களுக்கு பொருளுடன் கீதை முழுவதையும் கற்பித்தேன். இன்னொரு வகுப்பில் நான்கு மாணவர்களுக்கு ஒன்பது உபநிஷதங்கள் சொல்லிக் கொடுத்தேன். எனக்கே நன்றாக ஹிந்தி தெரியாது என்றாலும் ஹிந்தி பிரச்சாரம் செய்யவேண்டும் என்பதற்காக தினமும் மாணவர்களுடன் சேர்ந்து ஹிந்தி செய்தித்தாள் படித்து வந்தேன்.

வாயியில் வித்யார்த்தி மண்டல் என்னும் பெயரில் ஒரு அமைப்பை உருவாக்கினேன். அதில் படிப்பகம் நடத்துவதற்காக மாவரைப்பதை ஒரு குறிப்பிட்ட நேரத்திற்கு ஒதுக்கினேன். பதினைந்து மாணவர்களும், நானும் மாவரைப்போம். மாவரைக்க வருபவர்களிடம் இரண்டு சேருக்கு ஒரு பைசா வீதம் வாங்கி, படிப்பகத்திற்குக் கொடுத்து விடுவோம். பெரும் வியாபாரிகளின் பிள்ளைகளும் இந்தக்குழுவில் இருந்தனர். வாயி பழங்கருத்துக்கள் நிலவிய ஊர். இந்தக் குழுவில் இருந்தவர்கள் யாவரும் உயர் நிலைப்பள்ளியில் படிக்கும் அந்தணப் பையன்கள். எனவே எல்லோரும் எங்களைக் கிறுக்கர்கள் என்றே நினைத்தார்கள். ஆயினும் இந்த வகுப்பு இரண்டு மாதங்கள் நடந்தது. படிப்பகத்தில் 400 புத்தகங்கள் சேர்ந்துவிட்டன.

இக்காலகட்டத்திலேயே நான் 400 மைல் பாதயாத்திரையும் செய்தேன். அறிவைத் தேடி நாலைந்து மாவட்டங்களில் கால்நடையாகச் சுற்றினேன். சுற்றியதன் நோக்கம் கோட்டைகளைப் பார்ப்பது. ராஸ்கட், சிம்மகட், தோரண்கட் முதலிய வரலாற்றுப்புகழ் மிக்க கோட்டைகளைப் பார்த்தேன். இறையடியார்கள் வாழ்ந்த புனித ஸ்தலங்களை தரிசிப்பதும்,

நல்லோர்களைச் சந்திப்பதும். உலகை ஊன்றிக் கவனிப்பதும் எனது நோக்கம்.

அப்போதெல்லாம் நான் மக்களிடம் மறைந்து கிடக்கும் அரிய அறிவுக்கருவூலங்களைப் பெற முயற்சித்து வந்தேன். யார் வீட்டிலாவது பழைய அரிய நூல்கள் இருப்பின் போய்ப்பார்ப்பேன். வரலாற்று ஆராய்ச்சி, ஆன்மீகம் பற்றிய புத்தகங்கள் குறிப்பாக எனக்கு ஆர்வத்திற்கு உரியவை-யாக இருந்தன. அப்போதெல்லாம் மக்களுக்கு என்னை அவ்வளவாகத் தெரியாது. அதனால் எனக்கு அதில் ஒரு தனி லாபம் இருந்தது என்றே சொல்லவேண்டும். துகாராம் சுவாமிகள், "இதயத்திற்குள் பிரவேசித்து விஷயத்தை கிரகிக்க வேண்டும்" என்று கூறியிருக்கிறார். அப்படியே நான் செய்து வந்தேன்.

மஹாராஷ்டிரத்தில் சுற்றிக் கொண்டிருந்தபோது நான் கீதைச் சொற்பொழிவுகள் ஆற்றிவந்தேன். அப்போது என்னை ஒரு அனுபவசாலி என்று சொல்லிவிட முடியாது. என் வயது 23 தான். கீதையை நான் எந்த அளவு புரிந்து கொண்டிருந்தேன் என்பதை அந்தக் கண்ணன் ஒருவரே அறிவார். ஆனால் மனமொன்றி இதயத்தின் உத்வேகத்துடன் சொற் பொழிவு ஆற்றுவேன். என்னைப் பொறுத்த மட்டில் அது ஜபம் செய்வது போல. சிவலிங்கத்தின் மீது சொட்டுச்சொட்டாக அபிஷேகம் செய்வது போல. சிந்தனைகளை மீண்டும் மீண்டும் நினைவுபடுத்தினதால் அவை மனத்தில் பதிகின்றன. இந்த உணர்வுடன் சொற்பொழிவு ஆற்றுவேன். என் மனத்தில் கீதையின்பால் உள்ள பக்தி அத்தகையதே.

ஒரு ஊரில் அதிகபட்சம் மூன்று நாள் தங்குவேன். முதல் நாள் பகல் அறிமுகத்தில் கழியும், இரவு ஒன்பது மணிக்கு சொற்பொழிவு நடக்கும். மக்களுக்கு கேட்கும் ஆர்வம் இருப்பது போல் தோன்றினால் இன்னும் இரண்டு நாள் தங்குவேன். முதல் நாள் 15, 20 சகோதர சகோதரிகள் சொற்பொழிவைக் கேட்க வருவார்கள். அந்த 15, 20 சகோதர சகோதரி களுக்கு முன்பு நான் ஆயிரக்கணக்கானோர் முன்பு பேசுவது போலப் பேசுவேன். மறுநாள் கூட்டம் பெரிதாகிவிடும். 200 - 300 பேர் வருவார்கள்.

ஒரு நாள் ஒரு ஊருக்கு நானும் சங்கரேஸ்வரர் மடத்து சங்கராச் சாரியாரும் ஒன்றாகப் போய்ச் சேர்ந்தோம். அவர் காலையில் சொற்பொழிவு ஆற்றுவார். ஊரில் ஒரு இளம் சாமியார் வந்திருப்பதாகவும், நன்றாகப் பேசுவதாகவும் அறிந்து சந்திக்க விரும்புவதாக செய்தி அனுப்பினார். ஆனால் நாள் முழுவதும் என் நடவடிக்கைகள் வரையறுக்-கப்பட்டிருந்தன. நேரமேயில்லை. எனவே முதலில் நான் போகவில்லை. பிறகு அவர் கடிதம் வந்தது. உன்னை சந்திப்பதில் மிக்க மகிழ்ச்சி. கன்று தாயிடம் வராவிட்டால் தாயே கன்றிடம் வந்திருக்கும் என்றார். அதைக்கேட்டு என் கண்களில் கண்ணீர் வந்து விட்டது. இன்றும் அந்த வாக்கியம் என் நினைவில் உள்ளது. அந்த வாக்கியம் என்னை ஜெயித்து- விட்டது. சங்கரபாஷ்யம் படித்திருக்கிறாயோ என்று கேட்டார். கீதா பாஷ்யம் படித்திருக்கிறேன், பிரம்மசூத்திர பாஷ்யம் படித்துக்கொண்டிருக்கிறேன் என்ற என் பதில் அவரை மிகவும் கவர்ந்தது.

தாஸ்காம் என்ற ஊரில் ஒரு நாள் தங்க வேண்டியதாகிவிட்டது. அங்கே போய்ச் சேர்ந்த போது என் காலில் ஒரு கட்டி வந்து விட்டிருந்தது. என்னால் நடக்கமுடியவில்லை. முதல் நாள் அது இருபத்து நான்கு மணிநேரமும் வலித்துக்கொண்டிருந்தது. பிறகு அதை ஆப்பரேஷன் செய்தார்கள். எனவே ஏழு நாட்களும் நான் சொற்பொழிவு ஆற்றும் சமயத்தில் ஒரு மாட்டு வண்டியில் உட்கார்ந்து விடுவேன். ஆனால் கூட்டத்தில் நான் பேசத் துவங்கிவிட்டால் வியக்கத்தக்க வகையில் காலில் வலிப்பது நின்றுவிடும். சொற்பொழிவு முடிந்தவுடன் வலி துவங்கிவிடும்.

அந்த ஏழு நாள் முகாமில் நான் பிரம்ம சூத்திரத்திற்கு சங்கரர் எழுதிய பாஷ்யம் முழுவதையும் படித்துவிட்டேன். நாள் முழுவதும் படித்துக் கொண்டே இருப்பேன். தங்கும் ஒவ்வொரு ஊரிலும் இளைஞர்களுடன் தொடர்பு கொண்டு பாதயாத்திரைக்கு அழைப்பு விடுப்பேன். கருக்கலில் குளித்துவிட்டு உலாவக்கிளம்புவேன். கூட யாராவது வந்தால் பலமான வாதவிவாதம் நடக்கும். அனேகமாக இளைஞர் பலர் உடனிருப்பர். எப்போதாவது தனியே உலாவப்போக நேரிட்டால் சிந்தித்துக் கொண்டே போவேன். 10, 11 மணி வரை உலாவிக் கொண்டிருப்பேன்.

இவ்வாறு பரமானந்தமாக அந்தக் காலம் கழிந்தது. என் உரையாடல் களினாலும், வாழ்க்கை நெறிமுறைகளினாலும் சத்தியாகிரக ஆசிரமத்தைப் பரப்ப முயற்சித்து வந்தேன். மனத்தில் அந்த ஒரே எண்ணம்தான் இருந்தது. கனவிலும் அதே நினைவுதான். கடவுள் என்னையும் பயன்படுத்திக் கொள்வாரா என்பதே அது. இந்த உடலை இறைத்தொண்டில் அர்ப்பணிக்க வேண்டும் என்பதே அது.

ஆசிரமத்திற்கு எந்த தினத்தில் வருவதாகச் சொன்னேனோ அதே தினத்தில் நான் ஆசிரமம் திரும்பி விட்டேன்.

**காந்திஜியின் அணிமை**

காந்திஜியின் அன்பையும், நம்பிக்கையையும் நான் ஏராளமாகப் பெற்றிருந்தேன். நானும் பரிபூரணமாக அவருக்கு என்னை அர்ப்பணித் திருந்தேன், காந்திஜி இருந்தவரை கவலையில்லாமல்.

ஒரு ஆண்டு முழுவதும் என் வேலை விவரங்களைத் தெரிவித்து காந்திஜிக்குக் கடிதம் எழுதினேன். அதைப் படித்துவிட்டு "குருவை சிஷ்யன் மிஞ்சி விட்டான். பீமனாக இருக்கிறானே" என்று காந்திஜி மலைத்தார். இவ்வாறு என் பரிசோதனைகளை நடத்தி வந்தேன். ஆனால் இப்போது (காந்திஜி அமரராகிவிட்ட தருணம்) எண்ணிப் பார்க்கும் போது சில ஆண்டுகள் முன்பே வெளியே கிளம்பியிருந்தால் காந்திஜியின் உடல் எந்த நெருப்பிற்குப் பலியானதோ அதைத் தடுத்திருக்காவிட்டாலும் அவருக்கு முன்பாக நான் அந்த நெருப்பிற்குப் பலியாகி இருக்கக்கூடிய திருப்தியாவது எனக்குக் கிடைத்திருக்கும். காந்திஜியின் மீது குண்டு பாய்ந்த பிறகு இன்னும் நாலைந்து ஆண்டுகள் முன்னதாக வந்திருந்தால் உதவியாக இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. குறைந்தபட்சம் 1945-ல் ஜெயிலி-

லிருந்து வந்த பின் காந்திஜியுடன் அவரது விரிந்து பரந்த வேலை- களில் பங்கேற்றிருந்தால் அவர் மீது நடந்த தாக்குதலை நான் ஏற்றிருப்பேன்.

நடப்பது எதுவும் இறைவன் சித்தம். துரதிருஷ்டவசமாக கிறுக்கன் ஒருவன் காந்திஜியைக் கொன்று விட்டான். இந்நிகழ்ச்சி நடந்து இரண்டு மணிநேரம் கழித்து பவனாரில் எனக்குச் செய்தி கிடைத்தது. இரண்டு நாட்கள் வரை என் மனம் அசைவற்று நின்றது. எந்த நிகழ்ச்சியும் என்னை உடனே பாதிக்கவில்லை. அப்படியே இந்த நிகழ்ச்சியும் என்னை உடனே பாதிக்கவில்லை. ஆனால் இரண்டு-மூன்று நாட்களுக்குப்பின் பாதிக்க ஆரம்பித்தது. மனம் துயரில் ஆழ்ந்தது. அப்போதெல்லாம் மாலையில் தினமும் நான் பிரார்த்தனையில் பேச வேண்டியதாக இருந்தது. சேவாகிராம ஆசிரமத்தில் பிரார்த்தனையில் நான் பேசத் துவங்கியபோது என் கண்களில் கண்ணீர் பெருகியது. அதைப்பார்த்து ஒரு சகோதரர் 'விநோபா அழுவதா?' என்று கேட்டார். "ஆம் சகோதரரே இறைவன் எனக்கும் இதயம் கொடுத்திருக்கிறார். அதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்." என்று பதில் கூறினேன்.

# கடையனுக்கும் கடைத்தேற்றம்

எங்கள் நண்பர்கள் அனைவரும் ஒன்றில்லாவிட்டால் மற்றொரு காரணத்தினால் அரசியலில் ஈடுபட்டிருந்தார்கள். நிர்மாணப் பணிகளில் ஆர்வமுடையவர்கள்கூட அரசியல் வெள்ளத்தினால் அடித்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்தனர். விரிவான கண்ணோட்டம் உடையவ னாக இருந்தும் இந்த பிரவாகத்தில் நான் அடித்துச் செல்லப்படாதிருப்பது என்பது ஒரு சாதனை என்றே சொல்லவேண்டும். இறைவன் அருளால் அந்த நிலை எனக்குக் கிட்டிற்று. உலகத்தில் ஒன்றும் நடக்கவில்லை என்பது போன்ற பற்றற்ற பாவனையுடன், அதே சமயத்தில் உலகைக் கூர்ந்து கவனித்த வண்ணம் முப்பது ஆண்டுகள் நான் செயல்பட்டு வந்தேன். அந்தச் செயல் அனுபவத்தினாலும், விலகி நின்று கவனித்த தனாலும், வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தவர்கள் கணிக்க முடியாத சில கணிப்புகளை என்னால் கணிக்க முடிந்தது.

**தவயோகத்தின் பின்புலம்**

தவிர்க்க இயலாத சிறைவாசத்தைத் தவிர 1921-லிருந்து 1951 வரையிலான என் வாழ்க்கையின் முப்பது ஆண்டுகள் முழுவதும் நிர்மாணப் பணிகளிலேயே கழிந்தது. அப்போதும் கூட என் கவனம் நிர்மாணப்பணிகளின் அடிப்படை சிந்தனையில்தான் அதிகம் இருந்தது. கல்வி கற்றல், கற்பித்தல், தியானம், சிந்தனை, கூர்ந்து கவனித்தல் முதலிய வேலைகளை நான் செய்து வந்தேன். அரசியல் என்று சொல்லப்படுகிற வேலையில் நான் அதிகம் ஈடுபடவில்லை. கடமை உணர்வுடன் கொடிச்சத்தியாகிரகம், தனி நபர் சத்தியாகிரகம், 1942 புரட்சி போன்ற தவிர்க்க இயலாத பணிகளை மட்டுமே மேற்கொண்டேன். மற்ற காலமெல்லாம் ஒரு இடத்தில் அமர்ந்து உலகம் முழுமையுடனும் தொடர்பு கொண்டு கீதை சொல்லும் அகர்ம நிலையில் இருந்து கர்மம் ஆற்றுவது எப்படி என்று பரிசோதனை செய்து கொண்டிருந்தேன்.

அதை எவ்வளவு ஒருமுகத்தன்மையுடன் செய்து வந்தேன் என்கிற விஷயத்தில் எனக்கு நானே உவமானம். அதாவது அது எனக்கே உரித்தான ஒரு தன்மையாகிவிட்டது. அந்த ஒருமுக கவனத்திற்கு இடையில் பரந்த சிந்தனையும் வேண்டும் என்பதை நான் மறக்கவில்லை. ஒருமுகத்தன்மை, விரிந்த சிந்தனை இரண்டும் சேர்ந்ததுதான் வாழ்க்கை. அதனாலேயே ஆசிரமத்தில் வேலை செய்து கொண்டிருந்தபோதும், கிராமத்தொண்டில் ஈடுபட்டிருந்த போதும், மாணவர்களுக்குக் கல்வி கற்பித்து வந்தபோதும், பற்றற்ற நிலையில் உலகத்தில் நடந்துவந்த களேபரங்களைக் கவனித்து

ஆராய்ந்து வந்தேன். என்னை நானே இயக்கங்களிலிருந்து விலக்கி வைத்திருந்தேன். அதனால் விளையாட்டில் ஈடுபட்டிருப்பவர்களைவிட விலகி நின்று பார்ப்பவர்கள் அதை நன்கு விளங்கிக் கொள்வதைப் போன்ற அனுபவம் எனக்கு உண்டாயிற்று. சேவா கிராமத்தில் அரசியல் தலைவர்கள், சிந்தனையாளர்கள் என்று எவர் காந்திஜியிடம் வந்தாலும், காந்திஜி அவர்களை என்னிடம் அனுப்பிவிடுவார். எவர்மீதும் என் கருத்துக்களைத் திணிக்கும் வழக்கம் எனக்கு இல்லையாயினும் சந்திக்க வருபவர்களிடம் உரையாடலாவது நடக்கும்தானே! அதன் வாயிலாக வெளியுலக ஆரவாரங்களைப்பற்றித் தெரிந்துகொள்ள முடிந்தது. இவ்வண்ணம் ஒரு இடத்தில் உட்கார்ந்த வண்ணமே ஊன்றிக் கவனித்தலும், ஆழ்ந்த சிந்தனையும் நடைபெற்று வந்தது.

இந்த என் முப்பதாண்டு வாழ்க்கைக் காலம் தனிமைத் தியானத்தில் கழிந்தது. அதனால் நான் அந்த இடத்திலேயே நிலை பெற்றிருந்தேன். பரந்தாம் ஆசிரமத்தையும், தாம் நதியையும் ஒரு தாயின் மடியில் ஒட்டிக் கொள்வதைப்போல் பற்றி நின்றேன். காந்திஜி அமரரானபின் மஹாராஷ்டிரத்தில் சில துயர நிகழ்ச்சிகள் நடந்தன. அப்போது சானேகுரு மிகுந்த துடிப்புடன் துயரமும், கலக்கமும் நிறைந்த மனதுடன், "வினோபா, இப்போது மஹாராஷ்டிரத்திற்கு வா, நீ இங்கு தேவைப்படுகிறாய்," என்று கடிதம் எழுதினார். அப்போது அவர் 21 நாள் உண்ணாவிரதமும் இருந்தார். அப்படிப்பட்ட மோசமான நிலவரத்தில் அவரைப்போன்ற ஒரு நல்ல நண்பர் துயரத்துடன் எழுதியதற்கு நான் என்ன பதில் எழுதினேன்! "என் கால்களில் சக்கரம் இருக்கிறது. நான் ஒரு காலத்தில் சுற்றத்தான் வேண்டும். அந்தக்காலம் இன்னும் வரவில்லை. நான் சுற்ற ஆரம்பிக்கும்போது என்னை உலகத்தில் எந்த சக்தியாலும் தடுக்க முடியாது. கடவுளே பார்த்து என் கால்களை உடைத்து நிறுத்திவிட்டால் அதுவேறு விஷயம். அதே போன்று இன்று நான் உட்கார்ந்திருக்கிறேன். என்னை எந்த சக்தியாலும் கிளப்ப முடியாது" என்று எழுதினேன். அந்த அளவுக்குக் கடும் சித்தத்துடனும், பற்றின்மையுடனும் ஆக்க வேலைகளில் முழுமையாக ஈடுபட்டிருந்தேன்.

ஆக்கவேலைகளில் ஈடுபட்டிருந்தபோதிலும் என் மனத்தில் ஆத்ம தரிசனத்திற்கான முயற்சியும் தொடர்ந்தது. எனவே அருகிலிருப்பவர்களின் மனத்தில் நல்ல எண்ணங்கள் உண்டாகவும், நல்ல தொண்டர்கள் உருவாகவும் முயன்று வந்தேன். நாம் ஆக்கவேலைகள் செய்ய விரும்புகிறோம். ஆனால் அரசாங்கமும் ஆக்கவேலைகள் செய்ய விரும்புகிறது. செய்யவும் செய்யும். மக்கள் அதனால் பயன் அடைவார்கள், அடையவும் வேண்டும். ஆனால் வாழ்க்கை பற்றிய கண்ணோட்டத்தை மாற்றுவது, மக்களுக்கு சில நன்மைகள் செய்வது இரண்டுக்கும் வேறுபாடு இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அழியாத, சாஸ்வதமான நன்மை என்றால் இரண்டுக்கும் வேறுபாடு இருக்காது. ஆனால் தற்காலிக நன்மைகள் என்றால், நன்மைகள் செய்வது வேறு, வாழ்க்கைக் கண்ணோட்டத்தை மாற்றுவது என்பது வேறு. இதைத்தான் அமைதிப் புரட்சி என்கிறோம். புரட்சி எப்போதும் அமைதியாகவே இருக்கமுடியும். சாதாரணமான மாற்றங்கள் புரட்சி ஆகாது. புரட்சி என்றால் அடிப்படையான, அதாவது

ஆதாரமான மாற்றங்கள் வரவேண்டும். வாழ்க்கை மதிப்பீடுகள் மாறவேண்டும். மதிப்பீடுகள் மாறுவது என்பது அமைதியாகவே இருக்கமுடியும். சிந்தனையினால்தான் செய்யமுடியும். இது என் சிந்தனைப் பின்னணி. இதன் அடிப்படையில்தான் என் பரிசோதனைகள் நடைபெற்று வந்தன.

என்னை ஒரு தொழிலாளி என்றே நான் கருதுகிறேன். எனவே மிகச்சிறந்த காலம் என்று சொல்லப்படுகின்ற இளமையின் முப்பத்திரண்டு ஆண்டுகளை உழைப்பில் கழித்தேன். நான் விதவிதமான செயல்களைச் செய்தேன். தாழ்ந்தது, இழிந்தது என்று கருதப்படும் உடலுழைப்பு சமுதாயத்திற்கு மிக அவசியமானதாக இருந்தும் அது மதிக்கப்படவில்லை. தோட்டி வேலை, நெசவு, தச்சு, விவசாயம் முதலியன இவற்றில் அடக்கம். காந்திஜி இருந்திருந்தால் நான் வெளியே வந்தேயிருக்கமாட்டேன். உலகத்திற்கு நான் ஒரு உழைப்பாளியாகவே காட்சியளித்துக் கொண்டிருப்பேன். செயலளவில் உழைப்பாளியாக இருந்தாலும், பிறப்பினால் பிராமணன் - அதாவது நிலையாத பொருள் மேல் பற்றற்று பரம்பொருளின் தியானத்தில் ஆழ்ந்திருப்பவன். எனவே என்னுடைய எல்லா வேலைகளுக்குப் பின்னும் பரந்த ஆத்மதரிசனக் கண்ணோட்டமே இருந்தது.

காந்திஜி ஜம்னாலால் பஜாஜின் வற்புறுத்தலின் பேரில், சத்தியாகிரக ஆசிரமத்தின் ஒரு கிளையை வார்தாவில் ஆரம்பிக்கத் தீர்மானித்தார். அதை நடத்துவதற்காக என்னை அங்கே செல்லக் கட்டளையிட்டார். நான்கு மாணவருடனும் ஒரு நண்பருடனும் நான் வார்தா போய்ச்சேர்ந்தேன். (ஏப்ரல் 8, 1921). அங்கே என் வேலை ஆரம்பமானது.

### நூற்பு யக்ஞம்

காந்திஜியிடம் வந்து சேர்ந்தபின் நான் பலவிதமான வேலைகள் செய்தேன். காந்திஜியின் தூண்டுதலின் பேரில் முதலில் நெசவு கற்றுக் கொண்டவர்களில் நானும் ஒருவன். அந்நாட்களில் நான் பட்டை நெசவு செய்து வந்தேன். ஒரு நாளைக்கு 25 கஜம் பட்டை நூற்றால் வாழ்க்கை நடத்த முடியும் என்று கணக்கிட்டு வேகமாக நெய்வேன். இடைவிடாது உழைத்தும் எட்டு மணி நேரத்தில் 25 கஜம் நூற்க முடியவில்லை. கடைசியில் மிக முயன்று ஒரு நாள் இரவு 9-30 வரை மொத்தம் பத்து மணி நேரம் நெய்து 25 கஜம் பட்டை நெய்ய முடிந்தது.

அப்போதெல்லாம் (1916)-ல் நூல்தான். அதன்பிறகுதான் மில் நூலினால் இந்தியாவுக்கு குறிப்பான பலன் கிடைக்காது என்று தெரிய வந்தது. அதனால்தான் மெல்ல மெல்ல ராட்டையின்பால் கவனம் சென்றது. நாங்கள் நூற்க ஆரம்பித்தோம். பிறகு பஞ்சடிக்க ஆரம்பித்தோம். அதன்பிறகு பட்டைபோடுதல் துவங்கியது. இவற்றை செம்மைப்படுத்தத் துவங்கினேன். மணிக்கணக்காக நூற்றேன், நெய்தேன். நூற்றலுடன் தொடர்பு கொண்ட ஒவ்வொரு விஷயத்தையும் ஆராய்ந்தேன், பரிசோதனை செய்தேன். அதன்பின் நூற்புக் கூலி எவ்வளவாக இருக்கவேண்டும் என்று கணக்கிட்டேன்.

நூற்புக்கூலி நிர்ணயிக்கும் பிரச்சினை வந்த போது தினந்தோறும் நான்கு சிட்டங்கள் நூற்க ஆரம்பித்திருந்தேன். மணிக்கணக்காக நூற்று, அதிலிருந்து வரும் வருவாயில்தான் வாழ்க்கை நடத்தி வந்தேன். ஒரு ஆண்டு காலம் இது போன்று பரிசோதனை செய்து வந்தேன். ஒரு நாள்கூட விடவில்லை.

இந்த யக்ஞம் துவங்கியபோது நான்கு சிட்டங்கள் போட 8-30 - 9-00 மணி நேரம் ஆகிவிடும். பல்வேறு முறைகளில் நூற்கப் பயின்று வந்தேன். கொஞ்ச நேரம் - இரண்டு, இரண்டரை மணிநேரம் நின்ற வண்ணம் நூற்பது, பிறகு சற்று நேரம் உட்கார்ந்து நூற்பது, சற்றுநேரம் இடக்- கையால், சற்று வலக்கையால் என்று நான்கு வகையாக நூற்புப் பரிசோதனை செய்து பார்த்தேன். பெஞ்சின் மீது அமர்ந்து, காலைத் தொங்கப்போட்டுக் கொண்டு நூற்பது என்பது ஐந்தாம் வகை. நூற்கும் போது சற்றுநேரம் பாடம் நடத்துவேன். மற்ற நேரமெல்லாம் மௌனம். நூலை இழுக்க ஆரம்பிக்கும் போது ஒரு மந்திரம், நூலை தக்ளியில் சுற்றும்போது மற்றொரு மந்திரம். இவ்வாறு காயத்திரி மந்திரம் சொல்வேன். இதனால் தினம் நான்கு சிட்டம் போடுவது எனக்கு இலகுவாயிற்று. உழைக்கும் சிரமம் தெரிவதில்லை.

அந்நாட்களின் என் அன்றாட வேலைத் திட்டம் இங்ஙனம் இருந்தது. நூற்பதில் சுமார் திட்டம் இங்ஙனம் இருந்தது. நூற்பதில் சுமார் 9 மணி நேரம். நூற்கும்போதே இரண்டு மணி நேரம் கற்பித்தல். ஒருநாள் அன்றாட கணக்குத் தரும்போது 26 மணிநேரத்திற்குக் கணக்குக் கொடுத்தேன். இரண்டு மணிநேரம் நூற்பதும், கற்பிப்பதும் ஒருங்கே நடந்ததால், இரண்டு மணிநேரம் அதிகப்படியாக கிடைத்துவிட்டது. 4 - 5 மணி நேரம் கடிதங்கள் எழுதுவது முதலிய மற்றவேலைகள். பத்து மணி நேரமும் உடல் பரிபாலனம் சம்பந்தமான (தூங்குவது உட்பட) வேலைகள்.

அந்நாட்களில் இரவில் கன்யாசிரமத்திலும், பகலில் நால்வாடியிலும் இருந்து வந்தேன். மாலை ஆறு மணிக்கு கன்யாசிரமம் போய்விடுவேன். அங்கே மாலையில், காந்திஜி, பாபாஜி, பாலகோபா, சிவாஜி பாவே ஆகியோருடன் பேசிக் கொண்டிருந்து விட்டு பிறகு பிரார்த்தனை, நூற்பு, தூக்கம். காலையில் பிரார்த்தனைக்குப் பின் உபநிஷத பாடம் நடத்துவேன். அதில் ஆசிரமத்து சிறுவர் சிறுமியரும், இன்னும் சில ஆசிரியர்களும் பங்கேற்பர். இந்த வகுப்புக்குப்பின் ஆறு மணிக்கு நால்வாடி வந்துவிடுவேன்.

1-9-35-ல் ஒரு புது முயற்சி மேற்கொண்டேன். உண்மையில் அப்படி ஒன்றும் புதிதல்ல. பார்ப்பதற்கு புதிதாகத் தோன்றியது. அவ்வளவுதான். நூற்பு என்றால் தன் சாப்பாட்டுச் செலவை அதன் கூலியிலிருந்தே சமாளித்துக் கொள்ள வேண்டும் என்பது சொல்லாமலே அதில் இருக்கிறது. கூலி நானே வரையறுத்துக் கொள்வதுதான். உணவுப் பொருட்களின் விலையையும் நானே தீர்மானித்துக் கொண்டேன். அதாவது மார்க்கெட் நிலவரப்படி மாறுவது என்றில்லாமல் ஒரு குறிப்பிட்ட விலையை தீர்மானித்துக் கொண்டேன். சாதாரணமாக ஆறு ரூபாயில் மாதாந்திர

உணவுச் செலவு முடிந்துவிட வேண்டும் என்பது திட்டம். உணவுப் பொருட்களாவன:- 1) 50 தோலா பால், 2) கறிகாய் 3 தோலா, கோதுமை 15 லிருந்து 20 தோலா, 3) எண்ணெய், 4) வெல்லம், தேன் அல்லது பழம்.

ஒருவகையில் தன் கூலியில் வாழ்க்கை நடத்தும் திட்டம் ஆரம்பத்தி-லேயே (1922-23 லிருந்தே) இருந்தது. மாலை நான்கு மணிக்கு வேலை முடிந்தபின் எவ்வளவு வேலை நடந்தது, எவ்வளவு கூலி கிடைக்கும் என்று கணக்கிடப்படும். மாலை ஆறு மணிக்குள் (எட்டு மணிநேரத்தில்) முழுக் கூலியும் கிடைத்து விடும் என்றால் மாலை உணவு தயாராகத் துவங்கும். இல்லாவிட்டால் முழுக் கூலியான வேலை நடக்காவிட்டால் என்ன செய்வது? மாலை உணவை விட்டுவிடுவதா அல்லது அதிகம் வேலை செய்து முழுக் கூலியையும் அடைவதா என்ற வினா எழுப்பப்படும். இளைஞர்கள் பெரும்பாலும் முழு உணவை விரும்புவார்கள். அப்போது வேலையும் அதிக நேரம் செய்யப்படும். சில சமயங்களில் குறையும் கூலிக்கு ஏற்ப உணவிலிருந்தே சில பொருட்களை விலக்கிவிடுவோம். முழு உற்சாகத்துடன் வேலை நடக்கும். என் மாணவர்கள் மிகவும் இளைஞர்கள். ஆனால் முழு உற்சாகத்துடனும், சக்தியுடனும் என்னுடன் உழைப்பாளி வாழ்க்கை வாழ்ந்து வந்தனர்.

தினமும் 9 மணி நேரத்தில் 16 கண்ணிகள் நூற்றபின்னும் சர்க்கா சங்கத்தின் கூலிக்கணக்குப்படி மாதம் ஐந்து ரூபாய்தான் கிடைத்தது. என் கணக்குப்படி அந்த உழைப்புக்கு நான்கணா கூலி கிடைக்க வேண்டும். காந்திஜியின் கருத்துப்படி எட்டணா கூலி கிடைக்கவேண்டும். ஆனால் இவ்வளவு கூலி கொடுத்து கதர் வாங்குவது நம் கனவான்களுக்குப் பிடிக்க வில்லை. இதற்கு என்ன செய்வது? என்னைப் போன்றவர்கள் இந்தக் கூலியிலேயே வாழ்க்கை நடத்த வேண்டியதுதான். அதைத்தான் நான் பரிசோதனை செய்து கொண்டிருந்தேன்.

ஒருநாள் எனது இந்தப் பரிசோதனை பற்றி காந்திஜிக்குத் தெரிய வந்தது. சேவா கிராமத்தில் உட்கார்ந்திருந்தாலும் அவர் கவனம் நாலா பக்கத்திலும் இருந்தது. நான் அவரைச் சந்தித்த போது அது பற்றி வினவினார். "நீ நூற்பதற்கு சர்க்கா சங்கத்தின் கூலி விகிதப்படி உனக்கு எவ்வளவு கிடைக்கிறது?" என்று கேட்டார். நான் 2-2¼ அணா என்று பதில் சொன்னேன் "உன் அன்றாட செலவு எவ்வளவு?" என்றார். "எட்டணா" என்றேன். "அதாவது நாள் முழுவதும் நூற்றாலும் திறமை சாலியால்கூட தன் வாழ்க்கைக்கு வேண்டியதை சம்பாதிக்க முடியாது என்றாகிறது" என்றார் காந்திஜி. அவருடைய குரலில் துயரம் தோய்ந்திருந்தது. கடைசியாக காந்திஜியின் முயற்சியால் நூற்பவர்களுக்கு போதிய கூலி கொடுப்பது என்பது கொள்கை அளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆயினும் இன்னும்கூட நாம் அந்த லட்சியத்திலிருந்து வெகு தூரத்தில் இருக்கிறோம்.

முழுக்கூலி பற்றிய வாத விவாதம் இரண்டு-மூன்று வருடங்கள் நடந்தது. முதலில் மராட்டிய சர்க்கா சங்கம் அத்திசையில் ஒரு அடி எடுத்து வைத்தது. அதனால் ஒன்றும் தீமை விளையவில்லை என்று கண்டவுடன் இரண்டாவது அடி எடுத்து வைத்தது. இந்தப் புதிய கூலி உயர்வு பழைய கூலியை விட கிட்டத்தட்ட இரு மடங்கு இருந்தது. சாதாரணமாக

நூற்பவர்களுக்கு எட்டுமணிக்கு நான்கு அணாக்களும், திறமையாக நூற்பவர்களுக்கு எட்டு மணிக்கு ஆறு அணாக்களும் கிடைத்தன. மிக அரிதாக ஒரு திறமைசாலி ஏதோ ஒரு நாளைக்கு மிக முயன்றால் எட்டு அணாக்கள் சம்பாத்தித்து விட முடிந்தது. காந்திஜியோ குறைந்தபட்சக் கூலியே எட்டணா என்று கருதியிருந்தார். மகாராஷ்டிர சர்க்கா சங்கம் இந்தக் கூலி முறையை ஏற்றுக்கொண்ட போதும் மற்ற மாநில மக்களுக்கு இது இன்னும் நடைமுறை சாத்தியமற்றதாகவே இருக்கிறது.

இராட்டையில் ஒன்பது மணிநேரத்தில் 4 சிட்டம் போடும் பரிசோதனைக்குப்பின் தக்ளியில் அந்தப் பரிசோதனையை மேற்கொள்ள எண்ணியிருந்தேன். ஆனால் என் தக்ளிப் பயிற்சி குறைவானதாக இருந்ததால் இராட்டை போன்று அதில் பெரும் வெற்றியைக் கொண்டு வர முடியவில்லை. எனவே வேறு ஒரு திறமைசாலி அந்தப் பரிசோதனையை மேற்கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட பரிசோதனைகளினால் தான் கதர்க் கொள்கைக்கு தீவிரம் கிடைக்கும். நான் முழுவதாக ஒரு ஆண்டு தக்ளியில் இடக் கையால் நூற்கும் பரிசோதனையை மேற்கொண்டேன். என் இடக்கைக்கும் வலக் கைக்கும் 9 இழை வித்தியாசம் இருந்தது. இரண்டு கைகளாலும் எட்டுமணி நேரத்திற்குள்ளாகவே நூல் முழுவதையும் நூற்று விடவேண்டும் என்பதே இந்தப் பயிற்சியின் நோக்கம். சத்தியவிரதன் இரண்டு கைகளாலும் நூற்று நான்கு மணிநேரத்தில் 20ஆம் எண் நூல் 12 கால்கள் (சிட்டத்தின் ஒரு பகுதி) போட முடியும் என்பதைக் காட்டி விட்டார்.

அப்போதெல்லாம் (1934-ல்) தினமும் மதியம் 12 மணிக்கு கூட்டுத் தக்ளி நூற்பு நடைபெறும். அதை நான் உபாசனையாகக் கருதி வந்தேன். நான் யார் மீதும் என் கருத்தைத் திணிப்பதில்லை என்றாலும் சாப்பாட்டை விட இதற்கு அதிகம் பேர் வரவேண்டும் என்று எதிர்பார்ப்பதாகச் சொன்னேன். அது நடப்பதாக இல்லை. அதற்குக் காரணம் தக்ளி உபாசனையின் உட்பொருள் நமக்கு விளங்காததேயாகும். உபாசனை என்பது ஞானத்திற்கும் நடைமுறைக்கும் இடைப்பட்டது. இரண்டையும் அது பாலமாக இணைக்கிறது. நடைமுறையில் சிறைப்பட்டிருக்கும் நம்மை பரமார்த்தத்திற்கு இட்டுச் செல்வது உபாசனையாகும். உபாசனை நடைமுறைப் பயன்களுக்காக துவங்கப்படுகிறது. பயன் தந்த வண்ணம் அது நம்மை அமைதி, ஆத்ம நிறைவு, ஆத்ம ஞானம் ஆகியவற்றை நோக்கி இட்டுச் செல்கிறது. தக்ளி, இராட்டையைப் பயன்படுத்துவதால் இந்தியாவின் பல துன்பங்கள் நீங்கும் என்று உணர்ந்து நூற்க ஆரம்பித்தால் நூற்பினால் அமைதி கிட்டும். உபாசனையாக ஏற்கப்படும் விஷயத்தால் உள்முக லாபமும் வெளிலாபமும் ஏற்படும். இது தக்ளியின் அனுபவம்.

தக்ளி விஷயமாக கணிசமான அளவில் தவமே மேற்கொள்ளப் பட்டது. அந்நாட்களில் சிறையில் தக்ளி வைத்துக்கொள்ள அனுமதி கிடையாது. சிறையில் தக்ளிக்காக தாண்டெகர் உண்ணாவிரதம் இருந்தார். அதன்பின் அவருக்கு அனுமதி கிடைத்தது. காகாசாஹிப் பதினொரு நாட்கள் உண்ணாவிரதம் இருக்க வேண்டியதாயிற்று. இப்படியே பல

சகோதர சகோதரிகள் தவமியற்றினர். தக்ளிக்காக செய்த அரும் தியாகங்கள் ராபின்சன் குரூசோவின் கதை போல் சுவாரஸ்யமானது. புராணக் கதைகள் போல இதை சுவைபட எழுதலாம்.

உபாசனையின்றி நாட்டில் ஒற்றுமை வராது என்பது என் அபிப்ராயம். ஒரே நாடாக ஆவதற்கு திருமணஉறவுகள், சமபந்தி உணவு இணைப்பு மொழி இவற்றை விட கூட்டுணர்வே முக்கியமானது. ஒத்த உணர்வினால் தான் நாடு உருவாகிறது. பிரார்த்தனையிலும், தக்ளியிலும்தான் நாம் அனைவரும் சமமாகிறோம். மற்ற இடங்களில் ஆசிரியன்-மாணவன், ஏழை-பணக்காரன், நோயுற்றவர்-நோயற்றவர் என்று பலவிதமான பேதங்கள் உள்ளன. நான் பிரார்த்தனை, தக்ளி (அல்லது இராட்டை) இரண்டிற்கும் உபாசனை என்கிற சொல்லைப் பயன்படுத்துகிறேன். பிரார்த்தனை சொல்வடிவான உபாசனை, தக்ளி செயல் வடிவான உபாசனை.

**இரண்டணா உணவுத் திட்டம்**

1924-ல் நடந்தது இது. அப்போது நான் பொருளாதாரம் படிக்க ஆரம்பித்திருந்தேன். இத்துறையில் தாய்மொழியில் போதிய புத்தகங்கள் கிடைக்கவில்லை. எனவே நான் பல வகைப்பட்ட ஆங்கில நூல்களைப் படித்தேன். பொருளாதாரம் படித்ததினால் நான் எனது அன்றாடச் செலவை இரண்டணாவில் முடித்துக் கொண்டேன். ஏனெனில் அச்சமயத்தில் இந்தியாவின் குறைந்த அளவு தனி நபர் வருமானம் ஒன்றரை அணாவாக இருந்தது. அப்போதெல்லாம் நான் மூன்று வேளை சாப்பிட்டு வந்தேன். ஒரு காசில் உணவுப்பொருள், ஒரு காசில் விறகு, இதுவே என் கணக்கு. ஏழு காசுகளில் கம்பு ரொட்டி, மணிலா பயறு, வெல்லம், பருப்பு, ஒரு கைப்பிடி கறிகாய், கொஞ்சம் புளி, உப்பு இவ்வளவும் கிடைத்துவிடும்.

அக்காலகட்டத்தில் காந்திஜியின் உண்ணாவிரதத்தின் காரணமாக நான் டில்லி போக வேண்டியதாயிற்று. அங்கே கம்பு ரொட்டி கிடைப்பதில்லை. கோதுமைதான் கிடைக்கும். அதன் விலை மிக அதிகம். எனவே அதனை ஈடு செய்ய மணிலாப் பயறை விட்டுவிட்டேன். இந்த உணவுத் திட்டத்தை நான் ஒரு வருட காலம் கடைப்பிடித்து வந்தேன்.

பொருளாதாரம் படிப்பதற்கும் இந்த மாதிரி தவம் செய்வதற்கும் என்ன தொடர்பு என்று கேட்கலாம். படிப்பதற்கேற்ப ஒழுகினால்தான் படித்தது ஜீரணமாகும் என்பது என் கருத்து. புலன்களையும் பிராண சக்தியையும் இழுத்துப் பிடித்து வைத்திருக்க வேண்டும். ஒரு சமயம் நான் இரண்டு ஆண்டுகள் முழு முனைப்புடன் வேதம் படித்து வந்தேன். அப்போது நான் பாலும் சோறும் மாத்திரமே உண்டு வந்தேன். வேறு எதையும் அருந்துவதில்லை. இவ்வாறு படிப்பை வாழ்க்கையோடு பிணைத்துக் கொள்ளுவது என் வழக்கம். அது மிக அவசியம் என்பது என் கருத்து. எனவே பொருளாதாரம் படித்த போது அதனுடன் என் வாழ்க்கையைப் பிணைத்துக் கொண்டேன். அப்படிப் படித்தது மிகவும் நன்மை தந்தது. கவைக்குதவாத பொருளாதாரத்தால் என்ன பயன், அது நினைவில் தங்காது. டால்ஸ்டாய், ரஸ்கின் முதலியோரின் பொருளாதாரச் சிந்தனைகளைப் படித்தேன். அவை என் நினைவில் நன்கு பதிந்தன.

**காந்திஜியின் சிப்பாய்**

*1925*-ல் நிகழ்ந்த ஒரு செய்தி. வைக்கத்தில் ஆலயப் பிரவேசத்துக்காக சத்தியாகிரகம் நடந்து வந்தது. ஹரிஜனங்கள் அக்கோவிலில் நுழையத் தடை இருந்தது. அது மாத்திரமல்ல, அத்தெருவில் நுழையவும் தடை இருந்தது. எனவே, சத்தியாகிரகம் துவங்கி பலநாட்கள் தொடர்ந்து நடந்து வந்தது. பயன்கிட்டுவதாகத் தெரியவில்லை. அப்போது நான் வார்தாவில் இருந்தேன். காந்திஜி சபர்மதியில் இருந்தார். அந்த சத்தியாகிரகம் எவ்வாறு நடைபெறுகிறது என்பதைக் கவனிக்குமாறு காந்திஜி எனக்கு உத்தரவிட்டார். என்னிடம் காந்திஜி எதிர்பார்த்தது இரண்டு. ஒன்று அங்குள்ள சனாதனிகளுடன் உரையாடி ஏதாவது சாதிக்க முடிகிறதா என்று பார்ப்பது. மற்றது சத்தியாகிரக வழிமுறைகளில் ஏதாவது ஆலோசனை சொல்ல முடிந்தால் சொல்வது.

அந்த சமயத்தில் இதில் எனக்கு போதிய ஞானமோ அனுபவமோ இல்லை. ஆனால் காந்திஜியிடம் எனக்கு பக்தி இருந்தது. அந்த பக்தியைத் துணையாகக் கொண்டு அங்கு போகத் துணிந்தேன். அங்கிருந்த சனாதன பண்டிதர்களுடன் உரையாடினேன். அவர்கள் என்னுடன் சமஸ்கிருதத் திலேயே உரையாட விரும்பினர். அவர்களின் விருப்பத்தை ஏற்று அவர்களுடன் சமஸ்கிருதத்தில் உரையாடினேன். ஆயினும் அவர்களின் பிடிவாதமான மனப்போக்கை என்னால் மாற்ற முடியவில்லை. அதைவிட முக்கியமானது சத்தியாகிரக வழி முறைகளில் ஆலோசனை கூறுவது. தூய நோக்கத்துடன் சத்தியாகிரகம் ஆற்றினால் அதற்குரிய பயன் விளையாமல் போகாது. நான் சில யோசனைகள் கூறினேன். காந்திஜியிடமும் அது பற்றிக் கூறினேன். பிறகு காந்திஜியே அங்கு வந்தார், பிரச்சினை தீர்ந்தது.

காந்திஜி பரிந்துரை செய்த வேலைத் திட்டங்களில் அவரை அடியொற்றி முடிந்த வரை பங்கேற்க நான் எப்போதும் முயன்று வந்தேன். *1921*-ல் ஒரு கோடி அங்கத்தினர்களைச் சேர்த்து ஒரு கோடி ரூபாய் திரட்டும் திட்டம் ஒன்றை காந்திஜி கொண்டு வந்தார். அப்போதும் நான் வார்தாவில்தான் இருந்தேன். வார்தாவைச் சுற்றியுள்ள பகுதியில் இந்த வேலைத் திட்டத்தில் என்னால் இயன்ற ஒத்துழைப்பை நல்க எண்ணினேன். வீடு வீடாகச் சென்று காங்கிரசின் கொள்கைகளை எடுத்துக் கூறினேன். அதனை ஏற்பவர்களை மாத்திரம் அங்கத்தினர்களாகச் சேர்த்து வந்தேன். நாள்தோறும் *5, 6* மணி நேரம் வேலை செய்தும் *5, 10* அங்கத்தினர்களைத் தான் என்னால் சேர்க்க முடிந்தது.

அதேகாலத்தில் மற்றவர்கள் அதேநேரத்துக்குள் *100, 200* அங்கத்தினர் களைச் சேர்த்துவிடுவார்கள். இதற்குக் காரணம் எனக்கு விளங்கவில்லை. நான் அவர்களிடம் "நானும் நாலைந்து நாட்கள் உங்களுடன் வேலை செய்து கற்றுக்கொள்கிறேன்" என்றேன். அவர்கள் எனக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு, "தயவு செய்து எங்களுடன் வராதீர்கள். நீங்கள் நன்றாகவே செய்கிறீர்கள், அதையே தொடர்ந்து செய்யுங்கள். நாங்களோ யாராவது ஒரு செல்வந்தரிடம் சென்று *100, 200* ரூபாய் வாங்கிக் கொண்டு *200*

தொழிலாளர்களின் பெயர்களை அங்கத்தினர்களின் பட்டியலில் எழுதிக் கொள்வோம்" என்றார்கள். பிறகு நான் அவ்வேலையை விட்டுவிட்டேன்.

அக்காலத்தில் நானும் காங்கிரஸ் உறுப்பினன். 1925-க்குப் பிறகு நான் அதிலிருந்து விலகிக்கொண்டேன். காந்திஜி 1934-ல் விலகிக் கொண்டார். அக்காலத்தில் நண்பர்கள் என்னைக் கேட்காமலே என் பெயரை நாக்பூர் காங்கிரசில் சேர்த்துவிட்டார்கள். அதனுடைய ஒரு கூட்டத்தில் கலந்து கொள்ள நான் வார்தாவிலிருந்து நாக்பூருக்கு ஒரு நாள் மதியம் பன்னிரண்டு மணிக்குக் கிளம்பினேன். பிற்பகல் மூன்று மணிக்குக் கூட்டம். ரயிலில் படிப்பதற்கு ரிக் வேதம் எடுத்துக்கொண்டேன்.

மூன்று மணிக்குக் கூட்டம் துவங்கிற்று. எல்லா உறுப்பினர்களுக்கும் விதிமுறைகள் அடங்கிய புத்தகம் ஒவ்வொன்று அளிக்கப்பட்டது. கூட்டத்தின் துவக்கத்திலேயே ஒரு சகோதரர் எழுந்து "இக்கூட்டத்திற்கு சரியானபடி அறிவிப்பு கொடுக்கப்படவில்லை. எனவே இது விதிமுறை களுக்குப் புறம்பான கூட்டம். கூட்டம் கூட்டுவதற்கு குறைந்தபட்சம் இத்தனை நாட்கள் முன்னதாக அறிவிப்புத் தரவேண்டும். விதிமுறைகளில் நான்காம் பக்கத்தில் ஐந்தாம் விதியைப் பாருங்கள்" என்றார். நாங்கள் எல்லோரும் புத்தகத்தைப் புரட்டி அந்தப் பக்கத்தை எடுத்தோம். இன்னொரு சகோதரர், "விதி சரிதான்; ஆனால் அவசியம் ஏற்பட்டால் அதற்கு முன்னதாகவே கூட்டத்தைக் கூட்டும் உரிமை இருக்கிறது. இத்தனாம் பக்கத்தில் இத்தனாம் விதியைப் பாருங்கள்" என்றார். அதனையடுத்து விதிமுறைகளை ஒவ்வொன்றாக ஆதாரம் காட்டி வாதப் பிரதி வாதம் நடைபெற்றது. நானும் புத்தகத்தைப் புரட்டி விதிமுறைகளைப் படிக்கலானேன்.

கூட்டம் கூட்டப்பட்டதே விதிமுறைகளுக்குப் புறம்பானால் நாம் எல்லோரும் முட்டாள்கள் என்றாகிறது என்று நான் எண்ணினேன். எனக்கு அந்த விதிமுறைகளைப் பற்றி ஒன்றும் தெரியாது. கடைசியில் ஒருவழியாக கூட்டம் விதிமுறைகளுக்கு ஒத்ததுதான் என்று முடிவு செய்யப்பட்டது. கூட்டத்தின் விஷயம் துவங்கிற்று. அதற்குள் உணவு வேளை வந்துவிடவே கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டது. மீண்டும் இரவு கூட்டம் துவங்கிற்று. அதற்கு நான் போகவில்லை. மறுநாள் வார்தா போனதும் இந்தக் குழுவிலிருந்தும் காங்கிரசின் அடிப்படை உறுப்பினர் 'பதவியிலிருந்தும் ராஜிநாமா செய்துவிட்டேன். ஏனெனில் இக்கூட்டங் களில் மனிதத் தன்மையை மனதிற்கொண்டு பங்கேற்காமல் விதி முறைகளை மனதிற்கொண்டு பங்கேற்கிறார்கள் என்பதைக் கண்டேன். இவை எல்லாம் எனக்கு சாரமற்றவையாகத் தோன்றிற்று.

காந்திஜி கட்டளையிடுவதும் அக்கட்டளையை நிறைவேற்றுவது மாகவே இதுவரை என் வாழ்க்கை இருந்து வந்தது. வழிமுறையைப் பொருட்படுத்தாமல் வீரதீரச் செயல்கள் புரிந்து தேசத்துக்காக என்னை நானே பலியிட்டு பெருமை தேடிக்கொள்ள துவக்கத்தில் பெரிதும்

விரும்பினேன். அந்தப் பிரமையை காந்திஜி என் மனதிலிருந்து விரட்டி-யடித்தார். அதுமுதல் ஆசிரமத்தில் நாள்தோறும் வளர்ச்சி பெற்று வந்தேன். ஒவ்வொரு ஆண்டும் மகாவிரதங்களில் நான் ஆத்மபூர்வமாக ஒன்றி வந்தேன்.

**கிராம உபாசனை**

*1932*-லிருந்து இரண்டு மூன்று ஆண்டுகள் கிராமத் தொண்டு ஆற்றுவதற்காக நாங்கள் ஊர் ஊராகச் சுற்றினோம். நால்வாடி கிராமத்தில் ஆற்றிய தொண்டு எங்களுக்கு சிறந்த அனுபவத்தைத் தந்தது. அருகிலுள்ள அக்கம் பக்கத்து கிராமங்களில் சம்பூரண கிராம சேவையை விரிவாக்கம் செய்வதற்கு ஏதுவான ஒரு திட்டம் வகுக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. இச்சிந்தனையின் விளைவாக 1934-ல் "கிராம சேவா மண்டல்" உருவாயிற்று. சில கிராமங்களைத் தேர்வு செய்தோம். துப்புரவுப் பணியுடன் கதர் மற்றும் அரிஜனத்தொண்டு துவங்கப்பட்டது. இதுவே பின்னர் வார்தா வட்டம் முழுமைக்கும் ஒரு கிராமத் தொண்டுத் திட்டமாக விரிவுபடுத்தப் பட்டது.

நிறுவனங்களை விரிவுபடுத்துவதிலும், நிறுவனங்களாகத் தேங்கி விடுவதிலும் எனக்கு அவ்வளவாக ஈடுபாடு கிடையாது. பல ஆசிரமங்களில் நான் இருந்தேன். சபர்மதியில் இருந்தேன். வார்தா ஆசிரமத்தை நானே நடத்தினேன். ஆசிரமங்கள் எனக்கு வாழ்க்கைப் பயிற்சியை அளித்தன. ஆசிரமங்களோடு நான் ஒன்றிவிட்டதும் உண்டு. ஆயினும் இந்த ஆசிரமங்களை உருவாக்கிய பொறுப்பில் எனக்குப் பங்கு இல்லை. அதன் பொறுப்புகள் என்னைச் சாரா. அவை உருவானதற்கு ஒரு பக்கம் காந்திஜி, மற்றொரு பக்கம் ஜம்னாலால்ஜி, இவர்கள்தாம் பொறுப்பு.

நிறுவனங்கள் மீது எனக்கு ஈடுபாடு இல்லை என்றாலும் கிராம சேவா மண்டல் ஆரம்பித்து 25 ஆண்டுகள் நிறைவுற்றபோது (1950-ம் ஆண்டில்) நான் மூன்று நிறுவனங்களை ஏற்படுத்தியிருந்தது தெரிய வந்தது. பரோடாவில் 1911-ல் வித்யார்த்தி மண்டல், நால்வாடியில் 1934-ல் கிராம சேவா மண்டல், பவுனாரில் 1959-ல் பிரம்ம வித்யா மந்திர் ஆகியவை அம்மூன்று நிறுவனங்கள். ஒன்று சிறுவயதில், இரண்டாவது இளமையில், மூன்றாவது முதுமையில்.

முதல் நிறுவனம் நான் மாணவனாக இருந்த காலத்தில் ஏற்படுத்தியது. அதைத் தொடர்ந்து நடத்தும் உத்தேசம் கிடையாது. ஐந்தாறு ஆண்டுகள் அதை நடத்தினேன். அது நூற்றுக்கு நூறு வெற்றி. அதிலிருந்துதான் மோகேஜி, கோபால்ராவ் காலே, ரகுநாத் தோத்ரே, மாதவராவ் தேஷ்பாண்டே, துவாரகநாத் அரிகரே ஆகியோர் என்னுடன் பொது வாழ்வில் ஈடுபட்டனர். இறுதிவரை உதவியும் வந்தனர். மோகேஜி பிரம்ம வித்யா மந்திரிலும் உடனிருந்தார்.

இரண்டாவது நிறுவனம் கிராம சேவா மண்டல். உண்மையில் இதற்கான வித்து 1912-ல் வித்யார்த்தி மண்டல் காலத்திலேயே ஊன்றப்பட்டு

விட்டது எனலாம். ஆயினும் இது நூற்றுக்கு நூறு வெற்றியடைந்து விட்டதாகக் கூற முடியாது. அதன் வாயிலாகவும் பல நல்ல தொண்டுகள் நடந்தன என்பது உண்மை. அதன் மூலம் பல நல்ல தொண்டர்கள் கிடைத்தனர். எனக்கு அதில் திருப்திதான்.

தான இயக்கத்தின்போது 1957-ல் கிராம சேவா மண்டலுக்கு ஒரு யோசனை சொன்னேன். துவக்கத்திலிருந்தே அந்நிறுவனம் கிராமத் தொழில்களைச் சார்ந்ததாகவே இருந்தது. ஆனால் அது பூதான நிறுவன மாக இருக்கவில்லை. இப்போது அது பூதான நிறுவனமாக மாறி சமத்துவ சமுதாய அமைப்பை ஏற்படுத்த முயலும் காலம் வந்துவிட்டது என்று கருதினேன். வார்தா மாவட்டத்தில் பூதான இயக்கத்தில் ஈடுபட்டிருக்கும் நண்பர்களையும் இந்நிறுவனத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று அவர்களுக்கு எழுதினேன். கிராம சுயராஜ்ய புரட்சிக்கு இந்நிறுவனம் மையமாக வேண்டும் என்பது எனது விருப்பம். உற்பத்தி மற்றும் சுய தேவைப் பூர்த்தி என்ற அதன் கொள்கை விரிவாக்கம் பெறவேண்டும். ஒரு புறம் நிர்மாணப் பணிகள் நிரந்தரமாக நடந்து கொண்டிருக்க, சமுதாய விழிப்புணர்வுப் புரட்சியும் கூடவே நடைபெற வேண்டும். அது பூமிதான மாகவும் சம்பத்து தானமாகவும் இருக்கலாம். நிர்மாணமும் புரட்சியும் இணையவேண்டும்.

வாழ்க்கை பற்றிய எனது கண்ணோட்டம் வேறானது. ஒரு மனிதன் வாழ்நாள் முழுவதும் ஒரே வேலையைச் செய்வது சரியல்ல. 20 அல்லது 25 ஆண்டுகள் ஒரு வேலையில் தொண்டாற்றி அதற்கு ஒரு முழு வடிவம் கிடைத்த பின்னர் மெல்ல மெல்ல அதிலிருந்து மாற்றம் பெற வேண்டும். இதுதான் வானப்பிரஸ்தம் என்பேன். எப்போதும் என் மனதில் இக்கண்ணோட்டம் இருந்து வந்தது. பரந்தாம் ஆசிரமத்திலும் பழைய ஆட்கள் குறைவாகவே உள்ளனர். பரந்தாம் நதியைப்போல் பரந்தாம் ஆசிரமமும் தூய வடிவம் பெற்றுக்கொண்டே இருக்கிறது. கிராம சேவா மண்டலும் அவ்வண்ணமே ஆக வேண்டும் என்று விரும்பினேன்.

### சிதைந்த மூர்த்திகள் வழிபாடு

கிராமத் தொண்டிற்காக ஊர் ஊராகச் சுற்றும்போது ஊரின் தேவை களை ஆராய்ந்து அவற்றைப் பூர்த்தி செய்யும் திட்டங்கள்பற்றிக் கலந் துரையாடி வந்தோம். கிராமப்புறங்களில் குஷ்டரோகம் எவ்வளவு பயங்கரமாகப் பரவியுள்ளது என்பதை அதற்கு முன் நாங்கள் எண்ணிப் பார்த்ததில்லை. அது எங்கள் கவனத்திற்கு வந்தது. இதற்கு என்ன செய்யலாம் என்ற கேள்வி எழுந்தது. இந்த நிவாரண வேலையைத் துவங்கியாக வேண்டும் என்று தீர்மானித்தோம். அப்போது காந்திஜியின் நிர்மாணத் திட்டங்களில் குஷ்டரோக நிவாரணம் இடம் பெறவில்லை. ஆயினும் இதனை அலட்சியப்படுத்த எங்களால் இயலவில்லை.

எங்கள் நண்பர் திவான் மனோகர்ஜிக்கு இத்தொண்டில் ஆர்வம் ஏற்பட்டது. அவரது மனதில் ஒரு உத்வேகம் இருந்தது. அவர் எங்கள் ஆசிரமத்தில்தான் இருந்தார். நூற்பு, நெசவு, துப்புரவுப்பணி ஆகியவற்றில்

அவர் ஈடுபட்டிருந்தார். சில ஆண்டுகள் கிராமப் பணியும் செய்தார். குஷ்டரோக நிவாரணப் பணி செய்யவேண்டும் என்ற தமது விருப்பத்தை என்னிடம் கூறினார். இந்த வேலையைக் கட்டாயம் செய்யத்தான் வேண்டும் என்பதை நானும் ஒப்புக்கொண்டேன். மனோகர்ஜியின் தாயாரும் அவருடனே இருந்தார். தமது மகன் இந்த வேலையைச் செய்வது அவருக்குப் பிடிக்கவில்லை. அவர் என்னிடம் வந்து, "இதில் என் மகன் ஈடுபடுவது எனக்கு விருப்பமில்லை" என்று கூறினார். அப்போது அவரிடம், "உங்களுக்கு குஷ்டரோகம் பிடித்தால் மனோகர்ஜி உங்களுக்குத் தொண்டு செய்யக் கூடாது, தொடக் கூடாது என்று சொல்லுவீர்களா?" என்று கேட்டேன். அவர் ஒரு கணம் யோசித்தார். அவரது மனதில் தெளிவ ஏற்பட்டது. "அவனுக்கு எனது ஆசிகள்" என்று சொன்னார்.

1936-ல் தத்தப்பூரில் குஷ்டரோக நிவாண நிலையம் நிறுவப்பட்டது. மனோகர்ஜி அங்கு போய்க் குடியேறினார். அப்போது அந்த நோயாளிகளிடம் எனக்குப் பரிச்சயம் உண்டாயிற்று. இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் நான் பவுனார் வந்தேன். அங்கே பூமியைத் தோண்டும்போது பல கற்சிலைகள் கிடைத்தன. அவை சுமார் 1400 ஆண்டுகளுக்கு முந்தியவை என்று கண்டுபிடிக்கப்பட்டது. அவற்றின் முகங்கள் இந்த நோயாளி-களுடையது போன்றே இருந்தன. 1400 ஆண்டு காலமாக மண்ணில் புதையுண்டிருந்ததால் ஒன்றின் மூக்கு தேய்ந்து போயிருந்தது. இன்னொன்றின் கை பழுதுபட்டிருந்தது. குஷ்டரோகிகளைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு இந்தச் சிலைகள் நினைவுக்கு வரும். அவர்கள் அனைவரும் இறைவனின் திருவுருவங்களே. அழகான புதிய சிலைகள் மீதுள்ளதைவிட பழைய சிலைகள் மீது அதிக பக்தி ஏற்படுகிறது. என் மனதில் குஷ்டரோக நிவாரணப் பணி குறித்து மிகவும் மதிப்புண்டாயிற்று. குஷ்டரோகிகளைப் பார்க்கும் போதெல்லாம் பரந்தாம் மூர்த்திகளையே நான் தரிசிக்கிறேன்.

ஒருமுறை நான் தத்தப்பூர் குஷ்டதாம் போயிருந்தேன். அங்கு அவர்களுடன் குஷ்டரோக நிவாரண வேலை செய்தேன். அவர்களுடன் சேர்ந்து ஏதாவது ஒரு வேலை செய்ய விரும்பினேன். அப்போது அவர்கள் வயலில் வேலை செய்துகொண்டிருந்தார்கள். அவர்களுடன் நானும் சேர்ந்து விதை விதைத்தேன். அப்போது எனக்குக் கிடைத்த மகிழ்ச்சியை வருணிக்க சொற்கள் கிடையாது.

பிரம்ம வித்யா மந்திர் ஆரம்பித்தபோது நான் மனோகர்ஜிக்கு ஒரு யோசனை சொன்னேன். "நீங்கள் 25 ஆண்டுகள் தொண்டாற்றி விட்டீர்கள். இப்போது நீங்கள் தொண்டிலிருந்து விடுதலை பெற்று சும்மா இருங்கள்" என்பது அந்த யோசனை. அவரும் அதை ஒப்புக்கொண்டார். ஆனால் 12 ஆண்டுகள் கழித்து மீண்டும் அவரை குஷ்டரோக நிவாரணப் பணிக்குப் போகுமாறு சொன்னேன். அதையும் அவர் ஏற்றுக்கொண்டார். குஷ்டரோகிகளுக்கு பிரம்ம வித்தை கற்பிக்க வேண்டும் என்று எனக்குப்பட்டது. யாரேனும் ஒருவர் நாள் முழுவதும் அவர்களோடு தங்கி ஆன்மீகக் கல்வி அளிக்க வேண்டும். பிரார்த்தனை, ஆன்றோர் அருள்வாக்கு, ரிக் வேதம், உப

நிஷதம், கீதை, குர்ரான், ஏசு, புத்தர், மகாவீரர் ஆகியோரின் உபதேசங்கள் முதலியவற்றைக் கற்பிக்க வேண்டும். யோகாசனங்கள், தியானம், பிராணா யாமம் ஆகியவையும் கற்பிக்க வேண்டும். அவர்களில் சிலர் சிறந்த தொண்டர்களாகவும் உருவாக முடியும். ஆகவே அவர்களிடம் பிரம்ம வித்தை சென்றடைய வேண்டும். நோய் உடலுக்குத்தானேயன்றி ஆன்மாவுக்கு அல்ல, ஆன்மா உடலிலிருந்து வேறுபட்டது என்று அவர்கள் அறிய வேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் நம் தொண்டுகள் பயனற்றுப்போகும்.

1935-ல் எனக்கு நாற்பது வயது நிரம்பிற்று. சாதாரணமாகப் பிறந்த நாள் நினைவு எனக்கு வருவதில்லை. பல காரணங்களால் அன்று என்னை நானே தீவிரமாகப் பரிசீலித்தேன். பல நிறுவனங்கள் மற்றும் தனி மனிதர்களின் பொறுப்புகளை அப்போது நான் ஏற்றிருந்தேன். இந்நிலையில் ஒருவர் தமது தகுதியைக் குறித்து பரிசீலனை செய்வது அவசியமாகிறது. அப்படிப்பட்ட நிலையில் அன்று நான் எனது கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் பரிசீலித்ததில் வியப்பில்லை. ஆகவேதான் அப்போது எனக்கு நாற்பது வயது நிரம்பியது நினைவுக்கு வந்தது. காலவெளியின் பரிணாமத்தில் ஒரு அற்ப மனிதனின் நாற்பதாண்டு கால அளவைக் கணக்கிட்டால் அது பூஜ்யமே. ஆனால் அந்த மனிதரின் ஆயுட்காலத்தோடு ஒப்பிட்டால் நாற்பதாண்டு காலம் பரிசீலிக்கப் படத்தக்கதே.

வாழ்நாளில் 20 ஆண்டுகள் வீட்டில் கழிந்தன. அதே அளவு வீட்டை விட்டு வெளியே வந்தபின் கழிந்தன. இனி மேற்கொண்டு உள்ள ஆண்டுகளை எங்கே கழிப்பது? கடந்த காலத்தைப் பொறுத்தவரை மனிதன் நொண்டி, எதிர்காலத்தைப் பொறுத்தவரை குருடன். எனவே அவற்றி லிருந்து விலகி நிகழ்காலத்தைப் பற்றித்தான் யோசிக்க முடியும். என் வாழ்வில் இரண்டு பாகங்கள் முடிந்தன. தோராயமாகப் பார்க்கப்போனால் முதல் 20 ஆண்டுகள் அறிவைத் தேடினேன். அடுத்த 20 ஆண்டுகள் வாழ்க்கை நெறிகளைத் தேடினேன். இப்போது உலகளாவிய அன்பைத் தேடுவதில் கழிப்பதாகத் தீர்மானித்தேன். இதில் பலரின் நல்லெண்ணங்கள் உதவி செய்தன. எனக்குப் பல அன்பு நெஞ்சங்களின் உதவி கிட்டிற்று. அவர்களின் அன்பு, தூயநெஞ்சம் உதவிற்று. இத்தகைய உறவுகளில் எத்தனை பிறவிகள் கழிந்தாலும் தீங்கேதும் இல்லை, நன்மையே.

**பவுனார் ஆசிரமம்**

1938-ல் நடந்த விஷயம். என் உடல்நிலை மிகவும் பலவீனமாக இருந்தது. எடை 88 பவுண்டுக்குக் கீழே வந்துவிட்டது. பகவானிடம் போய்ச் சேரும் நேரம் வந்துவிட்டது போலத் தோன்றிற்று. எனவே நான் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தேன். ஆனால் நண்பர்களுக்கு அது மிகவும் துயரமாக இருந்தது. காந்திஜியிடம் புகார் போனது. அவரிடமிருந்து எனக்கு "சம்மன்" வந்தது. நானே போனேன். "என்னிடமே தங்கியிரு, நானே உன்னைக் கவனித்துக் கொள்ளுகிறேன்" என்று காந்திஜி கூறினார்.

நான் சொன்னேன், "உங்களது தொண்டில் எனக்கு நம்பிக்கை இல்லை. உங்களுக்கோ தலைக்குமேல் பல வேலைகள் காத்திருக்கின்றன.

அதற்கிடையில் நோயுற்றவர்களுக்குப் பணிவிடை செய்வது வேறு உள்ளது. அதிலும் டஜன் கணக்கில் பலர் உங்களிடம் காத்திருக்கிறார்கள். அவர்களில் நானும் ஒருவனாகக் காத்திருப்பதால் என்ன பயன்?"

இதைக் கேட்டு காந்திஜி சிரித்து விட்டு, "சரி டாக்டரிடம் போ" என்றார். "அதை விட நான் எமனிடம் போகிறேன்" என்றேன். பிறகு காந்திஜி இதமான சீதோஷ்ணமுள்ள ஒரு இடத்துக்கு என்னை அனுப்பிவைக்க விரும்பி, நைனிடால், மசூரி என்று பல கோடை வாசஸ்தலங்களைக் குறிப்பிட்டு உற்சாகமாக அவற்றை வருணிக்கத் துவங்கினார். "கடைசியாக உடல் நலத்தைத் தேற்றிகொள்ள எங்காவது போய்த் தங்குவது என்று முடிவு செய்தால் நானே ஒரு இடத்தைத் தேர்வு செய்துகொள்ளுகிறேன். அந்த இடம் வேறு எங்கோ தூரத்தில் இல்லை. வார்தாவிலிருந்து ஆறு மைல் தூரத்தில் உள்ள பவுனாரில் ஜம்னலால் பஜாஜின் பங்களா காலியாகக் கிடக்கிறது. அங்கே போய்த்தங்குகிறேன்" என்று ஒப்புக்கொண்டேன். காந்திஜி "அதுவும் சரி. கோடை வாசஸ்-தலங்கள் எல்லாம் பணக்காரர்களுக்கு உரியவை. ஏழை காற்று வாங்க அவ்வளவு செலவில் அவ்வளவு தூரம் போவது நியாயமா என்று நினைக்கிறாய் போலிருக்கிறது. அதுவும் சரிதான். நீ பவுனார் போகலாம். ஆனால் ஒரு நிபந்தனை. உனக்குள்ள எல்லா வேலைப் பளுக்களையும் விட்டு விட வேண்டும். உன் சிந்தனைகளையெல்லாம் மூட்டைகட்டி வைத்துவிடவேண்டும். ஆசிரமம் பற்றியோ, வேறு வேலைகளைப் பற்றியோ சிந்தித்துக்கொண்டிருக்க வேண்டாம்." என்றார். அப்படியே செய்கிறேன் என்று கூறி காந்திஜியிடமிருந்து விடை பெற்றேன்.

நடக்கவும் முடியாத அளவில் எனது உடல் நலம் கெட்டுப்-போயிருந்தது. எனவே நல்வாடியிலிருந்து மோட்டாரில் பவுனார் வந்து சேர்ந்தேன். பவுனார் செல்லும் வழியில் தாம் நதியைக் கடக்க நேரிட்டது. அப்போது எனக்கு நானே, "சந்நியஸ்தம் மயா, சந்நியஸ்தம் மயா, சந்நியஸ்தம் மயா" என்று மூன்று முறை சொல்லிக்கொண்டேன். எல்லாவற்றையும் விடுத்து காலிப் பாண்டம் போன்ற மனத்துடன் பவுனார் அடைவதை அது குறிக்கும்.

பவுனார் போய்ச்சேர்ந்த நாள் *7-3-1938*. அங்கு எனக்கென்று குறிப்பிடத்தக்க வேலை எதுவும் வைத்துக்கொள்ளவில்லை. வயல் வரப்பில் சிறிது நேரம் உலாவி வருவேன். வயலில் சிறிது நேரம் களை எடுப்பேன். பெரும்பாலும் நான் அங்கே செய்த முக்கிய வேலை வயலில் கல் பொறுக்குவது. அநேகமாக கல் பொறுக்குவதில் இரண்டு ஆண்டுகள் கழிந்திருக்க முடியும். என்னை அங்கு சந்திக்க வருபவர்களும் என்னுடன் சேர்ந்து கல் பொறுக்குவார்கள்.

பிறகு கொஞ்ச நேரம் வார்தா நாக்பூர் சாலையில் எத்தனை மோட்டார்கள், எத்தனை மாட்டு வண்டிகள், எத்தனை பாதசாரிகள் போகிறார்கள்? 11 மணியிலிருந்து 12 மணிவரை எத்தனை? 12 மணியிலிருந்து 1 மணி வரை எத்தனை? இவ்வாறு கணக்கிட்டுப் பார்ப்பேன். இவ்வாறு விளையாட்டாக சற்று நேரம் கழியும்.

பொழுது இவ்வாறு கழிந்துகொண்டிருந்தாலும் இவ்ற்றிலிருந்து என் மனம் தனித்தே இருந்தது. மனத்தை தனித்து வைப்பது என்பது ஒரு கலை. அதை ஒரு சங்கற்பமாக செய்யக் கூடாது. சங்கற்பம் செய்துகொண்டு அதைச் செய்தால் செயலிலிருந்து மனம் தனித்திருக்கமுடியாது. புற வேலைகள் என்று ஒன்றும் அவற்றிலிருந்து மனத்தை எவ்வாறு தனிமைப்படுத்துவது என்ற இன்னொரு வேலையும் சேர்ந்துகொள்ளும். இவ்வாறு ஒன்றுக்கு இரண்டு வேலையாகி உபத்திரவம்தான் மிஞ்சும். சங்கற்பத்தால் இரட்டைச் சுமை வந்து சேரும். அதற்கு ஒரே சுமை சிறந்தது. சும்மா இருப்பதற்கு சங்கற்பம் இடையூறாகவே இருக்கும்.

உடற்பயிற்சிக்காக வயலில் களை கொத்தினேன். முதலில் 5 நிமிட நேரம் கொத்தினேன். மறுநாள் அதை மேலும் 5 நிமிடங்கள் அதிகரித்தேன். மூன்றாம் நாள் மேலும் 5 நிமிடம் அதிகரித்தேன். இவ்வாறு அதிகப்படுத்திக் கொண்டே போய் ஒரு நாளைக்கு 2 மணி நேரம் கொத்த ஆரம்பித்தேன். கொத்துவதை விஞ்ஞானமாகச் செய்தேன். நடு நடுவே சிறிது ஓய்வு எடுத்துக்கொள்வேன். பிறகு ஒரு மணி நேரம்கூட தொடர்ந்து களை கொத்துவேன். இடையில் ஒரு சில நொடிகள் கொத்துவதை நிறுத்தி விடுவேன். இதனால் எனது ஆற்றல் குறையாமல் களைப்பில்லாமல் இருந்தது. இப்பயிற்சியினால் எனக்கு மிகுந்த பயன் கிடைத்தது. பத்து மாதங்களில் 40 பவுண்டு எடை கூடிற்று; 88 ஆக இருந்தது 128 ஆகிவிட்டது.

பவுனார் கிராமம் தாம் நதியின் அக்கரையிலும், எனது வாசம் இக்கரையிலும் இருந்தன. எனவே அதற்கு பரம்தாம் என்று பெயரிட்டேன். பகவத் கீதையில் ஒரு சுலோகம் வருகிறது. "எங்கு சென்று மீள்வதில்லையோ, அந்த தெய்வீகபுரி என்னுடையது" என்பது அந்த சுலோகத்தின் பொருள். பரம்தாமில் உடல் நலம் சீரடையச் சீரடைய கிராமத்துடன் தொடர்பும் அதிகரித்தது. கிராமத்தில் ஒரு உழைப்புச் சங்கம் நிறுவினேன். கிராமவாசிகள் நூற்கத்துவங்கினர். பரம்தாமில் ஒரு தறிக்கூடம் அமைக்கப்பட்டது. கிராமத்துச் சிறுவர்கள் சிலர் நெசவு கற்றுக்கொள்ள முன் வந்தனர். மற்றும் பலர் பரம்தாமில் ஏதேனும் ஒரு வேலையில் ஈடுபட்டு வந்தனர்.

ஒரு நாள் பவுனார் மார்க்கெட்டில் கம்பளம் வாங்கப்போனேன். ஒரு சகோதரி கம்பளங்களை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். ஒரு கம்பளம் ஒன்றரை ரூபாய் என்று விலை சொன்னாள். நான் அவளிடம், கம்பளி நூல் என்ன விலை, நெய்ய என்ன செலவாயிற்று, ஆடு வளர்க்க செலவு என்ன என்பன போன்ற விபரங்களைக் கேட்டறிந்தேன். அவளுக்கு நான் பவுனார் ஆசிரமத்தைச் சேர்ந்தவன் என்பது தெரியும். ஆகவே எல்லா விபரங்களையும் தயங்காமல் கூறினாள். பிறகு நான் கணக்குப்போட்டுப் பார்த்தேன். "ஒரு கம்பளத்தின் விலை ஐந்து ரூபாய்க்கு குறைவாக இருக்க முடியாதே. நீ ஏன் ஒன்றரை ரூபாய்க்குக் கொடுக்கிறாய்?" என்று கேட்டேன். "ஐந்து ரூபாய் என்று எப்படிச் சொல்லுவது? ஒன்றறை ரூபாய் என்றாலே ஒன்றேகால் ரூபாய்க்குக் கேட்கிறார்கள்" என்றாள். நான் ஐந்து ரூபாய் கொடுத்துக் கம்பளம் வாங்கினேன். அவள் வியப்புடன் "இது கலியுகமா, சத்திய யுகமா?" என்று கூறினாள். அவளுக்கு இது விளங்கவில்லை.

எங்கள் உழைப்புச் சங்கத்திற்கும் ஆசிரமத்திற்கும் குழந்தைகள் பலர் நூற்கவும் நெய்யவும் வந்து கொண்டிருந்தனர். தினம் 3 அல்லது 4 அணா சம்பாதித்தார்கள். அந்நாட்களில் விவசாயக் கூலிகள் 2 அணா அளவே கூலி பெற்று வந்தனர். நான் அந்தக் குழந்தைகளுக்கு சம்பளம் பற்றிய கதையைக் கூறினேன். "விலைவாசியை முறைப்படி ஏற்றவும் கற்றுக் கொள்ளுங்கள், நியாயமான விலையைத் தராமலிருப்பது ஏழைகளைச் சுரண்டுவதற்கு ஒப்பாகும்" என்று சொன்னேன். மேலும் அவர்களிடம், "நீங்கள் ஒன்று செய்யுங்கள். உங்களுக்கு 3, 4 அணா கூலி கிடைக்கிறது. புல் கட்டு சுமந்துகொண்டு பெண்கள் வருகிறார்கள். அவற்றை நீங்கள் இரண்டணா கொடுத்து வாங்குங்கள்" என்றேன்.

குழந்தைகள் ஒப்புக்கொண்டு அந்தப் பெண்களிடம் போனார்கள். அங்கே புல் வாங்குபவர்கள் அவளிடம் விலை கேட்டார்கள். அவள் "மூன்று தம்படி" என்றாள். வாங்குபவன் "இரண்டு தம்படிக்குக் கொடு" என்றான். குழந்தைகள் குறுக்கிட்டு. "இதன் விலை இரண்டணாவாயிற்றே?" என்றார்கள். "சும்மா அளக்காதே, இரண்டணாவுக்கு யார் வாங்குவார்கள்?" என்றான் அவன். குழந்தைகள், "நாங்கள் வாங்கிக்கொள்ளுகிறோம்" என்று கூறி உண்மையிலேயே அதை இரண்டணா கொடுத்து வாங்கிக் கொண்டார்கள்.

மற்றவர்களை எப்படிச் சுரண்டி வாழலாம் என்றே நாம் எல்லோரும் விரும்புகிறோம். ஒருவர் மற்றவரைப் பாதுகாத்து பரஸ்பரம் நலமுடன் வாழ வேண்டும் என்று பகவான் கீதையில் கூறியிருக்கிறார் என்பதை குழந்தை களுக்குக் கற்பித்தேன். இந் நல்லுணர்வு சமுதாயத்தில் தழைக்க வேண்டும்.

### அருட்கொடை

பரம்தாம் ஆசிரமத்தில் ஒருமுறை நான் நிலத்தைத் தோண்டிக் கொண்டிருந்தபோது ஒரு கல் அகப்பட்டது. மண்வெட்டியால் அதை நான்குபுறமும் கிளறிப்பார்த்தபோது கல் சற்று நீளவாக்கில் கிட ந்தது தெரிய வந்தது. நான் ஒருவனாகவே அதைத் தோண்டி வெளியே எடுக்கும் உடல் பலம் எனக்கு இல்லை. இன்னும் சிலர் வந்து எனக்கு உதவினர். அதை வெளியே எடுத்துப்பார்த்தபோது நாங்கள் கண்டது என்ன? பரதன் ராமனைச் சந்திக்கும் காட்சி அதில் வடிக்கப்பெற்றிருந்தது.

1932-ல் தூலியா சிறையில் என்னுடனிருந்த சக கைதிகளுக்கு கீதைப் பேருரைகள் ஆற்றினேன். பன்னிரண்டாவது அத்தியாயத்தில் சகுண நிர்குண வழிபாட்டை விளக்கும்போது, அதற்கு உதாரணமாக பரத லட்சுமணனின் பக்தியைக் குறிப்பிட்டேன். நான் ஒரு ஓவியனாக இருந்தால் பதினான்கு வருடங்கள் கழிந்து ராமனும் பரதனும் சந்திப்பதை அழகிய ஓவியமாக வடிப்பேன் என்று அப்போது கூறினேன். அன்று எனது கீதைப் பேருரைகளில் சொற்களால் வடித்ததைப்போன்று இந்தக் கற்சிலை வடிவம் அமைந்திருந்தது.

நான் இந்தச் சிலையைக் கண்டு நெக்குருகிப்போனேன். அது கிடைத்தது இறைவன் அருள் என்றே கருதினேன். அதன் மீது எனது பக்தி

சிரத்தையை ஒருமுகப்படுத்தினேன். இரண்டு வருடங்கள் கழித்து அந்த விக்ரகத்தைப் பிரதிஷ்டை செய்தேன். நானும் பல வேத மந்திரங்களையும் ஞானதேவரின் பஜனைப் பாடல்களையும் பாடி எனது அஞ்சலியைச் செலுத்தினேன். பல நாட்கள் அங்கு அமர்ந்து ஞானதேவர், துகாராம், ராம தேவர், ஏகநாதர், துளசிதாசர் ஆகியோரின் இனிய பஜனைப் பாடல்களைப் பாடி வந்தேன்.

மக்கள் என்னைப் பார்த்து "நீங்கள் உருவ வழிபாட்டுக்காரரா?" என்று கேட்டார்கள். நான் அதற்குப் பதில் கூறும்போது "திட்டமிட்டு ஒரு உருவத்தை வடிவமைத்துக்கொண்டு வணங்கும் இயல்புடையவன் அல்ல நான். ஆனால் அதுவாகவே என் கையில் கிடைத்த ஒரு மூர்த்தியை வெறும் கல் என்று கருதும் கல்நெஞ்சுக்காரனும் அல்ல. நான் அதைக் கடவுள் அருளியதாகக் கருதினேன். எனவே பிரதிஷ்டை செய்தேன்" என்று சொன்னேன்.

**காந்தியின் அழைப்பு**

1940ஆம் ஆண்டு ஒரு அழகிய காலைப்பொழுதில் காந்திஜியிட மிருந்து எனக்கு ஒரு அழைப்பு வந்தது. அவரைச் சந்திக்குமாறு அதில் கூறப்பட்டிருந்தது. அவர் இருந்த இடத்திற்கும் நான் இருந்த இடத்திற்கும் ஐந்து மைல் தூரம். அவர் அழைத்தால்தான் அவரைச் சந்திப்பது என்று பழக்கத்தில் இருந்த காலம். ஆண்டுக்கு இரண்டு மூன்று கடிதங்கள் வரும். "இவன் தன் வேலையில் ஈடுபட்டிருக்கிறான். இவனைத் தொந்தரவு செய்ய வேண்டாம்" என்று அவர் அறிவார். ஆனால் அன்று திடுதிப்பென இந்த அழைப்பு வந்தது. எனவே நான் அவரிடம் போய்ச் சேர்ந்தேன்.

"உன் தொண்டு தேவைப்படுகிறது. உனக்குத் தவிர்க்க முடியாத வேறு வேலைகள் உள்ளனவா என்று எனக்குத் தெரியாது. இப்போது தனி நபர் சத்தியாகிரகம் செய்ய வேண்டும். உனது இதர வேலைகளிலிருந்து விடுவித்துக்கொண்டு சத்தியாகிரகத்தில் கலந்து கொள்ள இயலுமா?" என்று கேட்டார் காந்திஜி.

நான் வேடிக்கையாக, "உங்கள் அழைப்பை நான் யமதர்மராஜனின் அழைப்பு மாதிரியே கருதுகிறேன். எனவே நான் ஆசிரமத்திற்குத் திரும்பிப்-போக அவசியமில்லை. இங்கிருந்தே தாங்கள் குறிப்பிடும் இடத்திற்குப்-போக நான் தயார்" என்றேன். அது கேட்டு காந்திஜி மன நிறைவு எய்தினார்.

(இதைக்குறித்து மகாதேவதேசாய் எழுதும்போது, "விநோபாஜி போன்று சத்தியம், அகிம்சையை ஆராதித்துத் தொண்டாற்றுபவர்களை காந்திஜியின் வேறு எந்த சிஷ்யர்களும் உருவாக்கியதில்லை. அவருடைய மனம், வாக்கு, செயல்களில் இருக்கின்ற ஒரே லயம் மிகச் சிலரிடமே காணப் படும். எனவே அவருடைய வாழ்க்கை இனிய சங்கீதமாகவே இருக்கிறது." *(தொகுப்பாசிரியரின் குறிப்பு)*

எனக்கு அப்போது பல அலுவல்கள் இருந்தன. காந்திஜியின் நிர்மாணத் திட்டங்களில் நான் ஈடுபடாதது அநேகமாக இல்லை என்றே கூறலாம். இது தவிர எனது சொந்த விஷயங்களும் இருந்தன. பக்த ராமதாசரின் அறிவுரை எனக்குக் கிட்டியிருந்தது. சிறு வயது முதலே அவருடைய அறிவுரை ஒன்றை நான் கடைப்பிடித்து வந்தேன். அதாவது "எதிலும் மாட்டிக்கொள்ளாத வண்ணம் பக்தி மார்க்கத்தில் நடை பயிலு" என்பது அந்த அறிவுரை. இது என் மனதைக் கவர்ந்திருந்தது. இதில் கீதையின் அறிவுரையும் பதிந்துள்ளது. அதன்படி, "நான் இல்லாமல் ஒரு வேலை நடைபெறாது நின்றுவிடும்" என்ற நிலையில் எதையும் நான் துவங்குவதில்லை. நான் இல்லாமலே அது நடைபெறும்.

இச் செய்தியை காந்திஜியிடம் நான் கூறியபோது, அது அவருக்குப் பிடித்திருந்தது. அடுத்த சில நாட்களில் தனி நபர் சத்தியாகிரகத்தில் ஈடுபட்டு சிறை போய்ச் சேர்ந்தேன்.

**சிறைச்சாலை ஆசிரமம்**

உண்மையான ஆசிரமவாழ்க்கையின் அனுபவம் சிறைச்சாலையில் தான் ஏற்பட்டது. மிகக் குறைவான ஆடை, தண்ணீர்க்குவளை ஒன்று, ஒரு கோப்பை, இவ்வளவே உடைமைப்பொருட்கள். "நிலையாப்பொருள் சேமியாமை என்ற ஆசிரம விரதம் இதைவிட வேறு எங்கு அனுபவத்துக்கு வரும்? குறித்த காலத்தில் எழுதல், மணியோசை கேட்டுத் தூங்குதல் என்றிவ்வாறு ஒழுங்கு வாழ்க்கை. நோயுற்றுப் படுக்க அனுமதி கிடையாது. உணவில் நாவடக்கம். இவை தாமே பேணப்பட்டு வந்தது. இதைவிடவா ஆசிரமத்தில் பயின்று வருகின்றோம்? இத்தனைக்கும் மேலாக சிந்தனை செய்யவும் அங்கு நிறைய அவகாசம் கிடைக்கிறது. உண்மையில் ஆசிரமத்தின் தவ வாழ்க்கையின் தொடராகவே சிறைச்சாலையை ஏற்க முடியும்.

சிறைச்சாலையில் எல்லோருடனும் கலந்து உறவாடிப் பழகியதால் எனக்குப் பெருத்த பயன் விளைந்தது. தனி நபர் சத்தியாகிரகத்துக்கு முன்னரும் நான் இருமுறை சிறை சென்றிருக்கிறேன். முதல் முறையாக 1923-ல் நாகபுரி கொடி சத்தியாகிரகத்தின்போது சிறை சென்றேன். அப்போது முதலில் நாக்பூர் சிறையிலும் பின்னர் அகோலா சிறையிலும் இருந்தேன். அப்போது கிரிமினல் குற்றத்தின் கீழ்தான் என்னைக் கைது செய்தனர். எனவே சிறையில் கல் உடைக்கும் கடினமான வேலை எனக்குத் தரப்பட்டது.

(அப்போது ராஜாஜி அவர்கள் சிறையில் விநோபா அடிகளைச் சந்தித்த பின்னர் அது குறித்து எழுதும்போது, "ஒரு தேவ தூதன் போல, தத்துவ ஞானம், புலமை, ஆன்மீகம் இவற்றின் சிகரங்களிலே அவர் உலாவிக் கொண்டிருந்தது போலவே தோன்றிற்று. அவரது பணிவும் எளிமையும் அவரை முன்பின் அறியாத எந்த அதிகாரியும் அவரை எத்தனை பெரியவர் என்பதை அறிந்துகொள்ள முடியாதபடி அத்தனை சகஜமாக அவர் நடந்து கொண்டார். அவர் தாம் ஏற்றுக்கொண்டுள்ள மூன்றாம் வகுப்புக் கைதிக்கு

ஏற்ப சிறைச்சாலை விதிப்படி மனமுவந்து கடின வேலைகளையெல்லாம் செய்தார். கல்லுடைத்தார், எடுபிடி வேலைகள் செய்தார். முணுமுணுக்காமல் அனைத்தையும் செய்தார். இவற்றால் தமக்கு உடல் துன்பம் ஏற்பட்டிருப்பதையும் அவர் வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளவில்லை" என்று கூறியுள்ளார். *தொகுப்பாசிரியரின் குறிப்பு)*

ஒரு நாள் வழக்கம்போல் சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் உலாவிக் கொண்டிருந்தேன். சிறை வார்டன் அங்கு வந்தார். நான் இரவில் உலாவிக் கொண்டிருப்பதைப் பார்த்து கதவைத்தட்டினார். நான் சிந்தனையில் மூழ்கி இருந்ததால் கதவைத் திறக்கவில்லை. வார்டன் பயந்து போனார். அவரே கதவைத் திறந்து, என் அருகே வந்து என்னைக் குலுக்கி, "என்ன ஆயிற்று?" என்று கேட்டார். நான் ஒருமுக சிந்தனையின் பொருளையும் அதன் பயனையும் விளக்கினேன். அவர் வியந்து மகிழ்ந்தார். மறுநாள் அதற்குப் பரிசாக சிறிது நேரம் திறந்த வெளியில் உலாவ வசதியாக இடம் அளித்தார்.

அந்த அறை சற்று வசதியாக இருந்தது. இரவில் மூன்று மணி நேரம் தியானம் செய்வேன். ஒரு சிப்பாய் தினமும் என் அருகே வந்து அமர்ந்துகொள்வதை வாடிக்கையாகக் கொண்டார். ஒரு நாள் லாந்தர் எடுத்துக்கொண்டு வந்தார். என் கண்கள் மூடியிருந்தன. கொஞ்சநேரம் காத்திருந்துவிட்டு 'ஐயா உங்களோடு கொஞ்சம் பேசவேண்டும்' என்றார். என் கண்கள் திறந்தன. "நான் நாளை வேலை மாறுதல் பெற்று வேறிடம் போகிறேன். எனக்கு ஏதாவது உபதேசம் செய்யவேண்டும்" என்றார். என்னை ஏதோ ஒரு சாமியார் என்று அவர் நினைத்திருக்க வேண்டும். அவரது ஆறுதலுக்காக ஏதோ சொல்லி வைத்தேன். அவரும் மகிழ்ச்சியாக விடைபெற்றுச் சென்றார்.

நான் அங்கே பதினைந்து நாட்கள் இருந்தேன். அப்போது கீதையின் 4-வது அத்தியாயம், 18-வது சுலோகமான "கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்போன் மக்களுள் மேதாவி, யோகி" என்பதன் பொருள் எனக்குத் தெளிவாயிற்று.

"இந்த வகுப்பிலும் இவன் மகிழ்ச்சியாகவே இருக்கிறானே!" என்று சிறைச்சாலை அதிகாரி என்னைப்பற்றி நினைத்திருக்கவேண்டும். எனவே என்னை அந்த "சி" வகுப்புச் சிறைச்சாலையிலிருந்து மாற்றி பொது வார்டுக்கு அனுப்பிவிட்டார். எனக்கு அங்கும் ஆனந்தம்தான்.

1932-ல் துலியா சிறையில் ஆறு மாதங்கள் இருந்தேன். எங்களுடன் இருந்த பலருக்கு சிறைவாழ்க்கை சலிப்புள்ளதாக இருந்தது. ஆத்மாவில் லயித்து இன்புறும் கலை அவர்களுக்குக் கைகூடவில்லை. அதனால் பலவித மனத்துயரங்களுக்கு உள்ளானார்கள். ஆகவே சிறையில் இருப்பவர்களை மகிழ்ச்சியாக வைத்திருப்பது எனது வேலையாக இருந்தது.

அரசாங்கத்திடம் மன்னிப்புக்கேட்டு விடுதலை பெறுவது என்ற பேச்சுக்கே இடமில்லை. ஆகவே சக கைதிகளின் மனோதிடம் குறையாம விருக்கவும் சிறை வாழ்க்கையிலும் மகிழ்ச்சி குன்றாமலிருக்கவும்

அவர்களுக்கு உதவுவது என் வேலையாயிற்று. சிறைவாசத்துக்கு முன்னரே என்னை அறிந்தவர்களும் சிறைவாசத்தின்போது என்னை அறிந்தவர்களும் விநோபா தங்களுடன் சிறையில் இருந்தால் சிறைவாழ்க்கையின் தனிமைத் துன்பம் மறந்து விடும் என்பார்கள். துலியா சிறையில் என்னுடன் நேரிடையாகப் பழகாத அரசியல் கைதிகளே கிடையாது எனலாம். மணிக்கணக்காக நாங்கள் கூடிக் கலந்துரையாடுவோம். இவ்வாறு அவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்க உதவிக் கொண்டிருந்தேன்.

அப்போதெல்லாம் அரசியல் கைதிகளுக்கும் வேலை தரப்படும். என்னை "பி" பிரிவு கைதியாக வைத்திருந்தனர். அதன் வசதிகளை நான் ஏற்கவில்லை. சிறை சென்ற நாள்முதலே வேலை தருமாறு சிறை அதிகாரியிடம் கேட்டேன். "நீங்கள் ஏற்கனவே பலவீனமாக இருக்கிறீர்கள்; அவ்வாறிருக்க உங்களுக்கு நான் எப்படி வேலை தருவது?" என்று அவர் கேட்டார். "நான் இங்கே உணவு அருந்துகிறேன். உழைக்காமல் உண்பது எனது தர்மமல்ல. எனவே எனக்கு வேலை செய்ய வாய்ப்பளிக்காவிட்டால் நாளையிலிருந்து உணவு உண்பதை விட்டு விட வேண்டியதுதான்" என்று நான் அதற்கு பதில் கூறினேன். "அப்படியானால் நாங்கள் உங்களுக்கு வேலை தரமாட்டோம். நீங்களாக உங்கள் விருப்பப்படி எந்த வேலை வேண்டுமானலும் செய்யுங்கள்" என்றார் சிறை அதிகாரி.

அப்போது சிறையிலிருந்த அரசியல் கைதிகள் அனைவரையும் எனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர நேர்ந்தது. அவ்வாறு செய்யாவிட்டால் ஒழுங்குமுறையே இல்லாது போய்விடும்போல் இருந்தது. அனைவரும் கிளர்ச்சி செய்ய ஆயத்தமாகி விட்டார்கள். யாரும் யார் சொல்வதையும் கேட்பதில்லை. சிறையில் சுமார் 300 சுதந்திரப் போராட்டக் கைதிகள் இருந்தனர். சுயாட்சிக்காகப் போராட வந்தவர்கள் சுயகட்டுப்பாட்டுக்கு அறிகுறியாக தினமும் தாமாகவே உழைக்க முன்வரவேண்டும் என்பதை அவர்களுக்கு அறிவுறுத்தினேன்.

அப்போது கைதிகள் ஒவ்வொருவரும் 35 பவுண்டு மாவு அரைக்க வேண்டும் என்பது சிறையின் குறியீடு. நான் சிறைச்சாலை அதிகாரிகளிடம் "இந்த அளவுக்கு இவர்களால் வேலை செய்ய முடியாது. ஆகவே 35 பவுண்டு அரைக்கும் வேலைப்பளுவில் நீங்கள் பிடிவாதமாக இருக்க வேண்டாம். சிறை முழுவதற்கும் மாவு அரைக்கும் பொறுப்பையும் சமையல் செய்யும் பொறுப்பையும் நாங்கள் எடுத்துக்கொள்ளுகிறோம்." என்றேன். சிறை அதிகாரிகள் அதை ஏற்றுக்கொண்டனர்.

அனைவரையும் மாவு அரைக்கும்படி கேட்டுக்கொண்டேன். அவர்கள் தயங்கினர். அதற்கு அவர்கள் தயாராகவில்லை. ஆனால் நான் அரைக்கத் துவங்கியவுடன் அனைவரும் மாவு அரைப்பதில் உற்சாகமாக ஈடுபட்டார்கள். இளைஞர்கள் தங்களுக்குரிய பங்கைச் செய்ததோடு பெரியவர் மற்றும் நோயாளியின் பங்கையும் செய்து உதவினர். மாவரைக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கும்போது ஆன்மீக உரையாடல்களும் நடைபெற்றன. அதனால் சிறைச்சாலை ஒரு ஆசிரமமாகவே மாறிவிட்டது.

சிறையில் சமையல் வேலையையும் நாங்கள் எடுத்துக்கொண்டோம். அருகிலிருந்தவர்களில் மிகச் சிறந்த மனிதர்கள் அந்த வேலையில் ஈடுபட்டனர். பருப்பு வெந்தவுடன் அதை நன்றாகக் கடைவோம். பருப்பு வேகிற அளவு நேரம் அதைக் கடைவதற்கும் ஆகும். எனினும் அரை குறையாகக் கடையாமல் நன்றாகக் கடைவதில் நாங்கள் சலிப்படைவதில்லை. ஆகவே அந்தப் பருப்பு அனைவரின் மனதிலும் நீங்காத இடம் பெற்று விட்டது. இதுபோன்ற ருசியான பருப்பு வேறு எங்கும் கிடைக்காது என்று பாராட்டும் அளவிற்கு அது சுவையாக இருந்தது.

ஆரம்பத்தில் எங்களில் மசாலா சேர்க்காமல் சாதா பருப்பு சாப்பிடுகிறவர்கள் 10 அல்லது 12 பேர்களே இருந்தோம். மற்றவர்கள் அனைவரும் மசாலா சேர்த்துச் சாப்பிடுகிறவர்கள். மெல்ல மெல்ல மசாலா சேர்க்காத பருப்பு சாப்பிடுகிறவர்களின் எண்ணிக்கை கூடிற்று. மற்ற கைதிகளும் சாதா பருப்பே சாப்பிடுவோம் என்று கூறத்தலைப்பட்டனர்.

சிறை அதிகாரி பயந்துபோனார். "கைதிகளின் உடல்நலத்திற்கு நாங்கள் பொறுப்பாளி. எங்களுக்குக் கொடுக்கப்படும் உணவுப் பொருள்களை நாங்கள் உங்களுக்கு வழங்கியாக வேண்டும். அவற்றுள் புளியும், மிளகாயும் அடக்கம். ஆகவே தயவு செய்து அவற்றைத் தவிர்க்க வேண்டாம்" என்று எங்களிடம் மன்றாடத் துவங்கி விட்டனர். அது கண்டு நான் கைதிகளிடம் "நீங்கள் விடுதலையாகி வீடு திரும்பியதும் சாதா பருப்பு சாப்பிடலாம். இங்கே சிறையில் மசாலா பருப்பு சாப்பிடுங்கள்" என்று ஆலோசனை கூறினேன்.

இவ்வாறு சிறையில் பல வேலைகளில் ஈடுபட்டோம், "விநோபா ஆசிரமவாசி; தனிமை விரும்பியாயிற்றே! இங்கு சிறையில் இப்படி சமூக சேவகனாக விளங்குகிறாரே?" என்று அனைவரும் ஆச்சரியப்பட்டனர். அப்போது நான் அவர்களிடம், 'நான் என்ன சமூகவிரோதியா?' என்று கேட்பது வழக்கம். இவ்வாறு அங்கு எல்லோருடைய மனத்தையும் நான் மகிழ்வித்து வந்தேன்.

கைதிகளில் யாருக்காவது வரும் கடிதத்தை சிறை அதிகாரி தருவதற்குத் தயங்குவார். "பாவம் அந்த மனிதரிடம் கடிதத்தைக் கொடுத்துவிடுவதுதானே?" என்று அவரிடம் கூறுவேன். "அது கொடுக்கத் தக்கதாக இல்லை அதில் ராஜதுவேஷமான செய்திகள் இருக்கின்றன" என்பார் அவர். இதனை மனதிற்கொண்டுதான் அச்சிறையில் ஆற்றிய எனது கீதைப்பேருரைகளில் "காற்றே நமக்குச் செய்தி கொண்டு வரும் தூதன். வீட்டிலிருந்து கடிதம் வரவில்லை என்றால் கலக்கம் ஏன்" என்று கூறியிருக்கிறேன். இவ்வாறு கவலைப்படுவது இறைவன் பேரில் நம்பிக்கை இல்லை என்பது போலாகும் என்பதை எடுத்துக் கூறுவேன். இவ்வாறு எனது சக கைதிகளைத் தேற்றி திடம் குறையாமல் வைத்திருக்க முயல்வது எனது வேலையாயிற்று.

துலியா சிறையில் சான்றோர் பலரின் சேர்க்கை எனக்கு வாய்த்தது. சானே குருஜி, ஜம்னாலால் பஜாஜ், ஆப்தே குருஜி முதலியோர் அங்கு

இருந்தனர். இவர்கள் அனைவரும் விநோபாவுடன் ஏதாவது பேசவேண்டும் என்று விரும்பினர். நானும் அதற்கு ஒப்புக்கொண்டேன். அங்கு ஒவ்வொரு நாளும் கீதைப் பேருரைகள் ஆற்ற வேண்டும் என்று விரும்பினர். அவ்வாறே ஆற்றலானேன். சானே குருஜி அவற்றை எழுத்து வடிவில் அமைத்தார். அவ்வாறு அமைக்க அவரைப் போன்ற திறமைசாலி ஒருவர் கிடைத்தது இறைவன் அருளேயாகும். அவரது உள்ளத்திற்கும் எனது உள்ளத்திற்கும் எவ்வித வித்தியாசமும் கிடையாது. அந்த அளவு எங்கள் உணர்வுகள் ஒன்றுபட்டிருந்தன.

அப்படிப்பட்டவர் கீதைப் பேருரைகளை எழுதி அதன் மூலம் உலகுக்குப் பேருபகாரம் செய்திருக்கிறார். சிறையில் ஆற்றிய அச்சொற்பொழிவுகள் நாடெங்கிலும் அனைத்து மொழிகளிலும் பரவும் என்று யாரும் அப்போது நினைத்துப் பார்க்கவில்லை. ஆனால் இறைவன் விருப்பப்படியே எல்லாம் நடக்கிறது. சிறைவாழ்க்கையில் எதுவும் நிச்சயமில்லை. யாரை வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும், எங்கு வேண்டுமானாலும் அனுப்பி வைப்பார்கள். என்னையோ சானே குருஜியையோ அரசு விரும்பியிருந்தால் எங்கேயாவது அனுப்பியிருக்கலாம். விடுதலை செய்து வெளியேயும் அனுப்பியிருக்கலாம். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை.

பதினெட்டு அத்தியாயங்களும் துலியா சிறையிலேயே உரையாற்றப் பெற்றது. அதுவும் முழுமையாக நிறைவேறியது. பகவத் கீதையும் போர்க்களத்தில்தான் உபதேசிக்கப்பட்டது. இங்கும் போர்க்களத்தில்தான் உரையாற்றப்பட்டது. இதைக் கேட்டவர்கள் அனைவரும் சுதந்திரப் போராட்ட வீரர்களே.

இந்தப் புனிதமான நிகழ்ச்சியை என்னால் மறக்கவே முடியாது. கீதைப் பேருரைகள் ஆற்றும்போது எனது மனப்பாங்கு எப்படியிருந்தது என்று என்னால் விவரிக்க இயலாது. இறைவன் மனிதன் மூலமாகப் பேசுவான் என்றால் கீதைப்பேருரைகள் முழுவதும் இறைவன் என்னைக் கருவியாகக் கொண்டு பேச வைத்தான் எனலாம். பேருரையாற்றும்போது நான் பேசினதாகவே நான் கருதவில்லை. அதைக் கேட்டவர்களும் கூட விநோபா பேசுவதாகவே கருதியிருக்க முடியாது.

சிறையில் கீதைப்பேருரைகள் ஆண் கைதிகளுக்கு மாத்திரமே ஆற்றப் பட்டு வந்தது. சிறையிலிருந்த பெண் கைதிகளும் இப்பேருரைகளைக் கேட்க வேண்டும் என்று விரும்பினர். தங்கள் விருப்பத்தை சிறை அதிகாரிகளிடம் கோரி விண்ணப்பித்தனர். பெண் கைதிகள் ஆண் கைதிகள் இருக்கும் பகுதிக்குப் போக அனுமதி கிடையாது. அப்போது ஸ்ரீ வைஷ்ணவ் என்பவர் சிறை அதிகாரியாக இருந்தார். விநோபாஜியை ஒரு பெண்ணாகக் கருதுவதில் தவறில்லை என்று அவர் கருதினார். ஆகவே அவர் துணிச்சலாக முடிவெடுத்தார். பெண் கைதிகளுக்கும் உரையாற்ற அனுமதித்தார்.

பெண் கைதிகளுக்கு உரையாற்றும்போது சிறையதிகாரியையும் என்னுடன் இருக்குமாறு நான் கேட்டுக்கொண்டேன். அதன்படியே

மகிழ்ச்சியுடன் அவரும் வந்தார். அவர் தம்முடன் அவரது மனைவியையும் அழைத்து வந்தார். இவ்வாறு வாரம் ஒரு முறை பெண் கைதிகளுக்கும் கீதைப் பேருரைகள் நிகழ்ந்தன. பின்னர் அரசியல் கைதிகள் அல்லாமல் சாதாரண கைதிகளும் விநோபாஜியின் கீதைப் பேருரைகளைக் கேட்க விரும்பினர். அவர்களுக்கும் ஆற்ற இயலுமா என்று சிறை அதிகாரி என்னிடம் கேட்டார். அரசியல் கைதிகளுக்கு ஞாயிறுதோறும் இது நடைபெற்று வந்ததால் ஞாயிறு நீங்கலாக வேறு ஒரு நாள் அவர்களுக்கு உரையாற்றுவதாகக் கூறினேன். சுதந்திரப் போராட்டம் நடைபெற்று வந்த அந்தக் காலத்திலேயே துணிச்சலான அந்தச் சிறை அதிகாரி புதன்கிழமை தோறும் அந்தக்கைதிகளை ஒரு மணிநேரம் விடுதலை செய்து கீதைப் பேருரைகளைக் கேட்க அனுமதித்தார்.

அவர்களில் சிலர் தோட்டத்தில் வேலை செய்பவர்கள். அவர்கள் புதன்கிழமை தோறும் பேருரைகள் கேட்க வரும்போது பூமாலை தொடுத்து எனக்கு அன்புடன் கொடுத்து வந்தனர். மரணதண்டனை பெற்றுள்ள தூக்குக் கைதிகளைக் கூட கீதைப் பேருரைகள் கேட்க அனுமதித்து வந்தனர்.

இவ்வாறு துலியா சிறை முழுவதுமே ஆன்மீகம் கமழ்ந்தது. அதே சமயத்தில் 'கீதாயி' என்ற எனது நூல் துலியாவில் அச்சாகி வந்தது. சிறையில் இருந்தபடியே நான் அதற்கு பிழைதிருத்தம் பார்த்துக் கொண்டிருந்தேன். நான் சிறையிலிருந்து விடுதலை பெற்றபோது இச்செய்தி கைதிகளுக்குத் தெரிய வந்தது. அவர்கள் சிறைச்சாலை அதிகாரியிடம் சென்று, அவரவர்களின் ஊதியத்திலிருந்து இரண்டணா தருமாறு விண்ணப்பித்தனர். எதற்கு? என்று காரணம் கேட்டபோது "நாங்கள் கீதாயி நூல் வாங்க வேண்டும். அதன் விலை ஒரு அணா, மற்றொரு அணா விநோபாஜிக்கு தட்சணை" என்று அவர்கள் கூறினர். இவ்வாறு கைதிகளிட மிருந்து எனக்கு ஏராளமான அன்பு கிடைத்தது. அதை என்னால் ஒருக்காலும் மறக்க இயலாது.

1940ஆம் ஆண்டில் தனிநபர் சத்தியாகிரகம் நடைபெற்ற காலத்தில் நான் மூன்று முறை சிறைப்படுத்தப்பட்டேன். சுமார் ஒன்றே முக்கால் ஆண்டு சிறையில் கழிந்தது. காந்திஜி என்னை அதன் முதல் சத்தியாகிரகியாகத் தேர்வு செய்தபோது என்னை இந்தியாவின் சார்பில் பிரதிநிதியாக அனுப்புவதாகக் கூறினார். சிறை சென்ற பின்னர் நான் இந்தியா முழுமைக்கும் பிரதிநிதி என்றால் இந்திய மொழிகள் அனைத்தையும் பயில வேண்டும் என்று தோன்றிற்று. அதே சமயம் நானோ உலகம் முழுமைக்கும் பிரதிநிதியாக வேண்டும் என்று விரும்பினேன். ஆகவே இந்திய மொழிகள் மாத்திரமல்ல, உலக மொழிகளையும் நான் கற்றுக்கொள்ள வேண்டும்.

எனவே அப்போதும், பின்னர் 1942 ஆகஸ்ட் புரட்சியின்போது சிறையில் இருந்தபோதும் நான் ஏராளமாகப் படித்தேன். மிகவும் ஆழ்ந்து படித்தேன். தினமும் சராசரி 15 மணி நேரம் படித்தேன். நாக்பூர் சிறையில்

இருந்த காலத்தில் அரபி மொழி படித்துக்கொண்டிருந்தபோது சரியான அரபி உச்சரிப்பு கற்றுக் கொள்வதற்காக ரேடியோவில் குரான் கேட்டு வந்தேன்.

1942-ல் காந்திஜி சிறைப்படுத்தப்பட்டால் சிறை புகுந்ததும் உண்ணா விரதம் இருக்கப்போவதாக எண்ணிக்கொண்டிருந்தார். சிறையில் சும்மா அடைந்திருப்பது என்பது பழைய கதையாகி விட்டது. இனிமேலும் ஆங்கிலேயர் ஆதிக்கத்தை ஏற்பதற்கில்லை. அவர்களை நாட்டைவிட்டு வெளியேறுமாறு அறை கூவல் விடுப்பதால் சிறை சென்றதும் உண்ணா விரதம் மேற்கொள்ளுவது என்று அடிகள் யோசித்து வந்தார்.

இதை யார் செய்யலாம்? இதயத்தில் அன்பு நிறைந்திருப்பவர்களே உண்ணாவிரதம் இருக்கத் தகுதி உள்ளவர்கள். அவ்வாறெனின் இதை ஒரு தனி மனிதர் செய்யலாம். ஒரு இயக்கமாகச் செய்ய முடியுமா? ஒரு படையில் லட்சக் கணக்கானோர் சேரலாம். இதிலும் அது சாத்தியமா? அது சாத்தியமே என்று காந்திஜிக்குத் தோன்றியது. ஆகவே தம்மிலிருந்து அதைத் துவங்கலாம் என்று அவர் தீர்மானித்தார். இதை அறிந்தபோது எல்லோருக்கும் பயமாகி விட்டது. தொடர்ந்து அனைவராலும் உண்ணா விரதம் இருப்பதென்பது சாத்தியமல்ல. கட்டளையிட்டு நடைபெறும் காரியமல்ல இது. இத்திட்டத்தைத் தடுத்து நிறுத்திவிட வேண்டும் என்று காந்திஜியுடன் இருந்தவர்கள் நினைத்தனர்.

இந்த நிலையில் காந்திஜி என்னை சேவா கிராமம் வருமாறு அழைத்தார். தமது எண்ணங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டார். ஞானி உணர்ந்து செய்யும் ஒரு செயலை, ஒரு பக்தன் அதை தனது பக்தியால் செய்யலாகுமா என்பதே என் முன் எழுந்த கேள்வி. அக்கேள்விக்கு "அது முடியும்" என்று பதில் கூறினேன். ஸ்ரீராம பிரான் ஞான நோக்குடன் செய்யும் ஒரு செயலை பக்த அனுமான் பக்தியினால் செய்ய முடியும். அவ்வளவுதான் அதற்கு பதில். மேற்கொண்டு பரிசிலிக்க எதுவுமில்லை. அந்த பதிலைக் கூறிவிட்டு நான் எழுந்து வந்துவிட்டேன்.

ஆகஸ்டு ஒன்பதாம் தேதி வந்தது. காந்திஜி கைதானார். ஆனால் இப்போது உண்ணாவிரதம் வேண்டாம் என்றும், அரசுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளலாம் என்றும் அவர் நினைத்தார். இது குறித்து முன்னர் குறிப்பிட்ட அளவே அவர் என்னுடன் கலந்துரையாடி யிருந்தார். அதற்குமேல் விபரம் எனக்குத் தெரியாது.

அப்போது பியாரிலால் கைதாகவில்லை. சிறைபுகுந்தவுடன் உண்ணா விரதம் இருக்கும் திட்டம் இல்லை என்ற செய்தியை விநோபாவுக்குத் தெரிவிக்குமாறு காந்திஜி கூறியிருந்தார். இந்த மனிதன் தம்மிடம் வாக்குறுதி அளிக்காதிருந்தாலும், தம்முடன் பேசிய உரையாடலின் பேரிலேயே உண்ணா விரதத்தைத் தொடர்ந்து விடுவானென்று காந்திஜி என்னைப்பற்றி எண்ணியிருக்க வேண்டும். ஆகவே அவர் பியாரிலாலிடம் செய்தி

அனுப்புமாறு கூறியிருக்கிறார். காந்திஜி கட்டளை ஏதும் பிறப்பிக்கவில்லை. இது சாத்தியமா என்று மாத்திரமே என்னிடம் கேட்டார். இது சாத்தியம் என்று மாத்திரமே நானும் பதில் கூறிவிட்டேன். எனவே அது கட்டளையைவிட அதிகம் என்றாகிவிட்டது.

நானும் சிறைபுகுந்தேன். சிறைபோய்ச் சேர்ந்தவுடனேயே நான் சிறை அதிகாரியிடம் "உங்களுக்குத்தான் என்னைத் தெரியுமே? சிறை விதிகளை அணுவளவும் பிசகாது அனுசரிப்பதோடு, மற்றவர்களையும் அனுசரிக்குமாறு கூறுபவன் நான் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனால் இந்தமுறை அது இயலாது. நான் காலை உணவை அருந்தியாகிவிட்டது. இனி மதிய உணவு ஏற்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. மாலையிலிருந்து உண்ணா விரதம். எப்போதுவரை என்று எதுவும் சொல்வதற்கில்லை. இது சிறைச் சாலை விதியை மீறுவதற்காக இல்லை. எனது சொந்த விதிகளை அனுசரிப்பதற்காக" என்று சிறை அதிகாரியிடம் சொல்லிவிட்டு நான் சிறைக்குள் நுழைந்தேன்.

இரண்டு மணிநேரத்தில் அழைப்பு வந்தது. காந்திஜியின் செய்தியை பியாரிலால் கிஷோரிலால் மூலம் சொல்லி அனுப்பியிருந்தார். கிஷோரிலால் டெபுடி கமிஷனரிடமும், டெபுடி கமிஷனர் கவர்னரிடமும் கலந்துபேசி இம்மாதிரியான செய்தியை தெரிவிக்கலாமா என்று ஒருவருக்கொருவர் விசாரித்துக்கொண்டனர். "இந்த செய்தியை மாத்திரம் கூறலாம், அதற்கு மேல் ஒரு வார்த்தைகூட பேசக்கூடாது" என்று கவர்னர் கூறிவிட்டார். "சரி, இந்த செய்தியை விநோபாஜியிடம் சேர்ப்பித்து விடுகிறோம்" என்றார் கமிஷனர். கிஷோரிலால், "இதனை நீங்கள் சொன்னால் கேட்கமாட்டார். எங்களில் ஒருவர் அவரிடம் போய்ச் சொல்லியாக வேண்டும்" என்றார். பிறகு ஒருவாறு அனுமதிபெற்று அவரே நேரில் வந்து காந்திஜியின் செய்தியைக் கூறினார். இவ்வாறு என் உண்ணாவிரதம் நின்றது. காந்திஜி எத்தனை மகிழ்ச்சியுடன் உண்ணா விரதம் இருந்திருப்பாரோ, அதற்குச் சற்றும் குறையாமல் நானும் உண்ணாவிரதம் இருந்திருப்பேன் என்பது உறுதி.

வார்தாவிலிருந்து என்னை நாக்பூர் சிறைக்கு மாற்றினார்கள். பின்னர் என்னை பயங்கரக் கைதி என்று கருதி தெற்கே தமிழ்நாட்டிலுள்ள வேலூர் சிறைக்கு மாற்றினார்கள். அங்கே போனவுடன் "எனக்கு என்ன தேவைகள். என்று சிறை அதிகாரி கேட்டார். எனக்கு இரண்டு தேவைகள், முடி திருத்த நாவிதர் உதவி வேண்டும். மற்றொன்று தமிழ் கற்றுத்தர ஒரு ஆசிரியர் வேண்டும். ஏனென்றால் நான் தமிழ் மண்ணுக்கு வந்திருக்கிறேன். நான் அந்த மண்ணில் விளைந்ததையே உண்ணப்போகிறேன். அந்த மண்ணின் மொழியை நான் கற்றுக்கொள்ள வேண்டும்" என்றேன்.

எட்டு மணிக்கு முடிதிருத்தி குளித்துவிட்டு அமர்ந்தேன். சிறை அதிகாரி தமிழ் கற்பிக்க ஒருவரை அனுப்பினார். அவரிடம் தமிழறிவு குறிப்பிடும்படியாக ஏதும் இல்லை. அந்தச்சிறையில் தமிழ் தெரிந்தவர்கள் நூற்றுக்கணக்கில் இருந்தனர். என்னை அவர்களிடமிருந்து பிரித்து வைத்திருந்தனர்.

எனக்கு தமிழ் கற்றுத்தர வந்த அந்த சகோதரருக்கு ஓரளவு ஆங்கிலம் தெரிந்திருந்தது. அவரிடம் தமிழ் கற்க ஆரம்பித்தேன். 10, 12 நாட்கள் கழித்து தெலுங்கு கற்கத் துவங்கினேன். பிறகு 7, 8 நாட்கள் கழித்து கன்னடமும், மலையாளமும் கற்கத் துவங்கினேன். இவ்வாறு ஒரு மாதத்திற்குள்ளாகவே நான் நான்கு மொழிகளும் படிக்க ஆரம்பித்தேன். நான்கு மொழிகளையும் ஒரே சமயத்தில் ஏன் கற்கிறீர்கள் என்று ஒருவர் கேட்டார். "ஐந்தாவது என்று ஒன்று இங்கு இல்லையே, அதனால்தான்" என்று நான் அதற்குப் பதில் கூறினேன். நான்கு மொழிகளையும் ஒருசேரக் கற்றதனால் அவற்றை ஒப்பிட்டுக் கற்றுக்கொள்ள என்னால் முடிந்தது.

வேலூர் சிறையில் எல்லா வசதிகளும் இருந்தன. இது எங்கள் இயக்கத்தின் தீவிரத்தை முறித்துவிடுமே என்று எனக்குப் பட்டது. நாங்கள் வசதிகள் வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருப்பதும், அரசாங்கம் அவற்றைக் கொடுத்துக்கொண்டிருப்பதும் எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் எங்கள் சிறை வாழ்க்கையின் தேஜஸ் இடிந்து கொண்டிருக்கிறது என்று எனக்குப் பட்டது. வங்காளத்தில் பஞ்சம், இங்கே நாங்கள் நாற்காலியும் கட்டிலும் கேட்டுக்கொண்டிருப்பதா? கிடைக்காவிட்டால் அதற்காக சண்டைபோடுவது, அதை போராட்டம் என்று வருணிப்பது, அதற்கு அரசு ஒப்புக்கொண்டால் அதை மாபெரும் வெற்றி என்று கொண்டாடுவது, இதுவா சிறை வாழ்க்கை? என்ன போராட்டம்? என்ன இது வெறும் முட்டாள்தனம்? இது ஒரு வெற்றி அல்ல; தோல்வி என்று எனக்குப்பட்டது.

வேலூர் சிறையிலிருந்து என்னை சிவனி சிறைக்கு மாற்றினார்கள். அங்கே காலம் சென்ற பரதன் குமரப்பா எங்களுடன் இருந்தார். அவர் என்னிடம் இந்திமொழி கற்றுக்கொள்ள விரும்பினார். நான் அதற்கு ஒப்புக் கொண்டேன். அவருக்கு இந்தி கற்றுத்தர ஆதரவாக துளசி தாசரின் ராமாயணத்தை எடுத்துக்கொண்டேன். அதன் பெருமையை ஆரம்பத்தி லேயே ஒரே சூத்திர வாக்கியத்தில் விளக்கினேன். இந்தி மொழியைப் பொறுத்தவரை துளசிராமாயணம் = பைபிள் + ஷேக்ஸ்பியர் என்பது அந்த சூத்திரம் இரண்டு மாதங்கள் சென்றபின் "உங்கள் சூத்திரம் முழுக்க முழுக்க சரியானது. ஒரே வாக்கியத்தில் அதன் சாரம் முழுவதையும் வைத்து விளக்கிவிட்டீர்கள்" என்று அவர் கூறினார்.

கிறிஸ்தவர்களின் வேதம் பைபிள், அதன் மொழிநடை எளியது, இனியது. ஷேக்ஸ்பியரோ கவிஞர், நாடகாசிரியர், ஆங்கில மொழியில் அவருக்கு இணை கிடையாது. இலக்கியத்தில் அவர் உயர்ந்தவர். ஆன்மீகத்தில் பைபிள் உயர்ந்தது. இவ்விரண்டு அம்சங்களும் இனிதே கலந்தது துளசிராமாயணம்.

அரசியல் கைதிகளுக்கு ஒரு வசதி. படிக்க புத்தகங்கள் கிடைக்கும். படிக்கக் கேட்கும் புத்தக ஜாபிதாவைப் பார்வையிட்டு சிறை அதிகாரி ஆட்சேபகரமான புத்தகங்களை நீக்கி விடுவார். அனுமதிக்கப்பட்ட புத்தகங்

களைத் தருவார். நான் படிக்கக் கோரிய எந்தப் புத்தகத்தையும் அவர் தடுத்ததில்லை. ஏனெனில் நான் கீதை உபநிஷத்து போன்ற புத்தகங்களையே கேட்டேன். நான் "18 புத்தகங்கள் கேட்டால் ஒன்று இரண்டுதான் கிடைக்கிறது. விநோபாவுக்கோ அவர் கேட்கும் புத்தகங்கள் எல்லாம் கிடைக்கின்றன" என்று ஒருவர் கூறினார்.

அதற்கு நான் சொன்னேன், "இந்த அரசுக்கு அறிவே கிடையாது. எது அபாயம் என்றே அரசுக்குத் தெரியவில்லை. தெரிந்திருந்தால் கீதை உபநிஷத்து போன்ற புத்தகங்களை கட்டாயம் தடுத்திருக்கவேண்டும். கீதையின் ஆதாரமே ஆங்கில அரசுக்கு உண்மையில் ஒரு பேரபாயம். கீதை சாரமின்றி, காந்தி ஒரு காந்தியாக, திலகர் ஒரு திலகராக, அரவிந்தர் ஒரு அரவிந்தராக ஆகியிருக்க முடியாது. அவை ஜீவனுள்ள புத்தகங்கள். கொடுங்கோல் ஆட்சிக்கு வெடி வைக்கும் புத்தகங்கள்"

சிவனி சிறையில் உறவினர்களுக்குக் கடிதம் எழுதலாம் என்று அரசியல் கைதிகளுக்கு அனுமதி இருந்தது. உறவினர்கள் தவிர வேறு எவருக்கும் கடிதம் எழுத முடியாது. எனக்கோ உறவினர், உறவினர் அல்லாதார் என்ற வேற்றுமையில் உடன்பாடு கிடையாது. எனவே எனது மூன்றாண்டு சிறைவாசத்தில் எவருக்கும் கடிதம் எழுதவில்லை.

ஒரு நாள் சிறை அதிகாரி என் அருகில் அமர்ந்துகொண்டு வியந்த கண்களுடன் "உங்கள் வாழ்க்கையில் துக்கம் என்பதே கிடையாதா? எப்போதும் மகிழ்ச்சியாகவே இருக்கிறீர்களே?" என்று கேட்டார். 'இருக்கிறதே அது என்னவென்று நீங்கள் கண்டு பிடியுங்கள். "உங்களுக்கு ஒரு வாரம் அவகாசம் தருகிறேன்" என்றேன். ஒரு வாரம் கழித்து அவர் என்னிடம் வந்து, 'என்னால் கண்டுபிடிக்க முடியவில்லையே' என்றார். 'இந்தச் சிறையில் சூரியோதயம், சூரிய அஸ்தமனம் இரண்டையும் தரிசிக்க முடியவில்லை; இது தான் பெரிய துக்கம்' என்றேன்.

தனி நபர் சத்தியாகிரகத்துக்குப் பிறகு சிறையிலிருந்து மீண்டபின் காந்திஜியைச் சந்தித்தபோது அவர் சொன்னது என் நினைவிற்கு வருகிறது. "இது இறுதியான சிறை வாசம் அன்று. மீண்டும் சிறை செல்ல வேண்டி-யிருக்கும்" என்று அவர் சொன்னார். "நான் ஆயத்தமாக இருக்கிறேன்" என்றேன். தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தோம். "சிறையிலிருந்து புதிதாக ஏதாவது சிந்தித்து வந்திருக்கிறாயா?" என்று கேட்டார். "ஆம் சிந்தித்தேன். அனைத்து நிறுவனங்களிலிருந்தும் விடுதலை வேண்டும். அவ்வாறு விடுபடாமலிருந்தால், அகிம்சை நோக்கி என்னால் முன்னேற முடியாது" என்றேன். "மிகச் சரியாகச் சொன்னாய்" என்று காந்திஜி சொல்லிவிட்டு எனது கூற்றை அவர் மேலும் விளக்கினார். "நீ எல்லா நிறுவனங்களிலும் தொண்டு மாத்திரம் செய்வாய், பதவி எதையும் ஏற்கமாட்டாய் அதுதானே?" என்று கேட்டார்.

அப்போது எனதருகில் ஆஷாதேவி அமர்ந்திருந்தார். அவரை நோக்கி காந்திஜி மேலும் பேசும்போது, "சரி, விநோபாவை எல்லாப் பதவிகளி-லிருந்தும் விடுவித்துவிடுங்கள். பதவியைச் சுமக்காமல் சிந்தித்தால் அதன் பயன் அதிகச் சிறப்பாக இருக்கும். பதவியைச் சுமந்து கொண்டு

சுதந்திரமாகச் சிந்திக்க முடியாது. அதன் காரணமாக புதியதாக ஏதும் விளையாது'' என்றார்.

காந்திஜியின் முத்திரை விழுந்து விட்டது. எனவே அதற்கு மாறாக எவராலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. காந்திஜியே எல்லா நிறுவனத்தினரையும் இதற்குச் சம்மதிக்க வைத்து விட்டார்.

42ஆம் வருடத்திய இயக்கத்தில் இறுதியாகச் சிறை சென்றேன். 45-ல் வெளிவந்தேன். அப்போதே சிந்தித்து வைத்திருந்தேன். கடையனுக்கும் கடைத்தேற்றம் அளிக்க, நான் தோட்டி வேலை மேற்கொள்ள வேண்டும் என்று. இந்த முடிவுடன் நான் சிறையிலிருந்து விடுதலை பெற்று வெளிவந்தேன்.

**ஹரிஜனத் தொண்டு**

"இந்த ஆள் ஹரிஜனங்களை மறந்து விட்டான்'' என்று என்னைப் பார்த்துச் சொன்னால் "சர்வோதயத்தில் கடைமனிதனுக்கும் கடைத்தேற்றம் என்று தானே கூறப்பட்டுள்ளது. அரிஜனங்களுக்கு மட்டும் என்று கூறப்படவில்லையே?'' என்பேன். அரிஜனங்களுக்கு மட்டும் தொண்டு செய்வது என்பது எனக்கு உடந்தையல்ல. அரிஜனங்களுக்கு என்று தனியே தொண்டு செய்தால் ஊருக்குள் நுழைந்தவுடன், 'இதோ அரிஜனத் தொண்டன்' என்பார்கள். அரிஜனத் தொண்டன், கதர்த் தொண்டன் என்று கூறு போடப்பட்ட தொண்டர்களால் பயன் இல்லை. ஆயினும் அரிஜனங்களுடன் இரண்டறக் கலந்து விட நான் மூன்று வேலைகள் மேற்கொண்டேன். 1) தோட்டி வேலை, 2) தோல் வேலை மற்றும், 3) நெசவு.

அரிஜனத் தொண்டுடன் கூடிய எனது தொடர்பு நீண்ட காலத்தியது. சபர்மதி ஆசிரமத்திலேயே அதற்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டுவிட்டது. துவக்கத்தில் அங்கு துப்புரவுப் பணிக்காக தோட்டிகள் அமர்த்தப்பட்டிருந்தனர். அவர்களுக்கு ஊதியமும் அளிக்கப்பட்டது. ஒரு தோட்டி உடல் நலம் குன்றியிருந்தால் அவருடைய பையன் அவருக்குப் பதிலாக வேலைக்கு வருவான். ஒரு முறை ஒரு தோட்டியினுடைய பையன், ஒரு சிறுவன் மலம் நிரம்பிய வாளியைத் தூக்கிக் கொண்டு வயல் வெளியில் இருந்த குப்பைக் குழியில் போடுவதற்காகச் சென்று கொண்டிருந்தான். அவனால் அந்த வாளியைத் தூக்க முடியவில்லை. அழ ஆரம்பித்து விட்டான். என் தம்பி பால்கோபாவுக்கு அச்சிறுவன் மீது இரக்கம் உண்டாயிற்று. ஆகவே அவனுக்கு உதவ முன்வந்தான்.

பிறகு பால்கோபா என்னிடம் "நான் தோட்டி வேலை செய்ய விரும்புகிறேன். நீங்கள் சம்மதிப்பீர்களா?'' என்று கேட்டான். "மிகவும் சரி. நீ செய்யலாம். நானும் வருகிறேன்'' என்றேன். அன்று முதல் நானும் அவனுடன் தோட்டி வேலை செய்யத் தொடங்கினேன். சுரேந்திரரும் எங்களுடன் வரத்தொடங்கினார். இவ்வாறு எங்கள் தோட்டி வேலை துவங்கிற்று.

பிராமணச் சிறுவர்கள் தோட்டி வேலை செய்வது வெளியில் ஒரு புரட்சியை ஏற்படுத்திற்று. கஸ்தூர்பா இதைச்சற்றும் விரும்பவில்லை. அவர் காந்திஜியிடம் புகார் செய்தார். காந்திஜியோ "பிராமணர்கள் தோட்டி வேலை செய்கிறார்கள் என்றால் இதை விடச் சிறப்பு வேறு என்ன இருக்க முடியும்?" என்று எங்களைப் பாராட்டி விட்டு கஸ்தூர்பாவுக்கு அதன் பெருமையை எடுத்துக் கூறினார். இவ்வாறு தோட்டி வேலைக்கு ஆசிரமத்தில் மகத்துவம் ஏற்பட்டது. இதில் பால்கோபாவின் பங்கு பெரியது. இதற்கு சுரேந்திரர் துணை நின்றார். அந்தக் காலம் முதல் தோட்டி வேலையுடன் எனக்கு நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது.

*1932*-ல் சிறையிலிருந்து விடுதலை பெற்று ஆசிரமம் திரும்பியதும் வார்தாவுக்கு அருகிலுள்ள நால்வாடி கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கே *95* சதவீதம் அரிஜனங்கள், *5* சதவீதம் மற்றவர்கள். அங்கே தோட்டி வேலையைத் துவக்கினேன். அந்த கிராமத்தில் செத்த மிருகங்களின் தோலை உறிப்பது அவசியமாகிவிட்டது. அந்த வேலையில் பயிற்சி பெறுவதற்காக இரண்டு பிராமணச் சிறுவர்களைத் தேர்வு செய்து அனுப்பினோம். பல சிரமங்களுக்கு அவர்கள் ஆளாக நேரிட்டது. ஆயினும் அவர்கள் அதில் பயிற்சி பெற்றுத் திரும்பினார்கள். பிறகு அவர்கள் இருவரும் தோல் தொழிற்சாலை நடத்தினர்.

*1946*-ல் நான் தோட்டி வேலை செய்யும் சங்கற்பம் செய்து கொண்டேன். அப்போது நான் பவுனார் ஆசிரமத்தில் இருந்தேன். அங்கிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள சுரகாம் என்னும் கிராமத்தில் தோட்டி வேலைப் பொறுப்பை ஏற்றேன். தினமும் காலையில் தோளில் மண்வெட்டி ஒன்றை எடுத்துக்கொண்டு கிளம்புவேன். போகவர ஒன்றரை முதல் இரண்டு மணி நேரம் ஆகும். அங்கே இரண்டு மணி நேரம் தோட்டி வேலை. இவ்வாறு நாள்தோறும் சூரிய நாராயணனைப் போல் அந்த வேலையில் சிரத்தையுடன் ஈடுபட்டு வந்தேன். நடுவில் உடல்நலக் குறைவால் மூன்று நாட்கள் அங்கு செல்ல முடியவில்லை. மற்ற எல்லா நாட்களிலும் தவறாது தோட்டி வேலை செய்து வந்தேன். குளிர், வெப்பம், மழை போன்ற காரணத்தால் எனது தோட்டி வேலை நின்றதில்லை.

ஒரு முறை பலத்த மழை, வழி எங்கும் இடுப்பளவு தண்ணீர், நடுவில் ஒரு வாய்க்கால். வாய்க்காலில் தண்ணீர் கன வேகத்தில் பாய்ந்து கொண்டி-ருந்தது. வாய்க்காலின் இக்கரையில் நின்று கொண்டு அக்கரையிலிருந்து அந்த ஊர்க்காரர் ஒருவரைக் கூவி அழைத்தேன். 'கோவில் சுவாமியிடம் போய்ச் சொல்லு. வாய்க்காலில் தண்ணீர் வெள்ளம் போவதால் தோட்டி வேலைக்கு ஊருக்குள் வரமுடியவில்லை என்று சொல்' என்று அவரிடம் சொன்னேன். 'சரி, சொல்லி விடுகிறேன்' என்றார் அவர். 'என்ன சொல்வாய்?' என்று அவரிடம் திரும்பக் கேட்டேன். 'கோவில் பூசாரியிடம் பாபாஜி வந்திருந்தார் என்று சொல்லிவிடுகிறேன்' என்றார். 'தவறு' கோவில் பூசாரியிடம் அல்ல, கோவில் சுவாமியிடமே கூற வேண்டும். ஊர்த்தோட்டி தோட்டி வேலைக்கு வந்தான். வாய்க்காலில் வெள்ளம் போவதால் ஊருக்குள் வரமுடியவில்லை என்று சொல்ல வேண்டும்" என்று அவரிடம் சொல்லிவிட்டு ஆசிரமம் திரும்பினேன்.

இப்படி நான் ஏன் செய்தேன்? தோட்டி வேலையை ஒரு வழிபாடாக செய்து வந்ததால். 'எவ்வளவு காலம் இதைச் செய்வீர்கள்' என்று சிலர் கேட்டனர். '20 ஆண்டுகள் செய்வேன்' என்று கூறினேன். 20 ஆண்டுகளில் ஒரு தலைமுறையே மாறும். இது மனப்பாங்கை மாற்றும் விஷயம். இவ்வாறு ஒன்றே முக்கால் ஆண்டு தோட்டி வேலை நடைபெற்றது.

அக்காலத்தில் காலையில் எவரேனும் என்னுடன் பேச வந்தால் அவரிடம் காலை 11 மணிக்கு முன்பு நேரமில்லை என்று கூறிவிடுவேன். ஏனெனில் 11 மணி வரை எனக்கு தோட்டி வேலைக்கான நேரம். அது எனது வழிபாடாகவே இருந்தது. மக்கள் அதை ஒரு இழிவான தொழில் என்று கருதி வந்தார்கள். எனக்கோ அது ஒரு வழிபாடு. ஆகவே அதனை நாள் தோறும் தவறாது செய்து வந்தேன்.

தோட்டி வேலையுடன் பல விஷயங்களும் கற்பித்து வந்தேன். குறிப்பாக குழந்தைகளுக்கு கற்பித்து வந்தேன். குழந்தைகள் என்னிடம் வந்து, "பாபா, இன்று நாங்கள் மலத்தின் மீது மண்போட்டு மூடினோம்" என்பார்கள். நான் அதைப் பார்க்கப் போவேன்.

ஒரு முறை ஊரில் விநாயகர் உற்சவம் வந்தது. அன்று ஊர் முழுவதும் தூய்மையாக இருந்தது. எனக்கு வேலையே இல்லை. ஏனெனில் அதற்கு முன்தினம் ஊர்மக்கள், "நாளை புனித நாள். எனவே நாம் எல்லோரும் தோட்டி வேலை செய்வோம்" என்று தீர்மானித்து, ஊர் முழுவதையும் அவர்களே தூய்மை செய்தனர். இதைப் பார்த்தவுடன் புரட்சி வந்துவிட்டது என்று எனக்குத் தோன்றிற்று. காந்திஜி இருந்திருந்தால் இன்றும்கூட நான் சுரகாமிலேயே தங்கி தோட்டி வேலை செய்து கொண்டிருந்திருப்பேன்.

**பசு வழிபாடு**

இவ்வாறு பல நிர்மாணத் திட்டங்களை நான் மேற்கொண்டேன். அவற்றை என் சக்திக்கேற்ப செய்து கொண்டும் வந்தேன். ஆனால் கோ சேவை அளவுக்கு ஆன்ம சக்திக்கு தேவையான தொண்டு வேறு எதுவும் இல்லை. இது அன்பும் அறிவும் இணைந்து செய்ய வேண்டிய வேலை. அன்பு பெருகினால் வேலையும் விரிவடையும், ஆவினம் தழைக்கும். மனிதனின் அன்பின்மீதே ஆவினத்தின் முன்னேற்றம் சார்ந்துள்ளது. எனவே ஒரு கோசேவகன் பசுவைப் போன்றே எளிமை பூணவேண்டும். எந்த கோமாதாவை அவன் பூசிக்கிறானோ அந்த கோமாதாவின் குணங்களை அவன் ஏற்றுக்கொள்ள வேண்டும். பசுவின் மீது எனக்குள்ள உணர்வின் அடிப்படையிலேயே நான் வழிபாடு என்ற சொல்லைப் பயன்படுத்தி யிருக்கிறேன். அதை பசு வளர்ப்பு என்றோ, கோ சேவை என்றோ நான் கொள்ளவில்லை. அது பசு வழிபாடு.

ஆசிரமத்துக்குப் பால் தேவைப்பட்டது. அதற்காக பசு வளர்ப்பு ஆரம்பிக்கப்பட்டது. அப்போதிருந்து இன்றுவரை இந்த வேலை நடந்து வருகிறது. அதற்கு முன்பே பால் அருந்துவதை விடுத்து பசுவுக்குத் தொண்டாற்றும் நோக்கத்துடன் நான் மூன்று முறை பாலை விட்டுவிட்டுப்

பார்த்தேன். ஒருமுறை இரண்டு ஆண்டுகள். இரண்டாவது முறை மூன்று ஆண்டுகள். மூன்றாம் முறை இரண்டு ஆண்டுகள். மொத்தம் ஏழு ஆண்டுகள். அதில் வெற்றி கிடைக்கவில்லை. கடைசியில் அந்த முயற்சியைக் கைவிட்டேன்.

அதையே வாழ்வின் முக்கிய லட்சியமாகக் கொண்டு முயன்றால் வெற்றி பெற்றிருக்கலாம். ஆனால் எனக்கோ பல ஆசிரம வேலைகளில் அதுவும் ஒன்று. எனவே அது வெற்றி பெறவில்லை. உடல் மிக பலவீனமாயிற்று. காந்திஜிக்கு இது தெரியவந்தது. அவர் இது குறித்து என்னிடம் பேசினார். "இதற்கு பிரத்யேகமாக முயற்சி செய்ய வேண்டும். அதை மாத்திரமே உனது லட்சியமாகக் கொண்டாயானால் அது வேறு விஷயம். ஆனால் இன்று நம்முன் பல முக்கிய வேலைகள் உள்ளன. அவற்றில் நாம் ஈடுபட்டாக வேண்டும்" என்றார். நானும் பால் அருந்த ஆரம்பித்தேன். அத்துடன் காந்திஜியுடன் ஆவின உபாசனை பற்றி யோசிக்க ஆரம்பித்தேன்.

நாங்கள் சுரகாமில் வேலை செய்து வந்தோம். அங்கு நாங்கள் ஒரு செக்கு நடத்தி வந்தோம். எண்ணெயை கிராமத்து மக்களுக்கு அளித்து வந்தோம். ஒரு செக்கினால் கிராமத்துக்குத் தேவையான எண்ணெய் தர முடியவில்லை. எனவே இரண்டு செக்கு அமைத்து வேலை செய்தோம். எண்ணெயைப் பொறுத்த வரை கிராம சுயதேவை பூர்த்தியாயிற்று. ஆனால் பிண்ணாக்கை என்ன செய்வது என்ற கேள்வி எழுந்தது. ஊரில் பிண்ணாக்கு வாங்குவோர் இல்லை. ஆனால் பிண்ணாக்குக்கு ஏற்ப பசுக்கள் வளர்க்கத் திட்டமிட்டோம். இவ்வாறு எங்கள் கோசேவை செக்குடன் இணைக்கப்பட்டது. இதிலிருந்து பெற்ற அனுபவம் என்னவெனில், கதர், செக்கு, பசு இம்மூன்றையும் இணைத்து செயல்பட்டால் நம் திட்டம் தோல்வியுறாது என்பதாகும். மாறாக நமது பணி பொருள் செறிந்ததாகவும், வெற்றிகரமாகவும் இருக்கும் என்பது எனது அனுபவம்.

நான் ஒருமுறை பவுனார் வந்தபோது நான்கு மாதங்கள் தங்கினேன். கிராமத்தில் நிறைய பசுக்கள் இருந்தன. அவை தரும் பாலிலிருந்து வெண்ணெய் தயாரித்து விற்பனைக்கு வார்தாவுக்குப் போனார்கள். வார்தா வியாபாரிகள் ஒரு விலையை நிர்ணயிப்பார்கள். அந்த விலைக்குத்தான் அவர்கள் வாங்குவார்கள். அவர்களிடம் வெண்ணெய் விற்றுவிட்டு கிராமவாசிகள் துணிமணி வாங்கி வருவார்கள். இப்படியாக வெண்ணெய் விற்ற பணமும் அந்த வியாபாரிகளிடமே போய்ச் சேரும். வியாபாரிகள் வெண்ணெயை மலிவான விலைக்கு வாங்கி அதிக விலைக்கு விற்பார்கள். இவ்வாறாக எல்லா வகையிலும் பணம் வியாபாரிகள் கையில் குவிய வேண்டியதாகி விடுகிறது.

இதைப் பார்த்தவுடன், 'வெண்ணெயை உண்பீர் துணியையும் நெய்வீர்' என்கிற கோஷம் என் மனதில் உதித்தது. உண்ணவேண்டிய வெண்ணெயை காசுக்கு விற்பது சரியல்ல. "மற்றவர்களைச் சார்ந்திருப் போருக்கு கனவிலும் இன்பம் இல்லை" என்று துளசிதாசர் கூறியிருக்கிறார். ஆகவேதான் இந்த மந்திரம் என் மனதில் உதித்தது.

**அமைதி வழிபாடு**

காந்திஜி மறைவுக்குப் பின்னர் 1948-ல் சேவா கிராமத்தில் காந்தி இயக்கத்தினர் கூடினர். என் கடமை என்ன என்ற சிந்தனை என் மனதில் எழுந்தது. நான் இந்த இடத்தை விட்டுக் கிளம்ப வேண்டும் என்று தோன்றிற்று. சேவா கிராமத்தில் நடைபெற்ற கூட்டத்தின் சமயம் பண்டித நேருவின் நிலைமையைப் பார்த்தேன். அவரது வேண்டுகோளை ஏற்று அகதிகளின் தொண்டுக்காக ஆறு மாத காலம் ஒதுக்குவதென முடிவு செய்தேன். அக்கூட்டத்தில் நிர்மாண ஊழியர்கள் அரசியல் தலைவர்களிடம், குறிப்பாக நேருஜியிடம் நிர்மாணப் பணிகளுக்காக அரசு உதவியை நாடினர். நான் நேருஜியிடம் "உங்களிடம் நான் எந்த உதவியையும் எதிர்பார்க்கவில்லை, நான் உங்களுக்கு ஏதாவது உதவ முடியுமானால் மகிழ்ச்சி அடைவேன்" என்று சொன்னேன்.

அதனையடுத்து நான் சில நண்பர்களுடன் அகதிகள் மறுவாழ்வுத் தொண்டில் ஈடுபட்டேன். ஆறு மாதங்கள் ஆற்றிய அந்த அனுபவத்தை முழுமையாக விவரிக்க வேண்டுமானால் ஒரு நூலே எழுத வேண்டியிருக்கும். நான் அகதிகள் முகாமில் தொடர்பு அதிகாரியாகப் பணி செய்தேன். நம் மொழியில் சொல்வதானால் அது நாரத முனிவரின் வேலை. இங்கேயுள்ள செய்தியை அங்கே சேர்ப்பிக்க வேண்டும். அங்கேயுள்ள செய்தியை இங்கே சேர்ப்பிக்க வேண்டும். நேருஜி சொல்லுவது ஒன்றாகவும், அதை யார் வழியாகச் செயலாற்ற வேண்டுமோ அவர்கள் சொல்லுவது மற்றொன்றாகவும் இருக்கக் கண்டேன். நான் ஏதாவது சொன்னால் நேருஜி "எனக்கு இது ஒப்புதலானதுதான். இது தொடர்பாக நான் ஏற்கனவே மூன்று மாதங்களுக்கு முன்னரே உத்தரவு போட்டுவிட்டேன்" என்பார். ஆனால் அது நடைமுறைக்கு வருவதில்லை.

அந்நாட்களில் நான் மிகவும் சிரமப்பட்டு வேலை செய்ய வேண்டியிருந்தது. ஆனால் நான் எதிர்பார்த்த வேலை நடைபெறவில்லை. எனவே நான் ஆறு மாதங்கள் கழித்து அங்கிருந்து கிளம்பிவிட்டேன்.

அகதிகள் மறு வாழ்வுக்காக நான் தில்லியிலிருந்து அரியானா மற்றும் ராஜஸ்தான் சென்றேன். அங்கேயும் என் குறிக்கோள் நிறைவேறுவதாக எனக்குத் தோன்றவில்லை. அகதிகள் மறுவாழ்வுப் பணியில் அகிம்சையின் ஆற்றல் வெளிப்பட முடியும் என்று நான் நினைத்தேன். அகிம்சைப் புரட்சியின், சர்வோதயத்தின் நடைமுறைத் துவக்கமாக ஏதாவது ஒரு செயல்பாடு கையில் கிடைக்கும் என்று நினைத்தேன். அவ்வாறு கிடைத்தால் கதர் கிராமத் தொழில் முன்னேறும். இல்லையானால் கதரையோ கிராமத் தொழிலையோ யாரும் சீண்டமாட்டார்கள். அது தொடர்பாக நான் எதிர்பார்த்த ஒன்றும் கிட்டவில்லை.

அந்நாட்களில் இந்து முஸ்லீம் கலவரங்கள் நடைபெற்று வந்தன. ஆஜ்மீரில் முஸ்லீம்களுக்கு அபாயம் போலத் தோன்றியது. எனவே நான் அங்கு ஏழு நாட்கள் தங்கினேன். நான் தினமும் ஆஜ்மீர் தர்காவுக்குச் சென்று வந்தேன். அது இந்தியாவின் மெக்கா என்று போற்றப்படுகிற புனித

ஸ்தலம். முஸ்லீம்கள் என்னை அன்புடன் வரவேற்றனர். இந்து முஸ்லீம் அனைவரிடமும் இவ்வாறு சண்டையிடுவது சரியல்ல என்று சொன்னேன். இருசாராரும் நான் கூறியதை ஏற்றனர். பள்ளிவாசலிலேயே அமர்ந்து பிரார்த்தனை செய்தனர்.

இரண்டாம் நாள் தொழுகையின் சமயம் நான் மீண்டும் அங்கே சென்றேன். பக்தர்கள் அனைவரும் மிகுந்த அமைதியுடன் அமர்ந்திருந்தனர். அவர்களுக்கு என்மீது மிகுந்த அன்பும் நம்பிக்கையும் இருந்தது. அவர்கள் ஒவ்வொருவராக வந்து என் கைகளை முத்தமிட்டனர். இது சுமார் முக்கால் மணி நேரம் நடந்தது.

அங்கே ஒரு பெண்கூட இல்லை. கடைசியில் என்னைப் பேசுமாறு கேட்டுக்கொண்டபோது "உங்களுடைய அமைதியான வழிபாட்டைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் இறை வழிபாட்டில்கூட ஆண், பெண் வேறுபாடு ஏன்? முஸ்லீம்கள் தங்கள் பழக்க வழக்கங்களில் இந்த அளவுக்கேனும் மாற்றம் கொண்டு வர வேண்டும்" என்று சொன்னேன்.

**காஞ்சன் முக்தி**

**(பணத்தில் இருந்து விடுதலை)**

*1935-36* வாக்கில் எனக்கு ரூபாய், அணா பைசா மீது பற்று அற்று விட்டது. இது அதற்கும் முன்பே இருந்து வந்ததுதான். என் சொந்த வாழ்வில் பணத்தின் மீதுள்ள பற்றின்மையை அமல்படுத்தியே வந்தேன். பொது நிறுவனங்களும் கூட "நிலையாப் பொருள் சேமியாமை" என்ற விரதத்தைப் பயில வேண்டும்; பணத்தின் ஆதிக்கம் ஒழிந்தே ஆக வேண்டும்; உடலுழைப்பே பிரதானமாக வேண்டும் என்ற பார்வை என்னுள் தோன்ற ஆரம்பித்துவிட்டது. இதனை ஏற்பவர்கள் இப்பரிசோதனையை மேற்கொள்ளலாம் என்றேன். பரிசோதனையை மேற்கொள்ளுவது என்றால் தோல்வியும் வரலாம் என்பதல்ல. அது வெற்றிகரமாகச் செயல்பட வேண்டும் என்பது அர்த்தம். அதற்காக வாழ்க்கையை மாற்றி அமைக்க வேண்டியிருக்கிறது.

காந்திஜிக்குப் பிறகு நாடு முழுவதிலும் சீரிய வாழ்க்கைக் குறிக்கோளுடன் வேலை செய்யும் தொண்டர்கள் குழு ஒன்று உருவாக வேண்டும். அதன் வழியாக சமுதாய நற்பணி நடைபெற வேண்டும். இவ்வாறு எண்ணமிட்டு வந்தேன். ஆனால் நடந்து கொண்டிருந்தவை மகிழ்ச்சி தருவதாக இல்லை. ஒளியினால்தான் இருள் அகல முடியும். எனவே நான் வெறுமனே 'நன்றாக இல்லை நன்றாக இல்லை என்று சொல்லிக்கொண்டு உட்கார்ந்திருப்பதால் இருள் அகன்று விடாது. ஒளியை ஆராதிப்பதே அதற்குரிய நிவாரணம். எனக்கு நிறுவனங்கள் பிடிப்பதில்லை என்றாலும் ஒழுங்குக் கட்டுப்பாட்டை விரும்புவேன். தனிநபர் சுதந்திரத்தையும் விரும்புவேன். ஆனால் தான்தோற்றித்தனமான போக்கை நான் விரும்புவ தில்லை. கொம்பில்லா மாடுகளாக, கூலிக்கு வேலை செய்யும் படித்தவர்க்கம் இப்பரந்த திட்டத்தில் பெரும் பங்கு வகித்து வந்தனர்.

பவுனாரில் நான் தொழிலாளர்களுடன் அமர்ந்து உரையாடுவேன். நான் அவர்களுக்கு கூலியை ஒன்றுதிரட்டி அதனைத் தங்களுக்குள் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளும்படி ஆலோசனை கூறினேன். ஆச்சரியப்படத்தக்க விதத்தில் அதற்கு அனைவரும் ஒத்துக்கொண்டனர். "எங்களுக்கு இதில் ஆட்சேபணை இல்லை, செய்யலாம்" என்றனர். ஆனால் அந்த யோசனையை நேரடியாக எப்படி அமல்படுத்துவது? நான் என்னைத் தனிமைப்படுத்திக் கொள்ளுவதா? நானும் அவர்களுடன் கலந்து கொண்டால் கூட்டாகச் சேர்ந்து அதை அமல்படுத்தலாம். நான் எனது நண்பர்களிடம், 'நீங்கள் உங்களது இயக்க வேலைகளை ஒரு புறம் ஒதுக்கி வைத்துவிட்டு, இந்த உண்மையான வாழ்க்கை இயலில் கவனம் செலுத்த வேண்டும்' என்று கூறினேன்.

கிஷோரிலால் பாய் ஆசிரியர்களுக்குக் குறைந்தது இருபத்தைந்து ரூபாய் சம்பளம் கிடைத்தாக வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார். பவுனாரில் ஆசிரியர்களுக்கு பதினாறு ரூபாய் சம்பளம். அதனால் தொழிலாளர்களுக்கு அவர்கள் மீது ஆற்றாமை. அப்போது ஒருவர் பத்து மணி நேரம் நூற்றாலும் அதிகபட்சம் நான்கணாதான் கூலியாகக் கிடைத்து வந்தது. என் செலவோ குறைந்தது ஆறு அணா. நான் தொழிலாளர்களுடன் ஒன்றுவது எவ்வாறு? உழைப்புக்கு முழுக் 'கூலி தருவதே உழைப்பின் மதிப்பை உயர்த்துவதாகிறது.

1949-ல் ஒரு முறை நான்கைந்து நாட்கள் பெண்கள் ஆசிரமத்தில் தங்கியிருந்தேன். அங்கிருந்து பீஹார் போவதாகத் திட்டம். ஆனால் அச்சமயம் உடல் குன்றியது. வயிற்றுவலி. ஆகவே பீஹார் பயணம் ஒத்தி வைக்கப்பட்டது. நான் பவுனார் திரும்பினேன். திரும்பியவுடன் 'இன்றைய சமுதாயத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளுக்கும் தொல்லைகளுக்கும் ஒரு முக்கியக் காரணம் பணம்' என்று சொன்னேன். "பணம் நமது சமுதாய வாழ்க்கையை மாசுபடுத்துகிறது, ஆகவே பணத்தை வாழ்க்கையிலிருந்து துண்டித்துவிட வேண்டும். நாம் தற்சார்பை மேற்கொள்ள வேண்டும். பெரியோர்கள் ஆன்மீக வளர்ச்சிக்கு பொன்னாசை கூடாது என்று விலக்கி வைத்திருக்கிறார்கள். இன்று நமது அன்றாட வாழ்க்கையைத் தூய்மைப்படுத்துவதற்கும் கூட பணத்தின் மீதுள்ள பற்றை அறுப்பது அவசியம். ஆகவே இப்போது நாம் காஞ்சன் முக்தி விரதத்தை அனுஷ்டிப்போம்" என்றேன்.

முதலில் கறிகாய் தேவையைப் பூர்த்தி செய்வதில் தற்சார்பு துவங்கிற்று. 1950 ஜனவரி முதல் தேதியிலிருந்து ஆசிரமத்தில் கறிகாய்கள் காசு கொடுத்து வாங்குவது கூடாது என்று சொல்லிவிட்டேன். அப்போது என்னிடம் சில படித்த இளைஞர்கள் சேர்ந்திருந்தனர். எல்லோரும் இதனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு ஆசிரமத்தில் கறிகாய் பயிரிட ஆரம்பித்தோம்.

செடிகளுக்கு நீர் பாய்ச்ச கிணற்றிலிருந்து நீர் இறைக்க வேண்டியிருந்தது. அப்போது கிணற்றில் நீர் இறைக்க பாரசிக உருளை பொருத்தியிருந்தார்கள். நாங்களே அதை இயக்கி வந்தோம். உருளையில் மார்பளவு

உயரத்தில் எட்டுக் கைப்பிடிகள் இருந்தன. ஒரு கைப்பிடிக்கு இருவர் வீதம் எல்லோரும் சேர்ந்து உருளையை இயக்குவோம். உருளையை இயக்கிய-வண்ணம் பிரார்த்தனையும் செய்வோம். கீதாயி பாராயணமும் நடக்கும். கீதாயின் இருநூறு சுலோகங்கள் முடிந்தால் எழுநூறு முறை உருளை சுழன்றுள்ளது என்றாகும். ஒரு முறை ஜெயப்பிரகாஷ் நாராயணன் என்னைக் காண வந்தார். அப்போது நாங்கள் உருளையை இயக்கிக் கொண்டிருந்தோம். அவரும் எங்களோடு அதில் ஈடுபட்டார். அதனால் அவர் மிகுந்த மன ஊக்கம் பெற்றுத் திருப்பினார். 'ஒளிக். கிரணங்களை நான் அங்கு கண்டேன் என்று அவர் கூறினார்.

### ரிஷி விவசாயம்

சுயதேவைக்காக நாங்கள் எடுத்துக்கொண்டிருந்த நிலம் எங்கள் தேவைக்குப் போதிய விளைச்சலைத் தரவில்லை. எனவே மேலும் சிறிது அதிகப்படியான நிலத்தை எடுத்துக் கொண்டோம். தண்ணீர் இல்லை. ஒரு நாள் நான் மண்வெட்டி கடப்பாறையுடன் அந்த நிலத்தில் கிணறு தோண்ட ஆரம்பித்தேன். மற்றவர்களும் என்னுடன் அந்த வேலையில் வந்து சேர்ந்து கொண்டனர். அதில் பங்கு பெற்ற இளைஞர்கள் கட்டுமஸ்தான உடல் வளம் வாய்க்கப் பெற்றவர்கள். என்னை விட இருமடங்கு அதிக சக்தி-யுடையவர்கள். ஆனால் அவர்கள் நான் செய்த வேலையில் பாதி அளவே செய்வதைக் கண்டேன். ஏனெனில் எனது வேலை அறிவியல் பூர்வமாக நடைபெறுவது வழக்கம். அமைதியாக சிறிது நேரம் வேலை செய்துவிட்டு, இடையில் சிறிது நேரம் ஓய்வெடுப்பேன். ஆனால் அந்த இளைஞர்களோ வேக வேகமாக கடப்பாறை போடுவார்கள். பின்னர் களைத்துப் போய்விடுவார்கள். கடைசியில் பார்த்தால் அவர்கள் என்னைவிட அதிக நேரம் ஓய்வெடுக்க வேண்டியவர்களாக இருப்பார்கள். கடப்பாறை போடும்போது கூட நான் அறிவியல் முறைப்படி போடுவேன். எனது ஒவ்வொரு செயலிலும் கணிதம் இருக்கும். நான் இறக்கும்போது கூட கணக்குப்படிதான் இறப்பேன் என்பது நம்பிக்கை.

கிணற்றிலிருந்து வரும் தண்ணீரை வயலுக்குப் பாய்ச்சுவதற்காக ஒரு வாய்க்கால் வெட்டியிருந்தோம். நாங்கள் அந்த வேலைக்குப் புதிது. என்னுடன் வேலை செய்தவர்கள் அனைவரும் கல்லூரி மாணவர்கள். உடலுழைப்பில் விருப்பம் இருந்ததேயன்றி அது பற்றிய அறிவு இல்லை. நாங்கள் எல்லோரும் சேர்ந்து வாய்க்கால் வெட்டி வயலுக்கு விட்ட தண்ணீர் குறிப்பிட்ட இடத்துக்குப் போய்ச் சேரவில்லை. ஏன் இப்படி ஆயிற்று என்பதும் எங்களுக்குப் புரியவில்லை. அனுபவத்திற்குப் பின்னர்தான் அது தெரிய வந்தது. நிலம் இரண்டு அங்குலம் உயரத்திலும், வாய்க்கால் கீழேயும் இருப்பதைக் கண்டுபிடித்தோம். அதனால் வாய்க்காலே தண்ணீர் முழுவதையும் குடித்துவிடுகிறது என்பது தெரிய வந்தது. அதனால் மிகச் சிறிய அளவே தண்ணீர் வயலுக்குப் போய்ச்சேருகிறது. இந்திய அரசாங்கத்தின் வளர்ச்சித் திட்டங்களும் இந்த வகை சார்ந்தவையே.

பரம்தாம் ஆசிரமத்தில் நாங்கள் மேற்கொண்டிருந்த இந்த விவசாயம் அக்கம் பக்கத்திலுள்ள பலருடைய கவனத்தை ஈர்த்தது. ஒருமுறை விவசாயத் தொண்டர்கள் முகாம் ஒன்று நடந்தது. அவர்கள் யாவரும்

தேர்ந்த விவசாயிகள். விவசாயத்தைப் பற்றி ஆழ்ந்த அறிவுடையவர்கள். அவர்களுக்கு நாங்கள் மேற்கொண்டிருந்த விவசாயம் மிகவும் பிடித்துப்-போயிற்று. தங்கள் வயலிலும் இந்த முறையைப் பயன்படுத்துவோம் என்றனர். இந்த விவசாய முறைக்கு "ரிஷி விவசாயம்" என்று பெயரிட்டிருந்தோம்.

ரிஷி விவசாய யோசனையை நான் சொன்னபோது எவருக்கும் முதலில் அவ்வளவு நம்பிக்கை உண்டாகவில்லை. மாடுகளின் உதவியின்றி கையினால் வேலை செய்வதில் அதிகமாக உழைக்க வேண்டியிருக்கும் என்று ஒரு சந்தேகம். அது மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒன்று என்று அவர்கள் கருதினார்கள். விளைச்சலைப் பற்றியும் சந்தேகம் இருந்தது. இது கட்டுபடி-யாகாது என்றும் விளைச்சல் குறைவாக இருக்கும் என்றும் அனைவரும் கருதினார்கள். ஆனால் கொள்கை அளவில் எனது சோதனையை ஏற்று இளைஞர்கள் வேலையை மேற்கொண்டார்கள். இரண்டு ஆண்டுகள் இந்தப்பரிசோதனை செய்த பின்னர் எல்லோரும் தங்கள் முடிவை முன்வைத்தனர்.

ஒன்றேகால் ஏக்கரில் விவசாயம் நடைபெற்றது. 1140 மணி நேரம் வேலை. தினமும் நான்கு மணி நேரம். ஒரு மனிதர் 285 நாட்களில் செய்யும் வேலை. ஒரு வருடத்தில் இத்தனை நாட்கள் வேலை செய்யலாம் என்று ஒரு கணக்கு. இந்த கணக்கின்படி ஒரு ஆள் தினமும் எட்டு மணி நேரம் வேலை செய்து ஒரு வருடத்தில் இரண்டரை ஏக்கர் விவசாயத்தை உடலுழைப்பினால் மட்டும் தாராளமாகச் செய்ய முடியும். தாராளமாக என்று ஏன் சொன்னேன் என்றால் 365 நாட்களில் 80 நாட்கள் விடுமுறை என்பதால்.

நிலத்தைக் கொத்துவது மட்டுமே சிரமம். ஒன்றேகால் ஏக்கரைக் கொத்த 338 மணி நேரம் பிடிக்கிறது. இரண்டரை ஏக்கரைக் கொத்த இருமடங்கு, அதாவது 676 மணி நேரம் உழைத்தாக வேண்டும். இந்தப் பரிசோதனையில் ஈடுபட்டவர்கள் கொத்தும் அனுபவம் இல்லாத உயர்நிலைப் பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்கள். எனவே இவர்களின் கொத்தும் வேகம் மிகவும் குறைவு என்றே கொள்ள வேண்டும். கிராமத்தில் உழைப்பவர்களைக் கணக்கில் கொண்டு பார்த்தால் இதில் நூறுமணி நேரத்தை நிச்சயம் குறைத்துக்கொள்ளலாம். அதாவது 575 மணி நேரம். அதாவது தினம் இரண்டு மணி நேரம் கொத்தினால் போதும். காலையில் ஒரு மணி நேரம். மாலையில் ஒரு மணி நேரம் கொத்துவது என்று வைத்துக்கொண்டால் உடலுக்கு அது பயன் தரும் பயிற்சியாகவும் ஆகும்.

நான் வருடக் கணக்காகக் கொத்தியிருக்கிறேன். அதனால் என் உடலுக்கு நல்ல பயன் கிடைத்திருக்கிறது. நான் அவ்வாறு கொத்தி வந்த நாட்களில் ஒரு பயில்வான்போல் என் உடம்பு இருந்ததைப் பலர் அறிவார்கள். கொத்துவதற்கு எவரும் அஞ்சவேண்டாம் என்பதற்காக இதைச் சொல்லுகிறேன். உடல் நலம் மட்டுமல்லாமல் அதிலிருந்து ஆன்ம பலமும் தனி அனுபவமாகும். விரிந்து பரந்த வானம், திறந்த வெளிக் காற்று, சூரிய ஒளியின் ஸ்பரிசம், நிமிர்ந்த உடல், இவ்வாறு இது ஒரு நான்கு முனை யோகப் பயிற்சியாகும்.

இன்னொரு செய்தி. ஒரு மனிதருக்கு இரண்டரை ஏக்கர் என்று கணக்கிட்டோம். ஆனால் இந்தியாவில் இவ்வளவு நிலம் எங்கே இருக்கிறது? எனவே நம் வேலை இன்னும் எளிது. உற்பத்தி இல்லாத உடற் பயிற்சிக் கூடங்களுக்குப் பதிலாக நிலத்தில் கொத்துவதை மேற்கொண்டால் எல்லா வகையிலும் நலம் விளையும் என்பது எனது கருத்து.

ரிஷி விவசாயம் தொடர்பான பரிசோதனையில் உற்பத்தியின் கண்ணோட்டத்தில் பார்த்தாலும் அதன் பலன்கள் சாமான்யமானவை அல்ல. ஒன்றேகால் ஏக்கர் நிலப் பரப்பில் விவசாயச் செலவு போக 285 ரூபாய் கிடைத்தது. (இது 1953ஆம் ஆண்டின் மார்க்கட் நிலவரப்படி). அதாவது மணிக்கு நான்கணா ஊதியம் என்ற கணக்கின்படி. பரந்தாம் ஆசிரமத்துக்கு அருகில் விவசாய வேலைக்கு அமர்த்தப்படும் ஆண்களுக்கு எட்டு மணி நேர வேலைக்கு சுமார் 13 அணாவும், பெண்களுக்கு சுமார் 7 அணாவும் கொடுக்கப்பட்டு வந்தது. இரண்டின் சராசரி 10 அணா. அதாவது மணிக்கு ஒன்றே கால் அணா. அதைவிட மூன்று மடங்குக்கு மேல் ரிஷி விவசாயத்தில் கிடைத்திருக்கிறது. இன்னொரு பார்வையில் இதை மூன்று மடங்கு என்று கொள்ள முடியாது. ஏனெனில் பரந்தாமில் வேலை செய்பவர்கள் ஒரு ரகம். அவர்களே உழைப்பாளர்களும் எஜமான் களும் ஆவர். தமது கூலியாட்களுக்குக் கொடுத்ததைவிட அதிகமாக 1953-ல் அவர்கள் சம்பாதித்திருக்க முடியாது.

எனவே எஜமான், உழைப்பாளி என்ற இரண்டையும் ஒன்றாக்கினால் கூலியும் இரண்டு மடங்காகலாம். அதாவது மாட்டு விவசாயத்தை விட ஒன்றரை மடங்கு அதிகமாக ரிஷி விவசாயத்தில் கிடைத்திருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த வேலையை மேற்கொண்டவர்கள் விவசாயத்தை நன்கு அறிந்தவர்கள் என்று கூற முடியாது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். இவர்கள் பாடுபட்ட அந்த நிலமும் இரண்டாம் தரமானது மாத்திரமல்ல, அதைவிட சற்று குறைந்த வளமுள்ளதுதான். கற்களும், பாறையும், சிலைகளும் கிடைத்த மேட்டுப்பாங்கான நிலம்தான். மழையை மட்டுமே நம்பிய விவசாயம். நீர்ப்பாசன வசதி இருந்தால் ரிஷி விவசாயம் மேலும் நல்ல விளைச்சலைத் தந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. மனிதன் உடலால் உழைக்கும்போது எவ்வளவு நிச்சிந்தையுடையவனாகி விடுகிறான் என்பது கவனிக்கத்தக்கது.

"உடலால் மட்டும் உழைப்பவன் துன்பம் அடைவதில்லை" என்று கீதையில் பகவான் கூறியிருக்கிறார் அல்லவா?

ரிஷி விவசாயமும் மாட்டு விவசாயமும் ஒன்றுக்கொன்று முரண்படக் காரணமில்லை. பரந்தாம் ஆசிரமத்தில் இவ்விரண்டுமே பயன்பட்டு வருகின்றன. அதுமட்டுமல்ல. நதியிலிருந்து நீர் இறைக்க இஞ்சினும் பயன் படுத்துவது எனக்கு உடன்பாடில்லை. ஆனால் குறிப்பிட்ட சூழ்நிலையில் நதி நீரை முழுமையாகப் பயன்படுத்திக்கொள்ள இஞ்சினையும் நான் ஏற்கிறேன்.

"எங்கும் விரோதமின்மை" என்பது சமரச சூத்திரம். மாடு நமது குடும்பத்தில் பிரிக்க முடியாத ஒரு அங்கம். இதைக் கருத்தில் கொண்டு அதற்கு இடையூறு ஏற்படாவண்ணம் ரிஷி விவசாயத்தையும், கட்டுப்படுத்தப்பட்ட அளவில் நவீன கருவிகள் உபயோகத்தையும் கைக் கொள்ள வேண்டும். சுருங்கக் கூறின் பரந்தாம் ஆசிரமத்தில் ரிஷி விவசாயம், மாட்டு விவசாயம், இஞ்சின் விவசாயம் ஆகிய இம்மூன்றுமே ஒருங்கே நடைபெறுகின்றன. இது ஒரு துணிகரமான முயற்சி ஆகும்.

இதில் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு நிவாரணமும் இருக்கிறது. வசதிகள் அற்ற விவசாயிகளுக்கு ஓரளவு இதில் நிவாரணம் உள்ளது. மேலும் இதில் ஆற்ற வேண்டிய விவசாயப் பரிசோதனைக்கு வாய்ப்பு உள்ளது. நயிதாலிம் என்னும் ஆதாரக் கல்விக்கு இது ஒரு வரப்பிரசாதம். தவிர இதில் அகிம்சையின் ஒரு நெடுந்தூர தொலைநோக்கு உள்ளது.

மக்கள் தொகை பெருகிக்கொண்டே போகும் நிலையில் நாளுக்கு நாள் தனி நபர் சராசரி நிலம் குறைந்து கொண்டேதான் இருக்கும். ஜப்பான் போன்ற நாடுகளில் இதனாலேயே கைவிவசாயம் நடக்கிறது. "அசைவ உணவினருக்கு ஒன்றரை ஏக்கர், சைவ உணவினருக்கு முக்கால் ஏக்கர் போதும்" என்கிற உண்மை மெல்ல மெல்ல மனிதனின் கவனத்தைக் கவரும். (சைவ உணவினருக்கு ஒரு ஏக்கர், அசைவ உணவினருக்கு நாலு ஏக்கர் என்ற கணக்கும் உண்டு).

அதன் பலனாக புலால் உண்ணுதல் நீங்கும். பிறகு பாலுணவும் குறையும். அதனால் ஆவினத்துக்கு விடுதலை கிடைக்கும். இன்று ஒரு பக்கம் நாம் ஆவினத்தைப் பாதுகாக்க வேண்டும். மறுபக்கம் ரிஷி விவசாயத்தைப் பயன்படுத்த வேண்டும்.

உலகில் இரு சக்திகள் போட்டியிடப் போகின்றன என்றால் அவை கம்யூனிசமும் சர்வோதயமுமே ஆகும். உலகில் செயல்பட்டு வரும் மற்றவை நெடுநாட்கள் நீடிக்க மாட்டா. கம்யூனிசத்துக்கும் சர்வோதயத்துக்கும் இடையே ஒற்றுமையும் அதிகம். அதே போல் வேற்றுமையும் அதிகம். கருத்தை நிரூபித்துக் காட்டுவதே இன்று காலத்தின் தேவை. பண ஆதிக்கமற்ற, அரசு ஆதிக்கமற்ற சமுதாயம் அமைய முடியும் என்று காட்டியாக வேண்டும். சிறு அளவிலேனும் இதற்கு நாம் சான்று காட்ட வேண்டும். அப்போதுதான் கம்யூனிசத்துக்கு முன்பு நம்மால் நிற்க முடியும்.

நாமும் நமது நண்பர்களும் இந்த செல்வப் பற்றிலிருந்து விடுதலை பெறுவது சரியாக நடைபெற்றால் நம் அனைவருக்கும் சித்த சுத்தி கிடைக்கும். சமுதாயத்துக்கும் ஓரளவு தூய்மை கிடைக்கும். இதை நான் திரும்பத் திரும்பக் கூறிவருகிறேன். இந்த வேலைக்கு ஒரு வடிவம் கிடைத்துவிட்டால் நான் வெளியே போகலாம் என்று கருதினேன். ஒரு வேளை வெளியே செல்ல வேண்டிய அவசியம் இராது என்று நினைத்தேன். ஆனால் அதற்குள் ஐதராபாத்துக்கு அருகிலுள்ள சிவராம் பள்ளி சர்வோதய மாநாட்டுக்குப் போக வேண்டியதாயிற்று. அதுவும் இறைவனின் சித்தப்படியே நடந்தது என்பதைக் கண்டேன். ஏனெனில் எல்லாம் எதிர்பாராத வகையில் நடந்தேறின.

## தர்மச்சக்கரம் சுழன்றது

நான் கடின சித்தம் உடையவன். யாருடைய பிறப்பும் இறப்பும் என்னைப் பாதிப்பதில்லை. யாராவது உடல்நலம் குன்றினால் அது எனக்குப் பெரிய மனக் கவலையை ஏற்படுத்துவதில்லை. ஆனால் தான இயக்கத்தில் பெற்ற அனுபவங்களினால் நான் மென்மையானவனாக ஆகிவிட்டேன். என் இதயம் எளிதில் கசிந்துருக ஆரம்பித்துவிட்டது. எனக்கு பக்தி வரம் கிட்டிற்று. என் இதயம் மென்மையானதாகவும், பணிவுடையதாகவும் ஆயிற்று. பல புனித அனுபவங்கள் கிடைத்தன. மக்களின் சித்தத் தூய்மை விளங்கிற்று. நம் நாட்டில் பெரும் ஆற்றல் பொதிந்து கிடக்கிறது. அதனைக் கொண்டு நம் நாட்டை வலிமைமிக்கதாக ஆக்கலாம் என்று புரிந்தது.

### இதயத்தின் ஆழத்தில் ஓர் உணர்வு

தேச விடுதலைக்குப் பின், குறிப்பாக காந்திஜி அமரரானபின் நமது அடுத்த வேலைத் திட்டம் என்ன, எந்த வேலைத்திட்டத்தை மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றி மனதில் தீவிரமாக யோசித்து வந்தேன். அந்த சமயத்தில் ரயில் பயணம் மேற்கொள்ள வேண்டி வந்தது. அதுவரை முதல் வகுப்பில் எந்தக் காரணத்தைக் கொண்டும் போனதில்லை. அதுவே முதல் முறை. இந்தியாவில் பாதிக்கு மேல் சுற்றினேன். காதால் மட்டுமே கேட்டிருந் தவைகளைக் கண்ணால் கண்டேன். நிச்சயமாக பயன் விளைந்தது.

ஆனால் ரயிலில் சுற்றுவதால் மட்டும் அகிம்சைக்கு வேகம் தந்துவிட முடியுமா? சமுதாயத்தில் நாம் விரும்பும் வேகத்தைக் கொண்டுவர முடியுமா? என்று யோசித்துக் கொண்டே இருந்தேன். நான் மேற் கொண்டிருந்த பயணமும் அகிம்சையின் அடிப்படையிலானது என்று சொல்லிவிட முடியாது. புகை வண்டி எப்படி வந்தது? என் பயணத்துக்கு ஆகும் செலவு எங்கிருந்து வந்தது? இக் கேள்விகள் என் மனதில் எழுந்த வண்ணம் இருந்தன. இவ்வளவு வேகமாகச் செல்லக் கூடியதும் மனதில் சிந்தனைக்கு மாறாக குழப்பத்தை உண்டாக்கக் கூடியதுமாகிய இது போன்ற பயணம் அகிம்சைப் பிரச்சாரத்துக்கு எவ்வளவு தூரம் பயன்பட முடியும்? இந்த வாகனங்கள் சாமானிய மனிதர்களிடம் நம்மைக் கொண்டு சேர்க்குமா?

இன்னொரு பக்கம் காந்திஜியின் நினைவாக அவருடைய தொண்டு களைத் தொடருவதற்கு ஒரு நிதி திரட்டப்பட்டு வந்தது. எனக்கு இது ஜீரணமாகவில்லை. காந்திஜியின் வேலைகளுக்காகப் பணம் திரட்டுவது அதற்குரிய லாபத்தைவிட நட்டமே அதிகமாகும் என்று எனக்குத் தோன்றியது.

"காந்தி நிதி" என்ற பெயரில் பணம் பற்றிய சிந்தனை ஒருபுறமிருக்க, நாங்கள் ஆசிரமம் நடத்திய விதம் பற்றியும் யோசித்துவந்தேன். எங்கள் சொந்த வாழ்க்கை பற்றியும் யோசித்தேன். எல்லாவற்றையும் யோசித்து காலம் மாறிவிட்டது என்கிற முடிவுக்கு வந்தேன். காலத்தில் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. இப்போது செய்யவேண்டிய வேலை ஆழமானது. மிகக் கடினமானது. அரசியல் விடுதலை என்னவோ கிடைத்துவிட்டது. இப்போது அதைவிடக் கடினமான சமுதாய, பொருளாதார விடுதலைக்-காகப்பாடுபட வேண்டும். இதற்குப் பழைய உத்திகள் பயன்படா என்று நினைத்தேன்.

அப்போது (ஏப்ரல், 1948) அகதிகள் மறுவாழ்வுப் பணியில் ஈடுபட்டிருந்தேன். மேற்கு பாகிஸ்தானிலிருந்து வந்த அகதிகளில் பலர் அரிஜனங்கள். அவர்கள் நிலம் கேட்டனர். அவர்களின் கோரிக்கை நிறைவேறுவதாக இல்லை. இது பற்றி பேச்சு வார்த்தை நடந்தது. இறுதியில் பஞ்சாப் அரசு அரிஜனங்களுக்கு சில லட்சம் ஏக்கர் நிலம் தர ஒப்புக்கொண்டது. இந்த ஒப்பந்தம் பாபு ராஜேந்திர பிரசாத் மற்றும் பலர் முன்னிலையில் ஏற்பட்டது. அவர்களில் நானும் ஒருவன்.

அன்று வெள்ளிக் கிழமை. பிரார்த்தனைக்காக அன்று நான் ராஜ்காட் போக வேண்டியிருந்தது. பிரார்த்தனைக் கூட்டத்தில் அரிஜனங்களுக்கு பஞ்சாப் அரசு நிலம் தர ஒப்புக்கொண்ட மகிழ்ச்சியான செய்தியைக் குறிப்பிட்டு பஞ்சாப் அரசைப் பாராட்டுவதாகக் கூறினேன்.

ஆனால் இரண்டு மாதங்கள் கழித்து நிலம் தர இயலாது என்று அரசு கூறியதாகக் கேள்விப்பட்டேன். அதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். அதனால் அரிஜனங்கள் மிகுந்த துயரம் அடைந்தனர். ராமேஷ்வரி நேரு மிகவும் வேதனையுற்றார். அவர் என்னிடம் வந்து அரிஜனங்கள் சத்தியாகிரகம் செய்ய விரும்புவதாகக் கூறினார். அவர்களை சத்தியாகிரகம் செய்ய அனுமதிப்பதா என்ற யோசனையில் ஆழ்ந்துவிட்டேன். கொடுத்த வாக்குறுதியை அரசு மீறிவிட்டது. இந்த இக்கட்டான நிலையில் நான் அரிஜனங்களிடம், "இன்றைய நெருக்கடியான நிலையில் உங்களுக்கு சத்தியாகிரகம் செய்யும் யோசனையை நான் கூறமாட்டேன். இந்த விஷயத்தில் தற்போது உதவ இயலாத நிலையில் இருப்பது எனக்கு மிகுந்த வேதனை அளிக்கிறது" என்று வருத்தத்துடன் கூறினேன். அவர்களிடம் நான் இப்படிப் பேசிவிட்டாலும் எனது மனதின் ஆழத்தில் நிலமற்ற விவசாய மக்களுக்கு நிலம் கிடைக்க ஏதாவது ஒரு உபாயம் செய்ய வேண்டும் என்ற உணர்வு உறுத்தலாயிற்று.

இன்னொரு பக்கத்தில் நிர்மாண ஊழியர்கள் மிகவும் தளர்ந்து போயிருந்தனர். அவ்வமயம் சர்தார் வல்லபாய் பட்டேல் ஒரு சொற்பொழிவில், "நாம் கதர் போன்ற நிர்மாணப் பணிகளை இடைவிடாது செய்து வருகிறோம். (படேல் தினமும் நூற்பவர், மிக மெல்லிய நூலாக நூற்பதில் வல்லவர்) ஆனால் இன்று கதரை ஏற்பவர் எவரும் இல்லை. காந்திஜியின் பேச்சையே கேட்கவில்லை என்றால் நாம் சொல்வதை யார் கேட்பார்? இந்தியா விடுதலை அடைந்துவிட்டது. இனி

நாம் போரின் சாத்தியக்கூறை மனதிற்கொண்டு அதற்குரிய தொழில்களை வளர்க்க வேண்டும்" என்று பேசினார். அவருடைய இந்தக் கருத்தைக் கேட்டு அதிர்ச்சியுற்றேன். அதைவிட அமைதிக்கான வாய்ப்புகளைக் கருத்தில் கொண்டு திட்டமிடுவது இன்றையத் தேவை என்று நினைத்தேன். அமைதிக்கு வாய்ப்பளிக்கக் கூடிய தொழில்களையும் வேலைத் திட்டங்களையும் நாம் உருவாக்க வேண்டும். இதைத் தவிர வேறு எதுவும் பயன்படுவதாகத் தெரியவில்லை என்று நான் நினைத்தேன்.

இதற்காக ஒருமுறை இந்தியாவில் பாதயாத்திரை செய்ய வேண்டும் என்று தீர்மானித்தேன். இத் தீர்மானம் என் மனதிலேயே இருந்தது; வெளியிடவில்லை. ஆனால் தெய்வாதீனமாக அதற்கு வாய்ப்புக் கிடைத்தது.

**பூதான கங்கையின் தோற்றுவாய்**

ஹைதராபாத்திற்கு அருகே சிவராம்பள்ளியில் சர்வோதய மாநாடு நடக்க இருந்தது. ரயிலில் போவதானால் வார்தாவிலிருந்து ஹைதராபாத் ஒரு இரவுப் பயணம். ஆனால் நாங்களோ பாதயாத்திரை செய்யத் தீர்மானித்தோம் (மார்ச் 1951).

ரயிலிலோ, விமானத்திலோ போகக் கூடாதா என்று மக்கள் கேட்கலாம். உண்மையில் சொல்லப் போனால் இன்று போகும் வேகத்தைவிட வேகமாகப் போகும் விமானம் எனக்கு வேண்டும் என்றுதான் சொல்வேன். அதில் நாம் போகலாம். ஆனால் ஒன்றொன்றுக்கும் உரிய இடம் என்று ஒன்று இருக்கிறது. கண்ணாடி எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும் கண்ணைவிட உயர்ந்தது அல்ல. அதைப் போலவே விமானமும். அதைவிட விரைந்து செல்லும் வாகனங்களும் நமக்கு வேண்டும். ஆனாலும் காலின் பெருமை தனிதான். பாதயாத்திரையினால் கிடைக்கும் பயன்கள் விமானத்தினால் ஒருபோதும் கிடைக்கா.

ஒரு கனவான் என்னிடம், "ஒரு நாள் வேலைக்கு ஒரு மாதம் எடுத்துக் கொள்கிறீர்களே, உங்கள் அலுவல்கள் பாதிக்கப்படாதா" என்று வினவினார். "என் அலுவல் இறைவன் நாமத்தை ஜபிப்பதும், மற்றவர்களை ஜபிக்கச் சொல்வதும் ஆகும். ராமநாமத்தைத் தவிர வேறு சக்தி ஒன்றும் பயன்படுவதாகத் தெரியவில்லை" என்று நான் சொன்னேன்.

பாதயாத்திரையின்போது என்னுடைய தனித்தன்மை அதாவது என்னுடைய கொள்கை என்று ஒன்றும் வைத்துக் கொள்வதில்லை என்று தீர்மானித்திருந்தேன். சகஜமாக நடப்பதை நடக்க விடுவது என்று நிச்சயித்திருந்தேன். ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக பாத யாத்திரை செய்வது, எதையாவது நிறுவுவது என்றெல்லாம் என மனத்தில் இல்லை. ஆங்காங்கே சான்றோர்களுடன் கலந்துரையாடுவது, அங்கே மக்களுக்கு ஏதாவது துன்பம் இருந்தால் அதற்கு சகஜமாக ஏதாவது பரிகாரம் சொல்ல முடிந்தால் சொல்லுவது என்று மட்டுமே கருதியிருந்தேன். இதற்குமேல் எதையும் தீர்மானித்து வைத்திருக்கவில்லை. போகும் இடத்தில் வேண்டுமானால் தீர்மானித்துக் கொள்ளலாம் என்றிருந்தேன்.

பாதயாத்திரையின் மூலம் இயற்கையையும், மனிதர்களையும் எந்த அளவுக்கு எந்த விதத்தில் தரிசிக்கிறோமோ அந்த அளவுக்கு வேறு வகையான பயணங்களில் தரிசிக்க முடியாது. இந்த அனுபவத்திற்காகவே நாங்கள் கால்நடையாகக் கிளம்பினோம். நம் நாட்டில் நாங்கள் தரிசித்தது கற்பனைக்குஎட்டாதது அல்ல என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் பாதயாத்திரைக்குக் கிளம்பாவிட்டால் அந்த தரிசனம் கிட்டியிருக்காது என்பது உண்மை.

கிராமங்களில் மக்களிடம் உற்சாகம் இருக்கிறது. நகரத்திலும் குறைவு என்று சொல்ல முடியாது. ஆனால் கிராமத்தில் ஒரு தனி மனப்பான்மை காணப்பட்டது. நாங்கள் அவர்களிடம் போய்ச் சேருவது அவசியம் என்று நிதர்சனமாகத் தெரியவந்தது. கூடியவரை சிறு சிறு கிராமங்களில் முகாமிட முயற்சித்தோம். முடிந்த இடங்களில் கிராமத்து வீடுகளுக்கும் போய் வந்தேன். எனக்குச் சரளமாக தெலுங்கு பேசும் அளவுக்கு இயலாது. ஆயினும் எனக்கிருந்த தெலுங்கு அறிவு நேச உறவை வளர்க்கப் பெரிதும் உதவிற்று. பிரார்த்தனையில், கீதையில் கூறப்பட்டுள்ள நிலைத்த மதியுடையோன் என்னும் ஸ்திதப்ரக்ஞ லட்சணங்களை நான் தெலுங்கில் சொல்வேன். அது மக்கள் இதயத்தில் நேரடியாகப் பிரவேசிப்பதைக் கண்டேன். அவர்கள் தங்களில் ஒரு சகோதரரே பேசுவதாக உணர்ந்தார்கள் மிகுந்த அன்புடன் மக்கள் எங்களை வரவேற்றார்கள்.

சிவராம்பள்ளிக்கு குறிப்பிட்ட நாள் மகாநாட்டில் கலந்துகொள்ள வேண்டும் என்ற நிலை இல்லாதிருக்குமானால் சில ஊர்களில் நாங்கள் மேலும் சில நாட்கள் தங்கியிருக்க விரும்பியிருப்போம். அப்படிப்பட்ட கிராமங்கள் எங்களுக்குக் கிடைத்தன. ஏனென்றால் ஒரு இடத்தைப் பார்த்து, அங்குள்ள குறைகளை உணர்ந்து, அவற்றைத் தீர்க்க முடியும் என்ற நம்பிக்கையும் இருந்து, அப்புறமும் அந்த இடத்தை விட்டுப் போய்விடுவது விருப்பமில்லாத ஒன்று. ஆனாலும் மாநாட்டை உத்தேசித்து நாங்கள் அவ்விடத்தை விட்டுப் பிரிய வேண்டியிருந்தது. முடிந்த இடங்களில் உள்ளூர் மக்களே தொண்டாற்ற முன் வருவதற்கு முயன்றோம். எங்களில் ஆளுக்கு ஒரு கிராமம் பொறுப்பில் இருந்தால் பெரிய மாறுதல்கள் செய்ய முடியும் என்பது எங்கள் அனுபவத்தின் சாரம்.

1949-ல் நடந்த ராவூ சர்வோதய மாநாட்டில் நண்பர்கள் அனைவரையும் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்திருந்தது. அதன்பின் சிவராம் பள்ளியில் இன்னொரு வாய்ப்புக் கிடைத்தது (7-14 ஏப்ரல், 1951). பெரும் மகிழ்ச்சியும், மனநிறைவும் எனக்குக் கிடைத்தது.

அதற்குப்பின் இறைவன் அருளிருந்தால் கம்யூனிஸ்டுகள் செயல் பட்டுக் கொண்டிருந்ததும், கலவரம் செய்தார்கள் என்று சொல்லப்பட்டது மான தெலுங்கானா பகுதி முழுவதும் கால்நடையாகச் சுற்ற விரும்பினேன்.

அங்கேயிருந்த கம்யூனிஸ்டுகள் பிரச்சினை குறித்து நான் இடை விடாது யோசித்து வந்தேன். அங்கு நடந்து வந்த கொலை போன்ற நிகழ்ச்சிகள் குறித்து எனக்குத் தகவல் வந்த வண்ணம் இருந்தது. ஆனாலும்

என் மனத்தில் கலக்கம் உண்டாகவில்லை. ஏனெனில் மனிதப் பரிணாம வளர்ச்சியைப் பற்றி நான் ஓரளவு அறிந்திருந்தேன். மனித வாழ்க்கையில் புதிய கலாச்சாரம் உருவானபோதெல்லாம் ஓரளவு மோதல்கள் நடந்து வந்துள்ளது, ரத்தம் பெருக்கெடுத்து ஓடியுள்ளது.

தெலுங்கானாவில் அமைதியை நிலைநாட்ட அரசாங்கம் போலீஸ்-படையை அனுப்பியிருந்தது. ஆனால் போலீஸ் சிங்கம் - புலிகளை வேட்டையாடி, அவற்றிடமிருந்து வேண்டுமானால் நம்மைக் காப்பாற்ற-லாம். ஆனால் கம்யூனிஸ்ட்டுகள் பிரச்சினை மிருகங்கள் பிரச்சினையல்ல. மனிதர்கள் பிரச்சினை. அவர்கள் முறை தவறாக இருக்கலாம். ஆனால் அவர்கள் வாழ்வில் சில கருத்துக்கள் தோன்றியுள்ளன என்பதும், கருத்துக்கள் தோன்றும் போது போலீஸ் அதற்குப் பரிகாரம் அல்ல என்பதும் தெளிவு.

தெலுங்கானாவில் அப்போதிருந்த பிரச்சினையைப் பற்றி இப்படி யோசித்து வந்தபோது அங்கே சுற்றுப்பயணம் செய்யவேண்டும் என்று தோன்றியது. ஆனால் எப்படிச் சுற்றுப்பயணம் செய்வது? கருத்துக்களை ஆராய்ந்தறியும் பயணத்திற்கு அமைதியான ஊர்தி வேண்டும். ஆதிசங்கரர், மஹாவீரர், புத்தர், கபீர், சைதன்யர், நாமதேவர் ஆகியோர் பாரதத்தில் சுற்றுப்பயணம் செய்த போது கால்நடையாகவே செய்தனர். அவர்கள் விரும்பியிருந்தால் குதிரையில் சுற்றியிருக்கலாம். ஆனால் அவர்கள் அது போன்ற விரைவாகப் போகும் ஊர்திகளை நாடவில்லை. ஏனெனில் அவர்கள் கருத்துக்களை ஆராய விரும்பினர். அதற்கு எல்லாவற்றையும் விட சிறந்தது கால்நடையாக சுற்றுவதே ஆகும். இந்தக் காலத்தில் இந்தக் கருத்து யாருக்கும் தோன்றாது. ஆனால் அமைதியாக யோசித்தால் கால்நடையாக சுற்றுவதைத் தவிர வேறு வழியில்லை என்பது புலப்படும். அந்தப் பகுதி முழுவதும் கால்நடையாகச் சுற்றுவது என்று நான் தீர்மானித்தேன்.

தெலுங்கானாவில் கம்யூனிஸ்ட்டுகளின் இதயத்தைத் தொட ஆகக் கூடிய முயற்சிகள் அனைத்தையும் மேற்கொண்டேன் கம்யூனிஸ்ட் தலைவர்கள் ஹைதராபாத் சிறையில் இருந்தனர். ராமநவமியன்று (15-4-1951) அவர்களைச் சந்திக்க வசதி செய்து தருமாறு அரசிடம் நாங்கள் கேட்டோம். அரசும் சம்மதித்தது. அவர்களுடன் இரண்டு மணி நேரம் பேசினேன். சிறையிலாகட்டும், யாத்திரையிலாகட்டும் யாரிடமெல்லாம் நான் பேசினேனோ, யார் காதுகளில் என் வார்த்தைகள் விழுந்தனவோ அவர்களுக்கெல்லாம் நான் அவர்கள் நன்மையையும் நாடுபவன் என்பது நிச்சயமாகப் புலப்பட்டிருக்கும்.

நான் கம்யூனிஸ்ட் தீவிரவாதிகள், கிராமச் செல்வந்தர்கள், சாதாரண மனிதர்கள் என மூன்று விதமான மனிதர்களைச் சந்திக்கவேண்டி இருந்தது.

நான் கம்யூனிஸ்ட்டுகளிடம் "நீங்கள் சொல்லும் கோட்பாடுகளில் இதுவரை உலகில் எந்தச்சமுதாயமும் வெற்றி அடையவில்லை. எப்போதா-வது அடையப்போகிறதா என்றும் தெரியவில்லை. இதை நாம் ஒப்புக் கொண்டே ஆகவேண்டும். இன்னொரு விஷயம். வன்முறையை

எச்சூழ்நிலையிலும் மேற்கொள்ளக் கூடாது என்று வைத்துக் கொள்ள வில்லை என்றாலும், சில சமயங்களில் வன்முறையை மேற்கொள்ளலாம் என்று கொண்டாலும், சுதந்திரம் பெற்றபின், அதுவும் வாக்குரிமை கிடைத்தபின் ஆயுதங்களை விட்டுவிடத்தான் வேண்டும். அவ்வளவு கூடச்செய்யவில்லை என்றால் அது ஒரு மாபெரும் தவறாகும்" என்று எடுத்துக் கூறமுயன்றேன். அதற்கு நல்ல பயனும் இருந்தது என்று கருதுகிறேன்.

பல ஊர்களில் பெரும் செல்வந்தர்கள் பயத்தினால் ஊரை விட்டு நகரங்களுக்குப் போய்விட்டிருந்தனர். அவர்களில் சிலரைச் சந்தித்தேன். அவர்கள் திறந்த மனத்துடன் பேசினர். "நாங்கள் ஊருக்குப் போக முடிவ தில்லை, போனால் போலீஸ் துணையுடன் போக வேண்டியுள்ளது" என்றார்கள் அவர்கள். நான் சொன்னேன், "நீங்கள் திருமகளின் அருள் பெற்றவர்கள். இறைவன் உங்களை நீங்கள் எவ்வளவு தூரம் ஏழைகளுக்குத் தொண்டு செய்கிறீர்கள் என்று சோதிக்கிறான். நீங்கள் ஏழைகளுக்குத் தொண்டு செய்வது என்று விரதம் மேற்கொள்ளுங்கள். எங்கிருந்து ஓடிவந்தீர்களோ அங்கேயே துணிவுடன் சென்று வசிக்க ஆரம்பியுங்கள். அங்கே போய் கொலை செய்யப்பட்டாலும், அதுவும் இறைவன் அருள் எனக்கொள்ளுங்கள். அஞ்சி நகரில் மறைந்து உயிர் வாழ்வது, சாவிலும் கேவலம். ஆனால் அச்சமற்றவர்களாக ஆவது எப்படி? ஏழைகளை நேசித்து, அவர்களுக்குத் தொண்டு செய்பவர்களுக்குத்தான் அச்சம் என்பது கிடையாது."

சாதாரண ஊர் மக்களிடம் நான் ஊர் பெரியதனக்காரர்களை நேசிக்கவேண்டும் என்றும், அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பு ஊர் முழுவதற்கும் இருக்கவேண்டும் என்றும் சொல்லிவந்தேன்.

இந்த அளவிற்குத் துணிந்து கூறியது எனக்குப் பெரிதாகவே பட்டது. ஏதோ பெரிய பயன் விளையப்போகிறது என்று கருதி இந்த வேலையை நான் துவங்கவில்லை. வார்தாவிலிருந்து கிளம்பிய போது லக்ஷ்மி நாராயண் கோவிலில் ஒரு சிறு கூட்டம் நடந்தது. அதில் நான் விடைபெறும்போது. இது கடைசி சந்திப்பு என்றே வைத்துக் கொள்ளுங்கள். திரும்ப எப்போது சந்திப்போம் என்று சொல்ல முடியாது என்று சொன்னேன். ஆபத்து நிரம்பிய பகுதிக்குப் போகிறோம். ஆபத்து நீங்க வழி கிடைத்தால் நல்லது. ஆபத்து நமக்கே விளைந்தால் அதுவும் நல்லதுதான். ஏனெனில் அதிலிருந்து தானாகவே அமைதி உண்டாகும். என்ற எண்ணம் மனத்தில் இருந்தது. மனத்தில் இப்படியெல்லாம் யோசித்துக் கிளம்பியிருந்தோம். இறைவன் அருளால் சூழ்நிலையே அடியோடு மாறிவிட்டது.

யாத்திரை கிளம்பிய மூன்றாம் நாளே (18-4-1951) போச்சம்பள்ளியில் ஊர் ஹரிஜனமக்கள் எங்களைச் சந்திக்க வந்தனர். 'எங்களுக்குக் கொஞ்சம் நிலம் கிடைத்தால் நாங்கள் உழைத்துச் சாப்பிடுவோம்' என்று அம்மக்கள் கூறினர். அவர்களுக்கு 80 ஏக்கர் நிலம் வேண்டியிருந்தது. 'நிலம் கொடுத்தால் நீங்கள் கூட்டுறவாக உழைக்கவேண்டும், தனித்தனியாக நிலம் தரச்செய்ய முடியாது' என்று நான் கூறினேன். அவர்கள் நாங்கள்

ஒன்றுபட்டு உழைப்போம் என்று ஒப்புக்கொண்டனர். நான் அவ்வண்ணம் எழுதித் தரும்படியும், அரசாங்கத்திற்கு அதை அனுப்புவதாகவும் கூறினேன். ஆனால் அங்கேயே, அதே கூட்டத்தில் ஒரு சகோதரர் (திரு. ராமச்சந்திர ரெட்டி) நூறு ஏக்கர் நிலம் ஹரிஜனங்களுக்குத் தர முன் வந்தார்.

இது சாதாரண நிகழ்ச்சி அல்ல. எந்த நிலத்துக்காக நீதிமன்றம் மற்றும் கச்சேரி என்று அலைகிறோமோ, எதற்காக குத்து வெட்டு நடைபெறு கிறதோ, அந்த நிலம் தானமாகக் கிடைக்கிறது என்றால் அதற்குப் பின்னால் ஏதோ ஒரு பொருள் இருக்கிறது. இரவு முழுதும் நான் யோசித்தேன். ஒரு தெய்வீகமான அற்புதம் நிகழ்ந்திருக்கிறது என்றும், மக்கள் மனமுவந்து நிலம் கொடுக்கத் தயாராக உள்ளனர் என்றும் எனக்குத் தோன்றியது.

பண்டித ஜவகர்லால் நேரு எனக்கு எழுதிய கடிதத்தில், இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு மகிழ்ச்சி தெரிவித்திருந்தார். அதற்கு நான் பதில் எழுதும்போது, "எந்தப் பிரச்சினையையும் அகிம்சை வழியில் தீர்க்க முடியும் என்பது எனது நம்பிக்கை. ஆனால் அதற்கு உள்ளத் தூய்மை வேண்டும்" என்று எழுதியிருந்தேன். இதை என் மனதில் இதுகாறும் ஈடுபாட்டுடன் ஏற்றிருந்தேன். இப்போது நேரிலேயே அதைக் காணும் பேறு பெற்றேன்.

இது ஒரு உலகளாவிய பிரச்சினை. இதை அமைதி வழியில் தீர்க்க முடியும் என்றால், விடுதலைக்குப் பின் இது மிகப் பெரிய கண்டுபிடிப்பு என்றே சொல்ல வேண்டும். இதில் உலகளாவிய ஒரு புரட்சிக்கான விதை மறைந்திருக்கிறது. நான் ஏதோ பிரச்சினையைத் தீர்ப்பதாகக் கருதவில்லை. அவ்வாறு நினைப்பது அகங்காரமாகும். ஆனால் இந்நிகழ்ச்சியின் உட்பொருளை நாம் உணர்ந்து கைக்கொண்டால், அதனுடன் ஒன்றினால், அது இப்பிரச்சினையைத் தீர்க்கக்கூடிய வழி இதில் உள்ளது என்பதை அறியலாம்.

கம்யூனிஸ்ட்டுகள் செய்யும் வேலைக்குப் பின்னால் உள்ள கருத்தின் சாரத்தை எடுத்துக்கொண்டு நாம் இதைச் செயல்படுத்த வேண்டும். இதை எப்படிச் செய்வது என்று யோசித்து வழி கண்டுபிடித்தேன். பிராமணன் தானே, வாமனாவதாரம் எடுத்து பூமிதானம் கேட்க ஆரம்பித்தேன். மெல்ல, மெல்ல கருத்து பரவிற்று. இறைவன் இதற்கு ஆற்றல் சேர்த்தான். இது புரட்சிகரமானதென்றும், அரசின் ஆற்றலுக்கு அப்பாற்பட்டதென்றும், ஏனெனில், இதனால் வாழ்வே மாற்றமடைகிறதென்றும், மக்கள் உணரத் துவங்கினர்.

பூதானயக்ஞம் என்று நான் அழைக்கும் இந்த யக்ஞம் சாதாரண மானது அல்ல. இந்தக் காலத்தில் நிகழ்ந்த இந்நிகழ்ச்சி சாதாரண நிகழ்ச்சியல்ல. இந்த தானங்களுக்கு அடிப்படை பரஸ்பர நல்லுணர்வாகும். இதை நான் கண்ணாரக் கண்டேன்.

தானம் அளிக்கும்போது ஏழைகளுக்கு ஏதோ பெரிய உபகாரம் செய்து விட்டோம் என்று நினைத்தால் அது அகங்காரமாகும் என்று ஒவ்வொரு இடத்திலும் எடுத்துச் சொன்னேன். "அதனால் நாம் கருதிய பயன் விளையாது. காற்று, தண்ணீர், சூரியன் ஆகியவை எல்லோருக்கும்

உரியது போல நிலமும் எல்லோருக்கும் உரியது என்று எண்ணினால்தான் என் காரியம் கைகூடும். பலரிடம் நிலமே இல்லாதபோது நாம் ஏராளமான நிலத்தை வைத்திருப்பது தவறு. அந்தக் குற்றத்திலிருந்து விடுபடுவதற்காக நிலத்தை அளிக்கிறோம் என்பதை நினைவில் வைக்க வேண்டும்" என்று திரும்பத் திரும்ப எடுத்துக் கூறி வந்தேன். ரஜோ குணம், அல்லது தமோகுணத்துடன், கொடுக்கப்படுவதாக சற்றேனும் சந்தேகம் வந்த இடத்தில் நான் தானம் பெற மறுத்துவிட்டேன். ஏனெனில் எந்த முறையிலாவது நிலம் சேர்ப்பது என் குறிக்கோள் அல்ல.

பாதயாத்திரையில் பல அனுபவங்கள் ஏற்பட்டன. ஆனால் அந்த எல்லா அனுபவங்களின் சாரத்தையும் இருசொற்களில் வடிக்கலாம். என் உணர்வுகளை எப்படி வெளிப்படுத்தலாம் என்று யோசித்தபோது எனக்கு "இறைவன் தரிசனம்" என்ற சொல்லே உதித்தது. நான் ஒருவகையில் இறைவனையே கண்ணால் கண்டேன் என்று சொல்ல வேண்டும். மனிதன் மனத்தில் நல்லதே இருக்கிறது. அதைத் தட்டி எழுப்ப முடியும் என்று நம்பி நான் செயல்பட்டேன் இறைவன் அவ்வண்ணமே எனக்குக் காட்சி அருளினான். மனித மனம், பொறாமை, ஆற்றாமை, பேராசை முதலிய-வற்றால் நிரம்பியது என்று நான் கருதியிருந்தால் அப்படியே நான் கண்டிருப்பேன். எனவே இறைவன் கற்பகத்தரு, நாம் எதைக் கருது-கிறோமோ, அதையே தருகிறான் என்று கண்டேன்.

**துளசிதாசர் – சூரதாசர் பூமியில்**

தெலுங்கானா யாத்திரைக்குப் பின் சில நாட்கள் (27-6-51 முதல் 11-9-51 வரை) பரந்தாமில் கழித்து விட்டு மீண்டும் வட இந்திய பாதயாத்திரையில் கிளம்பினேன் (12-9-51). தில்லியை நோக்கிக் கிளம்பினேன். மழைகாலம் முடிந்தபின் கிளம்புவதாக முன்னதாகவே யோசனை இருந்தது. அதற்குள் தில்லியிலிருந்து அழைப்பு வந்துவிட்டது. (திட்டக்கமிஷன் உறுப்பினர்களைச் சந்தித்து உரையாட பண்டித நேரு அழைத்திருந்தார்) எனவே சற்று முன்பாகவே கிளம்பிவிட்டேன்.

பரந்தாமில் தொடங்கியிருந்த செயல்பாடு (பணத்தின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை, ரிஷி விவசாயம்) இல்லாவிட்டால், ஓராண்டு அந்த அனுபவம் எனக்குக் கிடைத்திராவிட்டால் தெலுங்கானாவில் அந்த அளவு தன்னம்பிக்கையுடனும், அந்த அளவு அச்சமின்மை, சங்கோஜமின்மையுடனும் நடந்து கொண்டிருக்க முடியாது. அந்த அளவு வேலையும் நடைபெற்றிருக்காது என்று நினைக்கிறேன். இறைவன் அருளினால் என்னைப்போன்ற முரட்டு மனிதனின் வாயிலிருந்து கூட துடுக்கான சொல் எதுவும் வரவில்லை. விவசாயியை குருவாகக் கருதி மண்ணில் வேலை செய்வதை எங்கள் பேறாகக்கருதியதன் பயனே இது என்பது என் நம்பிக்கையாகும்.

இப்போது யாத்திரையில் ஒரு முக்கியமான வேலையைக் கருத்தில் கொள்வேன் என்று நான் சொல்லியிருந்தேன். ஏழைகளுக்கு நிலம் பெற்றுத்தர வேண்டும். பூமித்தாயும் மக்களும் பிரிந்துள்ளனர். அவர்களை

இணைக்க வேண்டும். நாட்டில் தானம் கொடுக்கும் மனப்பான்மையை வளர்க்க வேண்டும். அத்தகைய ஒரு சூழலையே உருவாக்க வேண்டும். தெலுங்கானாவில் கம்யூனிஸ்ட்டுகள் தொந்தரவு இருந்ததனால்தான் நிலம் கிடைத்தது என்றால் அகிம்சைப்புரட்சி பற்றிய நம்பிக்கையை விட்டு விட வேண்டி வரும். பூதான இயக்கத்தின் அடிப்படைக் கருத்தை விளக்கி விட்டால் மக்கள் மனமுவந்து நிலம் தருவார்கள் என்பது என் நம்பிக்கை. இந்த நம்பிக்கை மெய்ப்பிக்கப்பட்டால் அஹிம்சைப் புரட்சிக்கு பெரும்பலம் கிடைக்கும். நாம் நமது சூட்சமக் கருத்துக்களுக்கு பரந்த தூலவடிவம் தராவிட்டால் காலவெள்ளத்தில் நம்மால் நிற்க முடியாது. இன்று காலம் நமக்கு ஒரு சவால் விட்டுள்ளது.

ராஜ்காட் (டில்லி) சந்நிதியில் எனக்கு மிகுந்த அமைதியும், புத்துணர்ச்சியும் கிடைத்தன. ராஜ்காட்டிலேயே தங்க நான் முடிவெடுத்ததற்கு ஒரு உணர்வுபூர்வமான காரணம் இருந்தது. இறைவன் எல்லா இடத்திலும் இருந்தாலும், நான் அதை உணர்ந்தாலும், சில இடங்களுக்கு அழியா மகிமை இருக்கவே செய்கிறது. அதுவே எனக்கு வழிகாட்டுகிறது. பூதான இயக்கத்தின் பின்னே காந்திஜியின் தூண்டுதலே இருந்தது. அந்த வேலையில் இருந்த நல்லவையெல்லாம் அவருடையது. குறைபாடுகள் எல்லாம் எனது ஆகும்.

ராஜ்காட்டில் பதினோரு நாட்கள் (1953 நவ. 13-23) சத்சங்கத்தில் கழிந்தது. காலையில் சரியாக நான்கு மணிக்குத் துவங்கும் பிரார்த்தனை அறவோர் - ஆன்றோருடன் நடக்கும். அதில் துளசிதாசரின் வினய பத்திரிகா பஜனைகளைப்பற்றி நான் உரத்த சிந்தனை வடிவில் பேசுவேன். அதன் வாயிலாக நாள் முழுவதும் செய்யும் இடைவிடாத வேலைகளுக்கிடையே ஓய்வு இன்றியே போதிய ஓய்வுணர்வு பெற்று வந்தேன். மாலை ராஜ்காட்டில் நடக்கும் பொதுப்பிரார்த்தனையில் பூதான இயக்கத்தைப் பற்றிய என் கருத்தை சுருக்கமாகப் பேசுவேன்.

திட்டக்கமிஷனுடன் உரையாடினேன். நான் தெளிவாக எடுத்துரைத்த என் கருத்துக்களை நண்பர்கள் கவனமாகக் கேட்டனர். அந்த உரையாடலின் பயனாக திட்டங்களில் கூடியவரை மாற்றம் கொண்டு வரப்படலாம் என நம்ப இடமிருந்தது. பவுனாரிலிருந்து டில்லி வரை செய்த யாத்திரையில் சுமார் 35,000 ஏக்கர் நிலம் கிடைத்திருந்தது. தெலுங்கானாவில் தினமும் சராசரி 200 ஏக்கர் கிடைத்தது. இப்போதோ 300 ஏக்கர் கிடைத்திருந்தது. காந்திஜியின் போதனையாலும், பாரதத்தின் கலாச்சார பாரம்பரியத்தின் காரணத்தாலும் இந்த அமைதிப்பணியில் மக்கள் மனமுவந்து ஒத்துழைத்தனர். நாட்டில் சுமார் 30 கோடி நிலம் இருக்கிறது. நான் அதில் ஆறில் ஒரு பாகம் கேட்டிருக்கிறேன். ஏனெனில் இந்தியாவில் சாதாரணமாக ஒரு குடும்பத்தில் ஐந்து மக்கள் இருப்பர். ஆறாவது பொதுமக்கள் எனக்கொண்டு நிலமற்ற மக்களுக்காக ஆறாவது பாகத்தை நான் யாசிக்கிறேன்.

நான் உண்மையில் செய்வது என்ன? என் குறிகோள் என்ன? நான் ஒரு மாற்றத்தை நாடுகிறேன். முதலில் மனமாற்றம், வாழ்க்கை மாற்றம், பிறகு

சமுதாய மாற்றம். இவ்வகையாக ஒரு மூவகை மாற்றம், மும்மைப்புரட்சி என் மனத்தில் உள்ளது.

நான் நியாயம் மற்றும் நீதி அடிப்படையில் இந்தக் கருத்தை முன் வைக்கிறேன். நியாயம் என்றால் சட்ட நியாயம் அல்ல, இறைவன் நீதி. (என்னுடைய சுயராஜ்ய சாஸ்திரத்தில் நான் இதைத் தெளிவாகக் கூறியுள்ளேன்). நாம் சட்டப்படி நிலத்தைப் பங்கிட்டுக்கொள்ள வேண்டும். ஒரு சட்டம் பலாத்காரத்திற்கும், வன்முறைக்கும் பிரதிநிதித்துவம் வகிக்கிறது. மற்றது அகிம்சையின் பிரதிநிதி.

நான் நிலப்பிரச்சினையை அமைதியாகத் தீர்க்க விரும்புகிறேன். மக்களிடம் நிலத்தை தானமாகக் கேட்கிறேன், பிச்சையாக அல்ல. ஒரு பிராமணன் என்ற முறையில் நான் பிக்ஷாவிருத்தி செய்ய உரிமை படைத்தவன்தான். ஆனால் தனிப்பட்ட முறையில்தான் அப்படிச் செய்யலாம். ஆனால் நான் தரித்திர நாராயணனின் பிரதிநிதியாகக் கேட்கப்போகும்போது பிச்சை கேட்கப் போவதாக இருக்கலாகாது. மாறாக தீட்சை தரப்போவதாக அமைய வேண்டும். இறைவன் புத்தர் வழியே செய்ய விரும்பிய வேலையை என் எளிய தோள்களில் ஏற்றியுள்ளார் என்பதே என் முடிவு. இதை தர்மச்சக்கரத் தொண்டு என்றே நான் கருதுகிறேன் (9-2-52, புத்த பூர்ணிமா).

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலான பழம்பெருமை வாய்ந்த இந்த பூமியில் (உபி.) நான் அஸ்வமேத யாகத்தின் குதிரைபோல பூதான யக்ஞத்தின் குதிரையாக வலம் வருகிறேன். மகாபாரதத்தில் ராஜசூய யாகம் பற்றி சொல்லியிருக்கிறது. என் யாகமோ பிரஜாசூய (மக்கள்) யாகமாகும். அதில் பிரஜைக்கே அபிஷேகம். பாட்டாளிகள், தொழிலாளிகள், தோட்டிகள் அனைவரும் நமக்காக ஏதோ நடக்கிறது என்று உணரும். அரசியல் அது. இப்படிப்பட்ட சமுதாயமே சர்வோதயமாகும். அந்த உணர்வினால் உந்தப்பட்டே நான் யாத்திரை செய்கிறேன்.

ஓராண்டு கழிந்தது. அற்புதமான பாத யாத்திரை நடந்தது. நான் தனியாகவே யாத்திரை செய்தேன். இந்தியா முழுவதும் தினமும் பூதானக்கூட்டம் நடைபெற்றது. நிலம் கோரப்பட்டது, மக்களும் தந்தனர். ஓராண்டில் ஒரு லட்சம் ஏக்கர் நிலம் பெறப்பட்டது. நான் உல்லாசமாக யாத்திரை செய்தேன்.

ரவீந்திரநாத் தாகூரின் ஒரு பாடல் நினைவுக்கு வந்தது. "ஓ அபாக்கிய வானே! தனியாகவே செல்வாயாக!" நான் அதில் எனக்காக ஒரு மாற்றம் செய்து கொண்டேன் "ஓ பாக்கியசாலியே! தனியாகவே செல்வாயாக!" வேதத்தில் வருகிறது, "யார் தனியே பயணம் செய்து கொண்டே இருக்கிறான்? சூரியன் தனியே பயணம் செய்து கொண்டே இருக்கிறான்" இந்த வினாவிடை அருமையாக இருக்கும்.

நான் தனியாகவே பாதயாத்திரை செய்து வந்தேன். சர்வசேவா சங்கத்தைச் சேர்ந்த என் தோழர்கள் ஆர்வத்துடனும் ஆவலுடனும் பெரும்

பரிவுடனும் பார்வையிட்டு வந்தனர். அதன் பின் சேவாபுரி சர்வோதய சம்மேளனத்தில் (12-19 ஏப்ரல் 1952) சர்வசேவா சங்கம் இரண்டு வருடத்தில் 25 லட்சம் ஏக்கர் நிலம் பெறுவது என்று தீர்மானம் நிறைவேற்றியது. என்ன விந்தை! ஒரு ஆண்டில் ஒரு லட்சம் ஏக்கர் நிலம் கிடைத்தது. ஆனால் இரண்டு ஆண்டுகளில் 25 லட்சம் ஏக்கர் பெறுவதற்கு தீர்மானம் கொண்டு வந்தாகிவிட்டது.

அங்கே பீஹாரிலிருந்து சிலர் என்னைக் காண வந்திருந்தனர். அவர்கள் நான் பீஹார் வரவேண்டும் என்று விரும்பினர். அடுத்து என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டுதான் இருக்கிறேன். பீஹாரில் நான்கு லட்சம் ஏக்கர் கிடைக்குமானால் வருகிறேன். இல்லையென்றால் விந்தியப் பிரதேசத்திற்காவது அல்லது வேறு எங்காவது போகிறேன் என்று நான் அவர்களிடம் சொன்னேன். லட்சுமி பாபு "சரி பீஹாரில் 75 ஆயிரம் ஊர்கள் உள்ளன; ஊருக்கு ஐந்து ஏக்கர் கிடைத்தால் கணக்கு சரியாகிவிடும்" என்றார். நான் பீஹாரை நோக்கிக் கிளம்பினேன்.

**புத்தரும், மஹாவீரரும் உலவிய பீஹார்**

பீஹாரில் பிரவேசித்த நாளிலிருந்து (துர்காவதி: 12-9-1952) நான் 50 லட்சம் ஏக்கர் நிலம் கேட்கத் துவங்கினேன். ஒரு நாள் ஒரு சகோதரர் நீங்கள் ஆறிலொரு பாகம்தானே கேட்கிறீர்கள். பீஹாரில் ஆறிலொரு பாக நிலம் என்பது 40 லட்சமாகும், 50 லட்சமல்ல என்றார். அன்றிலிருந்து 40 லட்சம் என்கிற பல்லவியை ஆரம்பித்தேன். வைத்யநாத் பாபு கணக்கில் குறியானவர். அவர் எனக்கு கணக்குப்போட்டுக் காண்பித்து 32 லட்சத்திற்கு ஒப்புக்கொள்ள வைத்துவிட்டார்.

புண்ணிய பூமியாகிய அந்த பீஹாரில் எங்கள் பாதயாத்திரை சூரிய பகவான் சாட்சியாக அவரைப்போலவே கால ஒழுங்குடன் நடைபெற்று வந்தது. நிலம் விரைவில் பகிர்ந்தளிக்கப்பட்டே தீரும் என்கிற விஷயம் பீஹாரில் காற்று வேகத்தில் பரவியது.

வெள்ளம் பாதித்த பகுதியில் நாங்கள் இரண்டரை மாதம் கழித்தோம். எங்களுக்கு சாப்பாட்டுக்கு வழி இல்லாத சந்தர்ப்பங்களும் வந்தன. மூன்றரை வருட காலகட்டத்தில் அப்படி நிகழவேயில்லை. வெள்ளபாதிப்பி-னால் இவ்வாறு நிகழ்ந்தது. இப்படியெல்லாம் இருந்தும் ஒரு இடத்தில் எங்கள் கூட்டத்திற்கு சுமார் இருநூறு படகுகள் வந்தன. நூற்றுக்கணக்கில் ஆண்களும், பெண்களும் வந்தனர். கீழே ஈரத்தரை, மேலே மழை ஆயினும் எப்போதும் உற்சாகமாக நின்றபடியே பிரார்த்தனையில் பங்கேற்றனர்.

ஓரிடத்தில் இன்னொன்று கூட நடந்தது. ஒருவர் ஆறிலொருபாகம் அளித்தார். அதில் கொஞ்சம் மோசமான நிலம் இருந்தது. "தம்பி, இதை விலக்கித்தர வேண்டும்" என்று சொன்னோம். அவர் உடனே ஒப்புக்-கொண்டார். இந்நிகழ்ச்சி கலியுகத்தில் நடந்தது. சத்திய யுகத்தில் அல்ல. இந்த நல்லுணர்விலிருந்து பயன்பெறாவிட்டால் நாம் துர்ப்பாக்கிய சாலிகளேயாவோம்.

இன்றுவரை நான் பூமிதானமே பெற்று வந்தேன். இனி சம்பத்து தானமும் பெறுவேன். அளிப்பவனிடமே பணம் இருக்கும். சம்பத்துதானத்தில் தன் சொத்து சம்பத்துகளிலிருந்து ஒரு பகுதியை ஒவ்வொரு ஆண்டும் சமுதாயத்திற்கு அளிக்கவேண்டும். நான் வாக்குறுதி மட்டுமே வாங்குவேன். அளிப்பவன் தன் உள்ளத்தையே சாட்சியாகக் கொணடு செல்வத்தைப் பகிர்ந்து கொள்வான். இதுவே என் விசித்திரமான திட்டம். நானே செல்வம் திரட்டினால் அதற்கு கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும். அதிலேயே என் நேரமெல்லாம் கழியும். ஆனால் நான் நாடுவது புரட்சியல்லவா! இந்த இயக்கத்தில் நான் தானம் அளிப்பவர்களிடம் “எங்களுக்கு உங்கள் பணம் வேண்டாம், உங்களுடைய அறிவும் ஆற்றலும் வேண்டும்” என்று சொல்ல விரும்புகிறேன். இதுவே என் உட்கருத்து. நான் விடுபட்டு நின்று உங்களை ஒரு கட்டுக்குள் வைக்க விரும்புகிறேன். இனி நான் பூமி, சம்பத்து இரண்டையும் தானமாகக் கேட்பேன்” (பாட்னா: 23-10-1952).

சாண்டில் என்னும் இடத்தில் நான் கடுமையாக நோய்வாய்ப்பட்டேன் (டிசம்பர், 1952). மலேரியா ஜுரம். இறைவன் ஒன்று என்னை இந்த உடலிலிருந்து விடுவிக்க விரும்பவேண்டும் அல்லது என் உடலைத் தூய்மை செய்து என்னை மீண்டும் வேலையில் ஈடுபடுத்த விரும்பவேண்டும் என்று நான் நினைத்தேன். 1924-லும் இவ்வண்ணமே கடுமையாக நோய்வாய்ப்பட்டேன். அந்த நோயினால் எனக்கு நன்மையே விளைந்தது என்று பிறகு தெரியவந்தது. இறைவன் என்னை இந்த உடலிலிருந்து விடுவிக்க எண்ணினால் மருந்து அவனுக்கு எதிராக என்ன செய்துவிடும்? மாறாக அவன் என்னை இவ்வுடலில் வைக்க எண்ணினால் அதற்கு மாறுபபட்டு எதுவும் எப்படி நடக்க முடியும்? எனவே மருந்து வேண்டாம். நான் மருந்து உட்கொள்ள மறுத்து விட்டேன்.

ஆனால் நண்பர்களும், தோழர்களும் கவலையில் ஆழ்ந்தனர். ராஜேந்திர பிரசாத்திடமிருந்தும் பண்டித ஜவகர்லால் நேருவிடமிருந்தும் தந்திகள் வந்தன. ஸ்ரீ பாபு (பீஹாரின் முதலமைச்சர் ஸ்ரீ கிருஷ்ண பாபு) நேரில் வந்து மிகவும் வற்புறுத்தினார். இவர்கள் யாவரும் கலக்கமுற்றிருந்தார்கள் என்பது எனக்கு விளங்கியது. எனவே நான் மருந்து உட்கொள்ள சம்மதித்தேன். மருந்து உட்கொண்டவுடன் ஜுரம் இறங்கியது. அனைவரின் கவலையும் நீங்கியது.

பாபா முதலில் மறுத்துவிட்டு பிறகு மருந்து எப்படிச் சாப்பிட்டார் என்கிற புதிர் மக்கள் மனத்தில் எழுந்தது. பலர் எனக்குக் கடிதம் எழுதினர். அதில் ஒரு கருத்து மருந்து சாப்பிட்டது மிக நல்ல காரியம் என்பதாகும். மற்றொரு கருத்து மருந்து சாப்பிட்டது பெரும்பாவம், கடவுள் மீது எனக்கு நம்பிக்கை போய்விட்டது என்பதாகும். மூன்றவதாகவும் ஒரு கருத்து இருந்தது. நடந்தது தவறானாலும் மக்களுக்குச் சேவை செய்யும் முகத்தான் நடந்தது. எனவே மன்னிக்கலாம் என்பதாகும். எனக்கு ஒரு கீதா ஸ்லோகம் நினைவுக்கு வந்தது.

"அநிஷ்டம் இஷ்டம் மிஸ்ரம் சத்ரிவிதம் கர்மணஹ பலம் பவதி அத்யாகினாம் ப்ரேத்ய நது சன்யாசினாம் க்வ சித்".

(இனியது, இன்னாதது, இரண்டும் கலந்தது என செயல்களுக்கு மூன்றுவித பலன்கள் பற்றறுக்காதவர்களுக்கு உண்டு. துறந்தார்க்கு சற்றும் இல்லை - *மொழி பெயர்ப்பாளன்*).

இந்த வகையான மூவித பலன்கள் என் தலையில் விடியுமா விடியாதா என்று எனக்குத் தெரியாது. அதை அறிந்து கொள்ளும் ஆர்வமும் இல்லை. இறைவன் நடத்தியபடி நடந்தேறியது என்பதே என் கருத்து. எனவே இதுபற்றி எனக்குக் கவலை எதுவும் இல்லை.

நான் சாண்டிலில் (7-3-1953) "நாம் சுதந்திரமான மக்கள் சக்தியை நிறுவ வேண்டும். அதாவது வன்முறைக்கு எதிரான ஹிம்சை முறைகளுக்கு மாறான ஒரு மக்கள் சக்தியை வெளிக்கொணர வேண்டும். மக்களே நாம் வணங்கும் மகேசர்கள்" என்றேன். என் யாத்திரைக்குப்பின் இருக்கும் சக்தி என்னுடையது அல்ல. தொழிற்சாலைகள், வயல்கள் மற்றும் சுரங்கங்களில் வேலை செய்யும் தபஸ்விகளுடையது ஆகும். அரை வயிறு நிரம்பியும் மகிழ்ச்சியாக வேலை செய்கிறார்கள். எவருக்கும் துன்பம் விளைவிக்காமல், தாமே துன்பங்களைச் சுமக்கிறார்களே அந்த தவமே என்னைத் தட்டி எழுப்புகிறது.

பீஹாரில் எனக்கு பகவானின் "பிரசாதமும்" கிடைத்தது. தேவ்கர் வைத்யநாத ஆலயத்தில் ஹரிஜனங்கள் புடை சூழ சிவபெருமானைத் தரிசிக்கப் போனோம் (19-9-1953). அவரை தரிசிக்க முடியவில்லை. மாறாக அவரது பக்தர்கள் கையால் அடிகள் கிடைத்தன. அடித்தவர்கள் அறியாமையால் அடித்ததால் அவர்களுக்கு தண்டனை கிடைப்பதில் எனக்கு விருப்பமில்லை. ஆனால் என்னுடன் வந்த நூற்றுக்கணக்கான சகோதர-சகோதரியர் அமைதியாக இருந்தனர் என்பதைக்கண்டு எனக்கு நிறைவாக இருந்தது. அது மட்டுமல்ல, அதிகமான அடிகள் வாங்கிய என் தோழர்கள் அடிவாங்கிய சமயத்திலும், அவர்கள் மனத்தில் கோபம் இல்லை என்றனர். இந்த நிகழ்ச்சி தீண்டாமை அரக்கனின் இறுதிக்கால ஆவேசம் என்பதே என் நம்பிக்கை.

பலவந்தமாகவோ, சட்டத்தின்படியோ கோவிலில் பிரவேசிப்பதில் எனக்கு விருப்பம் இல்லை. மாறாக எந்தக்கோவிலில் ஹரிஜனங்கள் நுழைய முடியாதோ, அங்கே நானும் போவதில்லை என்கிற வழக்கத்தை வைத்திருந்தேன். அங்கே முன்னதாக விசாரித்த போது கோவிலுக்குள் ஹரிஜனங்கள் போகலாம் என்று சொன்னார்கள். எனவேதான் மாலைப் பிரார்த்தனைக்குப் பிறகு மிகுந்த பக்திசிரத்தையுடன் சுவாமி தரிசனத்திற்கு புறப்பட்டோம். வழியில் நாங்கள் மௌன விரதம் அனுஷ்டித்தோம். நான் மனத்திற்குள் வேதத்தில் வரும் மகாதேவ ஸ்துதியை சிந்தித்த வண்ணம்

சென்று கொண்டிருந்தேன். அந்நிலையில் எதிர்பாராது எங்கள் மேல் விழுந்த அடியினால் ஒரு புதிய உற்சாகம் எனக்குள் கிளர்ந்தெழுந்தது. துணைவர்கள் என்னைச் சூழ்ந்து கொண்டனர். எனவே என் மீது நடத்திய தாக்குதல்களை எல்லாம் துணைவர்கள் ஏற்றுக்கொண்டனர். ஆனாலும் எனக்குக் கொஞ்சம் 'பிரசாதம்' ருசி பார்க்கவாவது கிடைக்கவே கிடைத்தது. யாருடைய திருவடிகளின் தாஸன் என்று நான் கூறப்படுகிறேனோ அவர் மீதும் இதே புண்ணிய பூமியில் இங்ஙனமே தாக்குதல் நிகழ்ந்தது. அது என் நினைவுக்கு வந்தது. அதே பேறு எனக்கும் கிட்டியது. கொடுத்துவைத்தவனாக என்னை நானே கருதினேன்.

*14-12-1952* லிருந்து *31-12-1954* வரை பீஹார் யாத்திரை நடந்தது. *23* லட்சம் ஏக்கர் பூமி கிடைத்தது. ஆனால் அதைவிடப் பெரிய விஷயம் இன்னொன்று உண்டு. பீஹார் யாத்திரையின் போது இறையன்பை நான் நன்கு உணர்ந்தேன் என்று சொல்லமுடியும் என்பது தான் அது. பீஹாரைப் பொறுத்த வரையில் என் மனத்தில் ஒரு கனவு இருந்தது; இன்னும் இருக்கிறது. பூதான இயக்கத்தை அடிப்படையாகக் கொண்ட கிராமத் தொழில் முதன்மை படைத்த அஹிம்சைப் புரட்சி பீஹார் மண்ணில் நடந்தே தீரும் என்பதே அது. இத்தனைநாட்கள் அங்கு சுற்றுப்பயணம் செய்யும் பேறு பெற்றமைக்காக என்னை நான் பாக்கியசாலி என்றே கருதுகிறேன். அங்கே ஒவ்வொரு அணுவிலும் நான் இறைவனை கண்ணாரக் கண்டேன். அங்குள்ள மக்களின் எளிமையும், தாராள மனப்பான்மையும் மனத்தைத் தொடாமல் இருக்க முடியாது. பிராந்திய உணர்வு என்று சொல்லப்படும் உணர்வு மற்ற மாநில மக்களைவிட அங்கே குறைவாகத் தோன்றியது. அங்குள்ள மக்கள் என்னை தம்மவனாகவே கருதினார்கள். அங்கே மிகுந்த ஆனந்தமும். அமைதியும் கிட்டின. மனிதனின் ஆத்மாவில் உள்ளது கலப்பற்ற ஆனந்தமே, வானத்தளவு பரந்த ஆனந்தம். பீஹார் பூமியில் இந்த ஆனந்தம் எங்களுக்குக் கொள்ளை கொள்ளையாய்க்கிடைத்தது. வானம் போல் விரிந்த உள்ளம் எங்களை எங்கெங்கும் ஸ்பரிசித்தது. எனவே இந்த யாத்திரையை நாங்கள் ஆனந்த யாத்திரை என்றே சொன்னோம்.

**சைதன்ய மகாபிரபுவின் பூமியில்**
**(மேற்கு வங்க – ஒரிஸ்ஸா யாத்திரை)**

பீஹாரில் கிடைத்த அன்பின் ஊக்கத்துடன் நாங்கள் வங்காளத்தில் பிரவேசித்தோம். புத்தரின் பூமியிலிருந்து சைதன்யரின் பூமிக்கு வந்தோம். அங்கே *25* நாட்கள் அன்புப் பயணம் நடைபெற்றது (*1-25* ஜனவரி*1955*). நாங்கள் ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சமாதிக்குப்போனோம் "இனி தனி நபர் சமாதி நிலை போய் சமுதாய சமாதி நிலை கூடவேண்டும்" என்று அங்கே நான் கூறினேன். "இந்த மாமனிதர் துன்பம் துடைத்து சமாதியில் அமர்வது எப்படி என்பதையும், பொன்னாசையிலிருந்து தப்புவது எப்படி என்பதையும் நமக்குக் கற்பித்திருக்கிறார். சமுதாய அளவில் துன்பம் அறுத்து சமுதாயத்தில் செல்வத்தையும் சம்பத்தையும் பகிர்ந்தளிக்கும் வேலையைச் செய்ய நாம் அறைகூவல் விடுத்திருக்கிறோம். ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு பணத்தைத் தீண்டுவதும் சகிக்க முடியாது. அவரை அடியொற்றி நானும் சமுதாய அளவில் பணத்தினின்றும் விடுதலைக்கு முயன்று வருகிறேன்" என்று நான் பேசினேன்.

வங்காளத்திற்குப்பின் வீரர்கள் பூமியாகிய ஒரிஸ்ஸாவில் பிரவேசித்த தில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி (26-1-55). இது அசோக சக்கரவர்த்திக்கு அஹிம்சையில் தீட்சை கிடைத்த இடமாகும். இது துஷ்டாத்மா அசோகனை, தர்மாத்மா அசோகனாக மாற்றியது.

நான் உத்திரப்பிரதேசத்தில் பாதயாத்திரை செய்து கொண்டிருந்த போது ஒரு கிராமதானம் (மங்க்ரோட்) திடீரென கிடைத்தது (23-5-52). பீஹார் யாத்திரைக்குப்பின் நான் ஒரிஸ்ஸாக்காரர்களிடம் "பூதானத்தில் பீஹார் வாசிகள் சரித்திரம் படைத்தார்கள். இப்போது இங்கே கிராமதானம் நடைபெறவேண்டும்" என்று சொன்னேன்.

மழைக்காலத்து நான்கு மாதங்களும் கோராபுட் மாவட்டத்தில் கழியும்படியாக இறைவனின் சித்தம் இருந்தது. யாத்திரையில் மழை பெய்யும் போது நான் ஒரு வேத மந்திரத்தை திரும்பத்திரும்ப ஓதுவேன்.

இம்மந்திரத்தில் ரிஷியானவர் "வானத்தினின்றும் எங்கள் மீது மழை நன்குபெய்வதாக! இது உனது கருணை! எனவே நாங்கள் மழையை எப்போதும் வரவேற்கிறோம்" என்று இறைவனிடம் வேண்டிக்கொள்கிறார். இம்மந்திரத்தை நாம் கோஷிப்போம்.

எங்கள் பாதையில் (இந்த மழையால்) இடையூறு ஏதும் வராதிருப்பதாக என்றும் ரிஷி கூறுகிறார். எங்கள் நடைபயணத்திலும் இந்த மழையால் தடை ஏதும் ஏற்படவில்லை. தொண்டர்களிடம் மிகுந்த தன்னம்பிக்கை உண்டாயிற்று. சாதாரணமாக மழைக்காலத்தில் பிரச்சார வேலை தொய்வடைவது வழக்கம். அதுவும் மலேரியாக்காய்ச்சலுக்கு பெயர் பெற்ற கோராபுட் மாவட்டத்தில் மழைக்காலத்தில் பிரச்சாரவேலை குறிப்பிடும் படியாக நடக்கும் என்று தோன்றவில்லை. ஆனாலும் பாதயாத்திரையிலோ, பிரச்சாரத்திலோ தடையேற்படவில்லை. 600 கிராமதானங்கள் கிடைத்தன.

ரிஷியானவர் மூன்றாவதாக இந்த ஆயிரக்கணக்கான மழைத்துளிகள் வாயிலாக இறைவனே நம்மைத்தொடுவது போல இருக்கிறது. இதனால் நம் மனோபலமும் ஆயிரம் மடங்கு அதிகமாக வேண்டும் என வேண்டுகிறார். அந்த மாவட்டத்தில் கிடைத்த அனுபூதிகளினால் என் மனோபலம் உண்மையாகவே ஆயிரம் மடங்கு ஆயிற்று. ஏனெனில் எனக்கு ஏற்பட்ட மனோபலம் ஆயிரம் பேருக்கும் ஏற்பட்டது. தனிப்பட்ட முறையிலும் என் மனோபலம் வளர்ந்தது.

பிறகு நாங்கள் சர்வோதய மாநாட்டில் பங்கேற்பதற்காக பூரி (ஜகன்னாதபுரி) போனோம். அங்கே பூரி ஜகன்னாதரை தரிசிக்க கோவில் வரை போனோம் (21-3-1955). ஆனால் நான் மிகுந்த பக்தியுடன் போயும் தரிசிக்காமல் திரும்பவேண்டியதாயிற்று. என்னுடன் ஒரு பிரான்ஸ் நாட்டு சகோதரி இருந்தாள். அவள் கோவிலுக்குள் பிரவேசிக்க முடியாது என்றால் நானும் பிரவேசிக்கக்கூடாது என்பதே என் தர்மமாக எனக்குப்பட்டது. நான் இந்து மதத்தை சிறுவயதிலிருந்து இடைவிடாது ஆராய்ந்து வந்திருக்கிறேன். ரிக்வேதத்திலிருந்து ராமகிருஷ்ண பரமஹம்ஸர்' மகாத்மா காந்திவரை மதம்

சம்பந்தப்பட்ட சிந்தனைத்தொடரை நான் பக்திசிரத்தையுடன் ஆராய்ந்திருக்கிறேன். இந்து மதத்தை நான் அறிந்த அளவுக்கு நான் அறிந்த வகையில் என் வாழ்வில் நடைமுறைப்படுத்த முயன்று வருகிறேன் என்பதை பணிவுடன் கூறிக்கொள்கிறேன். அந்த பிரெஞ்சு சகோதரியை வெளியே நிறுத்திவிட்டு நான் மட்டும் உள்ளே போவது அதர்மம் என்று எனக்குப் பட்டது. அங்கே இருந்த அதிகாரியிடம் "இந்தச் சகோதரியுடன் கோவிலில் பிரவேசிக்க அனுமதி கிடைக்குமா?" என்று கேட்டேன். "முடியாது" என்று பதில் கிடைத்தது.எனவே இறைவனுக்குப் பதிலாக அவரையே பக்தியுடன் வணங்கி நான் திரும்பிவிட்டேன்.

அப்போது எங்களை உள்ளே விடமறுத்தவரைப் பற்றி எந்த விதமான மட்டமான உணர்ச்சியும் என் மனதில் இல்லை என்று நான் கூறினேன். அவருக்கும் வருத்தம் ஏற்பட்டிருக்கும். ஆனால் அவர் சம்பிரதாயத்துக்குக் கட்டுப்பட்டவர். எனவே அவரை நான் அதிகம் குற்றம் சாட்டமாட்டேன் அது நம் மதத்திற்கும் நம் நாட்டிற்கும் துயரம் தரும் நிகழ்ச்சி என்று மட்டும் சொல்வேன். குருநானக் அவர்களுக்குக்கூட இந்தக் கோவிலில் பிரவேசிக்க அனுமதி கிடைக்கவில்லை.அவர் திரும்பிப்போகவேண்டியதாயிற்று .ஆனால் அது மிகப்பழைய செய்தி. இனியாவது இது போல மீண்டும் நிகழாது என்று நம்புவோமாக.

**பரமாச்சாரியார்களின் பூமியில்**
**(தென் இந்திய யாத்திரை)**

நம் பழைய சம்பிரதாயப்படி தீர்த்த யாத்திரை செய்பவர்கள், கங்கை நீரை எடுத்து வந்து ராமேஸ்வர மூர்த்திக்கு அபிஷேகம் செய்வார்கள். அப்போது பாதியாத்திரை முடிந்ததாகப் பொருள்படும். பிறகு ராமேஸ்வரத்திலிருந்து கடல்நீரை காசிக்கு எடுத்துச் செல்வார்கள். அங்கே காசி விஸ்வநாதருக்கு அதை அபிஷேகம் செய்வார்கள். அப்போதுதான் யாத்திரை முழுவதும் முடிந்ததாக ஆகும். இவ்வாறே நாங்களும் வடக்கேயிருந்து பூதான இயக்கத்தின் கீர்த்தியுடன் தெற்கே வந்துசேர்ந்தோம் (ஆந்திரா 1-1-1955). பீஹாரில் கிடைத்த லட்சக்கணக்கான ஏக்கர் நிலம், லட்சக்கணக்கான கொடையாளிகள், ஒரிஸ்ஸாவில் கிடைத்த ஆயிரம் கிராமதானங்கள் ஆகியவற்றுடன் தமிழ்நாடு வந்து சேர்ந்தோம்.(13-5-1956). பீஹாரில் ஒரு மாநிலத்தில் லட்சக்கணக்கானோர் லட்சக்கணக்கான ஏக்கர் களைத் தரமுடியும் என்று நிரூபணமாயிற்று. ஒரிஸ்ஸாவில் ஆயிரக்கணக்கான கிராமதானங்கள் நடைபெறக்கூடும் என்று உறுதியாயிற்று. ஒரு வகையில் என் வேலை முடிந்தமாதிரிதான். அதாவது இம்முறையில் வேலை நடைபெறமுடியும் என்பது நிரூபணம் ஆகிவிட்டது. இதைவிட ஒரு மனிதனால் என்ன செய்துவிட முடியும்? எனவே என்னைப் பொறுத்தவரை என் இந்த வேலை முடிந்து விட்டது. எனவே பூதானத்துடன் வேறுவேலைகளை இணைக்க நினைத்தேன். அதை இங்கிருந்து வடக்கே கொண்டுபோக நினைத்தேன்.

ஐந்து வருடங்கள் எங்கள் பயணம் இடைவிடாது நடந்தது. முதல் வருடம் மழைக்காலத்து இரு மாதங்களை நாங்கள் பயணத்தை நிறுத்தி

காசியில் கழித்தோம். ஆனால் இரண்டு மாதங்களில் பதின்மூன்று நாட்களே மழை வந்தது. பதின்மூன்று நாட்களுக்காக இரண்டு, இரண்டரை மாதம் பயணத்தை நிறுத்தி வைப்பது சரியாகப் படவில்லை. எனவே இரண்டாம் வருடத்திலிருந்து மழைக்காலத்திலும் எங்கள் யாத்திரை தொடர்ந்தது.

இதுவரை நாங்கள் ஒரு நாளைக்கு ஒரு ஊரில் முகாமிட்டு வந்தோம். தமிழ்நாட்டில் ஒரு நாளைக்கு இரண்டு முகாம்கள் இட ஆரம்பித்தோம். இந்தியாவில் ஐந்து லட்சம் கிராமங்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றிற்கும் போகும் ஆசையினால் நான் ஒரு நாளைக்கு இரண்டு முகாம்கள் என்று ஆரம்பிக்கவில்லை. அப்படி ஒரு அகந்தை எனக்கு இருந்தால் அது ரஜோகுணமாகும்.எனக்கு ரஜோகுணத்தில் நாட்டமில்லை.அதனால் நன்மை எதுவும் விளையாது. என் மனத்தில் ஒரு உத்வேகம் இருந்தது. முடிந்தவரை பாடுபடு என்று அது என்னைத் தூண்டிக்கொண்டிருந்தது. சாத்வீக குணத்தைப் பெற அதிகம் பாடுபடவேண்டும். எனவே நான் ஒரு நாளைக்கு இரண்டு முகாம்கள் என்று ஆரம்பித்தேன். பூதானயக்ஞம் என்னால் நிறைவடையாது என்று நான் அறிவேன். மக்கள் அதனை கைக்கொள்ளும் போதுதான் அது நிறைவடையும்.

ஒரு சகோதரர் யாத்திரையே உங்கள் முக்கிய வேலையானால் கிராமத்தில் என்னவேலை நடக்கும் என்று கேட்டார். யாத்திரை என் பிரார்த்தனையாகும் என்று நான் அவருக்கு பதில் சொன்னேன்.

வங்காளத்திலிருந்து சாருபாபு "நீங்கள் ஒரு நாளைக்கு இருமுறை பாதயாத்திரை செய்ய ஆரம்பித்திருக்கிறீர்கள். இதனால் உங்கள் சத்தியாகிரகத்திற்கு மெருகு கூடிவிட்டது. இதனால் நம் வலிமை பெருகும்" என்று எழுதியிருந்தார். இது எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அப்படி யோசித்து நான் செயல்பட்டேன் என்று சொல்ல முடியாது என்றாலும் மேலும் அழகாகச் செய்ய வேண்டும் என்கிற ஆசை உண்டு. அழகு மேலும் கூடவும் செய்கிறது. ஒரு நாள் முழுவதும் ஒரு ஊரில் தங்கினால் அங்கு கொஞ்சம் ஆற்றல் செலவாகும்.கொஞ்சம் வற்புறுத்தலும் பூதான இயக்கத்தில் கலந்துவிடும். ஒரு நாளைக்கு இரண்டுமுறை பாதயாத்திரை செய்ய ஆரம்பித்தால், நம் கருத்தைச் சொன்னோம், நடையைக் கட்டினோம் என்று இருக்கும். இது நிச்சயம் அதிக அழகானதே ஆகும்.

எனக்கு நிலம் அதிகம் கிடைத்தால் மகிழ்ச்சியோ, குறைவாகக் கிடைத்தால் துயரமோ கிடையாது. எங்கள் பீஹார் யாத்திரையின் போது சராசரியாக ஒரு நாளைக்கு முன்னூறு முன்னூற்றைம்பது தானபத்திரங்களும், சுமார் மூவாயிரம் ஏக்கர் நிலமும் கிடைத்தன. வக்கீலின் தொழில் சூடு பிடித்தால் அவர் கட்டணமும் அதிகமாவது வழக்கம். ஆனால் இங்கு தமிழ்நாட்டிலோ எங்களுக்குக் கட்டணம் குறைந்து போய்விட்டது. சேலம் மாவட்டத்தில் 33 நாட்களில் நான்கு-நான்கரை ஏக்கர்தான் கிடைத்தது. நிதி வறண்டு போக ஆரம்பித்ததாகத் தோன்றியது. ஆனால் அடியில் ஓடும் நீரோட்டம் வறண்டுபோகவில்லை. இறை நாட்டம் இடைவிடாது ஓடிக்கொண்டுதான் இருக்கிறது. காவிரி புறத்தே காயலாம். ஆனால் நதியின் அடியில் உள்ள நீரூற்று காயாது.

பழனியில் நான் எங்கள் தொண்டர்கள் முன்பு நிதிமுக்தி யோசனையை வைத்தேன் (16-22 நவம்பர் 56). இன்று பலர் மனதில் ஒரு பிரமையிருக்கிறது. பெருமளவு பிரமையானாலும், ஓரளவு உண்மையும் அதில் இருக்கிறது. பூதான இயக்கம் சம்பளம் வாங்கும் ஊழியர்களால் நடைபெறுகிறது என்கிற எண்ணம்தான் அது. தமிழ்நாட்டில் சுமார் 500 தொண்டர்கள் செயலாற்றிக் கொண்டிருப்பார்கள். அவர்களில் 50பேர்கள்தான் சம்பளம் வாங்குபவர்கள். ஆயினும் மேற்சொன்ன எண்ணம் உருவாவதற்கு நாமும் காரணம். சம்பள ஊழியர்கள் இல்லாமல் வேலை நடக்காது என்று நாமும் நினைக்கின்றோம். அவர்களை நம்பித்தான் இயக்கம் இருக்கிறது என்ற தோற்றம் ஏற்படுகிறது, இதை உடைத்து எறியுங்கள். இந்த ஆண்டு டிசம்பர் 31-லிருந்து சம்பளம் எல்லாம் நிறுத்தப்படும் என்று அறிவியுங்கள். பட்ஜெட்டே கிடையாது. நமக்குத் தேவையானவற்றைப் பெற வேறு வழிகள் தோன்றும். இதனால் நம் வேலைகள் நின்று போகும் என்ற ஐயம் ஏற்படலாம். ஆனால் ஒன்றும் காரியம் கெட்டுப்போகாது என்று நான் சொல்லுகிறேன். நாம் ஒருவர் மற்றவரைத் தாங்கி நிற்போம் என்று நினைத்து இதைச் செய்வோம். யாரையும் நாம் நீக்க மாட்டோம். நம்மிடம் இருப்பதைப் பகிர்ந்து உண்போம்.

நிதிமுக்தியுடன் நிர்வாக முக்தியும் தானே கிடைத்து விட்டது. இந்தியா முழுவதும் பூதான வேலைகளைக் கவனிக்க மாவட்டங்கள் தோறும் பூதான சமிதிகள் இருந்தன. இந்தியாவின் 300 மாவட்டங்களில் 250-ல் பூதான சமிதிகள் இயங்கி வந்தன. அவற்றுக்கு காந்தி நினைவு நிதியிலிருந்து உதவி கிட்டி வந்தது. காந்தி நினைவு நிதிக்காரர்கள் பூதான இயக்கம் வழியாக காந்தியக் கருத்துக்கள் பரவும் அளவுக்கு வேறு எந்த வழியிலும் பரவாது என்று நினைத்து பெரும் மகிழ்ச்சியுடன் பூதான இயக்கத்திற்கு நிதியளித்தார்கள்.

ஆனால் கிராமதானம் ஆரம்பித்தபின் இன்னொரு புரட்சிகரமான அடியெடுத்து வைக்க வேண்டும் என்று நான் நினைத்தேன். எனவே பூதான இயக்கத்திற்கு காந்தி நினைவு நிதியிலிருந்து கிடைக்கும் உதவியை நான் நிறுத்தச் செய்து விட்டேன். எல்லா பூதான சமிதிகளையும் கலைத்து விட்டேன். ஒரு கட்சி பிரபலமாகும்போது தன் நிர்வாகத்தை வலுப்படுத்த விரும்பும். ஆனால் நானோ தலைகீழாக செயல்பட்டேன். மனித சிந்தனையின் வரலாற்றை எழுதும் எதிர்கால சரித்திர ஆசிரியன் இந்த சிந்தனைக்கு முக்கியத்துவம் அளிப்பான். மனித சிந்தனையின் படிப்படியான வளர்ச்சியை சித்தரிக்கும் வரலாறே உண்மையான வரலாறு ஆகும்.

நான் ஏன் இந்த நிர்வாக அமைப்பை உடைத்தெறிந்தேன்? ஏனெனில் நிறுவனங்களால் சாதாரண தொண்டு வேலைகள்தான் செய்ய முடியும். ஆட்சியைக் கைப்பற்ற முடியும். ஆனால் மக்கள் புரட்சி வரமுடியாது. புரட்சிகள் கருத்துக்கள் சம்பந்தப்பட்டவையாகும். நிர்வாக அமைப்புக்கள் சம்பந்தப்பட்டவை அல்ல.

பூதான சமிதிகள் கலைக்கப்பட்டதற்கான பலன் இருவிதமாகவும் இருந்தது. சில மாநிலங்களில், 40-50 தொண்டர்களுக்குப் பதிலாக நூற்றுக்கணக்கான தொண்டர்கள் உருவாகினர். சில மாநிலங்களில் இருந்த 40-50 தொண்டர்களும் இல்லாமல் போயினர். நான் இரண்டையும்

எதிர்பார்த்தேன். சமிதிகளைக் கலைத்ததனால் இந்தியா முழுவதிலுமே வேலைகள் நின்றுபோனாலும் நான் எடுத்த முடிவு சரி என்பதே என் கருத்தாக இருந்திருக்கும். புரட்சி நிறுவனங்களால் நடத்தப்பட முடியாது என்பது சித்தாந்தம். நிறுவனம் என்பது ஒரு அமைப்பு, ஒரு ஒழுங்கு முறையாகும். நிறுவனத்தில் இயங்கவும், இயக்கவும் அந்த அமைப்பு அல்லது ஒழுங்கு முறைகள் இருந்தாக வேண்டும். அதில் கருத்துச் சுதந்திரம் இருக்க முடியாது.

தமிழ்நாட்டில் காஞ்சி சங்கராச்சாரியாரை சந்தித்தோம். சங்கராச் சாரியார்கள் துறவிகள். ஆனால் இந்த சங்கராச்சாரியாருக்கு சில காலம் பீடத்தில் இருந்தபின் அந்த பீடத்திலிருந்தும் துறவு மேற்கொள்ளும் எண்ணம் ஏற்பட்டது.எனவே தன் சிஷ்யரை அந்த பீடத்தில் அமர்த்தி காஞ்சிக்கு அருகே ஒரு கிராமத்தில் வசிக்க ஆரம்பித்திருக்கிறார். அவருடைய குடிசையில் ஒரு குடம்,இரண்டுமூன்று புத்தகங்கள்,இரண்டுமூன்று பாய்களைத்தவிர எதுவும் இல்லை என்பதை நான் கண்டேன். அவர் முற்றும் துறந்தவர், மகா பண்டிதர். தமிழ்நாட்டில் அவரைப் பெரிதும் போற்றுகிறார்கள். 1300 ஆண்டுகளுக்குப் பின்னரும் சங்கராச்சாரியார் பீடத்தில் அப்படிப்பட்ட மனிதரைப் பார்த்து ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இயங்கிவரும் பழைய நிறுவனங்களின் அடிப்படை என் கருத்தில் பதிந்தது.

கன்னியாகுமரி வந்து சேர்ந்தோம். அங்கே இரண்டு நாள் இருந்தோம். இரண்டாவது நாள் (16-4-1957) கடலுக்குப் போனோம். சூரிய நாராயணன் உதயமாகிக்கொண்டிருந்தான். கடல் கன்னியாகுமரியின் திருவடிகளைக் கழுவிக்கொண்டிருந்தது.கடல் நீரின் ஸ்பரிசம்,சூரிய நாராயணனின் தரிசனம், கன்னியாகுமரியின் தியானம் ஆகியவற்றுடன் நான் என் பிரதிக்ஞையை மீண்டும் ஒருமுறை எடுத்துக்கொண்டேன். (முதல் முறை ராஜ்காட்டில் பிரதிக்ஞை எடுக்கப்பட்டது)

“சுயராஜ்யம், கிராம சுயராஜ்யமாக மாறும்வரை எம் உடல் இதே போன்று வேலையில் ஈடுபட்டிருக்கும்”

பிரதிக்ஞை எடுப்பதற்காகவே இரண்டு நாள் அங்கு தங்க நினைத்தேன். அப்போது என்னுடன் சில நண்பர்களும் இருந்தனர். நினைத்திருந்தால் அவர்களுக்கும் எடுத்துச்சொல்லி அவர்களையும் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளச் சொல்லியிருக்கலாம்.ஆனால் நான் அப்படிச் செய்யவில்லை.நான் மட்டுமே பிரதிக்ஞை எடுத்துக்கொண்டேன்.ஆனாலும் பிரதிக்ஞையில் நான் என்று கூறாமல் “நாம்” என்று கூறினேன். அது என் வழக்கம். நான் என்னை ஒருபோதும் தனியொரு மனிதனாக நினைப்பதில்லை. எனவே “நான்” என்பதற்கு மாறாக “நாம்” என்றது இயல்புதான். இந்த் பிரதிக்கஞை தனிப்பட்ட முறையில் நான் எடுத்ததுதான். ஆனால் எல்லோர் மனத்திலும் அப்படிப்பட்ட பிரதிக்ஞை ஏற்பட வேண்டும் என்பது என் அவா. தமிழ்நாட்டிலிருந்து நாங்கள் கேரளா போனோம். கேரள யாத்திரையின் சிறப்பு என்னவென்றால் அங்கே சாந்திசேனை அமைக்கப்பட்டதேயாகும்.

வன்முறை ஆற்றல் ஓங்காதபடி இந்த சாந்திசேனை விழிப்புடன் இருக்கும்.சாந்திசேனைவீரர்கள் சாதாரண சமயங்களில் சமுதாயத் தொண்டு,

கிராமதானப் பணி ஆகியவற்றில் ஈடுபட்டிருப்பர். அவசியம் ஏற்படும்போது அமைதியை நிலைநாட்ட தன் உயிரையும் கொடுப்பர்.

1957-க்குப் பிறகு எங்கள் வேலை என்ன, எப்படி நடக்கும் என்று என்னிடம் கேள்வி கேட்கப்படுவது வழக்கம். "எங்கள் பணி காலதேச வர்த்தமானங்களைக் கடந்தது" என்று நான் பதில் அளிப்பது வழக்கம். கிராம சுயராஜ்யம் அமைந்துவிட்டது என்று எனக்குப்பட்டது. அந்நியர் ஆட்சி முடிந்தது என்று சுவாமி ராமதாசர் முன்னதாகவே கண்டு 'மிலேச்சர் முடிந்தனர்' என்றார். சுவாமி ராமதாசர் மறைந்து 25 ஆண்டுகள் கழித்துதான் ஔரங்கசீப் மரணமடைந்தார். ஆனால் ராமதாசர் அதை முன்னதாகவே மனக்கணக்கில் கண்டார். கங்கா ஸ்நானத்திற்கும் சந்தியா வந்தனத்திற்கும் தண்ணீர் கிடைத்து விட்டது என்றார். அதாவது அந்நியர் ஆட்சியில் இருந்த காசிநகரம் விடுதலை அடைந்தது என்றார். அதே போல எனக்கும் கிராம சுயராஜ்யம் ஏற்பட்டுவிட்டது என்று தோன்றியது. ஒரிஸ்ஸாவில் கிராமதானங்கள் நடந்தன. தமிழ்நாட்டிலும் நடந்தன. கேரளாவிலும் கேரளவாசிகள் கொடைப்பணியில் மற்ற மாநிலத்தவர்க்கு சளைத்தவர் இல்லை என்பதைக் கண்டோம். அங்கேயும் நூற்றுக்கணக்கான கிராமதானங்கள் கிடைத்தன. எனவே இந்த விஷயம் நடந்து முடிந்த விஷயம். இப்போது அதைக் காக்க சாந்திசேனை அமையவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டேன். எனக்குத்தான் கணக்கில் எப்போதும் நாட்டமாயிற்றே! ஐயாயிரம் பேருக்கு ஒரு சாந்திசேனை வீரன் தேவை என்று கணக்கிட்டேன். அதாவது 35 கோடி மக்களுக்கு 75 ஆயிரம் வீரர்கள் தேவை. இப்படி ஒரு படை இந்தியாவில் தோன்ற வேண்டும் என்று நினைத்தேன்.

இதற்கு முன்னோடியாக விளங்கும்படி கேரளவாசிகளை நான் கேட்டுக்கொண்டேன். கேளப்பன் போன்ற தலைவர்கள் சாந்திசேனைத் தளபதியாகப் பணிபுரிய முன்வந்தனர். முன்பு அவர் ஏதோ கட்சியில் இருந்தார். ஆயினும் தயங்காமல் உடனடியாக கட்சியிலிருந்து ராஜிநாமா செய்தார். மக்களிடையே அவருக்கு பெரும் மதிப்பு இருந்தது. அப்படிப்பட்ட தளபதி கேரளாவில் சாந்திசேனைக்குக் கிடைத்தார். அவர் சொற்படி கேட்க ஒரு சேனையும் தயாராயிற்று. நூற்றுக்கணக்கான இளைஞர்கள் முன்வந்தனர். அது ஒரு அற்புதமான காட்சி. ஒரு கூட்டத்தில் சுமார் பத்துப் பேர் 'நாங்கள் சாந்திசேனைப் பணிக்குத் தயார். அவசியம் ஏற்பட்டால் உயிரையும் கொடுப்போம்' என்று பிரதிக்ஞை எடுத்தனர். இன்னும் பத்து-இருபது பேர் இப்படி பிரமாணம் எடுக்க முன்வந்திருக்கக்கூடும். ஆனால் நான் அவர்களைத் தடுத்தேன். இன்று முதல் நாள். நிறையப் பேர் வேண்டாம். நம்முடன் நேரடித்தொடர்பு கொண்ட, நன்கு தெரிந்த நபர்கள் மட்டும் ஆரம்பத்தில் போதும் என்றேன். இவ்வாறு கேரளாவில் சாந்திசேனை துவங்கிற்று (கோழிக்கோடு 11-7-57).

சாந்திசேனை அமைத்தான பின்பு "நான் இந்தியா முழுவதற்குமாக ஒரு தலைமைத் தளபதி வேண்டும். அதற்கு இறைவனே ஏற்பாடு செய்வான்" என்று சொன்னேன். எனக்கு பேசவரும் விதத்தில்தான் என்னால் பேச முடியும். அகில இந்திய சாந்திசேனை அமைப்பின் தலைமைப்பொறுப்பை விநோபாவே

ஏற்கவேண்டும் என்று தோன்றியது. விநோபாவும் அதற்கு மானசிகமாக தயாராகிவிட்டான்.

நான் நாடு முழுவதிலும் 70 ஆயிரம் சாந்தி சேனைத் தொண்டர்கள் வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்திருந்தேன். கிடைக்கவில்லையென்றால் நாங்கள் கேலிக்குரியவர்களாகி விடுவோம். எனக்கு அதுவும் பிடித்தே இருக்கிறது. ஹாஸ்யமும் நவரசங்களில் ஒன்று அல்லவா! அது மக்களுக்குக் கிடைப்பது நல்லதுதான்.

நான் கணக்குப்போட்டு புள்ளி விபரம் வைத்துக்கொள்வது நம் லட்சியத்தை கவனத்தில் வைப்பதற்காகவே ஆகும். நான் 5 கோடி ஏக்கர் நிலம் வேண்டும் என்று சொன்னேன். 40 லட்சம் ஏக்கர்தானே கிடைத்திருக்கிறது. இப்போது என்ன செய்வீர்கள்? என்று சிலர் கேட்கிறார்கள். இவ்வாறு நம்மை நாமே நகைப்புக்கிடமாக்கிக் கொண்டோம். 25-30 லட்சம் ஏக்கர் நிலம் வேண்டும் என்று சொல்லியிருந்தால் அதைவிட அதிக நிலம் கிடைத்தது. என்று சொல்லிக்கொண்டிருந்திருக்கலாம். ஆனால் நானோ ஐந்து கோடி என்று தீர்மானித்தேன். என்னைக் கேலி செய்பவர்கள் இந்த நாட்டில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அறியாதவர்கள். "விரிவில்தான் இன்பம், சுருக்கத்தில் அல்ல." நான் அசாத்தியம் என்று தோன்றும் லட்சியத்தை முன்வைத்து நடக்கிறேன். அதை சாத்தியமாக்க முயல்கிறேன். இதிலிருந்துதான் என் கால்களுக்கு ஆற்றல் கிட்டுகிறது.

கேரளாவில் குருவாயூரில் ஒரு புகழ்பெற்ற கோவில் இருக்கிறது கேரளாவின் பண்டரிபுரம் என்றே சொல்லலாம். பல ஆண்டுகள் முன்பு ஹரிஜனங்கள் ஆலயப்பிரவேசத்திற்காக கேளப்பன் அங்கே உண்ணாவிரதம் இருந்தார். அந்த உபவாசத்தில் காந்திஜி பங்கேற்றார். காந்திஜி கேளப்பனிடம் "நீங்கள் உண்ணாவிரதம் இருக்கவேண்டாம். உங்களுக்குப் பதிலாக நான் இருக்கிறேன்" என்றார். காந்திஜி தானே உண்ணாவிரதம் மேற்கொண்டார். அதன் பின் அந்தக்கோவில் ஹரிஜனங்களுக்கு திறந்து விடப்பட்டது. நான் அங்கு போனபோது என்னுடன் சில கிறிஸ்துவ நண்பர்கள் இருந்தனர். நான் கோவில் அதிகாரிகளிடம் இவர்களுடன் உள்ளே போக அனுமதி கிடைக்குமா? என்று கேட்டேன். "இவர்களுடன் உள்ளே போக அனுமதிக்க முடியாது. ஆனால் நீங்கள் உள்ளே வந்தால் எங்களுக்குப் பெரும்மகிழ்ச்சி ஏற்படும். வராவிட்டால் எங்களுக்குப் பெரும் வருத்தம் ஏற்படும்" என்றார்கள் அவர்கள். அவர்கள் இல்லாமல் என்னால் வர இயலாது. என்னுடன் வந்துள்ள கிறிஸ்தவ நண்பர்களின்றி உள்ளே போய் இறைவனைக் காணமுடியும் என்று நான் நினைக்கவில்லை. அங்கே இறைவன் தென்படமாட்டார். எனவே நான் உள்ளே வரவில்லை" என்று சொன்னேன். உள்ளே போகவில்லை.

குருவாயூர் கோவிலில் என்னை உள்ளே வரவிட மறுத்ததற்கு மலையாளப் பத்திரிகைகளில் தொடர்ந்து பலத்த கண்டனம் வந்தது. மிகப் பெரும்பான்மையினர் இதற்கு எதிராக இருந்தனர். ஓரிரண்டு பத்திரிகைகளே வேற்று மதத்தினரை உள்ளே அழைத்துச்செல்ல அனுமதிக்க வற்புறுத்துவது தவறு என்று எழுதின. மீதி இருந்த 20-25 பத்திரிகைகள் என் கருத்து சரியே

என்றும் என்னைக் கோவிலுக்குள் விடாதது தவறு என்றும் இந்து தர்மத்திற்கு ஏற்பட்ட களங்கம் என்றும் எழுதின.

சில இடங்களில் இதற்கு மாறுபட்ட அனுபவங்களும் ஏற்பட்டன. மேலக்கோட்டையில் ராமானுஜர் பதினைந்து ஆண்டுகள் வாழ்ந்தார். அங்கே ராமானுஜரின் கோவில் உள்ளது. ராமானுஜர் மிகவும் பரந்த மனப்பான்மை கொண்டவர். உலக முன்னேற்றத்திற்கு அருந்தொண்டு ஆற்றியவர். நான் அங்கே போனேன். என்னுடன் வந்த நண்பர்களில் சிலர் கிறிஸ்தவர்கள். அவர்களுடனேயே நான் உள்ளே போனேன். மேலக்கோட்டையில் அனுமதி கிடைத்தது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

இதன்பின் எங்கள் பூதான யாத்திரை கர்நாடகம் வந்து சேர்ந்தது. அங்கே கோகர்ணம் மகாபலேஷ்வர் கோவிலில் மீண்டும் அதே பிரச்சினை வந்தது. அங்கே என்னுடன் வந்தவர்களில் சலீம் என்ற பெயருடைய ஒரு முஸ்லீம் சகோதரன் இருந்தான். மிகுந்த அன்பும், மிக மென்மையான மனமும் வாய்ந்தவன் அவன். நான் கோவிலுக்கு உரியவர்களிடமும் பிறகு அர்ச்சகர்களிடமும். "இது மாதிரி ஒரு நண்பர் என்னுடன் இருக்கிறார். எங்களை உள்ளே அனுமதிப்பீர்களா?" என்று வினவினேன். நீங்கள் உங்கள் நண்பர்கள் அனைவருடனும் உள்ளே வரலாம். எங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றார்கள் அவர்கள். எனக்கு இதனால் பெரும் மகிழ்ச்சி ஏற்பட்டது. கோகர்ணம் மகாபலேஷ்வர் கோவிலில் பிற மதத்தினருடன் போக எனக்கு அனுமதி கிடைத்தது. நானும் போனேன். அங்கிருந்த இறைவனுக்கு எந்தக் களங்கமும் ஏற்படவில்லை. கோகர்ணம் மகாபலேஷ்வர் சாதாரண ஸ்தலம் அல்ல என்பதை இங்கு கவனிக்க வேண்டும்.

கோவிலில் பிற மதத்தினரையும் அழைத்துச் செல்ல நான் வற்புறுத்தாவிட்டால் இந்து மதத்தின் கௌரவம் பாதிக்கப்பட்டிருக்கும். முஸ்லீம்கள் தங்கள் பள்ளிவாசலிலும், கிறிஸ்தவர்கள் தங்கள் தேவாலயத்திலும், சீக்கியர்கள் தங்கள் குருத்துவாராக்களிலும் எல்லா இடங்களிலும் என்னை அன்புடன் வரவேற்றிருக்கின்றனர். அன்பே நிறைந்த மனத்தை உடையவனை யார்தான் நேசிக்கமாட்டார்?

கர்நாடகத்தில் அம் மாநிலத்தின் முதலாம் ஆண்டு விழாவில் நான் 'ஜெய் ஜகத்' என்னும் கோஷத்தை அளித்தேன் (1-11-57) கர்நாடகம் ஒன்றுபடுவது முதல் நிலை. பாரதம் ஒன்றுபடுவது இரண்டாம் நிலை. அதன்பின் உலகை ஒன்றுபடுத்தவேண்டும். பதினைந்து ஆண்டுகளுக்குமுன் 'ஜெய்ஹிந்த்' என்கிற கோஷம் கிடைத்தது. இப்போது ஜெய் ஜகத் என்கிற அளவில் உயர்ந்திருக்கிறது. உலகத்தில் கருத்துக்கள் வெகுவேகமாக முன்னேறிவருகின்றன. மெல்ல மெல்ல நாடுகளுக்குகிடையில் உள்ள எல்லைக்கோடுகள் சிதைவுறும், இப்போது உலகக்குடும்பம் அமையும் வாய்ப்புக்கள் பெருகிவருகின்றன. மனப்பான்மைகள் விரிந்து பரந்து செல்கின்றன. எனவே இனி நம் கோஷம் 'ஜெய் ஜகத்' என்பதாகும் என்று கூறினேன்.

பல காலம் முன்பு பவுனார் ஆசிரமத்தில் 'ஆஜாத் ஹிந்த்' படையைச் சேர்ந்த சில சகோதரர்கள் என்னைக் காண வந்தனர். அவர்கள் என்னை

'ஜெய் ஹிந்த்' என்று வணங்கினர். நானும் பதிலுக்கு வணங்க வேண்டும் அல்லவா? நான் 'ஜெய்ஹிந்த்' ஜெய் ஜகத், ஜெய் ஹரி என்று வணங்கினேன். 'ஜெய் ஹிந்த்' என்பது குறுகியது என்று கருதும் காலம் வந்துவிட்டது. ஜெய்ஹிந்த் என்பது 'ஜெய் ஜகத்' உடன் இணைந்திருந்தால்தான் சரியான ஒன்றாகும் என்று மேலும் பேசுகையில் நான் சொன்னேன். நம் நாட்டின் வெற்றியில் இன்னொரு நாட்டின் தோல்வி இருக்கலாகாது.உலகம் முழுவதும் சேர்ந்து இறைவனை மறந்து விடவும் கூடாதல்லவா? எனவே அத்துடன் 'ஜெய் ஹரி'யையும் இணைத்தேன். 'ஜெய் ஹரி' ஆழமிக்கது. 'ஜெய் ஜகத்' விரிவு மிக்கது. 'ஜெய் ஹிந்த்' இன்று மிகவும் சின்ன விஷயமாகிவிட்டது. இதை நான் ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு அந்த ஆஜாத் ஹிந்த் படை வீரர்களுக்குச் சொன்னேன். இப்போது கர்நாடகத்தில் சிறு குழந்தையும்கூட 'ஜெய் ஜகத்' என்று கோஷிக்கிறது.

இந்நாட்களில் நான் ஒரு பலத்த சிந்தனையில் ஆழ்ந்திருந்தேன். ஆறு வருடங்கள் உருண்டோடின. வேலை நல்லவிதமாக நடைபெற்றது. பூதானத்திலிருந்து கிராமதானம் வளர்ந்தது. இதுவெல்லாம் என் தனிமனித கிறுக்குத்தனமா? என் ஒருவனின் கற்பனாவாதமா? அல்லது பைத்தியக் காரத்தனமா? உண்மையிலேயே இதில் ஏதாவது தத்துவம் இருக்கிறதா? இதை பரிசோதித்துப் பார்க்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. நான் நாட்டின் தலைவர்களுக்கு இதைப் பரிசிலித்து யோசனைகள் நல்கும்படி சர்வசேவா சங்கத்தின் வாயிலாக அழைப்பு விடுத்தேன்.

கர்நாடக மாநிலத்தில் எல்வாலில் (Elval) சர்வ கட்சியினரும் பங்கேற்ற ஒரு கிராமதான சபை கூடிற்று. அதில் உயர்ந்த சிந்தனைக்கும், வாடிக்கைமுறைக்கும் பெயர்பெற்ற பல தலைவர்கள் கூடியிருந்தனர் ஸ்ரீமான்கள் ராஜேந்திரபிரசாத், பண்டித நேரு, குல்ஜாரிலால் நந்தா, மொரார்ஜிதேசாய்,காமராஜ்,அஹமத்,நம்பூதிரிபாடு,நிஜலிங்கப்பா,திருமதி கிருபலானி முதலியோர். அவர்கள் அனைவரும் ஏகமனதாக கிராமதான கருத்தை வலியுறுத்திப் பேசினர். கிராமதானத் திட்டத்தை ஊக்குவிக்க வேண்டும். இதனால் தார்மீக ரீதியான முன்னேற்றத்துடன் உலகவியல் முன்னேற்றமும் உண்டாகும்" என்று கூட்டறிக்கை வெளியிட்டனர். வேறு என்ன முன்னேற்றம் மனிதனுக்கு வேண்டும்? மதத்தலைவர்கள் ஆதரவு மட்டுமல்ல, உலகவியல் தலைவர்கள் ஆதரவும் கிடைத்தவுடன் கிராம தானத்தை சமுதாயம் முழுவதும் ஏற்றுக்கொண்டது என்பது எனக்கு விளங்கியது. அந்தக் கூட்டத்தில் நான் கிராமதானம் ஒரு 'தற்காப்பு நடவடிக்கை' (Defence measure) என்று கூறினேன்.

இந்தக்கூட்டத்தில் நான் இன்னொரு கருத்தையும் கூறினேன்.ஒவ்வொரு மனிதனின் இதயத்திலும் இறைவன் அந்தர்யாமியாக விளங்குகிறான் என்பது என் அடிப்படை நம்பிக்கை. மேலாகத் தெரியும் தீமைகள் ஆழத்தில் இரா. எனவே மனித மனத்தின் ஆழத்தில் பிரவேசித்து அங்கு நிறைந்திருக்கும் நன்மைகளை வெளியே கொண்டுவர வழிகண்டுபிடிக்க வேண்டும். இன்னொரு விஷயம் என்னவென்றால் இந்த உலகில் எல்லோருமே செல்வம் உடையவர்களே (haves). இறைவனின் அருளால் இல்லாதவர்கள் (have nots)

என்று ஒருவரும் கிடையாது. எனவே ஒவ்வொருவரும் தம்மிடம் இருப்பவற்றை, அது நிலம், உழைப்பு, அறிவு, அன்பு எதுவானாலும் தன் வீட்டுக்கு என்று மட்டும் வைத்துக்கொள்ளாமல் ஊருக்கு அர்ப்பணிக்க-வேண்டும். இல்லையேல் கொடுப்பது ஒரு சாராரின் தர்மமாகவும், வாங்குவது இன்னொரு சாராரின் தர்மமாகவும் ஆகிவிடும். இது சரியல்ல. எல்லோருக்கும் பொருந்தும் தர்மமே சரியான தர்மமாகும்.

சர்வோதயப் பாத்திரம் வைக்கும் யோசனையையும் கர்நாடக யாத்திரையின் போதுதான் நான் முதன்முதலாக வெளியிட்டேன். (தார்வார்: 1-2-58)

கீதையில் எந்த ஒரு செயலுக்கும் ஒரு தளமும் பிறகு ஒரு கர்த்தாவும் வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. சமுதாயத்தில் அகிம்சையைப் பரப்ப ஒரு ஆதார தளம் பூதான இயக்கம் வாயிலாகக் கிடைத்து விட்டது. அதன்பின் நாடு முழுவதிலும் ஐயாயிரம் பேருக்கு ஒருவர் என்ற விகிதத்தில் சிந்தனையிலும், செயலிலும் சிறந்த எழுபதாயிரம் லோக் சேவக்குகள் வேண்டும். அவர்கள் சாந்திசேனையாக, தொண்டர் படையாக ஒவ்வொரு வீட்டுக்கும் ஊருக்கும் தொண்டு செய்து நாட்டில் அமைதி காப்பர். கேரளாவில் அப்படிப்பட்ட ஒரு சாந்திசேனை துவங்கிவிட்டது. இப்போது அதற்கு பல்வகைப்பட்ட சாதனங்கள் அல்லது கருவிகள் வேண்டும்.

நான் இரு வகை சாதனங்கள் வேண்டினேன். ஒன்று பொருள் உபயம் (சம்பத்து தானம்). மற்றது ஒப்புதல் உபயம் (சம்மத தானம்). பொருள் உபயம் என்றால் நம்மிடம் இருப்பதில் கொஞ்சத்தைக் கொடுப்பது. கொடுத்திருப்பதை - கூடுதலாக இருந்தாலும் சரி குறைவாக இருந்தாலும் சரி - மற்றவர்களுக்குக் கொடுத்து எஞ்சியதைத் துய்க்கவே மனிதனுக்கு உரிமை இருக்கிறது. கொடுத்தே துய்க்கவேண்டும் என்பது உபநிஷத்தின் கட்டளை. உழைப்பு, செல்வம், அறிவு எதுவானாலும் கொஞ்சம் தரும்படி நான் ஒவ்வொருவரிடமும் யாசிக்கிறேன். இதனால் மாபெரும் ஆத்மபலமும், அதே அளவுக்கு பொருள் பலமும் இந்த நாட்டில் உண்டாகும்.

ஒப்புதல் உபயம் என்றால் சர்வோதயம், சாந்திசேனை, கிராமதானம், கதர் ஆகியவற்றுக்கு ஒப்புதல் அளிப்பதாகும். முடிந்தவரை இதற்கு ஒத்துழைப்போம் என்கிற உணர்வு மக்களிடம் வரவேண்டும். அதற்கு அடையாளமாக தினமும் இந்த சமுதாயத்திற்கு தம்மிடம் இருப்பதில் கொஞ்சத்தைத் தரவேண்டும். பொருள் உபயத்தில் ஆறில் ஒன்று தரவேண்டும். ஒப்புதல் உபயத்தில் ஒரு கைப்பிடி அரிசி ஒவ்வொரு வீட்டிலிருந்தும் கிடைக்கவேண்டும் . ஒருபிடி அரிசி ஒவ்வொரு வீட்டிலும் சமுதாயத்திற்குக் கிடைக்கவேண்டும். அதுவும் சிறு குழந்தையின் கையால். அதில் ஒரு தத்துவம் இருக்கிறது. வீட்டுப் பெரியவர் அல்லது தாய் சர்வோதயத்தின் பெயரால் ஒரு பிடி அரிசி இட்டால் நிறைய அரிசி கிடைக்கும். ஆனால் அது வேண்டாம். சிறிய குழந்தையின் கையால்தான் போடச் செய்ய வேண்டும் என்று நான் சொன்னேன். ஏனென்றால் தினமும் உண்ணும் முன்பு அம்மா குழந்தையிடம், “சர்வோதயப் பானையில் அரிசி போட்டாயா?” என்று கேட்பாள். குழந்தை மறந்து விட்டால், “முதலில் போய் போட்டு விட்டு வா” என்று சொல்லுவாள்.

இதனால் அறம் வளரும் என்பது என் கருத்து. சர்வோதயத்திற்கு அரிசியும், ஒப்புதல் உபயமும் கிடைப்பதுடன் அதற்கும் மேலாக குழந்தைகளுக்கு நல்லபோதனையும் கிட்டும். இது வீடுதோறும் நடைபெறக்கூடிய ஒரு அறக்கட்டளை.இதுஇந்து,முஸ்லிம்,கிறிஸ்தவர்கள் அனைவரும்செய்யக்கூடியது. இது ஒரு மாறுபட்ட தர்மமாகும்.

சுருங்கச் சொன்னால் சர்வோதயப் பாத்திரம் வைப்பதில் மூன்று குறிக்கோள்கள் உள்ளன.

1. அமைதியின்மையில் பங்கேற்க மாட்டோம் என்னும் பிரதிக்ஞை.
2. சர்வோதயக் கருத்துக்கு ஆக்கப்பூர்வமான ஒப்புதல் உபயம்.
3. இந்தியா முழுவதும் குந்தைகளுக்கு நல்வழி போதனை.

இன்று நடைபெறும் தான-தர்மங்களினால் சமுதாயத்திற்கு ஏதோ ஓரளவு நிவாரணம் கிடைக்கிறது என்பது உண்மைதான். ஆனால் அதனால் சமுதாயப் புரட்சி நடைபெறுவதில்லை. சர்வோதயப் பாத்திரத்து அரிசி புரட்சிக்கானது ஆகும். அதனால் புதிய சமுதாய அமைப்பு ஏற்படும். பழைய சமுதாய அமைப்பை அப்படியே வைத்துக்கொண்டு ஏதோ கொஞ்சம் கஷ்ட நிவாரணம் செய்வது இதன் குறிக்கோள் அல்லவே அல்ல. கஷ்ட நிவாரணம் நல்லதுதான். ஆனால் அதில் கஷ்டம் வேருடன் ஒழிவது இல்லை. ஆனால் சர்வோதயப் பாத்திரத் திட்டம் புதிய அஸ்திவாரத்துடன் புதிய கட்டிடம் எழுப்பும் திட்டமாகும். சர்வோதயப் பாத்திரத் திட்டம் என் மனத்தில் எழுந்த அன்று நான் ரிஷியாகிவிட்டேன் என்று தோன்றியது. பூதானக் கருத்து தோன்றியபோது அப்படித்தோன்றவில்லை. சர்வோதயப் பாத்திரத் திட்டம் அத்யாத்மீக தத்துவம் செறிந்தது ஆகும்.

உபநிஷத்தில் ஒரு கதை வருகிறது. குருவானவர் சிஷ்யனிடம்- "ஆலமரத்தின் பழத்தை எடுத்துவா, அதை விண்டு உள்ளே என்ன இருக்கிறது என்று பார்" - என்றார். சிஷ்யனுக்கு சிறிய விதைகள் தென்பட்டன. குரு சொல்கிறார். "அதையும் உடைத்துப்பார்" சிஷ்யன் உடைத்துப்பார்த்து விட்டு ஒன்றும் தெரியவில்லை என்கிறான். குருவானவர் கண்ணுக்குப் புலப்படாத ஒன்றிலிருந்துதான் இந்த மாபெரும் மரம் உண்டாகியுள்ளது. இந்த விதைக்குள் பொதிந்திருக்கிற சக்தியே ஆத்மா, அதுவே நீ. இப்படியே கைப்பிடி அரிசியில் ஒளிந்திருக்கும் சக்தியே ஜனசக்தியை உண்டாக்கும்.

"இனி நான் வெறுமனே சுற்றப்போகிறேன்" என்று கர்நாடகத்தில் சொன்னேன். முகாம்களோ, கருத்தரங்குகளோ, எங்காவது போவது என்று ஒரு கட்டுப்பாடில்லாமல் போய்க்கொண்டே இருப்பது என்கிற எண்ணம் உண்டானது. இனி இப்படி 'சும்மா' சுற்றுவதால்தான் வேலை நன்றாக நடக்கும் என்று பட்டது. குறிப்பாக மஹாராஷ்டிரம், குஜராத் போகும்போது இந்த பூதானம் முதலிய போர்வையை உதறிவிட்டு நிர்வாண நிலையில் குழந்தை தாயிடம் போவது போல போக விரும்பினேன்.

தனிப்பட்ட முறையில் இனி ஏதும் நற்கருமம் செய்ய வேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை. இதுவரையில் செய்ததும் எனது தனிப்பட்ட

கர்மங்கள் இல்லையென்றாலும் அதில் கொஞ்சம் என் தனிப்பட்ட தன்மை வந்தே இருக்கிறது.இந்த தனிப்பட்ட நான் என்கிற பிணைப்பு முற்றாக ஒழிந்து பற்றுகள் நீங்கிய கைவல்லிய (முக்தி) நிலையில் 'சும்மா' சுற்றலானேன்.

**ஞானேஸ்வரர் – துக்காராம் திருவடிகளில்**
**(மராட்டிய யாத்திரை)**

ஏழு ஆண்டுகள் பாதயாத்திரைக்குப்பின் நான் மஹாராஷ்டிரம் வந்து சேர்ந்தேன். *(23-3-1958)* அங்கே நான் எனக்கு அன்பு ஒன்றுதான் வேண்டும். வேறு ஒன்றும் வேண்டாம் என்றேன். நான் பலவித தானங்களை இயக்கி விட்டிருக்கிறேன்.அவை அவசியமானவையும் கூட.ஆனால் அந்த தானங்கள் யாவும் அன்புக்கு ஒரு அடையாளமாகவே வேண்டுமேயன்றி பொருள் கருதி வேண்டியதில்லை. எனக்கு அளவில்லா அன்புப்பசி. சிந்தனையும், அன்பும் தவிர வேறொன்றும் உடைமையாக இல்லாத ஒரு மனிதன் இதோ மஹாராஷ்டிர மக்களின் முன்பு நிற்கிறான். ஐயமற தெளிந்து என் இதயத்தில் இதுவரை ஏற்றிருந்த கருத்துக்களையும் திரும்ப மறுபரிசிலனை செய்யும் அளவு நான் தளைகள் விடுபட்ட மனிதனாக இங்கு வந்துள்ளேன். எனக்கு ஒரு சங்கமோ, நிறுவனமோ கிடையாது. நான் எந்த ஒரு அமைப்பின் அங்கத்தினனும் அல்ல. நான் ஒரு சாதாரண மனிதன். கடவுள் எப்படி அனுப்பினாரோ அப்படியே வந்துள்ள சாதாரண மனிதன். கடவுள் என்னுடன் அனுப்பியது தவிர இரண்டே இரண்டு உடைமைகளைத்தான் சுமந்துள்ளேன். ஒரு வேஷ்டி, ஒரு மூக்குக் கண்ணாடி. இது கூட பிடிக்கவில்லைதான். ஆனால் உலக நடப்பு கருதியோ, வேறு எதற்கோ இவற்றை சுமந்து திரிகிறேன் என்று வைத்துக்கொள்ளுங்கள் என்றேன். நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு (1918) நான் மஹாராஷ்டிரத்தின் சில மாவட்டங்களில் கால்நடையாகச், சுற்றினேன். வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்களையும், சாசனங்களையும் பார்வையிடுவதில் எனக்கு அப்போது மிகுந்த ஆர்வம் இருந்தது. சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் பயன்படுத்திக்கொண்டிருந்தேன். ஆனால் இப்போது நான் முற்கால ஆராய்ச்சியை விட்டு தற்கால ஆராய்ச்சியில் இறங்கியிருக்கிறேன். இன்றைய காலத்தின் தேவை என்ன. அதை எப்படி அடைவது என்பது பற்றி புதிது புதிதாக ஆராய்ச்சிகள் செய்து வருகின்றேன். முதலில் கொஞ்சம் நிலம் கேட்டேன். பிறகு ஆறிலொன்று கேட்டேன். பிறகு ஊரார் அனைவருக்கும் நிலம் என்றேன். பிறகு நிலவுடைமையே தவறு என்றேன். காற்றும், நீரும், சூரிய ஒளியும் போல நிலம் அனைவருக்கும் பொது என்றேன். பிறகு கிராமராஜ்யம், சாந்திசேனை, கடைசியாக சர்வோதயப் பாத்திரம் வரை வந்திருக்கிறேன். வழியில் ஒரு ஆலமரத்தைப் பார்த்தபோது பூதான இயக்கம் இந்த மரம்போலத்தான் என்று நினைத்துக்கொண்டேன்.தினந்தோறும் புதிய தளிர்கள், புதிய கிளைகள் விட்டு செழித்தோங்கும் உயிருள்ள ஆலமரம் போன்றதே பூதான இயக்கம்.

எனது 63 வயது ஆயுள்காலத்தில் சர்வோதய சம்மேளனத்திற்காக முதன்முறையாக பண்டரிபுரம் வந்துள்ளேன். ஆனால் இதுவரை நான் இங்கு இல்லாமல் இருந்தேன் என்று யாராவது சொன்னால் அவர்களுக்கு என்

வாழ்க்கையைப் பற்றி ஏதும் தெரியாது என்று பொருள். எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து நான் பண்டரிபுரத்தில்தான் இருக்கிறேன் என்றே நான் சொல்லுவேன். ஆனால் எல்லா இடங்களிலும் பாண்டுரங்கனே இருப்பதால் எல்லா இடங்களுமே புண்ணிய ஸ்தலங்களே. என் புண்ணிய ஸ்தலங்கள் பண்டரிபுரமோ, ராமேஸ்வரமோ, மக்காவோ, ஜெருசலமோ மட்டும் அல்ல. ஒவ்வொரு ஊரும், ஒவ்வொரு வீடும் எனக்கு புண்ணியஸ்தலங்களே.

விநோபா பண்டரிபுரம் வந்திருக்கிறான். பிற ஜாதி, மதத்தினருடன் கோவிலுக்குள் போய் கோவிலை மாசுபடுத்திவிடுவான் என்று சிலர் சொன்னார்கள். அவர்களுக்கு என் பக்தியைப்பற்றி எப்படி எடுத்துரைப் பேன்? இது என் சத்தியாகிரக நெறி இல்லை. 'வரவேண்டாம்' என்கிற தடை இருக்கும் இடத்திற்கு பக்தி எவ்வளவு இருந்தாலும் நான் செல்லமாட்டேன். இதுவே என் சத்தியாகிரக நெறியாகும். ஆனால் வரும்வழியிலேயே ஒரு முகாமில் புண்டலீகன் கோயிலைச் சேர்ந்த சிலர் என்னைச் சந்தித்தனர். அவர்கள் என்னை அனைவருடனும் கோவிலுக்கு வர அழைத்தனர். எழுதியே கொடுத்தனர். இரண்டு நாள் கழித்து ருக்மினி தேவியார் கோவில் பக்தர்களும் என்னிடம் வந்தார்கள். அவர்களும் ருக்மினி தேவியார் கோவிலுக்கு வர எழுத்து மூலம் அழைப்பு விடுத்தனர். பக்தன் புண்டலீகனும் என் கையில் ருக்மினித்தாயாரும் என் கையில், விட்டலன் மட்டும் சிக்காமல் எங்கே போய் விடுவான் என்று நான் நினைத்தேன். விட்டலன் கோவில் பூட்டியிருந்தாலும், சாவிகள் என் கையில் என்று நினைத்துக்கொண்டேன். கடைசியில் விட்டலன் கோவில் மனிதர்களும் எனக்கு எழுத்து மூலம் அழைப்பு விடுத்தனர். பண்டரிபுர மக்கள் முழுமையாக என்னை ஆட்கொண்டு விட்டனர்.

விட்டலன் சன்னிதியில் நான் நின்றபோது உண்டான உணர்வுகளை வார்த்தைகளில் வடிக்க முடியாது. இன்று எனக்குக் கிடைத்த தானத்தையும், உபகாரத்தையும் விட சிறந்த தானத்தையும், உபகாரத்தையும் வாழ்நாளில் நான் பெற்றதில்லை என்று என் பேச்சில் குறிப்பிட்டேன். என்னுடன் கிறிஸ்தவ, முஸ்லீம் மற்றும் பார்ஸி சகோதரிகள் இருந்தனர். பல்வேறுபட்ட ஜாதி-மத மக்களுடன் நான் விட்டலனை தரிசித்தேன் (29-5-1958). இந்த தானத்தின் வாயிலாக மஹாராஷ்டிரம் அளிக்கக் கூடிய மிகப்பெரும் கொடையை அளித்துவிட்டது. இந்நிகழ்ச்சி என்னைப்பொறுத்தவரை சர்வோதயத்தின் ஒரு அதிசய நிகழ்ச்சியாகும். எம்.ஆர்.ஏ.யைச் சேர்ந்தவர்கள் என்னைச் சந்தித்த போது பண்டரிபுரம்வாசிகள் தங்கள் தார்மீக ஆயுதக் கிடங்கை மிக பலப்படுத்தியுள்ளார்கள் என்று நான் சொன்னேன். "உண்மையிலேயே தார்மீக ஆயுதக்கிடங்கை இந்நிகழ்ச்சி பலப்படுத்தும்" என்று அவர்களும் சொன்னார்கள். விஞ்ஞான யுகத்தில் சமநிலை என்பது சமாதியில் எய்துவது அல்ல. சமுதாயம் முழுவதும் சமநிலை எய்தவேண்டும். முன்பு சமநிலை உச்சியில் இருந்தது. இன்று அது அஸ்திவாரத்திற்கு உரிய ஒரு பொருள். இன்று வாழ்க்கையே சமத்துவத்தின் மீதுதான் நிற்கவேண்டும். இதுவே இன்றைய விஞ்ஞான யுகத்தின் தேவை.

**காந்திஜியின் ஊரில்**
**(குஜராத் யாத்திரை)**

நீண்ட கால ஆசை நிறைவேற இப்போதுதான் சந்தர்ப்பம் வாய்த்தது. குஜராத் வந்து சேர்ந்தேன். (22-9-1958). காந்திஜியின் மண்ணைச் சார்ந்தவர்களை தரிசித்த மகிழ்ச்சியினை என்னால் விவரிக்க முடியாது. குஜராத்தில் காந்திஜியின் மனிதர்களைத்தவிர வேறு யாராவது இருக்கிறார்களா என்று எனக்குத் தெரியாது. ஒரு வகையில் காந்திஜிக்கு முழு உலகமுமே உரியது. அனைத்துலகுக்கும் அவர் உரியவர் என்று சொல்ல வேண்டும். இன்னொருவகையில் அவர் இந்தியாவிற்கு உரியவர், குஜராத்திற்கும் உரியவர், இந்த ஜனங்களுக்கு உற்ற உறவினனான நான் பல ஆண்டுகள் வெளியூரிலிருந்தேன். வெவ்வேறு மாநிலங்களில் இருந்தேன். இப்போது நான் வீடு திரும்பி யிருக்கிறேன்.

குஜராத் யாத்திரையின்போது குஜராத்தியிலேயே பேசுவது என்று தீர்மானித்தேன். துவக்கத்தில் நான் காந்திஜியை சந்தித்தபோது இந்தியில்தான் பேசவேண்டியிருந்தது. ஆனால் அப்போது அவருக்கு இந்தி நன்றாக வரவில்லை என்பதை நான் கண்டேன். எனவே சில நாட்களில் நான் குஜராத்தி கற்றுக் கொண்டேன். பிறகு அவருடன் குஜராத்தியிலேயே பேசினேன். நான் குஜராத்தியிலிருந்து பெற்றது ஏராளம். எனவே இங்கே என்னிடம் ஞானோபதேசம் எதையும் எதிர்பார்க்க வேண்டாம் என்றும் குஜராத்திலிருந்து நான் பெற்றவற்றிற்கு பிரதியாக என்னால் முடிந்தவரை அனைவருக்கும் தொண்டாற்ற முயல்வேன் என்றும் சொன்னேன்.

அங்கே எல்லா கட்சி சார்ந்தவர்களும் கட்சி சாராதாவர்களும் எனக்கு உறுதுணையாக வந்தார்கள். அவர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது நான் ஏந்தி வந்திருக்கும் சிந்தனை அவர்களுடைய சிரிய சிந்தனையின் ஒரு பகுதிதான். உலகில் பல கருத்துக்கள் நிலவினாலும் எந்தக் கருத்தை ஏந்தி நான் இந்தியா முழுவதும் பாதயாத்திரை செய்து வருகின்றேனோ அதற்கு சமூக அங்கிகாரம் கிடைத்து விட்டது. அதை சமூகத்திறகுப் பிடித்தமானதாக மாற்ற வேண்டியதுதான் பாக்கி என்று கூறினேன்.

கடந்த ஆண்டு நான் கேரளா போனபோது அதற்கு முன்பாகவே அங்கேயிருந்த நான்கு கிறிஸ்தவ பிரிவைச் சேர்ந்தவர்கள் "இவர் ஏசுவின் திருப்பணியையே செய்கிறார். எனவே கிறிஸ்தவர்கள் அனைவரும் இவருக்கு உதவி செய்ய வேண்டும்." என்று மக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருந்தனர். உத்திரப்பிரதேச யாத்திரையில் சாரநாத்தைச் சென்றடைந்தபோது அங்கிருந்த புத்த பிட்சுக்கள் என்னை வரவேற்று - புத்த பகவானின் தர்மசக்கரத்தையே மேலும் சுழலச் செய்வதாக பாபா கூறுவதை நாங்கள் ஏற்கிறோம் என்றார்கள். இவ்வாறு கூறி அவர்கள் எனக்கு அன்பளிப்பாக தம்ம பதம் நூலை அளித்தார்கள். அதைப் பெற்றுக்கொண்டு நான் பீஹார் போனேன். நான் மலபார் போனபோது அங்குள்ள முஸ்லீம்கள் "நீங்கள் சொல்பவையே குர்ஆனில் உள்ளன" என்று என்னிடம் கூறினார்கள். தமிழ்நாட்டில், தமிழ்நாட்டின் தவசிரேஷ்டர் திருவள்ளுவரைக் குறிப்பிட்டு

ஒரு அன்பர் 'திருவள்ளுவர்' கூறியவற்றையே விநோபா பிரச்சாரம் செய்கிறார். எனவே தமிழர்கள் அனைவரும் விநோபாவுக்கு ஆதரவு தரவேண்டும் என்று கூறினார். இவ்வாறாக உலகில் மதிப்பு வாய்ந்த பல சித்தாந்தங்கள் இந்த என் கருத்துக்களுக்கு அங்கீகாரம் வழங்கியுள்ளன. இதை மக்களுக்குப் பிடித்த மானதாகச் செய்ய வேண்டியதே பாக்கி.

நான் பர்தோலிபோனபோது "குஜராத்தின் இதயம் வைஷ்ணவ இதயம், குஜராத்தின் அறிவு காரியார்த்தமான அறிவு" என்றேன். இரண்டும் இணைந்தால் யோகீஸ்வரன் கிருஷ்ணனும், வில்விற்பன்னன் அர்ஜுனனும் இணைந்தது போல் ஆகும். வெற்றி நிச்சயம் கைகூடும். கிராமதானம் அபயதானமே ஆகும். அதனாலேயே சபர்மதி ஹரிஜன் ஆசிரமத்தில், "இது ஒரு கிராமமாகவே ஆகிவிட்டது. கிராமத்துப் பிரச்சினைகளே இங்கும் உள்ளன. எனவே இதை கிராமதானம் செய்து விட்டால் பிரச்னைகள் தீரும்" என்றேன்.

**தர்காவின் சன்னிதி**
**(ராஜஸ்தான் யாத்திரை)**

ராஜஸ்தான் யாத்திரையின்போது அஜ்மீரில் சர்வோதய சம்மேளனம் ஏற்பாடு செய்யப்பட்டது. ஏனென்றால் அஜ்மீர் தர்கா பிரசித்தி பெற்ற முஸ்லீம் புண்ணியஸ்தலமாகும். (இந்திய முஸ்லீம்களுக்கு மக்காவிற்குப் பிறகு அஜ்மீர் முக்கிய புண்ணியஸ்தலமாகும். பாலஸ்தீனத்தில் சம்மேளனம் நடத்தினால் ஜெருசலத்தில் நடக்கும்-தொகுப்பாளர்) மதப்பற்று காரணம் அல்ல. இந்த இடங்களில் மகிமை இருக்கிறது என்பதுதான் காரணம். தூய்மையான தவம் இருந்த இடங்கள் அல்லவா?

தர்காவின் முக்கியஸ்தர் ஒருவர் அங்கே வருமாறு எனக்கு அழைப்பு விடுத்தார். அவர் எங்கள் துணைவர்களில் ஒருவருக்கு விநோபா தர்காவிற்கு வரவேண்டும் என்று நாங்கள் பெரிதும் விரும்புகிறோம். நாங்கள் அவரை வரவேற்க விரும்புகிறோம். எங்கள் அஜ்மீர் பெரியவரின் லட்சியமும்கூட அமைதியும் அன்புமே ஆகும். விநோபாஜியுடன் அவருடைய துணைவர்கள் அனைவரையும் அழைக்கிறோம். அனைவரையும் வரவேற்கிறோம் என்று எழுதினார். இந்த அழைப்பின் பேரில் நான் சர்வோதய சம்மேளனத்தில் அனைவரையும் என்னுடன் வருமாறு அழைத்தேன். பெண்களும் அவசியம் வரவேண்டும் என்று அழைப்பு விடுத்தேன். "பண்டரிபுரம் கோவிலில் அனைத்து ஜாதி மதத்தினரும் வந்தது போல இங்கும் வரவேண்டும். இஸ்லாமிய மார்க்கத்தின் அறைகூவல் புனிதமானது. அது ஏழை பணக்காரன் வித்தியாசம் பாராட்டாதது. வட்டி வாங்குதலை அது கடுமையாகச் சாடுகிறது. அது ஒரு ஜனநாயக லட்சியம் ஆகும். நான் ஒரு முஸ்லீம், கிறிஸ்தவனும்கூட என்று அறிவிக்க விரும்புகிறேன். என்று நான் சொன்னேன். பத்து வருடங்கள் முன்பு நான் இந்த தர்காவுக்கு வந்திருந்தேன். அந்நாட்களில் மக்களின் மனத்தில் அமைதியின்மை நிலவியது. எனவே இங்கு வந்து ஏழுநாட்கள் தங்கியிருந்தேன். இங்கே நான் பிரார்த்தனை செய்து வந்தேன்.

மறுநாள் பல்வேறு ஜாதி-மதம் சார்ந்த ஆயிரக்கணக்கானவர்களுடன் அங்கே போனேன். மிகுந்த அன்புடன் எங்களை வரவேற்றார்கள். அங்கே

நான் "சில கோவில்கள், பள்ளிவாசல்களில் எல்லோருக்கும் உள்ளே போக அனுமதி கிடைப்பதில்லை. இது சரியல்ல. எல்லா வழிபாட்டுஸ்தலங்களுக்கும் பாகுபாடின்றி எல்லோரும் போக அனுமதிக்கப்பட வேண்டும். ஒரு வகையில் பார்த்தால் வழிபாட்டுக்கு கோவிலும் தேவையில்லை, பள்ளிவாசலும் தேவையில்லை. எங்கும் இறைவனை வழிபடலாம். எனவே பாகுபாடுகளைக் களையவேண்டும்" என்றேன். பக்திக்குத் தேவை மூன்று. திருகுர்ஆன் அவற்றை பொறுமை, இரக்கம், உண்மை என்கிறது. நான் அவற்றை அன்பு , தயை, சத்தியம் என்கிறேன்.

**லல்லாவின் அழகு பூமியில்**
**(காஷ்மீர் யாத்திரை)**

லல்லா ஒரு பிரசித்தி பெற்ற காஷ்மீர் துறவி. நான் காஷ்மீரை அடைந்தபோது பெற்ற மகிழ்ச்சியை என்னால் சொற்களால் வர்ணிக்க முடியாது. பதான்கோட்டில் சில முஸ்லீம் சகோதரர்கள் என்னைச் சந்திக்க வந்தனர். அவர்கள் தலைசிறந்த ஒரு அன்பளிப்பை எனக்குக் கொடுத்தனர். அது ஒரு பெரிய அழகிய திருகுர்ஆன் பிரதியாகும். அதை நான் காஷ்மீருக்குள் நுழையும்முன் ஆசீர்வாதமாக கிட்டியதாக நினைத்தேன். *(22-5-1959)* அங்கு போனதும் முதன்மந்திரி பக்ஷிஜி எங்களை வரவேற்று அரசாங்கத்தையே தானமாகக் கொடுத்துவிடலாம் என்றார். அது முடியக்கூடும்தான். அரசாங்கம் ஏழைகளுக்கு உதவுகிறது. ஏழைகளுக்காகவே உழைக்கிறது என்று இருக்க வேண்டும்.

இங்கே வந்து நான் என்ன செய்ய விரும்புகிறேன்? எனக்கு என்று விருப்பம் எதுவும் இல்லை. அவன் விரும்புவதே நடக்கும். அவன் விரும்புவதே நடக்கிறது என்பதை நான் காண்கிறேன். எனது எல்லா வாடிக்கைப் பொறுப்பையும் நான் அவன் மீது போட்டுவிட்டேன். எனக்கோ, நாட்டுக்கோ நன்மை பயக்காத ஒன்றும் ஒருபோதும் நடந்ததில்லை. நான் அவனை நம்புகிறேன். எனவே இன்ஷாஅல்லா நான் மூன்று விஷயங்களைச் செய்ய விரும்புகிறேன். 1) நான் பார்க்க விரும்புகிறேன். 2) செவிமடுக்க விரும்புகிறேன் 3) நேசிக்க விரும்புகிறேன். இறைவன் எவ்வளவு நேசிக்கும் ஆற்றலை எனக்கு நல்கியுள்ளானோ அவ்வளவு நேசிக்க விரும்புகிறேன்.

பாதயாத்திரையில் தினமும் 9-10 மைல் நடக்கவேண்டியிருப்பதால் அதிகாலையில் கொஞ்சம் உணவருந்தி வந்தேன். ஆனால் காஷ்மீரில் நுழைந்தவுடன் நான் ஒருவேளை உணவை விட்டுவிட்டேன். ஒருவேளை உணவை விட்டுவிட்டால் மறுவேளை இரட்டிப்பாக என்னால் சாப்பிட முடியாது. வயிறு நிறையக்கூட என்னால் சாப்பிட முடியாது. என் வயிறு அப்படி. ஆனாலும் கொஞ்சம் பட்டினி போடுவது நல்லதே, உடல் சுத்தமாகும் என்று காஷ்மீர் பேரைச் சொல்லி ஒரு வேளை உணவை விட்டுவிட்டேன்.

நாங்கள் பீர்பஞ்சாலை (Peer Panjal)த் தாண்டினோம். அதற்குப்பின் லோரேன்மண்டி மழையினால் நாங்கள் மண்டியிலேயே ஆறு நாள் தங்கினோம். இப்படியே மழை பெய்து மலையைக் கடக்க முடியவில்லை என்றால் அதை இறைவனின் ஒரு சமிக்ஞை எனக்கொண்டு காஷ்மீருக்குள் போகாமல் பஞ்சாபுக்குத் திரும்பி விடுவது என்று நான் நினைத்தேன். நான் அவன்

ஆட்டுவித்தபடியே ஆடுகிறவன்தானே! எனவே இந்த வழியில் காஷ்மீர் போக முடியவில்லை என்றால் வேறு வழியாகப் போவதில்லை. பஞ்சாப் திரும்பி விடுவது என்று தீர்மானித்தேன். ஆனால் மழை நின்றது. நாங்கள் மலையைத்-தாண்டி முன்னேறினோம்.

காஷ்மீரில் நானும் தினந்தோறும் ஐந்து வேளை தொழுகையைக் கடைபிடித்தேன் என்றே சொல்லவேண்டும். முஸ்லீம்கள் தினந்தோறும் ஐந்து வேளை தொழுகைக்கு கடமைப்பட்டவர்கள். காலையில் நடக்கும்போது அறிவு வளர்க்கும் கலந்துரையாடல் நடைபெறும்; அது முதல் தொழுகை. பிறகு முகாமில் சொற்பொழிவு; அது இரண்டாம் தொழுகை. 11 மணிக்கு திருகுர்ஆன் வாசித்தலும், கேட்டலும்; அது மூன்றாம் தொழுகை. கூட நடக்க முடியாத முதியோர்கள் மதியம் வந்து உரையாடுவர்; அது நான்காம் தொழுகை; மாலைச் சொற்பொழிவு ஐந்தாம் தொழுகை.

காலை 11 மணிக்கு திருகுர்ஆன் ஓத மக்கள் வருவார்கள். பெரும்பாலான முஸ்லீம்களுக்கு குர்ஆன் ஓத வரும் என்றாலும் சிலருக்குச் சரியாக வராது. எனவே தவறுகள் இழைப்பர். ஆனால் அல்லா அருளாளன் அல்லவா? அதனால் நிச்சயம் மன்னித்துவிடுவார். குழந்தை தட்டுத்தடுமாறி தப்பும் தவறுமாகப் பேசுவதும் தாய்க்கு இனிமையானதே. அங்ஙனம் அல்லாவுக்கு இவை பிடித்தே இருக்கும். இதுமாதிரியான குர்ஆன் ஓதும் நிகழ்ச்சிகளை நான் அங்குள்ள சகோதரர்களுடன் பழக்கம் ஏற்படுத்திக்கொள்வதற்காக நடத்தி வந்தேன்.

இந்த குர்ஆன் ஓதும் நிகழ்ச்சி பூன்ச் என்னும் இடத்திலிருந்து துவங்கியது. இதற்கு முன்பு இந்தியாவில் மேவாத் முஸ்லீம்களை குடியமர்த்தும் பணியில் ஈடுபட்டிருந்தபோதும் (இந்திய-பாக் பிரிவினையின் போது) இந்த மாதிரி குர்ஆன் ஓதும் நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தேன். ஆரம்பித்ததிலிருந்தே ஒவ்வொரு கூட்டத்திலும் "ஹஷ்ர் சூரா" (இது திருகுர் ஆனில் ஒரு அத்தியாயம் ஆகும். ஹஷ்ர் = நாடுகடத்தல், சூரா = அத்தியாயம், ஒரு தொகுதி) பற்றியே பேச்சு வந்தது. அது எனக்கு அளவற்ற ஆனந்தத்தை அளித்தது. இதிலிருந்து மக்களுக்குப் பிடித்தது எது என்று வெளிப்படுகிறது.

ஒரு நாள் ஒரு சகோதரர் தானம் அளிக்கவந்தார். அவரை அவர் மனைவி தானம் அளிக்கச் சொல்லி அனுப்பியிருந்தார். அந்த அம்மையார் ஏதோ ஒரு பத்திரிகையில் நான் யாரோ ஒருவருடைய கையைப் பிடித்துக்கொண்டு ஒரு கஷ்டமான பாதையில் நடந்துகொண்டிருக்கும் படத்தைப் பார்த்திருக்கிறார். அந்த சகோதரிக்கு "இந்த மனிதன் ஏழைகளுக்காக இவ்வளவு கஷ்டப்படும்போது இவருக்கு நிலம் அளிக்காமல் இருப்பது சரியல்ல" என்று தோன்றியிருக்கிறது. அதனால் கணவரை தானமளிக்க என்னிடம் அனுப்பினார். ஒரு படத்தைப்பார்த்து இங்ஙனம் தோன்றிய அப்பெண்ணின் நாகரீகத்தில் குறை ஏதும் இருக்கமுடியுமா? நான் ஏறிய 13,500 அடி உயர பீர்பஞ்சாலை விட அச்சகோதரி உயர்ந்தவர். நான் சந்தித்த குழுக்கள் எல்லாம் அது அரசியல் குழுவானாலும் சரி, மதக்குழுவானலும் சரி, சமுதாய அமைப்புகளைச் சேர்ந்த குழுக்களானாலும் சரி, என்னை தமது மனிதனாகக்

கருதின. இவனிடம் மனம் திறந்து பேசுவதால் அபாயம் ஏதும் இல்லை என்று கருதின என்பதில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி. பூரண நம்பிக்கையுடன் மக்கள் என் முன் தங்கள் கருத்துக்களைக் கூறினர். எனது செவிமடுக்கும் ஆர்வம் நிறைவேறியது.

ஆனால் சுற்றிப் பார்க்கும் என் ஆர்வம் முழுவதும் நிறைவேறவில்லை. ஓரளவுதான் நிறைவேறியது. வெள்ளத்தின் காரணமாக சில பகுதிகளைப் பார்க்க முடியவில்லை. ஆனால் ஒரு பானை சோற்றுக்கு ஒரு பருக்கையே பதம் அல்லவா? நான் பார்த்தது நிலைமையை கணிக்கப்போதுமானதாக இருந்தது.

என்னுடைய மூன்றாவது வேலை நேசிப்பது. இந்த நான்கு மாதங்களில் அன்பைத்தவிர வேறு ஏதாவது என் மனத்தில் வந்ததாக எனக்குத் தெரியவில்லை. இறைவன் அருளால் நேசிக்கும் ஆர்வம் நிறைவேறியது.

அங்குள்ள மக்கள் இந்த மாதிரியான பணியை மேற்கொண்ட சங்கராச்சாரியார் காஷ்மீர் வந்தார் என்று நாலைந்து முறை எனக்கு நினைவூட்டினர். நானும் சங்கராச்சாரியாரின் பணியிலும் என் தொண்டிலும் ஓரளவு ஒற்றுமை இருப்பதை ஒப்புக்கொண்டேன். அவர் அத்வைதத்தைப் பரப்பினார். ஸ்ரீநகரில் ஒருமலையின்மீது அவர் நினைவாக ஒரு சங்கரர் கோவில் இருப்பதைப் பார்த்து நான் மகிழ்ந்தேன். பரமாத்மா, மனிதன், இயற்கை மூன்றும் ஒரே ஒளியின் கூறுகளே. மூன்றும் ஒன்றே என்பதை உணர்த்தவே அவர் இங்கு வந்தார். இமாலயம் சென்று கைலாயத்தில் அவர் தன் பூதவுடலை நீத்தார். அவரோடு என்னையும் ஒப்பிட முடியாது. அவர் ஞானி. நான் ஒரு தொண்டன். அல்லாவின் அடிமை. நான் யாவற்றையும் அறிந்துவிட்டதாகச் சொல்ல முடியாது. அறிந்தவரை வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தியிருக்கிறேன் என்று வேண்டுமானால் சொல்லலாம். நான் ஒரு அற்ப மனிதன். ஆனால் நான் எடுத்துள்ள பணி அற்பமானது அல்ல. அதனால் காஷ்மீருக்கு மட்டுமல்ல, இந்தியாவுக்கும் உலகத்திற்கும் கூட விடுதலை கிடைக்கப்போகிறது.

ஜம்மு-காஷ்மீரில் நுழைந்தபோது எங்களுக்கு ஒரு புத்தகம் கொடுக்கப் பட்டது. அது லல்லாவின் உரைகளின் ஆங்கில மொழிப்பெயர்ப்பான லல்லா வாக்யானி என்ற நூலாகும். லல்லா பிறந்தது அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பு. ஆனால் இன்றும் மக்கள் லல்லாவை மறக்கவில்லை. நடுவில் எத்தனை அரசர்கள் வந்தார்கள், மறைந்தார்கள். மக்கள் அவர்களில் யாரையும் நினைவில் வைத்திருக்கவில்லை. ஆனால் காஷ்மீர் துறவி லல்லாவின் பெயர் இன்றும் அனைவருக்கும் நினைவில் இருக்கிறது. எனவே நான் ஜம்மு-காஷ்மீரில் காலடி எடுத்து வைத்தவுடனேயே "காஷ்மீர் பிரச்சினையோ, இந்தியாவின் பிரச்சினையோ, உலகின் பிரச்சினையோ ஆன்மீகத்தால்தான் தீரும், அரசியலால் தீராது என்பதே எனது இந்த பாதயாத்திரையின் மூலக்கருத்து" என்று சொன்னேன். அரசியலும் மதங்களும் கோலோச்சிய காலம் மலையேறிவிட்டது. இனி உலகில் ஆன்மீகமும், விஞ்ஞானமும் கோலோச்சும். மதம், இனம், மொழி முதலிய வேற்றுமைகளை ஒழித்து நம்

மனங்களை தூய்மைப்படுத்தினால்தான் காஷ்மீரிலும், நாட்டிலும் வலிமை பெருகும். அந்த வலிமையில் உலகின் ஒவ்வொரு மனிதனுக்கும் அமைதி கிட்டும்.

**குருநானக்கின் திருவடிகளில்**
**(பஞ்சாப் – ஹிமாசலப் பிரதேச யாத்திரை)**

காஷ்மீரிலிருந்து கீழிறங்கி நான் பஞ்சாப் வந்தேன் *(21-9-59) - விருந்து 10-5-60 வரை).* அமிர்தசரஸ் பொற்கோவில் சென்றேன். குருத்வாரா விவகாரங்கள்பற்றி என்னிடம் கேட்டபோது அங்கு நிலவும் சச்சரவுகள் அறியாமையால் விளைவன என்று நான் கூறினேன். அதனால் சீக்கிய மதத்திற்கும், இந்தியாவிற்கும் அபாயம் என்று சொன்னேன். பெரும்பான்மை, சிறுபான்மை பிரச்சினைகளினால் அரசியலில் சச்சரவுகள் விளைகின்றன. இதுவே மதத்திலும் விளைந்தால் எவ்வளவு அபாயகரமாக இருக்கும்? நான் அரசியலாரிடமே கட்சி அரசியலை விட்டு கட்சி சார்பற்ற அரசியல் வழிமுறைகளைத் தேடவேண்டும் என்று அடிக்கடி கூறி வந்திருக் கிறேன். பெரும்பான்மை, சிறுபான்மை அரசியலால் நாட்டுக்குத்தீங்கு விளைந்து கொண்டிருக்கிறது. அதுவே மதத்தில் புகுந்தால் அறியாமையின் எல்லைக்கே நாம் போய்விட்டோம் என்றே பொருள். இதைவிடப் பெரிய அறிவீனத்தை என்னால் நினைத்துப்பார்க்க முடியவில்லை. மதசம்பந்தமான முடிவுகள் பெரும்பான்மையினாலா எடுக்கப்பட முடியும்? குருநானக்கின் உள்ளத்தில் ஒரு அறநெறி தோன்றியது. அந்த சிந்தனை பரவியது. சீக்கியர்களின் அடிப்படைச் சித்தாந்தம் என்னவென்றால் உலகமே ஒரு இனம், ஒரே குலம் என்பதாகும். அது ஒரு பெரிய கருத்தாகும். அதில் பிராந்திய, ஜாதி வேறுபாடுகள் கிடையாது. அதில் சிலை வணக்கம் அதிகம் கிடையாது. அதற்காக அதை நிந்திக்கவும் இல்லை. இறைவன் ஒருவனே என்று சொல்லப் பட்டிருக்கிறது. இந்த அடிப்படைக் கருத்து உலகம் முழுவதும் பரவும். ஆனால் எந்த மதம் உலகத்திற்கு இந்தக்கருத்துக்களை வழங்கியதோ அதற்குள்ளேயே இன்று அரசியல் வழிமுறைகள் நுழைந்து கொண்டிருக்கின்றன. மதத்தில் அரசியல் நுழைவது மிகவும் அபாயகரமானது என்று உங்களை எச்சரிக்க விரும்புகிறேன். என்னைக் கேட்டால் குருத்வாராவுக்குள் நுழையும் முன்பு அரசியல் செருப்புகளை வெளியே கழற்றிவிட்டுப்போகவேண்டும் என்பேன். அரசியல் ஒரு செருப்பு. இன்று நாட்டிலும், உலகிலும் நிலவும் அரசியல் தலையில் தூக்கி வைத்துக்கொள்ளத்தக்கதாக இல்லை. மிக அதிகமாகப் போனால் காலில் போட்டுக்கொள்ளலாம். எனவே அதை எடுத்துக்கொண்டு குருத்வாராவிலும், சர்ச்சிலும், பள்ளிவாசலிலும், கோவிலிலும் நுழையா-தீர்கள். அதை அங்கே எடுத்துச் சென்றால் இறைவனின் உறைவிடம் சாத்தானின் உறைவிடமாகிவிடும்.

பஞ்சாபில் நான் ஒரு தீர்மானத்தை வெளியிட்டேன். இரண்டொரு ஆண்டுகளாக சிந்தித்துச் செய்த முடிவுதான். நான் சர்வசேவா சங்கத்திற்கு கடிதமாக எழுதி அதற்கு நான் வரி வடிவம் கொடுத்தது பிராக்பூர் காங்கடா *(23-10-59)*-வில் அஸ்ஸாம் நீங்கலாக மற்ற பகுதிகளில் என் பாதயாத்திரை கடந்த எட்டரை ஆண்டுகளாக நடந்துவந்துள்ளது. அது ஜனவாசமே ஆயினும் பழைய வழக்கில் அதை வனவாசம் என்றும் சொல்லலாம்.

இப்போது அஞ்ஞாதவாசம் செய்யவேண்டும். யாத்திரை நடக்கும். நாட்டின் பிறபகுதிகளுக்கு யாத்திரை பஞ்சாபில் நடக்கிறது என்னும் அளவுக்கே தெரியும். பஞ்சாபுக்கு காங்கடா பகுதியில் எங்கேயோ நடக்கிறது என்று மட்டுமே தெரியும். காங்கடாகாரர்களுக்கு ஐந்தாறு நாட்கள் பயண விவரம் தெரியும். இது கிட்டத்தட்ட அஞ்ஞாத வாசம் மாதிரிதான். பழைய பாண்டவர்கள் செய்த அஞ்ஞாதவாசம் மாதிரி. இன்றைய பாண்டவர்கள் செய்யும் அஞ்ஞாதவாசம் (தலைமறைவு ரகசிய இயக்கங்கள்) போல் அல்ல என்று நான் கடிதம் எழுதினேன்.

இதனால் ஏற்படும் நஷ்டங்கள் வெளிப்படை. ஆன்மீகலாபம் ஏற்படலாம். மனம் இந்நிலைக்கு பக்குவப்பட்டிருந்தால் குறிப்பாக அகிம்சை ஆய்வுக்குப் பயன் விளையலாம். மனம் பக்குவப்பட்டதா என்பதை அனுபவத்தில் அறிவேன். அதுபற்றி ஆராய்ந்து வருவேன். இந்த சிந்தனையை அமிர்தசரஸிலிருந்து செயல்படுத்துவேன் . அங்கே இலக்கியகர்த்தாக்களின் ஒரு கூட்டம் இருக்கிறது. அங்கே வனவாசத்திற்கு விடை கொடுத்து அஞ்ஞாத வாசம் மேற்கொள்வேன்.

அஞ்ஞாதவாசத்தில் மனிதன் எங்கும் போகலாம் ஆனால் என் மனம் இந்தூர் நோக்கி உள்ளது. சுற்றிக்கொண்டு போவேனா, யூக்ளிட் விதியின்படி நேர்கோட்டில் செல்வேனா என்பது அருகில் இருப்பவர்களைப் பொறுத்தது. நதியின் ஓட்டத்தைப் பொறுத்தது என்றும் எழுதினேன்.

நான்கு ஐந்து மாதங்கள் எனது இந்த பரிசோதனை நடந்தது. மூன்று நாட்கள் பற்றிய பயண விவரம் மட்டுமே அறிவிக்கப்பட்டது. அதற்கு மேற்பட்ட பயண விவரம் அறிவிக்கப்படுவதில்லை. நிச்சயமாக இதனால் சிந்தனை வளம் பெற்றது.

உத்திரப்பிரதேசத்தின் சில பகுதிகளைக் கடந்து மத்தியப்பிரதேசம் வந்து சேர்ந்தேன்.

**கண்டது கனவா?**
**(மத்தியப் பிரதேச யாத்திரை)**

பிண்ட் - முரனா யாத்திரையின் போது 10-12 நாட்களில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் என் மனத்தை உருக்கி விட்டன. இறைவனின் ஒளி எல்லோர் மனத்திலும் ஒளிர்கிறது என்பதை நான் கண்கூடாகக் கண்டேன். அறிவு பூர்வமான உண்மை அனுபவபூர்வமான உண்மையாயிற்று. நான் புத்தகங்களில் படித்திருந்த அகிம்சையை கண்ணால் கண்டேன். இவ்வாறு சமுதாய அளவில் அகிம்சா ஜோதியை மூன்று முறை நான் தரிசித்தேன். முதல்முறை போச்சம்பள்ளியில், இரண்டாவது பீஹாரில், மூன்றாவது இங்கே பிண்டில்.

மத்தியப்பிரதேசத்தின் கொள்ளையர் பகுதியான சம்பல் பள்ளத்தாக்கில் இந்த அமைதிப் பயணத்தின்போது நடந்தது சற்றும் எதிர்பாராதது ஆகும். ஆன்மீக உலகத்தில் அஹிம்சை ஒரு பெரும் ஆற்றலாகும். மகாத்மா காந்தி

அரசியலில் அதைப் பயன்படுத்தினார். கடந்த ஒன்பது ஆண்டுகளாக சமுதாய - பொருளாதார ரீதிகளில் இது பயன்படுத்தப்பட்டு வருகிறது. கொள்ளையர் பகுதி என்று சொல்லப்படும் இப்பகுதியில் இது பயன்பட்டபோது ஏற்பட்ட அனுபவம் இதற்கு முன்னால் எப்போதும் ஏற்பட்டதில்லை. கல்நெஞ்சமும் கனிந்தது. எங்கும் இறையனுபூதி நிலவிற்று. கொள்ளையையே தொழிலாகக் கொண்டிருந்தவர்கள் மனம் வருந்தி தாமாக முன்வந்து தங்கள் வாழ்க்கை முறைகளை மாற்றிக்கொண்டனர். இறைவன் அவர்கள் உள்ளத்தினுள் புகுந்து இந்திரஜாலம் செய்துவிட்டதாகத் தோன்றியது. யார் மீது நம்பிக்கை வைத்து சத்தியம், அன்பு, கருணை வழியில் நான் நடக்கின்றேனோ அந்த இறைவனுக்கு நன்றி சொல்லுவதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்?

நான் காஷ்மீரில் சுற்றிக்கொண்டிருந்தபோது கொள்ளைக்கார மான்சிங்கின் மகன் தாசில்தார்சிங் சிறையிலிருந்து எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். தூக்குமேடை ஏறும் முன்பு என்னைக் காண விரும்புவதாக அதில் எழுதியிருந்தது. நான் அப்போது எங்களுடன் பாதயாத்திரையில் இருந்த இப்பகுதியைச் சேர்ந்த ஜெனரல் யதுநாத்சிங் அவர்களை அவரிடம் அனுப்பி வைத்தேன். பின்னர் தாசில்தார்சிங் நான் இப்பகுதியில் பாதயாத்திரை மேற்கொண்டு மற்ற கொள்ளைக்காரர்களைச் சந்திக்க வேண்டும் என்று வேண்டினார். அவர் கூறியதன்படி நான் இங்கு வந்து அவர்களுக்கு அன்புடன் கொள்ளையர்கள் என்னிடம் வரலாம். அவர்களுக்கு நியாயம் கிட்டும். அவர்கள் கடுமையாக நடத்தப்படமாட்டார்கள். அவர்கள் குடும்பத்தினருக்கு துன்பங்கள் விளையாது என்று எடுத்துச் சொன்னேன்.

இறைவன் அருளால் 20 பேர் என்னிடம் வந்தனர். அவர்கள் தொலைநோக்கி பொருத்திய பெரிய துப்பாக்கிகளை ஒப்படைத்து சரண் அடைந்தனர் (கனேரா கிராமம் 19-5-1960). தங்கள் குடும்பத்தினரைக் கண்டனர். நேற்று முன்தினம் அவர்களை சிறைக்கு அனுப்பி வைத்தேன். அவர்கள் செய்த செயல்களுக்குத் தண்டனை கிடைத்தே தீரும். ஆனால் இறைவனின் மன்னிப்புக்கு அவர்கள் பாத்திரர்கள். ஒரு புதிய வழிதிறந்தது.

**அகல்யாபாயின் ஊரில்**

மத்தியப் பிரதேச யாத்திரையில் இந்தூரில் அதிக நாட்கள் தங்கும் வாய்ப்பு கிட்டிற்று (24-7-60-லிருந்து 25-8-60 வரை). இது அழகிய நகரம். இது நற்சிந்தனையாளர்கள் வாழும் இடம். மத்தியப்பிரதேச அரசின் தலைமை பீடம் போபால் ஆகும். நான் இந்தூரை அதன் கலாச்சார தலைமைபீடம் என்றேன். அந்த ஊர் மக்களுக்கு இந்தூரை சர்வோதய நகராகவே ஆக்க வேண்டிய வேலை தரப்பட்டுவிட்டது.

ஆனால் நகரத்தில் ஐந்து வாரங்கள் சுற்றியபோது ஒரு விஷயம் கண்ணில் பட்டது. அது என்னை மிகவும் புண்படுத்தியது. ஆங்காங்கே ஆபாச சினிமா போஸ்டர்கள் ஒட்டப்பட்டிருந்தன. இவ்வளவு ஆபாசமான போஸ்டர்களை எப்படிப் பொறுத்துக்கொள்வது? இந்த ஆபாச போஸ்டர்களும், ஆபாச சினிமாக்களும் இருந்தால் இந்தியா உருப்படாது; அது வீரியம் இழந்தே நிற்கும் என்பது தெளிவாயிற்று. இந்த ஆபாச போஸ்டர்களைப் பார்த்து நான் அடைந்த துன்பத்திற்கு அளவேயில்லை.

பூதான இயக்கத்துடன் தூய்மைப்பணியும் என் மனத்தில் உதயமாயிற்று. நான் இந்தூர் போயிருக்காவிட்டால் அது உதயமாகி இருக்காது. நான் அந்த ஊர் மக்களிடம் "உங்கள் பிள்ளைகளுக்கு காம விகாரம் இலவசமாகவும், கட்டாயமாகவும் போதிக்கப்படுகிறது. இதற்கு எதிராக சத்தியாகிரகம் செய்யுங்கள்" என்றேன். நகரசபையினரிடமும் வருமான ஆசையை விட்டு உங்கள் நகர ஆபாசபோஸ்டர்களை ஒழித்துக்கட்டுங்கள் என்று சொன்னேன். குறிப்பாக பெண்களிடம்" இல்லறத்தின் ஆணிவேரையே பிடுங்குகிறார்கள். எங்கு பார்த்தாலும் சகோதரிகள் மற்றும் தாய்மார்களின் உருவங்கள் ஆபாசமாக சித்தரிக்கப்பட்டுள்ளன. இந்நாட்டின் அமைதி மற்றும் ஒழுக்கம் பேணும் பொறுப்பை சகோதரிகளிடம் ஒப்படைக்கிறேன். இந்தூர் பெண்கள் விழித்துக்கொள்வார்களாக, இந்த போஸ்டர்களை ஒரு நாள்கூட பொறுக்காமல் அகற்றுவார்களாக, எரிப்பார்களாக" என்று கூறினேன்.

இந்தூரில் நான் இன்னொரு தூய்மைப்பணியும் செய்தேன். இந்தூரில் தூய்மை வாரம் அனுஷ்டித்தோம். நகரின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று துப்புரவுப்பணி செய்தோம். நான் மலஜலம் சுத்தம் செய்வதாகத் தீர்மானித்துக்கொண்டிருந்தேன். நான்போன இடத்தில் சத்துவ, ரஜோ, தமோ குணம் போல மலம், மூத்திரம், ஜலம் மூன்றும் இருந்தன. தோட்டிச் சகோதரிகள் கையினால்தான் செய்வார்கள் என்று நினைத்தேன். நானும் கையினாலேயே சுத்தம் செய்தேன். என் கையில் கையுறைகள் அணிந்திருந்தேன். ஆயினும் வேலைமுடிந்து திரும்பியதும் மீண்டும் மீண்டும் கையைக் கழுவத் தோன்றிக்கொண்டேயிருந்தது.

துப்புரவுப்பணியின்போது என் கால்களிலிருந்து ரப்பர் செருப்புகளை கழற்றி விட்டேன். அப்பாஸாஹிப் காலணி அவசியம் என்றார். நானே அதன் பெயரே ஸ்லிப்பர்; ஸ்லிப் (வழுக்கு) ஆகி விட்டால் அது ஒரு பெரிய கூத்தாகிவிடும். எனக்கு வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். மேலே மழை, கீழே அழுக்கு, என் கால்கள் ஒரே அசிங்கமாகிவிட்டன. வேலை முடிந்து திரும்பிய பின் கால்களை நெருப்பிலிட்டு சுத்தப்படுத்தத் தோன்றியது.

பலர் எங்களுடன் வேலை செய்தனர். நான் அவர்களிடம் உங்கள் வேலைத்திறனைக் காட்டி விட்டீர்கள். அறிவுத்திறனைக் காட்டுங்கள். இந்த மலஜலத் துப்புரவு மனிதன் செய்யக்கூடாது. அதற்கு உபாயம் கண்டுபிடிக்க வேண்டும். எல்லோரும் சேர்ந்து தோட்டிகள் இவ்வேலை செய்யாவண்ணம் ஒரு வழி கண்டு பிடிக்கவேண்டும் என்று சொன்னேன்.

இந்தூரை நான் சர்வோதய நகரமாக்க தேர்ந்தெடுத்ததற்கும் நெடுநாள் அங்கு தங்கியதற்கும் காரணம், அது அகல்யாதேவியாரின் ஊர் என்பதாகும். இப்போது அது கஸ்தூரிபா நகரமும் ஆகிவிட்டது. ஏழு நாட்கள் நான் கஸ்தூரிபா கிராமத்தில் இருந்தேன்.

**கீழைத் திசையில்**

**(அஸ்ஸாம், கிழக்கு பாகிஸ்தான், மேற்கு வங்கம், ஒரிஸ்ஸா – யாத்திரை)**

இந்தூரை விட்டுக்கிளம்பி அருகிலேயே ஒரு ஊரில் இருக்கும்போது (ராலு) நேருஜியின் கடிதம் ஒன்று எனக்கு வந்தது (30-9-1960). நான் அஸ்ஸாம்

போகவேண்டும் என்று அதில் அவர் யோசனை சொல்லியிருந்தார். அப்போது அஸ்ஸாமில் அமைதியின்மை நிலவி வந்தது. நான் அவருக்கு "கிராமதான வேலைக்காக நான் அஸ்ஸாம் போகவேண்டும். இதுவரை நான் அங்கு செல்லவில்லை. நான் போகும்போது இந்த வேலையையும் கவனிக்கிறேன். ஆனால் ஆமை தன் வேகத்தில்தான் போகும்; முயல் வேகத்தில் போகாது" என்று பதில் எழுதினேன். ராஜேந்திர பிரசாத்ஜிக்கு இந்த விபரம் தெரிந்தபோது முயல் ஜெயிக்கவில்லை, ஆமைதான் ஜெயித்தது, ஜெயிக்கும் என்று கூறினார். எங்கள் துணைவர்கள் நான் உடனே அங்கு விரைய வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். "அப்படி நான் செய்தால் அஸ்ஸாம்காரர்கள் தாங்கள் ஏதோ மாபெரும் பாவம் செய்துவிட்டதாகவும் அதனாலேயே விநோபாஜி எல்லா வேலைகளையும் போட்டது போட்டபடி விட்டு விட்டு வந்துவிட்டதாகவும் நினைப்பார்கள். உண்மையில் அஸ்ஸாமியர்கள் ஏதும் பெரிய பாவம் செய்துவிட்டதாக நான் நினைக்கவில்லை. ஒரு கெட்ட காற்று வீசியது. அதனால் அமைதி குலைந்தது - அவ்வளவுதான்" என்று நான் கூறினேன். நேருஜியிடம் யாரோ விநோபாஜி பாதயாத்திரையாகத்தான் போகிறார். அதுவும் நேராக அஸ்ஸாமுக்குப் போகவில்லை. முன்பே திட்டமிட்ட, சுற்றிவளைத்த பாதயாத்திரைப்பாதையில் போகிறார் என்று கூறியிருக்கிறார்கள். நான் அவருடைய ஸ்தானத்தில் இருந்தால் நானும் அப்படித்தான் செய்திருப்பேன் என்று அவர் பதில் சொல்லி விட்டார். நான் மெதுவாக அஸ்ஸாம் போய்ச் சேர்ந்தேன்.

வழியில் பீஹாரில் பயணம் நடைபெற்றது. அங்குள்ளவர்களிடம் பீஹாரில் 32 லட்சம் ஏக்கர் பெறும் என்ணம் முழுமையாக வெற்றியடைய-வில்லை. அந்த வேலையை மீண்டும் ஆரம்பியுங்கள் என்று கூறி பீகாவுக்கு ஒரு கட்டா நிலம் வாங்க யோசனை கூறினேன். அங்கே இப்படியாக பீகாவுக்கு கட்டா இயக்கம் தொடங்கியது.

இரண்டு நாட்கள் புத்தகயையில் சமன்வய ஆசிரமத்தில் தங்கினேன். அச்சமயம் புத்தசபையின் புத்தர் ஆலயத்தில் நான் தம்மபத-நவசம்ஹிதையை முழுமையாக ஓதினேன்.

அஸ்ஸாமில் பிரவேசித்தவுடனேயே முதல்நாளே (5-3-61) நான் அங்குள்ளவர்களிடம் கிராமதானம் சமுதாய அளவிலான எழுச்சிக்கான செயலாகும். தன்னையே உடையவன் என்போன் வைஷ்ணவனாக (அஸ்ஸாமில் வைஷ்ணவம் அதிகம் *-மொழிபெயர்ப்பாளன்*) முடியாது. சிருஷ்டி-அனைத்துக்கும் உடையவன் விஷ்ணுவே அல்லவா! என்று கூறினேன்.

அஸ்ஸாம் மாநிலம் முக்கால் பகுதி பிறநாடுகளை ஒட்டியது. கால் பகுதிதான் இந்தியாவுடன் ஒட்டியது. பர்மா, சீனா, திபெத், பாகிஸ்தான் ஆகியவற்றின் எல்லைகள் 2200 மைல்களுக்கு இந்நாட்டை ஒட்டி உள்ளன.

இந்தியாவின் 50-60 மைல் அளவுக்கே அஸ்ஸாம் ஒட்டியிருக்கிறது. இவ்வாறு புவியியல் ரீதியாக சிக்கலான இடமாக அஸ்ஸாம் விளங்குகிறது. எனவே இப்பகுதியுடன் எப்போதும் தொடர்பு வைத்திருப்பதும் அதன் வளர்ச்சியை இடைவிடாது கவனித்து வருவதும் அவசியம்.

அஸ்ஸாம் போய்ச்சேர்ந்ததிலிருந்து ஊடுருவல் பிரச்சினையைப்பற்றிய பேச்சு அடிபட்டுக்கொண்டே இருந்தது. பாகிஸ்தானிலிருந்து எந்த அளவில் வந்தனர் என்பதில் கருத்து வேற்றுமை நிலவிற்று. சிலர் ஏராளம் என்றனர். சிலர் அதிகம் இல்லை என்றனர். ஆனால் ஊடுருவல் என்பது அனைவரும் ஒப்புக்கொள்ளும் பிரச்சினை. மக்கள் நிலத்தை ஊருக்கே வைத்து நில விற்பனையை நிறுத்திவிட்டால், ஊடுருவல்காரர்களின் குறிக்கோள் நிறைவேறாது. பிரச்சினைதானே தீர்ந்துவிடும். இப்படி ஒரு அருமையான யோசனையை நான் சொன்னேன். இல்லையென்றால் எல்லைப்பகுதியில் என்ன செய்வது என்று யோசித்தாக வேண்டும். எல்லையில் வேலி எடுப்பதா, சுவர் எடுப்பதா, ஆயுதப்போலீசை நிறுத்துவதா? அப்புறம் போலீசைக் காக்க ராணுவம் வைப்பதா? இந்தப் பிரச்சினையை கிராமதானம் மூலம் தீர்க்கலாம் என்று நான் நினைக்கிறேன். கிராமதானத்தில் நிலவுடைமை கிராம சபைக்கு உரியது. யாரும் நிலத்தை விற்க முடியாது. நிலம் கிடைக்காது என்றால் வெளியிலிருந்து யாரும் இங்கு வந்து தங்க நினைக்கமாட்டார்கள்.

அங்கே ஊர்கள் தோறும் நான் 'நாம் கர்'' (திரு நாம் ஆலயம்) பார்த்தேன். மராட்டியர் மத்தியில் ஞானதேவரும், துகாராமும் எப்படியோ, இந்திப் பிரதேசத்தில் துளசிதாஸர் எப்படியே,ா அப்படி அங்கே சங்கர் தேவும், மாதவ தேவும் மிகவும் பிரபலம். இம்மகாத்மாக்கள் 'ஏக சரண' மதத்தை ஏற்படுத்தி அஸ்ஸாம் மக்களிடையே பக்தி நெறி பரப்பினார்கள். ஒரு சிறு ஊரிலும் ஒரு நாம்கர் இருக்கும். அது கிராமத்தை ஒரு குடும்பமாக இணைக்கும். ஒவ்வொரு வீட்டிலும் இன்னும் பெண்கள் தறியில் நெசவு செய்கிறார்கள் கிராமதானத்தின் அஸ்திவாரம் முன்னதாகவே அங்கே இருப்பதாக எனக்குப்பட்டது. நாம்கர் - உடன்கூட காம் கர் (கிராமத்தொழிற் கூடம்) இருந்தால் இப்பகுதி வலிமை பெற்று விடும் என்று நினைத்தேன். அஸ்ஸாம் மாநிலத்தில் வெகு எளிதில் கிராமதானத்திற்கான சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது.

நான் இந்தூரில் இருந்தபோது அஸ்ஸாமைச் சேர்ந்த ஒரு சகோதரி "பெண்கள் சக்தியை நிறுவ விரும்பினீர்களானால் நீங்கள் கட்டாயம் அஸ்ஸாம் வரவேண்டும்" என்று கடிதம் எழுதியிருந்தார். அவர் எழுதியது எழுத்துக்கு எழுத்து உண்மை. பிரம்மச்சரியம் பேணி, சமூகத்தொண்டு ஆற்றும் ஆன்மீக நாட்டம் உள்ள சகோதரிகளின் ஒரு குழு இங்கு அமைந்துள்ளது . அமல்பிரபா என்னும் சகோதரி இதற்கு முக்கிய காரண கர்த்தர். அவர் தொண்டு அஸ்ஸாம் முழுவதும் பரவி உள்ளது.

நான் இன்னொரு வேலை செய்தேன். எங்கள் பயணத்தில் எங்கள் பாதயாத்திரையில் கலந்துகொண்ட இரு அஸ்ஸாம் பெண்களுக்கு கீதாயியை அடிப்படையாகக்கொண்டு மராட்டி கற்பிக்க முயன்றேன். அஸ்ஸாம் எங்கே மஹாராஷ்டிரம் எங்கே? ஆனால் பல அஸ்ஸாமிய சொற்கள் மராட்டிய சொற்களுடன் ஒத்திருப்பதைக் கண்டேன். மேலும் அச்சகோதரிகளுக்கு தேவநாகரியும் தெரிந்திருந்தது. நாகரி எழுத்து கீதையின் கருத்து இரண்டையும் துணையாகக்கொண்டு நான் அவர்களுக்கு மராட்டி கற்பித்தேன். அவர்களும் மராட்டி எழுதப் படிக்க பேசக் கற்றுக்கொண்டு விட்டனர்.

இந்தியாவை ஒரு மொழியினால் இணைக்க முடியாது, ஒரு வரிவடிவத்தினால் முடியும் என்பது என் கருத்து. இந்தியாவின் அனைத்து மொழிகளும் தத்தம் வரிவடிவங்களுடன் தேவ நாகரியையும் மேற்கொண்டால் இதை சாதிக்கலாம். நான் எதையும் "அதுமட்டுமே" என்று வற்புறுத்துவதில்லை. "அதுவும்" என்றே சிபாரிசு செய்வேன். நாகரிலிபி மட்டுமே என்று சொல்லமாட்டேன். நாகரிலிபியும் இருக்கட்டும் என்பேன். எல்லா மொழிகளிலும் காணப்படும் தலைசிறந்த இலக்கியங்கள் தேவநாகரியிலும் கிடைக்குமானால் ஒருவர் மற்றவர் மொழியை எளிதில் கற்க இயலும். அது இந்தியாவின் ஒருமைப்பாடு வளர உதவி செய்யும்.

அஸ்ஸாமில் நான் ஒன்றரை ஆண்டுகள் (5-3-61-லிருந்து 4-9-62 வரை) இருந்தேன். அப்பகுதியை இரண்டுமுறை மெதுவாக வலம் வந்தாயிற்று. இனி மேற்கொண்டு செல்லவேண்டும். சீனா, பர்மா, பாகிஸ்தான் மூன்றில் எந்த நாட்டுக்காவது செல்லலாம். நான் மேற்கு வங்கம் போக நினைத்தேன். நடுவில் கிழக்கு பாகிஸ்தான் இருந்தது. நான் கிழக்கு பாகிஸ்தான் வழியே மேற்கு வங்கம் போக நினைத்தேன். இரு நாட்டு அரசாங்கங்களும் அனுமதி அளித்தன. நான் கிழக்கு பாகிஸ்தானை நோக்கிப் பயணமானேன்.

கிழக்கு பாகிஸ்தானின் முதல் கூட்டத்திலேயே நான் பாகிஸ்தானில் இருப்பதற்காக மகிழ்ச்சி அடைகிறேன். இது என் நாடு. எனக்கு இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் வேறுபாடே தெரியவில்லை என்றேன். அதே காற்று, அதே மண், மனிதர்களும் அப்படியே, மனங்களும் அப்படியே. வேறுபாடு எதுவும் இல்லை. உலகமே நமது; நாம் உலகின் தொண்டர்கள் என்று நான் கருதுகிறேன். ஏதோ ஒரு நாட்டில் பிறந்து, வளர்ந்து மறைவது ஒரு தற்செயலான நிகழ்ச்சியேயன்றி நாம் தேர்ந்தெடுப்பது அல்ல.

இங்கே வந்து பார்க்கும்போது எனக்கு நான் இந்த நாட்டையும் சேர்ந்தவன் என்றே தோன்றுகிறது. மனித சமுதாயம் முழுவதுமே என் மனத்தில் வீற்றிருக்கிறது. அதனாலேயே எங்கு போனாலும் 'ஜெய் ஜகத்' என்று நான் கோஷிக்கிறேன். என்னுடைய முதல் இரண்டு மூன்று கூட்டங்களில் சிலர் பாகிஸ்தான் ஜிந்தாபாத் என்று கோஷித்தனர். நான் ஜெய் ஜகத் என்றே கூறிவந்தேன். மெல்ல மெல்ல அவர்களும் ஜெய் ஜகத் என்றே கூற ஆரம்பித்தார்கள். நான் ஜெய் ஹிந்த் சொல்ல ஆரம்பித்திருந்தால் ஜெய் ஹிந்துக்கும் பாகிஸ்தான் ஜிந்தாபாத்துக்கும் மோதல் வந்திருக்கும். ஜெய் ஜகத் கோஷத்தில் எல்லோரும் அன்பால் ஒன்றானார்கள்.

நான் என்னுடன் கீதைப் பேருரைகள் எடுத்துச் சென்றிருந்தேன். பதினைந்து நாட்களில் 800 பிரதிகள் விற்றுப்போயின. அவற்றில் 300 பிரதிகளை வாங்கியவர்கள் முஸ்லீம்கள். அப்பிரதிகளில் நான் அன்புடன் கையெழுத்திட்டுக் கொடுத்தேன். இந்தியாவிலும் ஆயிரக்காணக்கான முஸ்லீம்கள் கீதைப் பேருரைகள் வாங்கினர்.

என் குர்ஆன் சாரம் அப்போது தயாராக இருந்தது, அச்சாகவும் இருந்தது. ஆனால் அதற்கு முன்பாகவே கராச்சி 'டான்' பத்திரிகை கடந்த 1300 வருடங்களில் நம் வேதத்தில் இப்படி யாரும் பிரித்து தொகுத்ததில்லை. இந்த

காபீர் இதைச் செய்வதா? என்று எழுதியது. இந்தியாவில் எல்லா முஸ்லீம் பத்திரிகைகளும் என்னை ஆதரித்து டான் விமரிசனம் சரியல்ல. குர் ஆனின் சாரங்கள் முன்பும் வெளிவந்துள்ளது. எனவே நூலைப்படிக்காமல் அதை விமரிசிப்பது தவறு என்று எழுதின. இது மனதைத் தொட்டது. நான் முஸ்லீம் பெருமக்களுக்கு மிகவும் கடன்பட்டிருக்கிறேன்.

பாகிஸ்தானில் நான் மௌன பிரார்த்தனையை நடத்தி வந்தேன். அதில் ஆயிரக்கணக்கான இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர்கள் கலந்து கொண்டனர். அதையும் டான் விமரிசித்து இவன் இந்து பிரார்த்தனை நடத்துகிறான் என்று எழுதியது. கிழக்கு பாகிஸ்தான் பத்திரிகைகள் எதுவும் அப்படி எழுதவில்லை. நான் அந்த விமரிசனத்திற்கு பதிலாக "நீங்கள் வீட்டில் பூஜை செய்கிறீர்கள் தொழுகை நடத்துகிறீர்கள்; அவற்றை நான் எதிர்க்கவில்லை. ஆனால் எல்லோரும் சேர்ந்தும் வழிபட முடியுமா, முடியாதா? முடியாது என்றால் இறைவனையே நாம் துண்டாடுகிறோம் என்று பொருள்" என்றேன்.

முதல் நாள் நிலம் யாசித்தபோதே ஒரு முஸ்லீம் கொடையாளர் தானம் தர சித்தமாக எழுந்து நின்றார். இவ்வாறாக இஃப்திதாஹ் நிகழ்ந்தது. அதாவது வாயில் திறந்தது. மனிதன் எங்கும் ஒரே மாதிரிதான் என்பது நிரூபணமாயிற்று. பாகிஸ்தானிலும் நிலப்பிரச்சினை அன்பாலும் அகிம்சையாலும் தீர்க்கப்பட முடியும்.

பாகிஸ்தான் மக்கள் முன்பாகவும் நான் இந்திய மக்கள் முன்பாகக் கூறிய கருத்தையே கூறினேன். உலகக் கூட்டமைப்பு (World Federation) ஏற்பட முதல் படி இந்தியா - பாக் கூட்டமைப்பு (India - Pak. Confederation) ஏற்படுவதாகும் என்பதே அக்கருத்து.

பாகிஸ்தானிய சகோதரர்களின் பரிவான நடத்தையால் நான் உள்ளம் உருகினேன். பாகிஸ்தான் அரசு பயணத்தின்போது எல்லா ஏற்பாடுகளையும் செய்தது. அதுவும் நன்றிக்கு உரியது. பாகிஸ்தானியர்கள் என்னை சகோதரனாகவே நடத்தினர். என்னை துவக்கத்தில் விமரிசித்த பத்திரிகையாளர்களும் அவர்கள் நாட்டில் நான் செய்த தொண்டு நல்ல குறிக்கோளுடனே செய்யப்பட்டது என்று கருதத் தொடங்கினார்கள் என்றே கருதுகிறேன்.

பாகிஸ்தானில் இருந்தபோது சுமார் ஒரு வருடகாலம் என் மனத்தில் ஒரு சிந்தனை நிலவி வந்தது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு பூதானக் கருத்து மக்கள் முன்பு வைக்கப்பட்டது. கிராமதானக் கருத்து எட்டு ஆண்டுகளுக்கு முன்பு வைக்கப்பட்டது. கிராமதானத்தில் தனி நிலவுடைமை நீக்கம் மற்றும் நிலப்பங்கிடு வலியுறுத்தப்பட்டது. யோசித்துப் பார்த்தபின் அது சமுதாயக்கண்ணோட்டத்திற்கு உகந்ததாக இருந்ததே அன்றி தனிமனிதக் கண்ணோட்டத்திற்கு உகந்ததாக இல்லை என்று பட்டது. இரண்டையும் இணைக்கவழிதேடினேன். அப்போதுதான் சுலப கிராமதானம் என்கிற கருத்து உதித்தது. சுலப கிராமதானத்தில் நிலவுடைமை கிராம சபைக்கு அர்ப்பணிக்கப் படும் நிலத்தில் இருபதில் ஒருபாகம் நிலமற்றவர்க்கு வழங்கப்படும். மீதமுள்ள நிலம் சாகுபடிக்காக நிலத்தின் சொந்தக்காரரிடமே விடப்படும் அவர்

விரும்பினாலன்றி எஞ்சிய நிலம் பிறருக்கு அளிக்கப்பட மாட்டாது. வங்காளத்தில் நான் சுலப கிராமதான யோசனையை வெளியிட்டேன். தொண்டர்களிடம் புதிய உற்சாகம் பரவியதைக் கண்டேன். வங்காளத்தில் கிராமதானங்கள் கிடைத்தன. எந்த பிளாசியில் இந்தியா தன் சுதந்திரத்தைப் பறிகொடுத்ததோ அந்த பிளாசியே கிராமதானம் ஆயிற்று.

நேருஜியை நான் இறுதியாக வங்காளத்தில்தான் சந்தித்தேன். தனிப்பட்ட கலந்துரையாடலில் பிளாசி கிராமதானமாயிற்று என்ற செய்தியை அவரிடம் சொன்னேன். அவர் இச்செய்திகேட்டு "அப்படியா. மிகவும் மகிழ்ச்சி. எனக்கு மில்டன் நினைவு வருகிறது. மில்டன் இழந்த சொர்க்கம் (Paradise Lost) எழுதிய பின் மீண்ட சொர்க்கமும் (Paradise Regained) எழுதினான். அதே போல் நமக்கும் இழந்த பிளாசி மீண்டும் கிடைத்தது. என்று மகிழ்ந்தார். அன்று பொதுக்கூட்டத்தில் அவர் நமக்கு சீனாவுடன் போர் உள்ளது.நம்முடைய பகுதி சிறிதை சீனா கைப்பற்றிக்கொண்டுவிட்டது. நாம் அதை மீட்கவேண்டும். ஆனால் அது பெரிய விஷயம் அல்ல. நம் உண்மையான போர் வறுமையுடன் ஆகும். அது மிகக் கடினமான போர். அந்த சண்டையில் விநோபாஜியின் கிராமதானம் பெரிதும் உதவும் என்று பேசினார்.

அந்நாட்களில் கதரைப்பற்றியும் நான் சிந்தித்து வந்தேன். நவத்வீபத்தில் (மேற்குவங்கம், 4-6 பிப்ரவரி 63) இந்தியாவின் அனைத்து கதர் ஊழியர்களும் திரண்டிருந்தனர். அவர்கள் மத்தியில் என் கருத்தை வெளியிட்டேன். இதுவரை நாம் ஒருவகையாக சிந்தித்தோம். கதர் பிரச்சாரம் செய்தோம். பணம் திரண்டது. அதனை கதர் உற்பத்தியில் ஈடுபடுத்தினோம். இப்போது வேறு வகைகளில் சிந்திப்போம். இதுவரை கதர் அரசாங்கத்தை எதிர்நோக்கி யிருந்தது. இனி கிராமத்தைச் சார்ந்ததாக அதை ஆக்க வேண்டும். ஒவ்வொரு வரும் சில கஜம் கதர் இனாமாக நூற்றுத் தரவேண்டும். இலவச நெசவு கிராமத்தில் நூற்பதை ஊக்குவிக்கும். கூடவே கிராமம் துணியில் தற்சார்பு அடையும். இது ஒரு பாதுகாப்பு நடவடிக்கையாகவும் (Defence Measure) விளங்கும். கிராமம் தனக்குவேண்டிய உணவையும், துணியையும் தானே தயாரித்துக்கொள்ளும் ஆற்றல் பெற்றால் வலுவடையும். அதனால் நாடும் வலிவடையும். நான் ப்ரெளனிங்கின் ஒரு வாக்கியத்தை நினைவுபடுத்தினேன்.

(நான் எப்போதுமே ஒரு போர் வீரன். எனவே இன்னும் ஒரு போர், அது இறுதிப்போர். என் தீரத்தையெல்லாம் காட்டும் தலை சிறந்த போர்.) கதர் தன் இறுதிப்போரைத் துவங்க வேண்டும் என்றும் நினைக்கிறேன். இதன் பிறகு ஒன்று கதர் அரியணை ஏறும் அல்லது வீரமரணத்தைத் தழுவும் என்று நான் பேசினேன்.

நான் கங்காசாகரை நோக்கிப்போய்க்கொண்டிருந்தேன். அன்று ஏப்ரல் மாதம் 18-ம் தேதி (1963) அன்றுடன் எங்கள் பாதயாத்திரை ஆரம்பித்து பன்னிரண்டு வருடங்கள் நிறைவு பெற்றன. அன்று நான் என் கருத்தை இவ்வாறு வெளியிட்டேன். "ஒரு தவம் முடிந்தது. பன்னிரண்டு ஆண்டுகள் பிரச்சாரம் செய்தேன். அதற்கு மக்கள் பூதான கங்கை என்று பெயரிட்டனர்.

இப்போது அந்த பூதான கங்கை கங்காசாகரில் சங்கமம் ஆகும். இத்துடன் அதன் பயணம் நிறைவு பெறுகிறது. இனி என் யாத்திரை துறவு யாத்திரை யாகும். இனி விட்டு விடுதலையாகி உலவுவேன். என் வேலை நிறைந்த மனத்துடன் விளையாடிக்கொண்டிருப்பது ஆகும். இனி தொண்டர்கள் வேலையைத்தொடர்வார்கள். பொதுக்கூட்டங்களில்பேசுவதைக் குறைத்துக் கொள்வேன். இந்தியா முழுவதிலும் கருத்து வேற்றுமையின்றி பரஸ்பர நேசத்தில் பிணைந்த ஒரு தொண்டர் குழு ஏற்படுத்துவதை கவனிப்பேன்.

**மும்மூர்த்தி வழிபாடு**

இடையில் சர்வோதய சம்மேளனங்களுக்கு செல்வதை நான் விட்டுவிட்டிருந்தேன். அதற்குப் பல காரணங்கள். ஒன்று நான் ஒன்றும் தலைவன் இல்லை என்பதாகும். மற்றொன்று தலைவன் இல்லாவிட்டாலும் தலைமைப்பொறுப்பைக்களைவது என்வேலையாகும். இன்னொருகாரணம் என் உள்முக நாட்டமுமாகும். ஆயினும் 1963-ல் நான் ராயப்பூர் சர்வோதய சம்மேளனத்திற்குப் போயிருந்தேன்.

அங்கே நான் மூன்று வித வேலைத்திட்டங்களை முன்வைத்தேன். 1) கிராமதானம் நிறைவேறாத வரை நாம் புதிய யுகத்திற்கு ஏற்றவர்களாக ஆக முடியாது. புதிய யுகம் உலகமே ஒரு நாடு என்பதாகும். அதில் ஒரு ட்ரிப்யூனல் கோர்ட் இருக்கும். அதில் உலகின் உத்தமர்கள் இருப்பார்கள். இந்தியா அதில் மாநிலமாகும். இன்றைய மாநிலங்கள் அதன் மாவட்டங்களாகும், மாவட்டங்கள் ஊராகும், ஊர் ஒரு குடும்பமாகும். இன்று நமது குடும்ப எல்லையை ஊர் அளவுக்கு விரிக்க வேண்டும். அப்போதுதான் உலக அமைதியைப் பற்றி நாம் பேச முடியும். எனவே ஒருபுறம் ஜெய் ஜகத், மறுபுறம் கிராமதானம் என்கிற கொள்கைவேண்டும். 2) சாந்திசேனை: சாந்திசேனையை விரிவுபடுத்தி உள்நாட்டு அமைதிக்கு போலீஸ் வேண்டாம், ராணுவம் வேண்டாம் என்ற நிலையை உண்டாக்காத வரை அகிம்சையால் சாதிக்க முடியும் என்று சொல்ல நமக்கு உரிமை கிடையாது. எனவே சாந்திசேனை அவசியம். 3) கிராமம் சார்ந்த கதர்: இன்று கதருக்கு அரசின் உதவி கிடைக்கிறது. பாதுகாப்பு கிடைக்கிறது. இதனால் அதன் வீரியம் குறைந்து போகிறது. கதர் புரட்சிக்கு ஒரு கருவியாக வேண்டும். கிராமக் கதரே காந்தி கண்ட கதராகும்.

சர்வோதய சம்மேளனம் இம்மும்முனைத் திட்டத்தை ஏற்றது. சம்மேளனம் முடிந்தபின் ராயப்பூரிலிருந்து நான் மஹாராஷ்டிரத்தின் விதர்ப்பபிரதேச வார்தாவை நோக்கிக் கிளம்பினேன்.

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்பு எவ்வழியாக (வார்தாவிலிருந்து) டில்லி போனேனோ அதே வழியாக இப்போது (ராய்ப்பூரிலிருந்து) வார்தா போய்க்கொண்டிருந்தேன். அப்போது பூதானம் கேட்டு சுற்றினேன். அப்போது செல்டோவில் (வார்தாவிலிருந்து 20-மைல் தொலைவில் குமரப்பாவின் பண்ணை ஆசிரமம் இருந்தது – *தொகுப்பாளர்*) குமரப்பாவை சந்தித்தேன். இப்போது அங்கே அவர் நினைவுக்கு வணக்கம் சொல்லி நடந்தேன்.

வார்தாவுக்கு அருகில் வந்தபோது துணைவர்கள் “வார்தாவை நெருங்குவது எப்படி இருக்கிறது. மனத்தில் விசேஷமாக எதையாவது உணர்கிறீர்களா?” என்று விசாரித்தார்கள். “உலகமே என் வீடானாலும் பாரதம் விசேஷமான உறைவிடமாகும். மராட்டிய மொழியில் சொல்வதானால் பாரதம் மாஜ்கர் (நடு வீடு ஆகும்) மகாராஷ்டிரம் நடுவீட்டின் உள்வீடு. வார்தா மாவட்டம் கர்ப்பகிரகம் போன்றதாகும்” என்று நான் சொன்னேன்.

பதின்மூன்று வருடங்கள், மூன்று மாதங்கள், மூன்று நாட்கள் கழித்து பிரம்ம வித்யா மந்திர் ஆரம்பித்தபின் முதல் முறையாக நான் பிரம்ம வித்யா மந்திரை அடைந்தேன் (10-4-1964) பதின்மூன்று வருடங்கள் இடைவிடாது சுற்றினேன். பயணத்தின் மூலம் செய்ததை நான் பெரிதாகக் கருதினேன் என்பது வெளிப்படை. ஆனால் இங்கு நடைபெறும் சோதனை அதனிலும் பெரியது என்பது என் அனுபவம். பின்னே சுற்றுவதற்கு பதிலாக இந்தச் சோதனையில் நீங்களும் பங்கேற்றிருக்கலாமே என்று கேட்கலாம். குயவன் சக்கரம் போலத்தான். குயவன் பானை செய்ய சக்கரத்தை விரைவாகச் சுற்றுகிறான். பானை செய்து முடித்து பானையை அகற்றிய பின்னும் சக்கரம் சுழன்று கொண்டே இருக்கும். வேலை முடிந்த பின்னும் கொஞ்சம் பயணம் நீடிக்கும். அப்போது வேலையே முடியாமல் இருந்தது. சுற்றுவது நிற்பது எப்படி?

இரண்டு மாதங்கள் வார்தாவில் சுற்றி விட்டு பவுனார் வந்தேன். நோய்வாய்ப்பட்டேன். நீண்டநோயின்போது நண்பர்கள் அங்கேயே சில நாட்கள் ஓய்வு எடுக்க யோசனை சொன்னார்கள். என் உடல் நலம் விஷயமாக சிலருக்குக் கவலை ஏற்பட்டிருந்தது. மூன்று மாதங்களுக்கு முன்பாக லேசாக தலை சுற்றியது. நடுவில் ஒருநாள் காலை எழுந்தவுடன் அப்படி இருந்தது. இப்படியாக நண்பர்களின் கவலைக்கு நான் காரணமானேன். அவர்களுக்குக் கட்டுப்பட்டு நான் பவுனாரில் சிறிது அதிக காலம் தங்க முடிவு செய்தேன்.

நண்பர்கள் என் உடல் நலத்திற்காக கவலைப்பட்டு ஓய்வெடுக்கச் சொன்னார்கள். ஆனால் என் கண்ணோட்டம் வேறுவிதமாக இருந்தது. பூதான கிராமதான செய்தியைப் பரப்பிய வண்ணம் சுற்றுவது எனக்குப் பெருமை சேர்க்கலாம் ஆனால் பதின்மூன்று வருடங்களுக்குப் பின்னும் நான் சுற்றிக்கொண்டிருந்தால் அது என் நண்பர்களுக்கு பெருமை சேர்ப்பதாக இருக்காது. ஒருவருக்கு எது சிறப்பளிக்குமோ அதுவே மற்றவருக்கு சிறப்பளிக்கும். நல்வாய்ப்பு அமைந்தால் தர்மசங்கடம் ஏற்படாது. ஆனால் ஒருவருக்கு சிறப்பாய் அமைவது மற்றவர் சிறப்புக்கு முரணாய் அமைந்துவிட்டால் செய்தற்குரியது எது என்பது குழப்பமாகிவிடுகிறது. செய்யவேண்டுவதைத் தீர்மானிக்க நான் தாற்காலிகமாக ஓய்வுக்கு ஒத்துக் கொண்டேன். செய்யவேண்டுவதை முக்கியமாக ஆத்மபரிசோதனையினாலும், ஓரளவுக்கு சூழ்நிலையை அனுசரித்தும் தீர்மானிக்கமுடியும். ஆத்மபரிசோதனைக்காக நான் பிரம்ம வித்யா மந்திரில் தங்க ஒப்புக் கொண்டேன். அதற்கு இன்னொரு காரணமும் இருந்தது. என்னை ஒரு நிமித்தமாகக் கொண்டு இந்தியாவில் ஆறு ஆசிரமங்கள் தோன்றின. அவற்றின் ஒரே

நோக்கம் சாதகர்களுக்கு பயிற்சி அளிப்பதேயாகும். அதைக் கவனிப்பது என் கடமையுமாகும். இந்த ஒய்வு காலத்தில் அதைப்பற்றி சிந்திக்கலாம் என்று எனக்குத் தோன்றியது.

பவுனாரில் இருந்த இந்த காலஇடைவெளியில் நான் ஐந்து நாட்கள் உண்ணாவிரதம் இருந்தேன் (12 - 17 பிப்ரவரி '65). நாட்டில் நடந்த மொழிக்-கலவரங்களினால் நான் 12-ஆம் தேதி உண்ணாவிரதம் இருக்கத் தீர்மானித்-தேன். எனது இந்த உபவாசம் காலவரம்பற்றது என்றும் அறிவித்தேன்.

இந்த உபவாசத்தில் எனக்கு சிரமம் சற்றும் ஏற்படவில்லை. நாடெங்கிலுமிருந்து அன்பை நான் பெற்றேன். உபவாச செய்திஅறிந்து குல்ஜாரிலால் நந்தா (மத்திய உள்துறை அமைச்சர்) இங்கு வந்தார். நான் மும்மொழித் திட்டத்தை அவர் முன்பு வைத்தேன் அவர் எல்லா முதன் மந்திரிகளோடும் தொடர்பு கொண்டார். எல்லா முக்கிய மந்திரிகளும் மும்மொழித் திட்டத்தை ஏற்றுக்கொண்டனர்.

நான் உண்ணாவிரதம் மேற்கொள்ளும் இயல்பு உடையவன் அல்ல. நான் பக்திமார்க்கத்தவன். சித்தசுத்திக்கேயன்றி வேறு எதற்கும் உண்ணாவிரதம் இருப்பதில் எனக்கு நாட்டமில்லை. ஆயினும் பரமாத்மாவின் கட்டளையை என்னால் தட்டமுடியாது. உண்ணாநோன்பு ஐந்து நாட்கள் நடந்தன. ஆனால் அந்நாட்களில் நிர்மல வானம் போல பெரும் அமைதியை உணர்ந்தேன். இந்த உண்ணாநோன்பினால் பயன் ஏதும் விளையும் என்ற பற்று என் மனத்தில் இல்லை. ஆனால் இறைவனின் விருப்பப்படியே எல்லாம் நடக்கிறது. பலன்களை இறைவன் திருவடிகளில் சமர்ப்பித்துவிட்டு அச்செயலினின்றும் முக்தனானேன். உண்ணாநோன்புக்குப்பின் சிந்தனை பெரும்பகுதி பிரம்ம வித்தை பற்றியே இருந்தது.

இவ்வுடலுக்கு 70 வயது ஆகிக்கொண்டிருந்தது. எதிலும் மனம் செல்வது இயற்கையாக நிகழ்கிறது என்பதைக் கண்டேன். யாராவது ஒருவர் எதைப்பற்றியாவது கேட்டால் அந்த அளவுக்கு மனம் அதில் ஈடுபடுகிறது. நாமே சொல்லிக்கொண்டிருந்தால் மற்றவர்களுக்கு அதில் ஒன்றும் தானாகத் தோன்றாது போய் விடுகிறது என்பதை நான் கண்டேன். அதற்கு மாறாக உயிருடன் இருக்கும் போதே செத்த மாதிரி இருக்கவேண்டும் என்று நினைத்தேன். வல்லபஸ்வாமி போனார் (டிசம்பர், 1964). ஒருவர் பின்னால் ஒருவராக போய்க் கொண்டே இருக்கிறார்கள். போனவர் அறிவுரை கூற வருவதில்லை. எனவே நான் இறக்கும் முன்பே 'இறந்து' பூதானம் என்ன ஆகிறது என்று பார்க்க நினைத்தேன். ஆலோசனை கேட்டு யாராவது வந்தால் யோசனை சொல்வது இல்லையேல் பற்றற்று வெறுமனே பார்த்துக் கொண்டிருப்பது என்று தீர்மானித்தேன். எனவே என் நண்பர்களிடம் "நான் இங்கு 'டிக்ஷ்னரி' போல இருப்பேன். டிக்ஷ்னரியை யாராவது பார்த்தால் அது உபயோகமாக விளங்குகிறது. இல்லையேல் அலமாரியில் சும்மா கிடக்கிறது. அது தானே போய் மற்றவர்களுக்கு பொருள் விளக்குவதில்லை. அதுபோல நான் இங்கு இருப்பேன்" என்றேன்.

**புயல்வேகப் பயணம்**

அந்தச் சமயத்தில் கோபுரி-வார்தாவில் சர்வசேவாசங்கக்கூட்டம் நடைபெற்றது. அனைத்திந்தியாவிலிருந்தும் பலர் வந்திருந்தனர். ஒவ்வொரு மாநிலத்தைச் சேர்ந்தவர்களும் ஒருவர்பின் ஒருவராக என்னைக் காண வந்தவண்ணமிருந்தனர். பீஹார் மாநிலத்தவர்கள் வந்தபோது "பீஹாரில் பூதானப்புயல் வீசச் செய்து ஆறுமாதங்களுக்குள் பத்தாயிரம் கிராம தானங்கள் வாங்குங்கள் பார்க்கலாம். அப்படிச் செய்தீர்களானால் தேவைப் பட்டால் நானும் வருகிறேன்" என்று சொன்னேன். பீஹார்காரர்கள் ஒப்புக் கொண்டனர். நானும் பீஹாரைநோக்கிப் புறப்பட்டேன் (24-8-1965).

"நீங்கள் ஒரு இடத்தில் உட்கார்ந்து ஒரு முன்மாதிரி மட்டும் செய்து காண்பியுங்கள்" என்று சிலர் என்னிடம் சொன்னார்கள். "காந்திஜி உயிருடன் இருந்த போது சில ஆண்டுகள் நான் ஓரிடத்தில் இருந்து தொண்டாற்றி யிருக்கிறேன். இப்போது ஒரு இடத்தில் உட்கார்ந்துவிட்டால் வேலை நடக்காது. நான் நடந்தால் தொண்டர்கள் எழுந்து உட்காருவார்கள். நானே உட்கார்ந்து விட்டால் அவர்கள் தூங்கியே விடுவார்கள். எனவே நான் ஓடினால் அவர்கள் நடக்க ஆரம்பிப்பார்கள். எனவே நான் நடக்கவேண்டும். அப்போதுதான் தொண்டர்கள் உட்கார்ந்தாவது செயல்படுவார்கள். இல்லா விட்டால் தூங்கிவிடமாட்டார்களா?" என்று நான் பதில் சொன்னேன்.

ஒருநாள் ஜெயப்பிரகாஷ்நாராயணனுடன்பேசிக்கொண்டிருந்தபோது "இந்தப்புயல்வேகப்பயணம்என் இறுதிப்போர் ஆகும்." என்று சொன்னேன். அவர் சொன்னார், "இது இறுதிப்போர் அல்ல, இன்னும் பல போர்களுக்கு பாபா வேண்டும். இதற்குள் நாங்கள் உங்களுக்கு விடை கொடுக்க முடியாது" அது உங்கள் கையில் இருந்தால் அல்லவா விடை கொடுப்பதும் கொடுக்காமல் இருப்பதும் முடியும், அதனாலேயே நான் என் மரணத்திற்கு முன்பாகவே சாக விரும்புகிறேன். ஒவ்வொரு மனிதனும் தன் மரணத்திற்கு முன்பே 'இறந்த' நிலை எய்தவேண்டும். ஒவ்வொருவரும் சாகும்முன்பே 'இறந்த' நிலையில் இருந்து தன் முடிவை தன் கண்களால் காணவேண்டும். இது என் விருப்பம்." என்று நான் அவருக்குச் சொன்னேன்.

பீஹாரிலிருந்து சில நாட்களுக்கு ஒரிஸ்ஸா போவதாகத் தீர்மானித் தோம்.பயணத்திட்டமும் வகுக்கப்பட்டது.ஆனால்திடீரென்று எனக்கு உடல் துன்பம் ஏற்பட்டது. நான் ஜாம்ஷெட்பூரில் தங்கவேண்டியதாயிற்று. ஒரிஸ்ஸா பயணத்தை ரத்து செய்ய வேண்டியதாயிற்று. புயல்வேக கிராமதானப் பயணத்தில் என் ஒரிஸ்ஸா பயணத்தை நோயின் காரணமாக இப்போதைக்கு ஒத்திப்போட நேர்ந்ததற்காக வருந்துகிறேன். ஆனால் 'புயல் தானே வருவதுதானே' 'ஒரு தனி நபரினாலா புயல் அடிக்கிறது?' என்றும் தோன்றுகிறது. பக்திமார்க்கத்தில் உறவைக் காட்டிலும் பிரிவில் வேகம் அதிகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒரிஸ்ஸாவில் நான் இல்லாமல் தொண்டர்கள் இருமடங்கு வேகத்துடன் ஈடுபடுவார்கள். புயல் அதிகவேகத்துடன் வீசும் என்று நம்புவதாகக் கூறினேன்.

நோயின் போது என் சிந்தனை ஓட்டம் நடைபெற்றுக்கொண்டே இருந்தது. பவுனாரில் நான் ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தேன். அங்கே

உட்கார்ந்து கொண்டே புயல் அடிக்கவேண்டும் என்று சொன்னால் அது என் வறட்டுப் பிடிவாதம் என்றாகும். ஆனால் அங்கிருந்து கிளம்பி பீஹார் பயணத்தை முடித்த பின் உட்காரவேண்டி வந்தபோது இதில் இறைவனின் சித்தம் புலப்படுவதாக உணர்ந்தேன். இனியும் பயணம் செய்வேன் என்று பிடிவாதம் பிடிப்பது இறைவன் சித்தத்திற்கு முரணாகும் என்று நினைத்தேன்.

நான் உடல் தேறிவந்தேன். கவலைப்பட ஏதுமில்லை. உடல் துன்பம் ஏற்படவே செய்தது. அது இறைவனின் வரம் என்று கருதுகிறேன். அதனால் எனக்கு பயனே விளைந்தது. பெரும்பாலான சமயத்தை சிந்தனையிலும், தியானத்திலும் கழித்தேன். நாலாபக்கங்களிலுமிருந்தும் கிராமதான தந்திகள் வந்த வண்ணம் இருந்தன. எதிர்பார்த்த வேகத்தில் பாதி அளவில் புயல் அடித்தது. மார்ச் 16-ஆம் தேதி நான் அங்கிருந்து கிளம்பி வடபீஹாரை நோக்கிப் புறப்பட்டேன்.

**உள்முக நிலை**

அந்நாட்களில் எனக்கு உள்ளிருந்து 'இனி யாருக்கும் அதிகம் தொந்தரவு கொடுக்கக்கூடாது' என்று கட்டளை வந்தது. யாரும் என் கூற்றுகளைத் தொந்தரவு என்று நினையாதிருக்கலாம். ஆனால் ஒருவன் சொன்னதையே சொல்லிக்கொண்டு தொங்கிக்கொண்டு நிற்பது நிச்சயம் தொந்தரவேயாகும். இந்த ஆண்டு முடிவுக்குள் (மனத்தில் ஒரு தேதி இருந்தது) நான் தானாகவே மக்களிடம் போவதை நிறுத்தும் முடிவை எடுப்பேன் என்று தீர்மானித்தேன். தனிமையில் உள்முக நிலையில் இருப்பேன், யாராவது தாமாக என்னிடம் வந்தால் யோசனை ஏதாவது சொல்வேன் என்று நினைத்தேன். ஜுன் 7 நெருங்கி வந்துகொண்டிருந்தது. காந்திஜியிடம் வந்து ஐம்பது ஆண்டுகள் நிறைவுற இருந்தன. அதற்குள் இறைவன் அழைத்துக் கொண்டால் சரி, இல்லையேல் காந்திஜியிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளலாம் என்று நினைத்தேன். சத்தியத்தையும், அஹிம்சையையும் விடுவதாக இல்லை. ஆனால் 50 ஆண்டுகள் அவருடைய கட்டளைப்படி வேலைசெய்தேன். இப்போது 'போய் விடுகிறேன்' என்று சொன்னால் அவர் கோபித்துக்கொள்ளமாட்டார் என்று தோன்றியது.

மனிதன் சிறுவயதில் ஆற்றிய தொண்டையே இளமையிலும், இளமையில் ஆற்றிய தொண்டையே முதுமையிலும் ஆற்றுவான் என்று யாரும் எதிர்பார்க்கமாட்டார்கள்.

துறவு என்பது செயலை மறுப்பது அல்ல. ஏற்பதும், மறுப்பதும் ஒரே விஷயத்தின் நேர்முனை எதிர்முனையாகும் (பாஸிடிவ் - நெகடிவ்). துறவு என்பது வேறு. ஜடமாகிய உடலிலிருந்தும், உலகத்திலிருந்தும் சித்தம் தனியாகி சுத்த சைதன்ய நிலையில் இருப்பதே துறவு ஆகும். அது ஒரு பெரிய நிலை. என் மனத்தில் அதுவே இருந்தது. ஆனால் சுத்த சைதன்ய நிலை எய்திய பின் கர்மயோகம் மங்கலாகாது, இன்னும் வீரியத்துடன் செயல்படவேண்டும் என்று நினைத்தேன். "கிரியா பரமே வீர்யவத்தரம்" என்று நான் சூத்திரமே எழுதியிருக்கிறேன்.

எனவே 7-6-1966 அன்று ஸ்தூலச் செயல்களிலிருந்து விலகி சூட்சம கர்மயோகத்தில் பிரவேசிப்பது என்கிற எண்ணம் சில நாட்களாக என் மனத்தில் நிலவிவருகிறது. காந்திஜியை இன்றைய தினம்தான் முதன் முதலாக 1916இல் சந்தித்தேன். ஐம்பது ஆண்டுகள் முடிந்தன. அந்த ஆண்டுதான் இறைவன் திருநாமத்துடன் நான் வீட்டைத் துறந்தேன்.

அது நடந்தும் ஐம்பது ஆண்டுகள் முடிந்தன. செய்த தொண்டை இறைவனுக்கும் குருவுக்கும் பாதகாணிக்கையாக்கி உள்முகநிலையில் பிரவேசிக்க எனக்குள் கட்டளை பிறந்தது. இறைவன் அழைப்பு வரும்போது ஸ்தூலத்தை விட்டு சூக்குமத்தில் ஒவ்வொருவரும் பிரவேசித்தே ஆக வேண்டும். ஆனால் அது ஸ்தூல சரீரத்திலிருந்து சூக்கும சரீரத்தில் பிரவேசிப்பதாகும். நான் கருதிய இதை தியானம், பக்தி, ஞானம் என்று அழைக்காமல் சூக்கும கர்மயோகம் என்கிற புதிய பெயரால் அழைக்கிறேன். இது ஒன்றும் எனக்கு உதித்த புதிய கருத்து அல்ல. பழைய கருத்துதான். அதை நடைமுறைப்படுத்தி நான் ஒரு பூஜ்யம்போல ஆவதாக உணர்கிறேன். பூஜ்யமே அல்ல, 'பூஜ்யம்போல' அவ்வளவுதான். முதல் நடவடிக்கையாக 'கடிதங்கள் எழுதுவதை நிறுத்த முடிவெடுத்துள்ளேன்' என்று அறிவித்தேன்.

சூக்கும வடிவில் நிறைய செயலாற்ற முடியும் என்பது என் நம்பிக்கை. தன் ஆசைகளைத்துறந்து இறைவனிலும், இறைசிருஷ்டியிலும் ஒன்றியவர்கள் சூக்கும வடிவத்தில் உலகுக்குப் பேருதவிகள் புரிகின்றார்கள்.

சூக்கும கர்மயோகத்தில் தயை, தானம், தமனம் (கட்டுப்பாடு) மூன்றையும் விடுவதில்லை. இவ்வாறு தம, தான, தயை என்ற மும்முனை செயல்பாடு நடக்கும். சாந்திசேனை வேலை தயையினால் உந்தப்பட்டது. சினத்திற்கு பதிலாக தயை. கிராமதானம் என்பது தானம்:- எடுத்துக்கொள்ளும் ஆசைக்குப் பதிலாக கொடுக்கும் தன்மை. கதர் என்பது தமனம். அதாவது சுயக்கட்டுப்பாடு - சுகபோகம் மற்றும் விஷயவாசனைகளை அடக்குதல். எனவே நான் சூக்குமத்தில் பிரவேசித்தாலும் இந்த தம, தான, தயையுடன் என் இதயம் இணைந்தே இருக்கும்.

ஆக கிராமதானப்புயல் அடித்துக்கொண்டிக்கும் போதே கடிதம் எழுதுவது ஏறத்தாழ நின்றுவிட்டது. பேசுவதும் குறைந்தது. சிந்தனை சூக்குமத்திலும் சூக்குமம் நோக்கிச் சென்று கொண்டிருந்தது. சும்மா உட்காருவது மனிதனுக்கு ஒரு உரைகல். ஏகநாதர் ஒரு பஜனையில் கூறுகிறார்.

"விழித்திருந்தாலும் தூங்குவது போன்ற நிலை. செயலாற்றினாலும் துடிப்பற்ற நிலை. உடல் ஒரு மூட்டையாக சும்மா இருக்கும் நிலை. மனத்தில் ஏற்பதும், மறுத்தலுமான எண்ணங்கள் ஏதும் அற்ற நிலை" மக்களிடையே இந்த விசித்திர நிலையில் வீற்றிருந்து ஏகநாதர் கருணைக்கண்களால் பார்க்கிறார், உணர்கிறார்".

சொற்பொழிவாற்றுவதிலும் நாட்டமில்லை. தினமும் ஆற்றும் உரையை நிறுத்திவிட்டேன். பேசக்கூடாது என்ற சங்கற்பம் என்றும் சொல்லமுடியாது, பேசவேண்டும் என்றும் இல்லை.

17 வருடங்கள் பேசிக்கொண்டிருந்தேன். இன்னும் பேசிக்கொண் டிருந்தால் அது சரியல்ல. எனவே நான் தொண்டர்களோடு உள்ளார்ந்த தொடர்பு கொள்ள விரும்புகிறேன். எனவே நான் சியாமாவிடம் சொல்லி மேற்கு வங்கத் தொண்டர்களின் பட்டியலைத் தயார் செய்து கொண்டேன். இதே போல இந்தியா முழுவதிலும் உள்ள தொண்டர்களின் பட்டியலும் வேண்டும். அவர்களை மனத்தில் நிறுத்தி சிந்திப்பேன். இப்படியாக அவர்களுடன் உள்ளார்ந்த தொடர்பு கொள்ளுவேன். இந்த உள்ளார்ந்த தொடர்பின் ஆற்றலை மக்கள் அறிவதில்லை. உள்ளார்ந்த தொடர்பில் தன்னை மறக்கவேண்டும், ஒரேயடியாக 'தான்' சூன்யமாக வேண்டும். அப்போதுதான் தொடர்பு உண்டாகும்.

ஒருநாள் நான் என்னைச் சந்திக்கவந்திருந்தமோகேபாபா (பரோடாவில் விநோபாஜியின் பால்ய நண்பர், வித்யார்த்தி மண்டலில் இருந்தவர்) விடம் "உங்களுக்கு எத்தனை குழந்தைகள்? எங்கே இருக்கிறார்கள்?" என்று கேட்டேன். "நான் 56 ஆண்டுகளாக உங்களுடன் இருக்கிறேன். 56 ஆண்டுகள் கழித்து இந்தக் கேள்வியைக் கேட்க ஏன் தோன்றியது?" என்று அவர் கேட்டார். "நான் சொந்த வாழ்க்கையைப் பற்றிக் கேட்டதால் உங்களுக்கு வியப்பாக இருக்கிறது. இப்போது சூக்கும நிலையில் இருக்கிறேன். ஸ்தூல காரியத்தில் இருந்தபோது வேலை நடக்கிறதா இல்லையா என்பது பற்றியே கவனம் இருந்தது. இப்போது உடனிருக்கும் அன்பர்களை கவனிக்கிறேன். பாலகோபாவிற்கு ஜலதோஷம் என்றால் வென்னீர் குடிக்கிறானா என்று கவனிக்கிறேன். ஜயதேவன் நன்கு தூங்கினானா என்று பார்க்கிறேன். இவர்கள் நம் கருவிகள். நன்றாக இருக்கிறார்களா என்று கவனிக்கிறேன். ஆயினும் நான் தனிமனித பந்தத்திற்கு உட்பட்டவன் அல்ல. எனது இந்த தனிமனித பந்தத்திற்கு உட்படாத தொடர்பு தனி மனிதத் தொடர்பாகவே கருதப்படும். முழுவதும் பூஜ்ய நிலை எய்திய பின் இந்த வேலையும் இராது" என்று நான் கூறினேன்.

இப்படிப்பட்ட சங்கற்பங்கள் இறைவனின் விருப்பத்திற்கு உட்பட்ட வையே ஆகும். ஆயினும் த்ன்னிச்சையாகவும் அவை இருக்கக்கூடும். இச்சங்கற் பங்களின்படி பக்தன் செயல்படுகிறான். இறைவன் அதற்கு உதவியும் செய்கிறான். இங்ஙனம் உதவி பெறுவது ஒரு விஷயம். கட்டளை பெறுவது இன்னொரு விஷயம். 17 வருடங்களுக்கு முன்பு என் பாதயாத்திரை துவங்கியது. போச்சம்பள்ளியில் ஹரிஜனங்களுக்கு 80 ஏக்கர் நிலம் கேட்டேன். 100 ஏக்கர் கிடைத்தது. அன்று இரவு தூக்கம் வரவில்லை. இறைவனுடன் உரை யாடினேன். இந்த வேலையை கையில் எடு என்று கட்டளை கிடைத்தது. அது இறைவனின் கட்டளை. பாதயாத்திரை அப்போதிலிருந்து இடைவிடாது நடந்தது. நடுவில் நோயின் காரணமாக பவுனாரில் தங்கினேன். அப்போது நான் மேற்கொண்டு போயிருக்கக்கூடாது. ஆனால் போனேன். நோயினால் மீண்டும் பவுனார் திரும்ப வேண்டியதாயிற்று. நான் போனது இறைவனின் கட்டளையால் அல்ல. கோபுரியில் சர்வ சேவாசங்கக் கூட்டத்தில் 'புயல் வேகம்' என்கிற சொற்றொடர் பிறந்தது. நான் வாகனத்தில் (மோட்டார் வண்டி) ஏறிப்புறப்பட்டேன். அந்த சொற்றொடர் இன்னும் தொடர்கிறது. இதை இறைவனின் கட்டளைக்கு அறிகுறி என எண்ணுகிறேன்.

**ஆச்சார்ய குலம்**

பூசாரோட்டில் அறிஞர் மாநாட்டிலும் (7, 8 டிசம்பர் 1967) நான் ஒரு இறைவன் கட்டளையை உணர்ந்தேன். இதற்கு முன் என் பாதயாத்திரையின் போது அல்லது காந்திஜியின் காலத்திலே கூட இதுபோன்ற அறிஞர் மாநாடு நடந்ததாக எனக்கு நினைவு இல்லை. இப்படிப்பட்ட மாநாடுகளை பழங்காலத்தில் 'சங்கீதி' என்பர். இது ஒரு விசேஷமான நிகழ்ச்சி என்று பட்டது அதன் பின் அந்த மாநாட்டைக் கூட்டுவதில் சிரமம் ஏதும் எனக்கு உண்டாகவில்லை. இதுபற்றி நான் ஏதும் சிந்திக்கக் கூட இல்லை. எல்லா ஏற்பாடுகளையும் கர்பூரி தாகுர் செய்தார். அதில் அரசாங்கப்பணம் ஒரு பைசா கூட செலவாகவில்லை என்று அவர் சொன்னார். எனவே இதில் ஒரு இறைவன் கட்டளை இருப்பதாக எனக்குப்பட்டது. இந்தவேலையை மேற்கொண்டால் கல்வியில் அஹிம்சைப் புரட்சியைக் கொண்டுவர முடியும் என்று பட்டது.

இந்த மாநாட்டில் "நாட்டுக்கு வழிகாட்டுவது அறிஞர்களின் கையில் இருக்கவேண்டும். ஆனால் இன்று கற்றறிந்த ஆசிரியர்கள் சாதாரண உத்தியோகஸ்தர்களாக ஆகிவிட்டார்கள். நீதித்துறைக்கு இருக்கும் சுதந்திரம் கல்வித்துறைக்கு இல்லாதது அதன் துரதிர்ஷ்டமாகும். நீதித்துறை அரசாங்கத்திற்கு மேற்பட்ட ஒரு சுதந்திர அமைப்பாகும். அதற்கு சம்பளம் அரசாங்கத்திலிருந்து கிடைத்தாலும் அது அரசாங்கத்திற்குக் கீழ்ப்பட்டது அல்ல. அதே போல ஆசிரியர்களும் சர்க்காரிடம் சம்பளம் பெற்றாலும் அதற்குக் கட்டுப்பட்டு இருக்கலாகாது. ஆனால் உண்மையான பொருளில் கல்வித்துறைக்கு தன்னாளுமை கிடைக்கவும், தன்னாளுமையுடன் செயல் படவும், ஆசிரியர்கள் அதிகார அரசியலிலிருந்து விலகி தம் ஆற்றலை வளர்த்துக் கொள்வது அவசியம். கறைபடிந்த அரசியலிலிருந்து விடுபட்டு குறுகிய கண்ணோட்டங்களின்றும் உயர்ந்து உலகளாவிய மானுட அரசியல் மற்றும் மக்கள் சக்தியை ஆதாரமாகக் கொண்ட மக்களாட்சியைக் கைக்கொள்ள வேண்டும்" என்று நான் பேசினேன்.

அடுத்து "அமைதியின்மையைச் சரி செய்யும் துறை, அடக்கும்துறை என இரண்டு பிரிவுகள் உள்ளன. ஆசிரியர்கள், பேராசிரியர்கள், அறிஞர்கள் அமைதியின்மையைச் சரி செய்வோர். அரசு வைத்திருக்கும் போலீஸ் துறை அமைதியின்மையை ஒடுக்கும் பிரிவு. சரி செய்யும் பிரிவு ஆற்றல் மிக்கதாக இருப்பின் ஒடுக்கும் பிரிவு தேவையே படாது. பல்கலைக்கழகம் மட்டுமல்ல, இந்தியாவே ஒரு பல்கலைக்கழக வளாகமே. அங்கே போலீஸ் இருப்பது ஆசிரியர்களுக்கு ஒரு களங்கமே" என்றும் சொன்னேன். இக்கருத்துக்களின் பேரில் கஹல்காமில் 'ஆச்சார்ய குலம்' ஏற்படுத்தப்பட்டது (8-3-1968) கஹல்காம் பழைமையான ஸ்தலம். கஹோல் என்று ஒரு முனிவர் இருந்தார். யாக்ஞவல்கியரின் சபையில் விவாதத்திற்கு வந்த அறிஞர்களில் அவரும் ஒருவர். பிரஹதாரண்ய உபநிஷதத்தில் அவர் பங்கேற்கிறார். "நான் இரண்டை எதிர்பார்த்து பீஹார் வந்துள்ளேன். ஒன்று பீஹார்தானம் மற்றது ஆசிரியர்களின் அணி ஒன்றை சுயநிர்ணய உரிமை கொண்டதாக உருவாக்குவது. அனைத்து ஆசிரியர்கள் - அறிஞர்கள் கொண்ட ஒரு அமைப்பு 'ஆச்சாரிய குலம்' என்ற பெயரில் உருவாகவேண்டும்.

பீஹாரில் 'புயல்' 'ஆறுமாதங்கள்' இந்த இரண்டு சொற்களுடன் நுழைந்தேன். நான் நான்கு ஆண்டுகள் பீஹாரில் இருந்தேன். பீஹார் தொண்டர்கள் அருமையாக வேலை செய்தனர். வஞ்சகமின்றி உழைத்தனர். அதன் பயனாக பீஹாரின் அனைத்து மாவட்டங்களும் தானமாயின. ராஜ்கிர் சர்வோதய சம்மேளனத்தில் அக்டோபர், '69-ல் பீஹார் தானம் அறிவிக்கப்பட்டது.

ராஜ்கிர் சர்வோதய சம்மேளனத்தில் 22 வருடங்களுக்குப்பின் இந்தியா வந்திருந்த எல்லைப்புற காந்தியைக் காண சேவாகிராமம் போகிறேன் என்று நான் கூறினேன்.

ஒவ்வொரு நாளும் எனக்கு இறைவனால் நல்கப்படுகிறது என்று நான் கருதுகிறேன். எனவே எது என் தர்மம் என்று எனக்குத் தோன்றுகிறதோ அதை நான் மேற்கொள்கிறேன். இதனாலேயே நான் பாதயாத்திரை மேற்கொண்டேன். அது இறைவனின் தூண்டுதலேயாகும். அப்படி இறைவன் தூண்டியிராவிட்டால் இந்த முதுமையில் இடைவிடாது என்னால் பயணம் மேற்கொண்டிருக்க முடியாது. கடந்த பதினான்கு ஆண்டுகளாக என் பாத யாத்திரை (பிறகு நான்கு ஆண்டுகள் மோட்டார் யாத்திரை), காடுகளிலும், மலைகளிலும், மழையிலும், குளிரிலும், கோடையிலும் இடைவிடாது நடந்தது. இல்லாவிட்டால் என்னிடம் இங்ஙனம் இப்படிச் சுற்ற வலிமை கிடையாது. இப்படிச் சுற்றுவது உடலுக்கு இன்பம் விளைவிப்பது அல்ல. ஆனால் இது இறைவன் கட்டளை, அதை நிறைவேற்றுவது என் கடமை என்று நான் எண்ணினேன். ஒரு இடத்தில் சிலர் 'உங்கள் பயணம் வெற்றிப்பயணமாக அமைவதாக' என்று வாழ்த்தினர். அதற்கு நான் "இறைவனின் தூண்டுதலினால் தூண்டப்பட்டு நான் பயணம் மேற்கொண்டேன். இப்பயணத்தை இடைவிடாது நடத்துவதை வேண்டுமானால் என் கையில் இருப்பதாகக் கொள்ளலாம். அதுவே அதிகம். இது வெற்றிப்பயணமாக அமைவதும், தோல்விப்பயணமாக அமைவதும் உங்கள் கையில் இருக்கிறது. பயணம் வெற்றியானால் அது உங்கள் வெற்றி, தோல்வியானால் அது உங்கள் தோல்வி. நான் வெற்றி-தோல்வியை இறைவனுக்கு அர்ப்பணித்து விட்டு பற்றற்று நிற்கிறேன்" என்று சொன்னேன்.

நான் ஒன்று கூற விரும்புகிறேன். அதை பூதான இயக்கத்தின் ஆரம்பகாலங்களிலும் கூறியுள்ளேன். நாம் எவ்வாறு நமது சமுதாய அமைப்பை உருவாக்க விரும்புகிறோம் என்று யோசிக்கவேண்டும். இன்று நம்முன் எத்தனையோ வழிகள் திறந்துள்ளன. நமது பொருளாதார சமுதாய அமைப்பை வடிவமைக்க நாம் எப்படிப்பட்ட வழியை, செயல்முறையை ஏற்கப்போகிறோம் என்பது நம்முன் நிற்கும் மாபெரும் வினா. நாம் நல்ல குறிக்கோளுக்காக கெட்ட வழிகளை மேற்கொண்டால் இந்தியாவில் பிரச்சினைகள் முளைத்துக்கொண்டேதான் இருக்கும். மாறாக அகிம்சையினால் பிரச்சினைகளை தீர்த்துக்கொண்டால் பிரச்சினைகளே இராது. இது ஒரு புதிய தர்ம சக்கர நெறி என்பதில் ஐயமில்லை. இதற்கு முயற்சி செய்தால்தான் அகிம்சையின் திறவுகோல் நம் கையில் வரும்.

இறைவன் எனக்குத் துன்பங்களை நல்கியதாக என்னால் சற்றும் கூற முடியாது. அவன் எனக்கு அளவில்லா இன்பங்களையே நல்கினான். எனக்குக் கிடைத்த அன்பில் ஒரு சிறு பகுதியைக் கூட நான் திரும்பச் செய்ததாக என்னால் சொல்ல முடியாது. பழங்காலத்தவர்கள், இடைக் காலத்தவர்கள், சம காலத்தவர்களில் அருகிருந்தவர்கள், தொலைவில் இருந்தவர்கள் இந்தப் பக்கம் காஷ்மீரிலிருந்து குமரிமுனைவரை, அந்தப் பக்கம் மேற்கிலிருந்து கிழக்கே அஸ்ஸாம் வரை எனக்கு கிடைத்தவற்றை வார்த்தையில் வடிக்க என்னால் இயலாது. நானும் திரும்ப அன்பு செலுத்துகிறனே், பட்ட கடனை அடைக்கிறேன் என்று நினைக்கவும் முடியாத அளவுக்கு எனக்கு ஏராளமாக அன்பு கிட்டியது. மாதவதேவர் குருவுக்குச் சொன்னதையே நான் மக்களை நோக்கிச் சொல்வேன் - ‘வணங்குவதைத் தவிர செய்வதற்கு ஏதும் இல்லை’ அனைவரையும் பக்தியுடன் வணங்குகிறேன்.




## எனது இலக்கிய வழிபாடு

**ஓதுவதும், உரைப்பதும்**

உபநிஷதம் கூறுகிறது - "சத்தியம் பேணவேண்டும், ஓதவேண்டும், ஓதுவிக்கவேண்டும். மனவடக்கம் வேண்டும், ஓதவேண்டும். ஓதுவிக்க வேண்டும். புலனடக்கம் வேண்டும், ஓதவேண்டும், ஓதுவிக்கவேண்டும். விருந்தோம்ப வேண்டும், ஓதவேண்டும். ஓதுவிக்கவேண்டும்" விதிக்கப்பட்ட எல்லாக் கடமைகளையும் ஓதுதலுக்கும், ஓதுவித்தலுக்கும் இடையே செறுகி வைத்தனர். இதை சாஸ்திரத்தில் 'சம்புடம்' என்பர். மேலே ஒரு அடுக்கு, கீழே ஒரு அடுக்கு, நடுவில் ஒரு பொருள். ஓதுதல், ஓது வித்தலுக்கு இடையே எல்லாக் கடமைகளையும் வைத்தனர். அதாவது எல்லாக் கடமைகளுடனும் ஓதுதலும் ஓதுவித்தலும் நடைபெறவேண்டும். எந்தவேலை செய்துவந்தாலும் ஓதுதலும், ஓதுவித்தலும் அகலாதிருந்தது. இந்தக் கட்டளையிட்ட மகாத்மாக்களுக்கு நான் மிகவும் கடன்பட்டிருக்கிறேன்.

என் வாழ்நாள் முழுவதும் நான் மாணவனாகவே இருந்திருக்கிறேன். நான் இடைவிடாது படித்து வந்திருக்கிறேன். படிப்பதில் ஆர்வம் இருப்பதனால் படிக்காமல் இருக்க முடியாது. ஆன்மீகம், விஞ்ஞானம், உடல்நலம், மருத்துவம் எனப் பலவித அறிவை ஒருவன் பெறவேண்டும். நான் பெற முயன்றேன். ஒரு பல்கலைக்கழக மாணவன் மனம் செலுத்திப் படிப்பதுபோலவே நானும் படித்தேன். பூதான - கிராமதானப் பயணத்தின் போதும் அது தொடர்ந்தது.

கற்பித்தலும், கற்றலின் ஒரு வகையே. 1911-லிருந்து நான் கற்பித்தலையும் செய்து வரலானேன் இறுதிவரை செய்துவந்தேன். சமுதாயத்திற்கு எடுத்துச்சொல்வது கற்பித்தலே அல்லவா? 14 - 15 ஆண்டுகள் நான் உரையாற்றி வந்தேன். ஒரு நாளைக்கு குறைந்தது மூன்று வீதம் 13 - 14 ஆயிரம் உரைகள் ஆற்றியிருப்பேன்.

**மூன்று நிலைகள்**

என் படிப்பு ஒரு வகையில் பார்த்தால் காகோதேயில் 1901-ல் துவங்கியது. ஆனால் எனது பெரும்பகுதி கல்வி சுமார் 11 ஆண்டுகள் பரோடாவில்தான் நடைபெற்றது. அந்த காலக்கட்டத்தில் நான் ஆயிரக்கணக்கான புத்தகங்களை எழுத்து விடாமல் படித்தேன். மராட்டி, சமஸ்கிருதம், ஹிந்தி, குஜராத்தி, ஆங்கிலம், பிரெஞ்சு இந்த ஆறு மொழிகள் எனக்குத் தெரிந்திருந்தன. இவற்றின் தலைசிறந்த இலக்கியங்கள் படிக்கக் கிடைத்தன. ஹிந்தியில் துளசி ராமாயணம் அப்போதுதான் படித்தேன். குஜராத்தியில் நரசி மேத்தா, அக்கா பகத் ஆகியோரைப் படித்தேன். பிரெஞ்சில் விக்டர் ஹ்யூகோவின் 'லா

மிஸரபிள்' படித்தேன். ஆங்கிலத்தில் மில்டன், வோர்ட்ஸ்வொர்த், ப்ரௌனிங் ஆகியவற்றினால் பல பயன்கள் விளைந்தன. சமஸ்கிருதம் அதிகம் தெரியாது. எனவே கீதை மட்டும் படித்தேன். ஆனால் அப்போது என் மனத்தை மிகவும் தொட்டவை மராட்டி பக்தி இலக்கியமேயாகும். அது இயற்கையும் கூட. தாய் மொழியாகையால் புரிந்து கொள்ள சிரமம் ஏதும் இல்லை. ஞானதேவர், நாமதேவர், துகாராம், ஏகநாதர், ராமதாசர் ஆகியோரின் ஆயிரக்கணக்கான பாடல்களும், பஜனைகளும் எனக்கு மனப்பாடம். இவர்களின் பாடல்கள் சுமார் பத்தாயிரம் இருக்கும்.

பிரம்ம ஞானத்தைத் தேடி வீட்டைத் துறந்து கிளம்பிய இரண்டு ஆண்டுகளில் தாயார் மறைந்தார். நான் அச்சமயம் அவர் அருகில் இருந்தேன். ஞானேஸ்வரியின் பாடல் நினைவுக்கு வந்தது.

"தீமையை விலக்கி நன்மைக்குத் தூண்டும் வேதத்தைப் போல் ஒரு தாயில்லை". சங்கராச்சாரியாரும் ஒரு இடத்தில் ஆயிரம் தந்தையரிலும் அதிகமாக நன்மை செய்வது வேதம் என்கிறார். அன்றிலிருந்து வேதம் ஓத ஆரம்பித்தேன் - அதாவது 1918ல் ஆரம்பித்தேன். 1969ல் முடித்தேன். ஐம்பது ஆண்டுகளில் வேத வேதாந்தங்கள் முதலிய சமஸ்கிருத ஆன்மீக நூல்களைப் பயின்றேன். எனக்குத் தெரிந்த வரை ஒன்றும் பாக்கியில்லை. ராமாயணம், மகாபாரதம், பாகவதம், யோகவாசிட்டம், யோக சூத்திரம், பிரம்ம சூத்திரம், சாங்கிய சூத்திரம், ரகுவம்சம் முதலியன படித்தேன். பிறகு பாஷ்யங்கள்; 20 சமஸ்கிருத பாஷ்யங்கள், பிறமொழி பாஷ்யங்கள் 13, மொத்தம் 33 படித்தேன். இவ்வாறு அறம், ஆன்மீக இலக்கியத்தைச் சேர்ந்த பலவற்றைப் படித்தேன். எல்லாவற்றையும் முழுவதுமாகப் படித்தேன் என்று சொல்லமுடியாது. சிலவற்றை முழுவதும் படித்தேன். சிலவற்றை பாராயணம் செய்தேன். சிலவற்றை மேம்போக்காகப் படித்தேன். இது என் இடைப்பட்ட நிலை. அவற்றில் சாரமான நூல்கள் வேதங்கள் என்பது என் கருத்து.

இப்போது (1975) நான் முதியவனாகிவிட்டேன். முதுமையில் இரண்டு நூல்களிடம் தஞ்சம் புகுந்தேன். அவற்றையும் சங்கரரின் கட்டளைக்கேற்பவே மேற்கொண்டேன். ஒன்று கீதை, மற்றது விஷ்ணு சஹஸ்ரநாமம். இரவிலும் பகலிலும், தூங்கும் போதும் விழித்திருக்கும் போதும் விஷ்ணு சகஸ்ர நாமத்தை ஸ்மரிக்கிறேன்.

வாழ்க்கையின் முதல் நிலையில் ஐந்து இறையடியார்களின் தாக்கம், இரண்டாவது நிலையில் வேதத்தின் தாக்கம், மூன்றாவது விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் தாக்கம். இதன்பின் நூல்களினின்றும் விடுதலைதான்.

### படித்தவை பற்றி ஒரு மேலோட்டம்

சிறுவயதில் நான் மாதாந்திர பத்திரிகைகள் படிப்பேன். கதை - கவிதைகளை விட்டுவிடுவேன். கட்டுரைகளை மேலெழுந்த வாரியாகப் படிப்பேன். சரித்திர விஷயங்கள், வாழ்க்கை விருத்தாந்தங்கள், அறிவியல் ஆகியவற்றை முழுவதுமாகப் படித்துவிடுவேன்.

பரோடா நூலகத்தில் இருந்த அனைத்து வாழ்க்கை வரலாறுகளையும் படித்துவிட்டேன். அகர வரிசைப்படி அப்துல் ரஹ்மானின் வரலாறு முதலில் வருகிறது. ஆஃப்கானிஸ்தானத்தைச் சேர்ந்த இந்த மனிதன் விடுதலைக்காக எப்படிப் பாடுபடுகிறான் என்பது நன்கு தெரியவந்தது. பிறகு புத்தர் வரலாறு படித்தேன். எண்பது ஆண்டுகளின் எண்பது பகுதிகள் அதில் இருந்தன.

பெரிய பெரிய நூல்களையும் 10 - 15 நிமிடங்களில் நான் பார்த்து விடுவேன். பைஜ்பூரில் நான் நேருவின் சுயசரிதையை அங்ஙனமே 10 - 15 நிமிடங்களில் ஒரு பார்வை பார்த்துவிட்டேன். அதில் ஒரு இடத்தில் "எனக்கு திருமணமாயிற்று. நாங்கள் காஷ்மீர் போனோம் அங்கே பஞ்சம்..." தொடர்ந்து இந்தியாவின் ஏழ்மையைப் பற்றி விவரிக்கிறார். திருமணத்தைப். பொறுத்தவரை "ஆயிற்று". அத்துடன் சரி, பிறகு வேறு கதை. இவர் பற்றற்றவர் என்று எனக்குத் தெளிவாகியது. காந்திஜியின் சுயசரிதையை நான் முழுவதும் படிக்கவில்லை. 'நேட்டாலில் ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது" என்பதுவரை படித்தேன். மற்றதெல்லாம் எனக்கே நினைவுக்கு வந்துவிட்டது. அதை விட்டுவிட்டு மேற்கொண்டு படித்தேன்.

சமஸ்கிருதத்தில் கதை, காவியங்கள், நாடகங்கள் முதலியவற்றைப் படிக்கவில்லை. நான் படித்த ஒரே நாடகம் உத்தர ராமசரிதம். சாகுந்தலம் படிக்கவில்லை. ரகுவம்சத்தில் இரண்டு அத்தியாயங்கள் படித்தேன். வால்மீகி ராமாயணமும் முழுவதும் படிக்கவில்லை. மஹாதேவிக்கோ, வல்லபஸ்வாமிக்கோ கற்பித்தபோது நாலைந்து அத்தியாயங்கள் படித்திருப்பேன். வேதம், உபநிஷதம், கீதை, பிரம்ம சூத்திரம் முழுமையாகப் படித்தேன்.

என் நண்பன் ரகுநாத் (தோத்ரேஜி) மராட்டிய காவிய நாடகம் படிப்பான். அவற்றை நடித்தும் காட்டுவான். அவன் எனக்கு கீசகவதம் நாடகம் படிக்கக்கொடுத்தான், அதை மட்டும் படித்தேன்.

சானே குரு தன்னுடைய 'பத்ரி' என்னும் நூலை எனக்கு படிக்கக் கொடுத்தார். அதில் 10 -12 கவிதைகளைக் குறியிட்டுக் கொடுத்தார். சிலவற்றை முழுவதும் படித்தேன். பிறகு முழுவதையும் ஒரு பார்வை பார்த்துவிட்டேன். அவருடைய 'ஜுயாமின் தாய்'. நூலை, நான் வாசிக்க வில்லை.

ஷேக்ஸ்பியரின் ஒரே ஒரு நாடகம் மட்டுமே நான் படித்திருக்கிறேன். அது 'ஜுலியஸ் சீசர்' அதையும் பாடத்திட்டத்தில் இருந்ததால் படித்தேன். அதன் முதல் பக்கத்தில் பாத்திரங்களின் பரஸ்பர உறவுமுறை கொடுக்கப் பட்டிருந்தது. அதில் ஒரு விரலை வைத்துக்கொண்டுதான் படித்தேன். ஒரு பாத்திரம் வந்ததோ இல்லையோ, அது யாருக்கு என்ன உறவு என்று இந்தப் பக்கம் திருப்பிப்பார்த்துக்கொள்வேன். இல்லாவிட்டால் சுத்தமாகப்புரியாது. ஸ்காட் எழுதிய "இவானோவ்" கூட என் பாடத்திட்டத்தில் இருந்தது. அதில் ஒரு மனிதனைப்பற்றி மட்டுமே 3 - 4 பக்கங்கள் வர்ணனை இருந்தது. "இதை ஏன் படிக்கவேண்டும் என்று வினவியதற்கு பாடத்திட்டத்தில் இருக்கிறதல்லவா, அதனால்" என்றார்கள். நான் படிக்கவில்லை.

டால்ஸ்டாய் எவ்வளவோ பெரிய மனிதர். அவருடைய ஒவ்வொரு நாவலும் ஆயிரம் பக்கங்கள் அளவில் இருக்கும். நான் 'போரும் அமைதியும்' நாவலை எடுத்தேன். ஆரம்பத்தையும் முடிவையும் பார்த்துவிட்டு வைத்துவிட்டேன். 'டால்ஸ்டாயின் இருபத்து மூன்று கதைகள்' முழுவதையும் நான் படித்தேன். டால்ஸ்டாய், "என் நூல்களைப் பலர் வாங்குகிறார்கள். ஆனால் அவற்றில் பெரிதாக ஒன்றும் இல்லை. என் சிறுகதைகள் சிறந்தவை. அதிலும் 'இறைவன் உண்மையை அறிவான் ஆனால் பொறுத்திருக்கிறான்' என்ற கதை மிகச்சிறந்தது" என்று சரியாகவே சொல்லியிருக்கிறார். எனக்கும் அந்தக் கதை பிடித்திருந்தது.

பிரேம் சந்தின் 'கர்பலா' நாடகம் படித்தேன். அதில் உருதுச் சொற்கள் தேவநாகரியில் எழுதப்பட்டுள்ளன. உருதுச் சொற்கள் பழக அதைப்படித்தேன். பஞ்சாபிரீடர்ஸைக்கூட நான் உருதுச்சொற்களுக்காகவே படித்தேன்.

டிக்ஷ்னரியைப் போய் யார் படிப்பார்கள்? நான் ஆக்ஸ்போர்டு டிக்ஷ்னரியை முழுவதுமாக உட்கார்ந்து படித்தேன். சம்ஸ்கிருதத்தின் நிர்வாண லகு கோசம் (அகராதி), தமிழ்அகராதி ஆகியவற்றையும் நான் படித்தேன். ஆங்கில இலக்கண நூல்களில் பத்துப் பன்னிரெண்டு படித்தேன்.

**கீதை**

என் மனத்தில் கீதையின்பால் சிரத்தையை சிறுவயதில் ஞானேஸ்வரர் விதைத்தார். அப்போது எனக்கு வயது எட்டு. வீட்டில் ஞானேஸ்வரி இருந்தது. அதைப் படிக்க ஆரம்பித்தேன். முதல் அத்தியாயம் முடிந்தது. பயங்கரமான யுத்தவர்ணனை - சங்கங்கள் முழங்கின, பூமி நடுங்கியது, பாரிஜாத மரத்திலிருந்து பூமழை பொழிவது போல ஆகாயத்திலிருந்து நட்சத்திரங்கள் சொரிந்தன. பிரளயம் வரும்போலத் தோன்றியது என்றெல்லாம் படித்தவுடன் பெரும் பரபரப்பு மிக்க யுத்தம் வரப்போகிறது என்று நினைத்தேன். நான் விறுவிறுப்புடன் குதூகலமாகப் படிக்க ஆரம்பித்தேன். ஆனால் மேலே படித்தால் என்ன ஒரு ஏமாற்றம்! அர்ஜுனனின் வீரம் போன இடம் தெரியவில்லை. சப்பென்று ஆகிவிட்டது. இரண்டாவது அத்தியாயத்தில் இறைவன் அர்ஜுனனைக் கண்டிக்கிறார். அவருடைய பலமான கண்டனத்தைப் பார்த்து சண்டை வந்து விடும் என்று மீண்டும் உற்சாகம் பிறந்தது. ஆனால் அதற்குப் பிறகு பயங்கரமான தத்துவஞானம், நான் மூடி வைத்துவிட்டேன். இதுதான் கீதையுடன் எனது முதல் அனுபவம். கீதையில் சண்டை ஒன்றும் வரவில்லை என்பது எனக்கு விளங்கியது.

உயர்நிலைப்பள்ளியில் மராட்டி படித்தேன். அதற்குள் நான் ஞானேஸ்வரியை முழுவதும் படித்து விட்டேன். அதை ஒரு இலக்கியமாகவே படித்தேன். ஆனால் என்னுள் ஒரு அழியாத சுவட்டை அது ஏற்படுத்தியது. புரிந்து கொள்ளும் ஆற்றல் வந்தவுடன் பிறகு ஒரு முறை இதைப்படிப்பேன் என்று நினைத்துக் கொண்டேன்

ஞானேஸ்வரர் கீதையின் மீது மதிப்பைத் தோற்றுவித்தார். அதைப் படித்தாக வேண்டிய அவசியத்தை லோகமான்ய பாலகங்காதர திலகர்

ஏற்படுத்தினார். இது 1912 வாக்கில் நடந்தது. திலகர் கீதா ரகஸ்யம் சிறையில் எழுதினார் என்று கேள்விப்பட்டேன். எனக்கு சமஸ்கிருதம் தெரியாது. ஆனால் கீதா ரகஸ்யத்தைப் புரிந்து கொள்ள கீதையைப் புரிந்துகொள்வது அவசியமாக இருந்தது. நான் கீதையைப் படிக்க ஆரம்பித்தேன்.

திலகரின் கீதா ரகஸ்யத்தை நான் 32 மணி நேரத்தில் படித்தேன். மணிக்கு 25 பக்கம். சனிக்கிழமை மாலை நூலகத்திலிருந்து எடுத்து வந்தேன். திங்கள் காலை திருப்பிக் கொடுத்துவிட்டேன்.

கீதா ரகஸ்யத்தைப் படித்தபின் இன்னும் சிந்திக்கவேண்டும், தேடவேண்டும் என்ற ஆர்வம் பிறந்தது. ஏனெனில் திலகர் கருத்துக்களில் சில எனக்கு ஏற்புடையதாயிருந்தன. சில ஏற்புடையதாக இருக்கவில்லை. நான் இரண்டு விதமாக ஆராய முற்பட்டேன். ஒன்று வாழ்க்கை என்பது என்ன என்பது பற்றிய ஆராய்ச்சி. மற்றது கீதைக்கு முந்தைய மற்றும் பிந்தைய கருத்துக்களின் ஆராய்ச்சி. கீதைக்குப் பிற்பட்டதை ஆராய்வது எளிதாக இருந்தது. கீதையின் மீது எழுதப்பட்ட உரைகளைப் படிப்பது ஒன்றும் கடினமாக இல்லை. கீதைக்கு முற்பட்ட கருத்துக்களை ஆராய்வது கடினமான வேலையாயினும் அடங்கா ஆர்வத்தினால் அந்த வேலையை எடுத்துக் கொண்டேன். கடைசியில் வேதத்தில் போய் முட்டிக்கொண்டேன். மிகவும் மறைபொருள் மிக்க மொழியாக இருந்தது. பழைய சொற்கள், மொழி உருவாகிக் கொண்டிருந்த காலத்துச் சொற்கள், சொற்களின் ஆரம்பகாலத்திற்குச் சென்று பொருள் தேட வேண்டியிருந்தது. அதற்கு நீண்ட காலம் பிடித்தது. ஆனால் அந்த உழைப்புக்கு பலன் கிட்டியது. இந்த ஆராய்ச்சிகளினால் கீதையின் மீது ஈடுபாடு உண்டாயிற்று. பிறகு புரிந்து கொள்வதற்காகவும், ஒப்பிடுவதற்காகவும் என் கர்மயோக வாழ்வில் இயன்ற அளவு மத நெறிகள் பலவற்றை ஆராய்ந்தேன். அதில் ஒரு அற்புதமான காட்சி கிடைத்தது.

**ராமாயணம் – பாகவதம்**

எங்கள் குடும்பத்தில் சிறு வயதிலிருந்தே நாங்கள் ராமாயணம் கேட்டு வந்திருக்கிறோம். ராமாயணம் கேட்காத நாட்கள் மிகச்சிலவே. அதைப் படிக்கும்போதோ, கேட்கும்போதோ அது ஒரு சரித்திர நிகழ்ச்சி தொடர்பானது என்று எனக்குப் படவில்லை. ராவணன் என்று ஒரு ஆள் இருந்தான் என்று எனக்குத் தோன்றவில்லை. உலகவரலாற்றில் எங்கும் நான் பத்துத்தலை மனிதனைப்பற்றிப் படித்ததில்லை. எனவே பத்துத்தலை மனிதனைப் பற்றிய ஒரு புத்தகம் சரித்திரப் புத்தகமாக இருக்க முடியாது என்பதை உணர்வது அவசியம். கும்பகர்ணன் என்ற பெயரில் ஒரு திராவிட மனிதன் இருந்ததாகவும் நான் நினைக்கவில்லை. எனவே சிறு வயதிலேயே நான் அது தேவாசுர யுத்தம் என்றே நினைத்தேன். அப்படியே எங்களுக்கு சொல்லவும் சொன்னார்கள். இந்த தேவாசுர யுத்தம் நம் இதயத்தில் நடக்கிறது. ராவணன் ரஜோகுணம், கும்பகர்ணன் தமோகுணம், விபீஷணன் சத்துவகுணம் என இவை உருவகங்கள் ஆகும்.

பாகவதத்தினால் கவரப்படாத, மனம் மகிழாத, மன அமைதி பெறாத பக்தனும் இந்தியாவில் இருக்க முடியுமா? கேரள-காஷ்மீர-காமரூப

முக்கோணத்தில் வந்தவர்யாரும் பாகவதத்திலிருந்து தப்பிக்க முடியாது. நான் மட்டும் எம்மாத்திரம்? கீதையின் ஒப்பாராய்ச்சியின் நிமித்தமாகவே என்று வைத்துக்கொள்ளுங்கள், நான் பாகவதத்தைப் புரட்ட ஆரம்பித்தேன். அதன் பதினோராவது அத்தியாயத்தை ஏகநாதர் பலமுறை எனக்கு படிப்பித்திருந்தார். கீதை என்னும் பாலில் பாகவதம் என்னும் தேன் கலந்தது என்றே சொல்லவேண்டும்.

**சர்வ சமய இலக்கியம்**

நான் 1949-ல் திருகுர்ஆனை முதல் முறையாக ஓதினேன். அதற்கு முன்பு ஆங்கில மொழி பெயர்ப்புத்தான் படித்திருந்தேன். பக்தால், யூசுப் அலி உரை படித்தேன். பூதான யாத்திரையின் போது காஷ்மீரில் நுழைந்த சமயத்தில் அஹமதியாப் பிரிவினரின் தழுவல் மொழிபெயர்ப்பைப் படித்தேன். ஆங்கில மொழிபெயர்ப்பைப் படித்த பின்பு அரபி கற்க ஆரம்பித்தேன். கண்களுக்கு வேலைதந்து கஷ்டப்பட்டுப் படித்து நினைவில் வைத்துக்கொள்ளவும் சிரமமாக இருப்பதைவிட நாகரிலிபியிலேயே எழுதிக்கொள்ளலாம் என்று பூராவையும் நாகரிலிபியில் எழுதிக் கொள்வேன், அது எளிதில் மனப்பாடமாகவும் ஆகிவிடும். உருதுவைவிட எனக்கு அரபி எளிதாகத் தோன்றியது. வெள்ளியன்று ரேடியோவில் 20 நிமிடங்கள் திருகுர்ஆன் ஓதுவார்கள். சிறையில் இருந்தபோது தினமும் கேட்டுவந்தேன். இதனால் எனக்கு உச்சரிப்பு சரியானது. 1949-லிருந்து தொடர்ந்து குர்ஆன் படித்தே வருகிறேன்.

உயர்நிலைப் பள்ளியில் இருந்தபோது பைபிள் புதிய ஏற்பாடு கையில் கிடைத்தது; படித்தேன். பிற்பாடு மதஆராய்ச்சியின்போது புதிய ஏற்பாட்டின் கிடைத்த மொழிபெயர்ப்பையெல்லாம் படித்தேன். மேற்கு வங்க பூதானப் பயணத்தின் போது சில கிறிஸ்தவ சகோதர சகோதரிகள் என்னைக் காண வந்தனர். அவர்கள் பைபிள் பிரதி ஒன்றை எனக்குக் கொடுத்தனர். அன்றிலிருந்து பைபிளை மீண்டும் படிக்க ஆரம்பித்தேன். அது இடைவிடாது தொடர்ந்தது. பிறகு கேரளா போனேன். அங்கே பல்வேறு சர்ச்சுகளைச் சேர்ந்த பிஷப்புகள் சந்திக்க வந்தனர். அவர்கள் என்னுடைய கைப்பிரதியையும், அதில் என் குறிப்புகள், குறியீடுகள் முதலியவற்றையும் பார்த்து தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர். அவர்கள் தங்கள் வழக்கப்படி பிரார்த்தனை செய்து பூதானப்பணியின்பால் தங்கள் நல்லெண்ணத்தை வெளிப்படுத்தி ஆசிகள் கூறினர். பிறகு ஒரு சமயம் (1959-ல்) 1300 அடி உயர பீர்பஞ்சாலைத் தாண்டி காஷ்மீர் பள்ளத்தாக்கில் நுழைந்தோம். வழியில் ஒரு கிறிஸ்தவத் தொண்டு நிறுவனம் இருந்தது. அங்கே ஒரு 85 வயது மூதாட்டி எங்களைச் சந்திக்க நின்றிருந்தார். அவர் எங்களை வரவேற்கவே காத்திருந்தார். 'உங்களிடம் ஸ்கோஃபீல்ட் ரெஃபரன்ஸ் பைபிள் இருக்கிறதா' என்று அவரைக் கேட்டேன். அவர் உடனே உள்ளே சென்று தன் பிரதியை எடுத்துவந்து அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டார். இவ்வாறு பல்வேறு பைபிள்கள் தாமாகவே எனக்குக் கிடைத்தன. அவற்றை ஆழ்ந்து படித்தேன்.

தம்ம பதத்தின் மராட்டி வசனநடை மொழிபெயர்ப்பு எனக்கு சிறு வயதிலேயே படிக்கக் கிடைத்தது. பல ஆண்டுகள் கழித்து பாலி மொழியில் மூலத்தையும் கொஞ்சம் படித்தேன். அந்நாட்களில் என் நாட்டமெல்லாம் கீதையில் இருந்தது. ஆனாலும் தம்மபதத்தின் சில வசனங்கள் என்னை மிகவும்

கவர்ந்தன. நான் என் எழுத்துக்களில் (குறிப்பாக "ஸ்திதபிரக்ஞ தரிசனம்' 'உபநிஷத அத்யயனம்' இரண்டிலும்) பௌத்த சித்தாந்தத்தின் இறுதி லட்சியங்களிலும், வேதாந்தத்திலும் ஒற்றுமையைக் காட்டி எழுதினேன். நாமதேவர், கபீர் ஆகிய மகாத்மாக்களின் உபதேசங்களுக்கும், கீதை உபநிஷதங்களின் உபதேசத்துக்கும் ஒரு இணைப்புப்பாலமாக தம்ம பதம் எனக்குத் தோன்றியது. அக்கண்ணோட்டத்திலேயே அதை நுணுக்கமாக ஆராய்ந்தேன்.

கிரந்தஸாஹிபின் தேவநாகரி அச்சுப்பிரதி எனக்கு முதன் முதலாக சிரோமணி குருத்வாரா சபையின் மூலம் கிட்டியது. துவக்கத்திலிருந்து முடிவு வரை அதைப் பார்த்துவிட்டேன். அதன் பின் சீக்கியர் வழிபாட்டை அறியவும், உணரவும் பல மாதங்கள் காலைப் பிரார்த்தனையில் 'ஜபுஜி' ஓதிவந்தேன். பிறகு நாமதேவர் பஜனைகளைத் தொகுக்கவேண்டி வந்தது. அவை பெரும்பாலும் மராட்டியில் இருந்தனவென்றாலும் சில ஹிந்துஸ்தானியிலும் இருந்தன. அவற்றைப் படித்து தேர்ந்தெடுத்து துவக்கும் நோக்கத்துடன் நான் மீண்டும் ஒருமுறை கிரந்தஸாஹிபை முழுவதும் படித்தேன். இவ்வாறு குருநானக்கை நான் என் இதயத்திற்கு அறிமுகம் செய்து கொண்டேன்.

**இறையடியார் இலக்கியம்**

ஹிந்தியில் துளசிதாசரையும், குருநானக்கையுமே நான் குறிப்பாக படித்திருக்கிறேன். அதிலும் துளசிதாசரையே விரிவாகப் படித்திருக்கிறேன். குருநானக்கை ஓரளவே படித்திருக்கிறேன். மற்றவற்றை ஏதோ தாமாகக் கிடைத்தவரை பார்த்திருக்கிறேன். கபீரின் புகழ்பெற்ற புத்தகம் 'பீஜக்' ஆகும். அதை நான் 1918-ல் படித்தேன். 23 வயது. எவ்வளவு புரிந்தது என்று சொல்ல முடியாது. ஆனாலும் அது என்னைக் கவர்ந்தது. ஞானேஸ்வரர் தன் 'அநுபவாமிர்தத்தில் (இதை 'அமிர்தானுபவம்' என்றும் சொல்கிறார்கள்) சொன்ன கருத்துக்கள் போலவே கபீர்தாஸரின் கருத்துக்களும் இருப்பதைக் கண்டேன். குறிப்பாக நிர்குணியா, ஸஹஜியா பிரிவுகளை இணைத்து கபீரின் கொள்கைகள் உண்டாயின என்று எனக்குப்பட்டது.

துளசிதாசரின் 'வினய பத்திரிகா' வைப் பார்க்கும் வாய்ப்பு எனக்கு முதன் முதலில் சபர்மதி ஆசிரமத்தில் கிட்டிற்று. கரே சாஸ்திரி அந்நாட்களில் ஆசிரமவாசிகளுக்கு இறையடியார் வாக்குகளைக் கற்பித்து வந்தார். "வினய பத்திரிகா" வின் பஜனைகளும் அதில் அடக்கம். அதற்காக வினய பத்திரிகாவை நான் மூன்றுமுறை உணர்ந்து, ஆராய்ந்து பாராயணம் செய்தேன். இது 1918-21 -ல் நடந்தது. அதன்பின் 7 - 8 ஆண்டுகள் அது இதயத்தில் ஆழமாகப்பதித்தது. சில ஆண்டுகள் கழித்து பாலகோபா வார்தா ஆசிரமத்தில் மாணவர்களுக்கு சங்கிதம் கற்பிக்க ஆரம்பித்தான். 'வினயபத்திரிகா' விலிருந்து சில பஜனைகளை கற்பித்தான். நான் மறுபடியும் 'வினயபத்திரிகா' வைப் புரட்ட ஆரம்பித்தேன். சுமார் மூன்று ஆண்டுகள் அதில் நான் என்னை இழந்திருந்தேன். எத்தனை முறை படித்திருப்பேன் என்று கணக்கே கிடையாது. பெரும்பாலும் மனப்பாடமாகிவிட்டது. பிறகு மீண்டும் 16 ஆண்டுகள் அவை மனத்தின் ஆழத்தில் புதைந்தன. பிறகு காந்திஜி அமரரான பின் அகதிகள் மறுவாழ்வுப்பணியில் ஈடுபட்டிருந்தபோது என் கையில் இருந்த ஒரே புத்தகம்

'வினயபத்திரிகா'தான். அதில் சில பொருள் செறிந்த பஜனைகளை நான் யாத்திரையில் என்னுடன் இருந்த மகாதேவிக்குக் கற்பித்தேன். 1948 முதல் 1951 வரை அது என் சிந்தனையில் இருந்தது. 13 வருடங்கள் கழித்து மத்தியப் பிரதேச பாதயாத்திரையின் போது ஒரு கிராமத்துப் பள்ளியின் சிறு குழந்தைகள் எனக்கு ஒரு 'வினயபத்திரிகா' பிரதியை அன்பளிப்பாகக் கொடுத்தனர். மீண்டும் படிக்க ஆரம்பித்தேன்.

நான் பதினைந்து வயதினனாக இருந்தபோது 'நிர்ணயசாகர்' அச்சிட்ட பாகவதத்தின் அழகிய நூல் வெளிவந்தது. அது என் கையில் கிடைத்தது. புத்தகத்தின் அளவைப் பார்த்து மலைத்துப் போனாலும், புரிந்ததோ இல்லையோ அதை கவனிக்காமல் பாகவதம் முழுவதையும் படித்துவிட்டேன். தினமும் ஒரு அத்தியாயம் படித்து வந்தேன். அது எந்த ஆங்கிலமாதம் என்பது நினைவில்லை. ஆனால் நிச்சயமாக 31 நாட்கள் கொண்ட மாதம். ஒரு மாதத்தில் புத்தகம் முழுவதையும் முடித்தேன். இவ்வளவு பெரிய புத்தகத்தை ஒருவன் எழுதமுடியுமானால் அதைப் படிப்பதில் போய் தோற்பதா என்று வீராப்புடன் படித்து முடித்தேன். இவ்வளவு பெரிய புத்தகம் அவ்வளவு சிறுவயதில் எவ்வளவு விளங்கியிருக்கப்போகிறது? ஆனால் ஏகநாதரின் வாக்குகள் அந்த வயதிலும் என்னைக் கவரும் அளவுக்கு வலிமை பொருந்தியவையாக இருந்தன.

இவ்வளவு பெரிய புத்தகத்தை ஒரு கடமையாகவும், பெரிய சாதனையாகவும் படித்து முடித்த திருப்தியுடன் பாகவதத்தை மூடிவைத்த நான் பல ஆண்டுகள் திறக்கவேயில்லை. பிறகு கீதையை ஒப்பிட பாகவதத்தின் பதினோராவது அத்தியாயம் தேவைப்பட்டது. அப்போது ஏகநாதரின் பாகவதத்தை மீண்டும் படித்தேன். அப்போதுதான் உண்மையாகப் படித்த திருப்தி ஏற்பட்டது. அளவற்ற ஆனந்தம் கிடைத்தது. ஒவ்வொரு பக்கத்திலும் இறையனுபூதி செறிந்திருந்ததைக் கண்டேன். பாகவதத்தின் பதினோராவது அத்தியாயத்தை இவ்வளவு திறமையாக இந்தியாவின் வேறு எந்த மொழியிலும் விவரிக்கவில்லை என்பதை பிற்பாடு நான் கண்டுகொண்டேன். பிறகு என் வழக்கப்படி ஏகநாதர் பாகவதத்தை நான் மேலும் கீழுமாக பலமுறை புரட்டிவிட்டேன்.

இதற்கிடையில் நான் ஏகநாதர் வரலாற்றைப் படித்து விட்டேன். அது என் மனத்தை முழுவதுமாக ஆக்கிரமித்துக்கொண்டது. நானோ முன்கோபி, ஏகநாதர் நேர் எதிராக அமைதிக் கடல். எனவே அவர் வரலாறு எனக்கு ஒரு வைத்தியமாகவே அமைந்தது. பாகவதத்தை ஆராயப்போக ஏகநாதரின் வாழ்க்கையின் ரகசியம் எனக்கு விளங்கியது. சிந்திக்கச்சிந்திக்க அவர் வாழ்க்கை என் கண்ணோட்டத்தில் உயர்ந்தது. இவ்விஷயத்திலும், மற்ற பல விஷயங்களிலும் ஏகநாதருக்கும், இக்காலத்தில் மகாத்மா காந்திக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதாக எனக்குத் தோன்றியது.

சமர்த்த ராமதாசர் புத்தகங்களை நான் சிறுவயதிலேயே படித்தேன். எனக்கு சமர்த்த ராமதாசர் பைத்தியமே பிடித்திருந்தது. அவர் என் ஆதர்ச புருஷர் என்றே சொல்லவேண்டும். அவருடைய எளிய, தெளிவான எழுத்துக்களினால் ஆன்மீக இலக்கியத்தில் நான் தானாகவே மிக எளிதாக

பிரவேசித்துவிட்டேன். அங்கிருந்து ஞானதேவர் வரையிலும் பிறகு சமஸ்கிருத வேதங்கள் வரையிலும் இயல்பாக முன்னேறிவிட்டேன். ராமதாசர் நினைவு வந்தவுடனேயே "தாயே, உன் கருணை மிகப் பெரிது" என்பதே என் வாயிலிருந்து தாமாகவே வெளிவரும் சொற்கள்.

ராமதாசரின் புத்தகங்களை நான் சிறுவயதில் படித்தேன். எனவே சிறிதளவேபுரிந்துகொண்டேன். ஆனால் அது என் இதயத்தில் ஆழப்பதிந்தது. அது இன்றளவும் நீடித்திருக்கிறது. அவருடைய உபதேசங்களில் பக்தி, வைராக்கியம், முயற்சி, விவேகம் ஆகிய பல விஷயங்கள் வருகின்றன. ஆனால் அவருடைய சமுதாயப்பற்று என் நெஞ்சில் ஆழப்புகுந்த முக்கிய விஷயமாகும்.

**மக்கள் மனத்தைத் தொடுவதற்காக**

பூதானப்பயணத்தில் மக்கள் மனத்தைத் தொடவேண்டும் என்பதற்காக எந்த மாநிலத்தில் யாத்திரை செய்தேனோ அந்த மாநிலத்து இலக்கியங்களை நானே என் மீது சுமத்திக்கொண்டேன். அதாவது அன்பின் காரணமாக அவற்றை நான் படிக்க ஆரம்பித்தேன்.

நான் ஒரு உலகஇலக்கிய மாணவன். இலக்கியத்தின்பாலும், இலக்கிய கர்த்தாக்கள் மீதும் என் மனத்தில் அலாதியான மதிப்பு உண்டு. மராட்டிய இலக்கியத்தை நான் நுணுக்கமாகப் படித்தேன். அதே பிரவாகத்தில் ஐயமறத்தெளிவதற்காக சமஸ்கிருத இலக்கியங்களும் படித்தேன். ஆனால் அப்போதும் சொற்பிறப்பு மற்றும் சொல்லாக்கத்தில் எனக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது. சொற்கள் பிறந்த விதம் என்ன, அவற்றின் வரலாறு என்ன என்று பார்ப்பதில் ஆவல் இருந்தது. கருத்துக்களை ஆராயும்போது சொற்களின் வரலாற்றையும் பார்க்கவேண்டியிருக்கிறது. அதற்காகவும் பலமொழிகள் கற்கவேண்டியிருந்தது. ஆனால் மக்களுடன் தொடர்பு கொள்வதற்காகவே முக்கியமாக நான் இந்தியாவின் அனைத்து மொழிகளையும் கற்றேன்.

எந்த மாநிலம் போனாலும் அந்த மாநில ஆன்மீக இலக்கியத்தை நான் முழுவதுமாகப் படித்தேன். அஸ்ஸாம் தொடங்கி கேரளம் வரை அனைத்து மொழி ஆன்மீக இலக்கியத்திலும் பெரும்பகுதியை நான் மனப்பாடம் செய்தேன். செய்யுள் வடிவங்களில் சுமார் 50,000 செய்யுள் மனப்பாடமாக இருந்தது. இவற்றைத்தவிர பழைய அரபி, பார்ஸி, அர்த்தமாகதி, பாலி முதலியவற்றையும் நான் படித்தேன். யாத்திரையின் போதுதான் சீன மொழியையும் படித்தேன். ஒரு முறை ஒரு ஜப்பானிய சகோதரர் மூன்று மாதங்கள் எங்கள் யாத்திரையில் இருந்தார். அவரிடம் தினமும் ஒரு மணிநேரம் ஜப்பானிய மொழி பயின்றேன். பிறகு ஒரு ஜெர்மானிய சகோதரி வந்தார். அவரிடம் ஜெர்மன் கற்றுக்கொண்டேன். யாத்திரையில் உடன் வந்த ஒரு வெளிநாட்டவரிடம் 'எஸ்பிராண்டோ'வும் கற்றேன். (ஒருவகை செயற்கை மொழி, சமுதாய வழக்கு அற்றது. *மொழிப்பெயர்ப்பாளன்*)

இவற்றைக் கற்பதனால் சொற்கள் பழகுகின்றன. சொல்லின் ஆற்றலை நான் நன்கு அறிவேன். சொல் உதயமாக அதன் உட்பொருள் தெளிவாக வேண்டும். சொற்களை சிந்தித்து உணர்ந்து முழுவதுமாக ஜீரணிக்காமல் அத்தெளிவு வரமுடியாது என்பது என் நம்பிக்கை.

### மருத்துவ இலக்கியங்கள்

வைத்திய நூல்களையும் நான் படித்தேன். 1923-ல் நான் முதன்முத லாக ஒரு மருத்துவ நூலைப் படித்தேன். கொடி சத்தியாகிரகத்தின் போது நான் சிறை சென்ற சமயம் சில கர்நாடகமாநிலத்து வைத்தியர்களும் சிறையில் இருந்தனர். அவர்களுடன் சேர்ந்து நான் 'வாக்பட்' படித்தேன். அந்நூல் சமஸ்கிருதத்தில் இருந்தமையால் நன்றாக விளங்கியது. பிறகு சரகரைப் படித்தேன். அவருடைய மொழி அழகியது. சிறிய சிறிய வாக்கியங்கள். அந்த புராதன காலத்திலேயே அபாரமான தெளிவான நோக்கு இருந்தது புலப்பட்டது. மூன்றாவது புத்தகம் சாரங்கதர். அது பதஞ்சலி பெயரில் இருக்கிறது. அவர் தான் எழுதினாரா வேறு யாராவது எழுதினார்களா என்று தெளிவாகக் கூற முடியவில்லை.

### பொருளாதார இலக்கியங்கள்

கார்ல் மார்க்ஸின் மிகப்பிரபலமான 'மூலதனம்' என்னும் கம்யூனிஸ்ட்டுகளின் வேத நூலை நான் முழுமையாகப் படித்திருக்கிறேன். 1940-ல் நடந்த தனி நபர் சத்தியாகிரகத்தின் போது சிறையில் ஒரு கம்யூனிசத்தோழர் என்னிடம் "நீங்கள் கம்யூனிச இலக்கியம் ஏதும் படித்ததில்லை என்று தோன்றுகிறதே, அதைப்படிக்கவேண்டும்" என்றார். "நூல் நூற்கும் போது நீங்களே படித்துக்காட்டுங்களேன்" என்று நான் சொன்னேன். அப்படியே அவரும் தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட சில இலக்கியங்களைப் படித்துக் காட்டினார். நான் முன்பே வெளியில் 'மூலதனம்' நூலை ஆறஅமரப் படித்திருந்ததால் அந்த இலக்கியங்களைப் புரிந்து கொள்வதில் சிரமம் ஏற்படவில்லை. தினமும் 1-1½ மணிநேரம் கேட்டுவந்தேன். சில மாதங்கள் இது தொடர்ந்து நடந்தது. அவர் படித்துக் காட்டியவை சில பொறுக்கி எடுக்கப்பட்ட நூல்களே. ஆயினும் அவற்றின் ஒரு விஷயத்தைத் திரும்பத்திரும்பச் சொல்லும் பாங்கு என்னையே அயரவைத்துவிட்டது. நம் இளைஞர்கள் அவற்றால் சலிப்புறுவதற்கு மாறாக வசியப்படுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

இவற்றைத்தவிர டால்ஸ்டாய், ரஸ்கின் ஆகியோரின் நூல்களையும் நான் படித்தேன்.

### இலக்கியத் தொண்டு

என்னைப்போல 'விட்டு விடுதலை' யாகித் திரிபவர்க்கு உலகில் கட்டுக்கள் கிடையா. ஆனால் அவர்களும் அன்புக்குக் கட்டுப்பட்டவர்களே. மக்களுக்கு நலம் பயக்கும் தம் திரண்ட ஞானத்தை மக்களுக்கு அளித்து-விட்டே மறைய அவர்கள் விரும்புகின்றனர். முதுமை வரவர, மரணம் நெருங்க நெருங்க தம் ஞானத்தை உலகுக்கு அளித்து, தாம் விரும்பும் வீடு பேறு அடையும் விருப்பம் இன்னும் அதிகமாகிறது. உண்மையிலேயே இவ்வுடலைத் துறந்து இறைவனின் தொட்டிலில் அமரும் அந்த நினைவே உற்சாகம் தருவதாக இருக்கிறது. ஆனால் ஞானம் என்று நம்பி நாம் சேர்த்ததை அது ஞானமோ, அஞ்ஞானமோ எதுவானாலும் உலகுக்கு அளித்துவிட்டுச் செல்லும் விருப்பம் எஞ்சுகிறது.

**சமநோக்கினால் சமநிலை**

என் சிந்தனை சமநோக்கு கொண்டதாகும். இறுதியில் சமநிலையே கிட்டும் என்பது என் நம்பிக்கை. நாம் சமநோக்குடன் சிந்திக்கவேண்டும். இறுதியில் அதன் பயனாக சமநிலை கிடைக்கும். அதனால்தான் கீதையை நான் அதன் சொல்லாக்கத்தின் பேரிலேயே சாம்யயோகம் என்றேன். சமநிலை என்பது லட்சியம், சமநோக்கு என்பது அதற்கான நெறி. என்னுடைய சித்தாந்தங்களிலும் சமநோக்கு வழியே சமநிலை எய்தும் கருத்து எப்போதும் இருந்து வருகிறது. என்னுடைய ஆன்மீக இலக்கியத்திலும் சமநோக்கு வழியாகும், சமநிலை அதன் பலனாகும்.

1923-ல் மராட்டிய தர்மம் என்கிற மாதப் பத்திரிகையில் உபநிஷத ஆராய்ச்சி என்ற தலைப்பில் நான் நான்கு கட்டுரைகள் எழுதினேன். அதுவே பிறகு புத்தகமாயிற்று. என்னைப் பொறுத்தவரை உபநிஷதம் ஒரு உள்ளார்ந்த ஞான வெளிப்பாடாகும். என் வாழ்க்கையில் கீதையே என் தாய். அதற்கு அந்த இடம் என்றும் உண்டு. ஆனால் உபநிஷதம் என் தாயின் தாய் என்று நான் அறிவேன். அந்த பக்தி சிரத்தையுடனேயே நான் உபநிஷதத்தை பல ஆண்டுகள் ஆராய்ந்தேன். அதன் ஒரு துளியே இந்நூலில் உள்ளது. அது என் முதல் எழுத்துப்பணி ஆகும். சிக்கலானது; ஆனால் கருத்தாழம் மிக்கது. இன்றும் அதில் ஏதும் மாற்றம் செய்யவேண்டிய அவசியம் ஒன்றும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. இன்று எழுதினால் அவ்வளவு சிக்கலாக எழுதமாட்டேன் ஆனால் கருத்துக்களில் இன்றும் ஏதும் மாற்றமில்லை. புத்தபகவானுக்கும் உபநிஷத ஆராய்ச்சிக்கும் உண்மையில் தொடர்பு ஏதும் இல்லை. ஆனாலும் அந்நூலை நான் தம்மபதத்தின் ஒரு மேற்கோளுடன் முடித்திருக்கிறேன்.

அங்ஙனமே ஸ்திதப்ரக்ஞதர்ஷனிலும் நான் புத்தமதக்கருத்துக்களுக்கும் வேதத்திற்கும் கருத்தொற்றுமை காட்டியுள்ளேன். 1944-ல் குளிர்காலத்தில் கீதையின் "ஸ்திதப்ரக்ஞ இலக்கணம்" பற்றி நான் உரையாற்றினேன். அதுவே இந்தப் புத்தகமாக உருவெடுத்தது. முப்பது ஆண்டுகள் தியானத்தில் தேர்ந்த பொருள் அதில் விவரிக்கப்பட்டுள்ளது. 1923 முதல் 1944 வரை பௌத்த சித்தாந்தம்பற்றி இடைவிடாது சிந்தித்து வந்தேன். 1923-லிருந்து 1960 வரை வேதாந்தத்திற்கும், பௌத்தமதத்திற்கும் சமரசம் காண வேண்டும் என்று மனத்தில் கருதினேன். அதாவது இந்தியாவில் ஆன்மீக முயற்சிகளில் இறைவனைச் சாராத சித்தாந்தங்களுக்கும், சார்ந்த சித்தாந்தங்களுக்கும் சமரசம் காண விரும்பினேன். முதல் வகை ஆத்மாவைச் சார்ந்தது, மற்றது பரமாத்மாவைச் சார்ந்தது. இரண்டு கருத்துக்களிலும் சமரசம் காணவேண்டும் என்று நினைத்தேன். அப்போதுதான் தத்துவமும் தெளிவாகும், வாழ்வியலும் தெளிவாகும். எனவே நான் எழுதிய நூல்களில் ஒரு சார்பு வாதம் இருப்பதில்லை. கீதைப்பேருரைகளில் பார்த்தால் எந்த சார்பு வாதமும் இருக்காது. அவற்றில் தத்துவங்களை விடாமல் அதே சமயத்தில் எந்த தரப்பு வாதத்திலும் சிக்காமல் அன்றாட வாழ்வியல் நெறியைப்பற்றியே பேசியிருக்கிறேன்.

'சாம்ய சூத்திரம்' அநேகமாக என் இறுதி நூல் ஆகும். கீதையின் சாம்ய யோகத்தை நான் சாதாரண மக்களுக்கான முறையில் கீதைப்பேருரைகளில்

விவரித்துள்ளேன். அதை சமஸ்கிருத சூத்திரங்கள் வடிவில் தொகுக்க முடியுமானால் தொகுக்க வேண்டும் என்று நீண்ட நாளாகக் கருதி வந்தேன். ஒரிஸ்ஸாவில் கோராபுட் மாவட்டத்தின் அடர்ந்த காடுகளில் எங்கள் பாதயாத்திரை பல நாட்கள் நடந்தன. அப்போது இந்த சூத்திரங்களைத் தொகுக்கும் நாட்டம் உண்டாயிற்று. கீதைப்பேருரைகளில் இப்படிப்பட்ட சூத்திரங்கள் மராட்டியில் கூறப்பட்டுள்ளன. ஆனால் இந்த சமஸ்கிருத சூத்திரங்கள் அவற்றைவிட அதிகமாக பரந்த பொருள் செறிந்தன. இவை என் சிந்தனைக்கு உபயோகமாக இருக்கின்றன. நடுநடுவே அவற்றை என் சிந்தனை மத்தால் கடைகிறேன். வேத-உபநிஷதச் சொற்களில் பலவற்றை நான் அதில் கையாண்டிருக்கிறேன். அதில் நான் "சுகரும், ஜனகரும் ஒரே வழியினர்" என்று எழுதியுள்ளேன். கீதா ரகஸ்யத்தில் இந்த இருவரைப்பற்றிய விவாதம் எழுகிறது. அதில் சன்னியாசத்தைவிட கர்மயோகமே சிறந்தது என்று சொல்லப் பட்டுள்ளது. ஆனால் உண்மையில் சுகரும், ஜனகரும் ஒரு மார்க்கத்தவரே. அவர்களின் ஒற்றுமையை உணரமுடிந்தால் கீதா ரகஸ்யம் நம் கையில். ஆக சாம்ய சூத்திரத்திலும் என் கண்ணோட்டம் சமரசமே.

**பிரார்த்தனை நூல்கள்**

நான் சில நூல்களை பிராத்தனையை இனிமையானதாக ஆக்கு வதற்காகவும் எழுதியுள்ளேன். சுதந்திரப்போரின்போது இந்தியா முழுவதும் ஆயிரக்கணக்கான ஆண்-பெண் சத்தியாகிரகிகள் தினந்தோறும் மாலைப் பிரார்த்தனையில் பக்தியுடன் ஸ்திதப்ரக்ஞ இலக்கணம் பாடி வந்தனர். இன்றும் பல இடங்களில் பிரார்த்தனையில் இது சேர்த்துக்கொள்ளப் படுகிறது. எங்கள் ஆசிரமத்திலும் ஸ்திதப்ரக்ஞ சுலோகங்களை தினமும் மாலைப்பிரார்த்தனையில் சொல்கிறோம். அந்த ஸ்லோகங்கள் மீது நான் ஒரு சொந்த பாஷ்யம் எழுதினேன். அதுவே ஸ்திதப்ரக்ஞ தரிசனம்.

காலைப்பிரார்த்தனையில் நாங்கள் ஈஸாவாஸ்ய உபநிஷதம் ஓதுகிறோம். அதற்காக நான் ஈஸாவாஸ்ய விருத்தி எழுதினேன். அது காந்திஜியின் கட்டளைக்கு இணங்க எழுதப்பட்டடதாகும்.

நான் ஸாஸூன் மருத்துவமனையில் காந்திஜியைக் காணச் சென்றபோது நான் ஈஸாவாஸ்ய உபநிஷதத்தின் பேரில் எழுதவேண்டும் என்கிற தன் எண்ணத்தை அவர் வெளியிட்டார். நான் அதை ஏற்றுக்கொண்டும் விட்டேன். அந்தத் தீவிரமான கர்மயோக காலக்கட்டத்தில் அவ்வளவு ஓய்வு கிட்ட-வில்லை. பிறகு திருவாங்கூர் ஹரிஜனப்பயணத்திற்குப்பின் காந்திஜி "உனக்கு நிறைவாக எப்போது தோன்றுகிறதோ அப்போது எழுது. இப்போது என் உபயோகத்திற்கு ஏற்ப ஒரு சிறு உரையாவது எழுதிவிடு" என்று கட்டளையே போட்டுவிட்டார். அதன்படியே நான் ஒரு சிறு உரை எழுதி அவருக்குக் கொடுத்தேன். அது பிரசுரிப்பதற்காக எழுதப்பட்டதல்ல. ஆனால் நான் சிறையில் இருந்தபோது வெளியில் இருந்த நண்பர்கள் அதை வெளியிட்டு விட்டனர். அதன் ஒரு பிரதி ஜெயிலுக்கு திடீரென்று வந்தது. நான் விழித்துக்கொண்டேன். இரண்டு மாதங்கள் அதைப்பற்றி சிந்தித்து விருத்தியுரை என்று என்னால் அழைக்கப்படும் சிறு பாஷ்யத்தை எழுதினேன். முந்தைய ஆச்சாரியார்களின் உரையினின்றும் இது பல இடங்களில்

மாறுபட்டது.ஆனால் முரண்பட்டதல்ல.சொல்லுக்கு எவ்வளவோ பொருள் விரிக்கலாம். கருத்து விரிவதும் முந்தைய ஆச்சாரியார்களின் உழைப்பினால் விளைவதே. மேலும் சற்றும் மாறுபடாது. நான் எழுத வேண்டுமானால் புதிதாக எதற்கு எழுத ஆரம்பிக்கவேண்டும்? ஈஸாவாஸ்ய உபநிஷதத்தில் சாதகனின் முயற்சிகளை குறுகத்தறித்து கூறப்பட்டுள்ளது. எனவே அது காலைப் பிரார்த்தனைக்கு மிக உகந்தது.

**அட்சர சொரூபமான வேதம்**

என் பாதயாத்திரை சாமகானத்துடன் நடந்தது.

“வசந்தம் இனியது, கோடை இனியது

மழை , பனி, முன்பனி,பின்பனி இனியது”

பயணத்தில் இந்தப்பாடல் அதிகம் பாடப்பட்டது. பெருமழை வானிலிருந்து கொட்டியபோது இசைத்தோம். இங்ஙனம் வேதகான மகிழ்ச்சியுடன் நாங்கள் பாதயாத்திரை சென்றோம்.

இந்திய இலக்கியத்தில் என்னைப்பெரிதும் ஆட்கொண்டது வேதம்-வேதாந்தம் (உபநிஷதம்) - கீதை ஆகும். ஒரு புத்தகத்தை மட்டுமே சொல்ல வேண்டுமானால் சந்தேகமின்றி கீதையே. நான் வேதங்களையும் பல ஆண்டுகள் ஆராய்ந்தேன். என் தாயார் 1918-ல் இறந்தார். தாயார் இறந்த அன்றிலிருந்து நான் வேதம் படிக்க ஆரம்பித்தேன். நடைமுறை வாழ்க்கை அறிவுக்கு பல புத்தகங்கள் படிக்க வேண்டும். ஆன்மீகப்பயனுக்கு ஒரு நூலே போதும். நமக்கு ஊட்டம் அளிக்கும் ஒரு நூலைத் திரும்பத்திரும்பப்படித்து உறுதியாகப் பற்றிக்கொள்ள வேண்டும். நான் 1918 முதல் 1964 வரை வேதம் பயின்றேன். வெறுமனே புரட்டிப்பார்ப்பது பயனளிக்காது. ஒருசொல்லின் பொருளை உணர பல ஆண்டுகள் உழைக்க வேண்டி வந்தது. ஐம்பது ஆண்டுகள் பயின்றேன். 4 - 4½ ஆயிரம் மந்திரங்கள் மனப்பாடம் ஆயின. அவற்றில் 1319 மந்திரங்களை பொறுக்கி ‘ரிக் வேதஸாரம்’ தொகுத்தேன். 50 ஆண்டுகள் பயின்றதின் விளைவு இது.

வேதம் அக்ஷர சொரூபமானது என்று கூறப்படுகிறது. சொல் சொரூபம் என்று கூடச் சொல்லமுடியாது. அதன் சொல்லைப் பகுத்தால் அது ஒருவரின் பாஷ்யமாகிறது. சொல்லைப் பகுப்பவர் பாஷ்யக்காரர் ஆகிறார். பாஷ்யம் எதற்கும் பிரமாணமாகவோ, ஆதாரமாகவோ ஆக முடியாது. அக்ஷர சொரூபமான மூல வேதமே பிரமாணம் ஆகும். மொழிபெயர்ப்பு முற்றிலும் பயனற்றதாகும். ‘அக்னி’யை ஆங்கிலத்தில் எப்படி மொழி பெயர்ப்பீர்கள்? அக்னி என்றாலும் ஃபயர்(Fire)தான், வஹ்னி என்றாலும் ஃபயர்தான். ஆனால் வேதத்தின் முதல் மந்திரமாக “அக்னி மீளே புரோகிதம்” என்கிற வரியில் அக்னி என்பதற்கு வஹ்னி என்று பயன்படுத்த இயலாது. எனவே எப்படி மொழி பெயர்ப்பது? அதை மொழி பெயர்க்க முடியாது. பாஷ்யங்களோ, பதப்பகுப்புகளோ வேதம் அல்ல. தொகுக்கப்பட்ட அந்த அக்ஷரங்களே வேதம். நான் விளக்கவுரை எழுதினாலும், பதப்பகுப்பு செய்தாலும் அது என் வேதம் என்றாகுமே அன்றி உண்மை வேதம் ஆகாது. எனவே எனக்கு பாராயண-மாக இருந்த வேத மந்திரங்களில் சிலவற்றைப் பொறுக்கித்தொகுத்து

வெளியிடப்பட்டதோடு நிறுத்திக்கொண்டேன். ரிக்வேதத்தில் 10,558 மந்திரங்கள் உள்ளன. அதில் எட்டிலொன்று (1319) ஆக்கினேன். அரைக்காலாய் கஷாயம் செய்தேன் எனலாம். படிக்க எளிதாக இருக்குமளவு செய்ததோடு நிறுத்திக்கொண்டேன்.

**ஆச்சாரியர்கள் தொண்டு**

சங்கர சித்தாந்தத்தில் என்னைக் கவர்ந்தது அவரது பரந்துபட்ட தவசங்கற்பமாகும். எந்த ஒரு தவசங்கற்பமும் சங்கரருக்குக் கஷ்டமானது என்பது கிடையாது. தவசங்கற்பம் பரிபூரண விடுதலையேயன்றி அரைகுறையாக சிக்கி நிற்பதற்காக இல்லையல்லவா?

நான் சங்கராச்சாரியாருக்கு மிகவும் கடன்பட்டிருக்கிறேன். உடல் உணர்வு உள்ள வரை கடன்பட்டிருப்பேன். உடலுணர்வு விலகிக்கொண்டே வருகிறது. இறைவன் அருளால் முழுவதும் விலகும் என்று நம்புகிறேன். இடையில் நான் பெற்ற பிரசாதத்தை அனைவருக்கும் பங்கிட்டுவிட்டால் அது கடனிலிருந்து விடுபட ஒரு வழியாகும். எனவே குருபோதம் (சங்கரரின் பாடல்கள், ஸ்தோத்திரங்கள் முதலியவற்றிலிருந்து திரட்டியவை) தொகுத்தேன். (குருபோதத்திலிருந்து மீண்டும் பொறுக்கி எடுத்து குருபோத சாரம் வெளியிடப்பட்டது.) கேரள யாத்திரையின்போது சங்கராச்சாரி-யாரின் பிறந்த இடமான காலடி கிராமத்தில் “குருபோதம்” வெளியிடப் பட்டது. அதாவது குருவின் காலடிகளில் சமர்ப்பிக்கப்பட்டது என்றே சொல்லலாம்.

நான் மனுஸ்மிருதியையும் தொகுத்தேன். சங்கராச்சாரியாரின் உபதேசத்தின் சாரத்திற்கு நான் “குருபோதம்” என்று பெயரிட்டேன். ஆனால் மனுஸ்மிருதி தொகுப்புக்கு மனுபோதம் என்று பெயரிடாமல் “மனு சாசனம்” என்று பெயரிட்டேன். இரண்டுக்கும் வேற்றுமை உண்டு என்று அவ்வாறு பெயரிட்டேன். இரண்டுக்கும் வேற்றுமை உண்டு. சங்கரர் கட்டளை யிடவில்லை, அறிவுரை பகர்ந்தார். அதில் அறிவுரை பகர்பவனுக்கும் சரி, கேட்பவனுக்கும் சரி ஒன்றும் நிர்ப்பந்தங்கள் கிடையாது. அறிவுரை பிடித்திருந்தால் ஏற்கலாம்; இல்லையென்றால் விட்டுவிடலாம். மனுவின் வாக்கியங்கள் சாசனம் ஆகும். அதாவது விதி அல்லது கட்டளையாகும். மனுஸ்மிருதியில் தந்தை, மகன், சகோதரன், அரசன் முதலிய அனைவரின் கடமைகளும் கூறப்பட்டுள்ளன. வால்மீகி ராமாயணத்தில் செய்யத்தக்கது செய்யத்தகாதது பற்றிய வினா வரும்போது நான் இவ்வாறு நடந்து கொண்டால் மனு என்ன சொல்வார் என்று ஸ்ரீராமன் வினவுகிறான். அதாவது அவன் மனுவின் விதிகளை ஏற்றுக்கொண்டிருந்தான் என்பது புலனாகிறது. கீதையிலும் பகவான் ஸ்ரீகிருஷ்ணன் “அர்ஜுனா, உனக்கு அளிக்கப்பட்ட இந்த ஞானத்தை நான் முதலில் சூரியனுக்கு அளித்தேன். சூரியன் மனுவுக்கு அளித்தான். பிறகு அது நடைமுறைக்கு வந்தது” என்று கூறுகிறான். கீதையின்படி மனித இனத்தில் முதல் கர்மயோகி மனு ஆவார். நாம் மனுவின் மக்கள் என்று பொருள். இந்தத் தொகுப்புக்கு சாசனம் என்று ஏன் பெயரிட்டேன் என்பதற்காக இதையெல்லாம் சொன்னேன்.

மனு கூறியது மருந்துக்கு ஒப்பாகும். ‘மருந்து’ கசந்தாலும் நன்மை பயப்பது. ஆனால் மனுவின் நூல் ஒரு சமுதாய நூல். அன்றைய சமுதாயத்திற்கும் இன்றைய சமுதாயத்திற்கும் வேற்றுமைகள் பல. எனவே மனுவின் வாக்கியங்கள் அப்படியே இன்று செல்லுபடியாக முடியாது. சில சமுதாயத்திற்கு எதிராகவே இருக்கும். எனவே அதிலிருந்து தொகுக்கும்போது மிகவும் யோசித்து செயல்பட வேண்டியிருந்தது. ஒரு உதாரணம் கூறுகிறேன். மனுவின் விதிகள் என்னுடைய மனத்தையும் ஆட்கொண்டிருந்தன. சிறுவயதில் மனுவின் கட்டளைப்படியே நான் காலணி அணிவதை விட்டுவிட்டிருந்தேன். பரோடாவின் கடும் வெயிலில் காலணிகள் அணியாததால் என் கண்கள் கெட்டுப்போய்விட்டன. மனுவின் காலத்தில் மாணவர்கள் ஆசிரமத்திலேயே இருந்திருப்பார்கள். எனவே காலணி தேவையில்லாததாக இருந்திருக்கக்கூடும். ஆக என் தொகுப்பில் இந்த வாக்கியத்தை சேர்த்துக்கொள்ளவில்லை. இவ்வாறு தீர யோசித்து தொகுக்க வேண்டியிருந்தது.

மனுவின் மீது நான் மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறேன். இந்த மதிப்பை நான் மிகவும் போற்றுகிறேன். சுதந்திரமான அறிவும், சிந்தனையும் வேண்டும் என்பது உண்மையே. ஆனால் அறிவுக்கும் ஒரு அடிப்படை வேண்டும் அல்லவா? மனுவின் கட்டளைக்கேற்ப நடந்ததால் என் கண்கள் கெட்டுப்போயின என்பதால் எனக்கு வருத்தம் இல்லை. மனுவின் மேலிருந்த அடிப்படை உணர்வு மேலும் வலுப்பெற்றது. எனவே நல்லதே ஆயிற்று.

இக்காலத்தில் மனுவின் மீது பலருக்குக் கடுஞ்சினம் உள்ளது. மனுஸ்மிருதியில் பல முரண்பட்ட கருத்துக்கள் உள்ளன என்பதால் இது இயல்பானதே. அவை அனைத்தும் மனு எழுதியவை என்று நான் நினைக்கவில்லை. அவற்றில் பலவித இடைச்செருகல்கள் நடந்துள்ளன. பிடிக்காத, ஒவ்வாத கருத்துக்களை நீக்கி விட்டாலும் மனுஸ்மிருதிக்கு பங்கம் ஒன்றும் வராது. மனுவுக்கு வேண்டியது சமுதாய ஒழுங்கே அன்றி சமுதாய ஒழுங்கீனங்கள் அல்ல.

முக்தியைப்பற்றிப் பேசும்போது மனு ‘இறைவனின் அருகாமையைப் பெறும் மனிதன் பிரம்ம ஞானம் பெற்று மகா ஞானியாகிறான். அவன் அனைவரிடத்திலும் சமநிலை காண்கிறான். சமுதாய நிலையில் விரும்பத்தகாத ஏற்றத்தாழ்வுகள் புகுந்து நாட்டுக்குத் தீமை விளைவித்தாலும் மனுவின் குறிக்கோள் சமநிலைநோக்கி இட்டுச் செல்வதாகும். ஒவ்வாத கருத்துக்களை நான் விட்டுவிட்டேன். மனுவின் அடிப்படைக் கருத்துக்களுக்குத் தேவையான கருத்துக்களை மட்டுமே தொகுத்தேன்.

**ஒருமைப்பாட்டு நூல்கள்**

அறிவியல் இன்று உலகத்தைச் சிறிதாக்கிவிட்டது. அது அனைவரையும் ஒருவருக்கொருவர் மிக அருகில் கொண்டுவந்துவிட்டது. இந்நிலையில் மனித சமுதாயம் பிராந்தியங்களாகப் பிரிந்திருப்பதும், ஒவ்வொரு இனமும் தன்னை உயர்வாகவும் பிற இனங்களைத் தாழ்வாகவும் நினைப்பதும் எப்படி ஒத்து வரும்? நாம் ஒருவர் மற்றொருவரை நன்கு புரிந்து கொள்ளவேண்டும்.

எனது திருகுர்ஆன் சாரம் (திருகுர்ஆனிலிருந்து தொகுத்தது). இத்திசையில் ஒரு சிறு முயற்சியாகும். இந்தக் குறிக்கோளுடனேயே நான் தம்மபதத்தையும் புதிதாகத் தொகுத்தேன். கீதையைப் பற்றிய என் கருத்துக் களை கீதைப்பேருரைகள் வாயிலாக மக்கள் முன்வைத்தேன். கிறிஸ்துவ சமய சாரம் (புதிய ஏற்பாட்டிலிருந்து தொகுப்பு) வெளியிட்டதற்கும் இதுவே தூண்டுகோலாகும். பல ஆண்டுகள் நடந்த என் பூதான யாத்திரையின் ஒரே குறிக்கோள் மக்களின் இதயங்களை இணைப்பதே ஆகும். இன்னும் சொல்லப்போனால் என் வாழ்க்கையின் அனைத்துத் தொண்டுகளுமே மனங்களை இணைப்பதற்காக நடந்தவையே ஆகும்.

பூதான யாத்திரையின்போது நான் லக்னோ சென்றிருந்த சமயம் புத்தஜயந்தி வந்தது. அப்போது என் வாயிலிருந்து தானாகவே ஒரு வாக்கியம் வெளிப்பட்டது. "கௌதம புத்தர் சுழலச்செய்த தர்ம சக்கரத்தை மேலும் சுழலச் செய்வதற்காகவே பூதானயக்ஞம் நடைபெறுகிறது. அவ்வாக்கியத்தி-னால் என்னுள் ஒரு புதிய பக்தியுணர்வை அன்று உணர்ந்தேன். யாத்திரை தொடர நாங்கள் சாரநாத் வந்து சேர்ந்தோம். அங்கிருந்த புத்த பிட்சுக்கள் மிகுந்த அன்புடன் தம்மபத நூலை எனக்கு அளித்தனர். அது என் கூற்றுக்கு அங்கீகார முத்திரை கிடைத்தது போல இருந்தது. ஐந்து நாட்கள் கழித்து பூதான யாத்திரை துவங்கியது. இரண்டேகால் வருடம் அந்த யாத்திரை தம்மபதம் காட்டிய வழியில் நடந்தது.

தம்மபதம் பற்றி நான் சிறு வயதிலேயே அறிந்திருந்தேன். ஆழ்ந்தும் படித்திருந்தேன். அதனால் தம்மபதத்தின் வசனங்களை நான் என் மனத்தில் ஒரு வகையாக வரிசைப்படுத்தி இருத்திக்கொண்டிருந்தேன். இன்று கிடைக்கும் தம்மபதம் பரந்துபட்டுபொன்மொழித்தொகுப்புபோலஉள்ளது. அதில் அதன் சமத்துவ சித்தாந்தம் சற்று இலைமறைவு காய் மறைவாக உள்ளது. பல நாட்களாக என் மனத்தில் ஆழப்பதிந்திருந்த தம்மபத வசன வரிசைக்கிரமத்தை மக்கள் முன்பு வைக்க எண்ணியிருந்தேன். இது ஒரு அசாத்திய துணிச்சல்தான். ஆனாலும் பணிவுடன் அந்தத் துணிகர முயற்சியை நான் மேற்கொண்டேன். அது 'தம்மபத நவசம்ஹிதை' என்கிற நூலாக வெளிவந்தது.

என் வாழ்க்கையில் பல நிறைவுகள் எனக்குக் கிட்டியுள்ளன. அதில் இறுதியும், ஒருக்கால் மிகச்சிறந்ததுமான நிறைவு 'சமண சூத்தம்' ஆகும்.

நான் பலமுறை ஜைனர்களிடம் "வைதீக ஹிந்து தர்மத்தின் சாரம் கீதையில் எழுநூறு சுலோகங்களில் கிடைக்கிறது. பௌத்தர்களின் தர்மசாரம் தம்மபதத்தில் கிடைக்கிறது., அதனால் 2500 ஆண்டுகளுக்குப் பின்னரும் புத்தரின் கருத்துக்கள் மக்களுக்குத் தெரிய வருகிறது. அதுபோல ஜைனர்களுக்கும் வேண்டும்" என வேண்டினேன். ஆனால் அது ஜைனர் களுக்கு சிரமமானது. ஏனெனில் அவர்களில் பல பிரிவுகள் உண்டு. நூல்களும் பல உண்டு. பைபிளும், குர் ஆனும் எவ்வளவு பெரிதாக இருந்தாலும் தத்தம் மதங்களின் ஒரே வேத நூலாக விளங்குவது போல ஜைனர்களுக்குக் கிடையாது. ஜைனர்களில் சுவேதாம்பரர்கள் (வெண்ணிற ஆடையினர்),

திகம்பரர்கள் (ஆடையையே துறந்தவர்கள்) ஆகிய இரு பிரிவுகள் தவிர தேராபந்தி, ஸ்தானக்வாசி பிரிவுகளும் உண்டு. இந்த முக்கிய நான்கு பிரிவுகள் தவிர இன்னும் சில பிரிவுகளும் உண்டு. நூல்களோ 20-25 இருக்கும். நான் அவர்களிடம் மீண்டும் மீண்டும் 'உங்களுடைய ஜைனமுனிகள் அனைவரும் கூடி கலந்தாலோசித்து ஜைனர்கள் அனைவருக்குமாக ஒரு சிறந்த வேதநூலை அளிக்க வேண்டும்' என்று வற்புறுத்தி வந்தேன்.

இறுதியாக வர்ணிஜி என் கூற்றுக்கு செவிமடுத்து செயல்பட்டார். அவர் ஆழ்ந்த படிப்பாளி. மிகுந்த உழைப்பின் பேரில் ஜைன சமய அகராதி கூட வெளியிட்டிருந்தார். அவர் என் கூற்றை ஏற்று ஜைனதர்மசாரம் என்னும் நூலை வெளியிட்டார். அவை ஆயிரம் பிரதிகள் அச்சிட்டு ஜைனர் மற்றும் ஜைனர் அல்லாத வித்வான்கள் பலரிடம் அனுப்பிவைக்கப்பட்டது. அவர்களின் யோசனைக்கு ஏற்ப சில கதைகளைச் சேர்த்தும், நீக்கியும் 'ஜிண்ணதம்மம்' என்ற பெயரில் வெளியிடப்பட்டது. பிறகு என் வற்புறுத்தலின் பேரில் ஒரு மாநாடு கூடியது. அதில் சுமார் 300 ஜைனமுனிகள், ஆச்சாரியார்கள், அறிஞர்கள் கூடி மீண்டும் மீண்டும் கலந்தாலோசித்தனர். அந்த நூலில் மாற்றங்கள் செய்து, பெயரையும் மாற்றி ஏகமனதாக 'சிரமண சூக்தம்' அல்லது அர்த்த மாகதி மொழியில் 'சமண சூத்தம்' வெளியிட்டார்கள். 1000-1500 ஆண்டுகளாக நடைபெறாத பெரிய வேலை நிறைவேறியது. அதற்கு ஒரு நிமித்தமாக நான் இருந்தேன். ஆனால் அது மஹாவீரரின் கருணை என்றே நான் நம்புகிறேன்.

ஒரிஸ்ஸா யாத்திரையின் போது பக்த சிரோமணி ஜகன்னாததாசரின் பாகவதம் படிக்க வாய்ப்புக் கிடைத்தது. படிப்பதற்கு அதன் பதினோராவது அத்தியாயத்தை எடுத்துக் கொண்டேன். யாத்திரையின் போது வயல்வெளியில் எங்காவது ஒரு ஏகாந்தமான இடத்தில் அமர்ந்து அரை மணி நேரமோ, ஒரு மணிநேரமோ அனைவரும் சேர்ந்து படிப்போம். ஒப்பிடுவதற்காக நான் சமஸ்கிருத மூலத்தையும், ஏகநாதரின் பாகவதத்தையும் (ஸ்ரீதர உரையுடன்) அவ்வப்போது பார்த்துக்கொண்டேன். அந்த ஆராய்ச்சியில் வெளிவந்ததே 'பாகவத தர்ம சாரம்' ஆகும்.

காஷ்மீர் யாத்திரையின் துவக்கத்தில் சில நாட்கள் ஜபுஜி (சீக்கிய பஜனை)யை கூட்டாகப் படித்துவந்தோம். அப்போது ஜபுஜியைப் பற்றிய என் உரைகளின் தொகுப்பானது 'ஜபுஜி' என்ற நூலாக நான்கு ஆண்டுகள் கழித்து வெளிவந்தது.

ஜபுஜி சீக்கியர்களுக்கு மட்டும் உரியது அன்று. உலகம் முழுமைக்கும் உரியது என்கிற கண்ணோட்டத்தில் அதற்கு விளக்கவுரை கூறப்பட்டுள்ளது. குருநானக்கை ஒரு மதத்துடன் பிணைத்துவிடுவது சரியல்ல. அவர் கங்கை - யமுனைக் கரையிலிருந்து புவனேஸ்வர், பூரி வரை யாத்திரை செய்தவராயிற்றே! அவர் "நாம் உண்மையானவர்களாக எப்படி ஆவது? பொய்த்திரையை அகற்றுவது எப்படி? இதுவே முக்கிய பிரச்சினை என்கிறார். "இறைவன் நமக்கு வகுத்தபடி, அவருடைய ஆணைக்கு இணங்க அவரின் கருத்துப்படி, அவர் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பதே உண்மை யானவர்களாக ஆவதற்கு வழி" என்கிறார் அவர்.

அவருடைய சாதனை முழுவதையும் அச்சமும், பகைமையும் களைதல் என்ற இரு வார்த்தைகளில் வடிக்கலாம். மனிதனுக்கு முன்பாக இன்று இருக்கும் பிரச்சினைகளுக்கெல்லாம் தீர்வு இந்த இரண்டு சொற்களில் உள்ளது. இத்துடன் நான் எங்கள் தொண்டுகளுக்காக இன்னொரு வார்த்தையையும் சேர்த்துக்கொள்கிறேன் - "ஓரம் சாராமை". இதுவும் கூட ஜபுஜியில் மறைமுகமாகக் குறிக்கப்பட்டுள்ளது - "மனிதன் மனத்தளவில் பல்வேறு மதப்பிரிவுகளில் செல்லாதிருப்பானாக."

சாந்திசேனையினர் ஆராய இதில் நல்ல கருத்துக்கள் கிடைக்கும் என்று கருதி இந்த உரைகளை நூலாக வெளியிட நான் அனுமதித்தேன்.

**சான்றோர் வாக்குகள்**

எங்கள் பாதயாத்திரையின் முக்கிய உற்பத்திப்பொருள் (Main Product) பூதானமும், கிராமதானமும் என்றால் அத்துடன் பல துணை உற்பத்திப் பொருட்களும் (By- products) விளைந்தன. பூதான யாத்திரையின்போது நான் படித்தவை பெரும்பாலும் தொகுப்பதற்காக அன்றி பிறருக்கு கொடுப்பதற்காகவே அமைந்தன. அஸ்ஸாமைச் சேர்ந்த மகாபுருஷர் மாதவ தேவரின் 'நாமகோஷா' தொகுப்பு அவ்விதமே ஒரு துணை உற்பத்திப் பொருளாகும். பாதயாத்திரையின் கண்ணோட்டத்தில் பார்த்தால் முக்கிய உற்பத்திப் பொருள் என்று சொல்ல முடியாவிட்டாலும் சமுதாயக் கண்ணோட்டத்துடன் பார்த்தால் அது முக்கியத்துவம் வாய்ந்ததே. இந்தியாவின் இதய ஒருங்கிணைப்பு வேலைக்கான நூல்களில் அதுவும் ஒன்று.

நான் படித்த சிறிதளவு அஸ்ஸாமிய ஆன்மீக இலக்கியங்களில் 'நாமகோஷா' என்னைப் பெரிதும் கவர்ந்தது. அஸ்ஸாம் இலக்கியத்தில் அது தலைசிறந்தது என்பதில் ஐயமில்லை. அகில இந்திய இலக்கிய அளவிலும் அதற்கு ஒரு தனி இடம் உண்டு. இறைநாம தியானத்தை மையமாகக் கொண்டு அதைச் சுற்றிலும் பல வாழ்வியல் கோட்பாடுகளை மாதவதேவர் குறிப்பாக உணர்த்தியுள்ளார். அந்நூலை நான் பன்முறை படித்தேன். அதில் பல பகுதிகள் மனப்பாடமாகிவிட்டன. அது எனக்கு உற்ற தோழனாகவே ஆகிவிட்டது. எனக்காக அதற்கு ஒரு சாரம் (நாம கோஷா சாரம்) தயார் செய்து கொண்டிருந்தேன். அது எல்லா சாதகர்களுக்கும் பயன்படும் வண்ணம் புத்தகமாக வெளியிடலாம் என்று தீர்மானிக்கப்பட்டது.

பன்னிரெண்டு வருட பூதான தவத்திற்குப்பின் நாங்கள் ராய்ப்பூர் சர்வோதய சம்மேளனம் வந்தோம். இடையில் 2-3 ஆண்டுகள் என்னால் சர்வோதய சம்மேளனங்களில் பங்கேற்க முடியவில்லை. ராய்ப்பூரில் சுலப கிராமதானம், கிராமக் கதர், சாந்திசேனை என்கிற மும்மூர்த்தி வழிபாட்டை ஏற்க சம்மேளனம் தீர்மானித்தது. எனக்கு வினயபத்திரிகாவின் ஒரு வரி நினைவுக்கு வந்தது - "துளசிதாசனுக்கு உற்ற அன்பராகிய ராம - லக்ஷ்மண, வைதேஹியை வணங்குகிறேன்". அந்த பக்திப்பரவசத்துடனேயே சேவாகிராமம் நோக்கிப் புறப்பட்டேன். அங்கே கதருக்கு ஒரு புதிய திட்டம் வெளியிடவிருந்தேன். வழியில் தர்சுரா என்னும் சிற்றூரில் (மபி) 26-1-1964 அன்று அந்தப் புனித நன்னாளில் ஒரு ஆதாரப்பாடசாலை மாணவர்கள்

எனக்கு ஒரு வினயபத்திரிகாவின் பிரதியை அன்பளிப்பாக அளித்தனர். அதில் 'விநோபாஜிக்கு அன்புடன் சமர்ப்பணம்' என்று எழுதப்பட்டிருந்தது. என் மகிழ்ச்சிக்கு அளவே இல்லாமல் போய்விட்டது. பள்ளி மாணவர்கள் இந்நாட்களில் சற்று அடக்கமும், சிரத்தையும் குறைந்தவர்களாக ஆகிவிட்டார்கள். இந்நிலையில் அவர்களில் சிலர் எனக்கு வினயபத்திரிகா அளித்தது எனக்கு ஒரு வரப்பிரசாதம் போலவே தோன்றியது. மூன்றாம் முறையாக அதைப் படிக்க ஆரம்பித்தேன். பத்து மாதங்கள் அந்த அன்புக்கடலில் திளைத்தேன். அதன் பலனாக அதன் சுருங்கிய வடிவமொன்றை என் தோழர்களுக்காக வெளியிடவேண்டும் என்கிற எண்ணம் உண்டாயிற்று. அந்தத் தொகுப்புக்கு நான் 'வினயாஞ்சலி' என்று பெயரிட்டுள்ளேன்.

என் ஆன்மீக உயர்வுக்குப் பெரிதும் உதவியவர் துகாராம் ஆவார். என் தாயாரின் இனிய குரலில் நான் துகாராமின் பல பாடல்களைக் கேட்டுள்ளேன். அதை நினைவுகூரும்போது இப்போதும் என் கண்கள் பனிக்கின்றன. துகாராம் பாடல்களில் எனக்கு மிகப்பிடித்த சுமார் நூறு பாடல்களை பொறுக்கி எடுத்து சற்று விளக்கங்களுடன் வாசகர்களுக்கு அளிக்கவேண்டும் என்ற ஒரு திட்டம் என் மனத்தில் இருந்தது. 'மகாராஷ்டிரதர்மம்' என்னும் வாரப்பத்திரிகையில் இவ்வாறு ஒவ்வொரு பாடலாக வெளியிடவும்பட்டது. ஆனால் அத்திட்டம் நிறைவு பெறவில்லை. வெளிவந்தவரை புத்தகமாக 'சந்த்தான்சா ப்ரசாத்' என்கிற பெயரில் வெளியிடப்பட்டது. பிற்பாடு துகாராமின் பஜனைகளில் நான் திரட்டிய தொகுப்பு வெளிவந்தது (துகாரம் கீ பஜனே(ம்).

ஏகநாதரின் பாகவதம் நான் படித்திருந்தேன். பிறகு அவருடைய தனிப்பட்ட அனுபூதிகளை ஆராயும் எண்ணத்துடன் அவருடைய பாடல்கள் பக்கம் திரும்பினேன். அவருடைய 'காதா'வையும் படித்தேன். நான் படித்த தத்துவ மற்றும் அறநூல்கள் யாவும் என் சிந்தனைக்கு உறுதுணைநாடியும் என் ஆராய்ச்சிகளுக்கு விடை தேடியும் படித்தவையே. ஏகநாதரின் 'காதா' வில் அவருடைய அனுபூதி ரத்தினங்களைத் திரட்டி என் உபயோகத்திற்காக நான் பல வருடங்களாக மெல்ல மெல்ல தொகுத்து வந்தேன். அதன் ஒரு தொகுப்பு 1940-ல் நான் சிறையில் இருந்தபோது முதன்முறையாக வெளி வந்தது. அதை மறுபதிப்புக்குக் கொண்டுவந்தபோது நான் அதை மீண்டும் ஒருமுறை நுணுக்கமாக ஆராய்ந்தேன். சில பாடல்களை நீக்கி சில பாடல்களைச் சேர்த்தேன். அதன் தொகுப்பிலும் சற்று மாற்றங்கள் செய்தேன். இப்போது திரட்டிலும், தொகுப்பிலும் அது எனக்கு திருப்தியாக அமைந்துள்ளது.

சில சமயங்களில் திரட்டுகளுக்குக் காரணம், திரட்டைப் படித்து வாசகர்கள் ஆர்வம் மிகுந்து மூலநூல் முழுவதையும் படிக்க உத்வேகம் கொள்வார்கள் என்பதாக அமையும். ஆனால் என் குறிக்கோள் தலைகீழானது. 'திரட்டைப்படித்தவுடன் வாசகனுக்கு நிறைவு வரவேண்டும். விரிவுமிக்க மூலநூல் படிக்கும் அவசியம் ஏற்படக்கூடாது. மூலநூலைப்படிக்க நான் மேற்கொண்ட சிரமம் அவருக்கு ஏற்படக்கூடாது' என்பதே என் குறிக்கோள். இந்த என் திரட்டு ஏகநாதருக்கும் நிச்சயம் நிறைவு தருவதாக இருக்கும்.

நாமதேவர் மகாராஷ்டிரத்தில் உதித்த உன்னதமான போதகர். அவர் விட்டலனின் பெயரை இந்தியா எங்கும் பரப்பினார். அவர் பஞ்சாபியிலும் பாடல்கள் எழுதியிருக்கிறார். அவற்றில் சில சீக்கியரின் கிரந்தஸாஹிபில் உள்ளன. நாமதேவர் உடனுக்குடன் செய்யுள் யாத்துப்பாடி விடுபவர். எனவே அவர் பாடல்களுக்கு அத்தாட்சி பெற்ற தொகுப்பு எதுவும் கிடையாது. எனவே நாமதேவர் பாடல்களிலிருந்து திரட்டித் தொகுப்பது சிரமமாக இருந்தது. நான் சிறையில் இருந்தபோது எந்த நூலிலிருந்து திரட்டினேனோ அந்த நூலே காணாமல் போய்விட்டது என்று தெரியவந்தது. எனவே மீண்டும் புதிதாக திரட்ட வேண்டியதாயிற்று. பிறகு அந்த காணாமல் போன புத்தகமும் கிடைக்கவே இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கும் வாய்ப்பும் கிட்டியது. இவ்வளவு உழைத்த தன் பயனே அவருடைய இனிய அமிர்தம் போன்ற பாடல் திரட்டாகும். அவருடைய நிஷ்காம்ய பக்தியில் ஊறிய பாடல்கள் சாதகர்களின் ஆத்ம சுத்திக்கு உதவியாக இருக்கும்.

சமர்த்த ராமதாசர் ஏராளமாக எழுதியுள்ளார். ஆனால் அவருடைய 'தாஸபோதம்' 'மனோசே சுலோக்' இரண்டும் தலைசிறந்தவை. பிந்தையது எனக்கு முழுவதும் மனப்பாடம். 'தாஸபோதத்தை நான் பலமுறை படித்தேன். பலமுறை படித்தபின் எனக்குக் கிட்டிய சாரத்தை 'போதபிந்து' என்கிற பெயரில் நான் தொகுத்து வைத்துக்கொண்டேன். 'மனோசே சுலோக்' ராமதாசரின் தெய்வீகமான பாடல்களாகும். அவற்றை நான் பலமுறை நினைவு கூர்ந்திருக்கிறேன். தானாகவே அதிலிருந்து ஒரு திரட்டு என் மனத்தில் திரண்டது. அவை 'ராமதாஸான்சி பஜனே(ம்) என்னும் நூலாக வெளியிடப்பட்டது.

ஞானதேவரின் பஜனைகளிலும், அதற்கான 'சிந்தனிகா' (விளக்க வுரை) விலும் என் சிந்தனையை பொழிந்த அளவு கீதாயி மற்றும் கீதாயி அகராதி நீங்கலாக வேறு எதிலும் நான் பொழியவில்லை. ஞானதேவரின் பாடல்களில் அதைவிட சிறந்த திரட்டை என்னால் தயார் செய்ய முடியாது. அதே போன்று அந்த 'சிந்தனிகா'வில் என்றும் மெருகு குலையாத இனிமை கொலு வீற்றிருக்கிறது. இதனை எழுதும் பணியை மேற்கொண்ட காலஞ்சென்ற தாமோதர்தாஸ் முந்தரா கூறியதாவது "எழுதுவதற்கு சொல்லிவரும்போதே விநோபாஜி இவ்வுலகை மறந்து சமாதியில் ஆழ்ந்து விடுவார். நெடுநேரம் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிய வண்ணம் இருக்கும்".

ஒவ்வொரு பஜனைக்கான சிந்தனிகாவும் ஒரே மாதிரியானவை அல்ல. சில விரிவான பாஷ்யங்கள். சில சுருக்கமான கருத்துரை, சில மொழிபெயர்ப்பு வடிவங்கள். சில சுதந்திரமான சிந்தனை ஓட்ட வடிவங்கள். சிந்தனை செய்த எனக்குப் பட்ட விதத்தில் அதை எழுதினேன். ஒவ்வொருவரும் தன் ஆத்ம சுத்தியை மனத்தில் இருத்தி தன்னிச்சையாகப் பொருள் கொள்ளவேண்டும் என்றே விரும்புகிறேன். சிந்தனிகா ஒரு கைகாட்டியாக மட்டுமே செயல்படும்.

சாதகனின் முயற்சிக்கு நான் வகுத்துக்கொண்ட வரிசைக்கிரமத்தின்படி அந்நூல் இயற்றப்பட்டுள்ளது. ஞானதேவருக்கு அது எவ்வளவு பிடிக்கும் என்பது நான் ஞானதேவருடன் எவ்வளவு ஒன்றினேன் என்பதைப் பொறுத்தது. ஆனால் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஞானதேவருடன்

ஒன்றிய அளவு வேறு எவருடனும் நான் ஒன்றவில்லை என்பதை மட்டும் நான் அறிவேன்.

**விசார் போத்தி**

என் வாழ்வே சிந்தனையிலிருந்து செயல், செயலிலிருந்து சிந்தனை என்று அமைந்தது. இதை நான் பிரக்ஞை என்கிறேன். பிரக்ஞை நிலையில் சிந்தனைகள் வெளிப்பட்டுக்கொண்டேயிருக்கின்றன. பொதுவாக அவற்றை எழுதிவைக்கும் இயல்பு எனக்கு இல்லை. ஒரு மனநிலையில் அவற்றை எழுத ஆரம்பித்தேன். அனைத்தையும் எழுதுவதில்லை, சிலவற்றை எழுதிவைத்தேன். அதுவே ‘விசார் போத்தி’ ஆயிற்று. இது வெகுநாட்களுக்கு நீடிக்கவில்லை. சில நாட்கள் கழித்து நின்று விட்டது.

அதை நான் அச்சிட்டு வெளியிடுவதாகவே இல்லை. ஆனால் சில ஆர்வம் மிக்க அன்பர்கள் அதை கையால் பிரதியெடுக்கத் துவங்கினர். 12 வருடங்களில் சுமார் 150 பிரதிகள் எடுக்கப்பட்டன. ஆனால் நாளாவட்டத்தில் மோசமான கையெழுத்தினாலும், எழுத்துப்பிழைகளினாலும், அனைத்துப் பிரதிகளும் மூலத்தைப் பார்த்து எழுதாததாலும் பிரதிகளில் பிழைகள் மலிந்தன. அதன் பயனாக சில கூற்றுகள் அதன் பொருளையே இழந்தன. எனவே மூலத்தை அச்சிட வேண்டியதாயிற்று.

அதில் உள்ள கருத்துக்கள் பொன்மொழிகள் அல்ல. பொன்மொழிகளுக்கு ஒரு ஆதாரம் இருக்கவேண்டும். இவை சுதந்திரமான சிந்தனைகள். இவற்றை சூத்திரங்கள் என்றும் சொல்ல முடியாது. சூத்திரங்களுக்கிடையே ஒரு தர்க்கரீதியான கட்டு இருக்கும். இவை கட்டற்றவை. பிறகு இவற்றை என்னவென்றுதான் அழைப்பது? நான் இவற்றை ‘தத்து பித்து மழலை’ என்கிறேன். இவை முன்னதாக நான் படித்த, கேட்ட விஷயங்களினால் பிறந்தவை என்றாலும், அவற்றைச் சார்ந்தவை அல்ல. ஞானதேவரின் சொற்களில் சொல்ல அனுமதிக்கப்பட்டால் நான் இதை என் கேள்வி ஞானக்கடன் தீர்க்கும் முயற்சி என்பேன்.

**மிகச்சிறந்த தொண்டு**

என் தாயார் என்னிடம் “வின்யா, நீயே கீதையை மராட்டியில் காவிய நடையில் ஏன் தரக்கூடாது? உன்னால் முடியும்” என்று ஒருமுறை சொன்னார். என் தாயாரின் அந்த நம்பிக்கையே என்னை கீதாயி எழுதுவித்தது. கீதை சமஸ்கிருதத்தில் இருப்பதால் அதை மனத்தில் இருத்தி சிந்திப்பது நம் மக்களுக்கு சாத்தியமாவது இல்லை. எனவே கீதையை மராட்டியில் கொண்டு வரவேண்டும் என்று நெடுநாட்களாகக் கருதி வந்தேன். அதற்குத் தேவையான மனநிலையும், சூழ்நிலையும் 1930-ல் கிடைத்தது. கீதாயி எழுதும் போது பின்வரும் விஷயங்களை மனத்தில் இருத்தினேன்.

1. கீதையின் சமநிலைகாணும் சாம்யயோகம் நன்கு வெளிப்பட வேண்டும்.
2. சங்கரர், ஞானதேவர் முதலிய முந்தைய ஆச்சாரியார்களின் பாஷ்யங்களில் உள்ள பொருளை மாற்றலாகாது.

3. மொழிபெயர்ப்பு போல காணப்படக்கூடாது.
4. பொருட் செறிவு குன்றாமல், அதே சமயம் எளிமையாக இருக்க வேண்டும்.
5. மொழியில் இலக்கணக்கட்டு இருக்கவேண்டும்.
6. 'நான்' எங்கேயும் வரலாகாது.

கீதாயியை மனத்தில் வடித்தபோது கீதையின் ஐந்தாவது அத்தியாயம் மட்டும் பல வருடங்கள் எடுத்துக்கொண்டது. நான் அந்த அத்தியாயத்தை கீதையின் திறவுகோல் என்பேன். அந்த அத்தியாயத்திற்குத் திறவுகோல், நான்காம் அத்தியாயத்தின் 'கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் காண்க' என்னும் பதினெட்டாவது சுலோகமாகும். அதில் எனக்கு வெளிப்பட்ட பொருளின் விரிவே கீதைப்பேருரைகளில் விரவி நிற்கிறது.

7-10-1930 அன்று காலைப்பிரார்த்தனைக்குப் பிறகு ஐந்து மணிக்கு கீதாயி எழுதும்பணி ஐந்தாம் அத்தியாயத்திலிருந்து துவங்கியது.

"உயிரெழுத்துக்களில் ஐந்தாம் உயிர், மெய்யெழுத்துக்களில் ஐந்தாம் மெய் போல் சாதகர்களுக்கு கீதையின் ஐந்தாம் அத்தியாயம்." 6-2-1931 அன்று கீதாயி நிறைவு பெற்றது.

இவ்வளவு பிரயத்தனப்பட்டு எழுதியும் அதை நடைமுறை பரிசோதனைக்குட்படுத்தாமல் எனக்கு நிறைவு ஏற்படவில்லை. நான் ஆசிரமச் சிறுமியர் சிலருக்கு அதைக் கற்பித்துப் பார்த்தேன். அவர்களுக்கு சிரமமாக இருந்த இடங்களை மாற்றினேன். நண்பர்களிடமும் யோசனை கேட்டேன். அவற்றையும் பரிசிலித்தேன். பிறகு துலியா சிறையில் அதற்கு இறுதி வடிவம் கொடுக்கப்பட்டது. 'கீதாயி'யின் முதற்பதிப்பு நான் துலியா சிறையில் இருந்தபோதுதான் வெளிவந்தது.

அதே காலத்தில்தான், அதே சிறையில்தான் கீதைப் பேருரைகளும் நடந்தன. சானேகுருஜியின் திருக்கரங்களினால் அது வரிவடிவம் பெற்றது. இறைவன் அருளினால் அது இன்று இந்தியாவின் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு மக்களுக்குத் தொண்டாற்றி வருகிறது.

கீதைப் பேருரைகள் கீதையின் சாரம் முழுவதையும் எளிய மொழியில் மக்களுக்கு எட்டச்செய்தது. ஆயினும் சுலோக வாரியாக பொருள் கொள்ள இன்னும் ஏதாவது செய்யவேண்டியது அவசியமாக இருந்தது. ஆக கீதாயி சொற்பொருள் அகராதி எழுதப்படவேண்டும் என்கிற நிலை உண்டானது. ஆனால் அப்போது என் கவனம் அதன்பால் செல்லவில்லை. நேரம் கிட்டவில்லை என்பது மட்டுமன்றி அகராதி எழுதும்முன் கீதாயிக்கு இறுதி வடிவம் கொடுக்கவேண்டியது அவசியம் என்பதும் காரணம். அது பற்றி என் சிந்தனை நடைபெற்ற வண்ணமே இருந்தது. பதிப்புகள்தோறும் கீதாயி திருத்தம் பெற்று வந்தது. பிறகு தனி நபர் சத்தியாகிரகத்தின் போதும், வெள்ளையனே வெளியேறு இயக்கத்தின் போதும் (சிறையில்) ஐந்து

ஆண்டுகள் அருமையான ஏகாந்தம் கிட்டிற்று. இடையில் சில மாதங்கள் மௌன விரதமும் ஏற்றிருந்தேன். அப்போது கீதாயியை முழுவதுமாகத் திருத்தி முடித்தேன்.

வெளிவந்தபின் என் தம்பி சிவாஜியும், நானும் (1945-46-ல்) ஏழுமாதங்கள் செலவிட்டு கீதாயி அகராதியை முழுமையாக்கினோம். ஆனால் என் இயல்புப்படி நான் அகராதியை அப்படியே கிடப்பில் போட்டு வைத்தேன். பலர் வற்புறுத்தியும் சில வருடங்கள் அப்படியே விட்டுவைப்பது அவசியம் என்று தோன்றியது. காலப்போக்கில் புதிய பொருள்கள் தோன்றுகின்றன. எனவே அதை உறைநிலையில் வைத்து விட்டேன். சில நாட்கள் கழித்து இருவரும் சேர்ந்து அகராதி முழுவதையும் புரட்டினோம். இம்முறை ஐந்து மாதங்கள் பிடித்தன.

கீதாயி எழுதிய போது நினைவில் இருத்திய விஷயங்களில் இறுதி விஷயத்திற்கு ('நான்'இல்லாதிருப்பது) நேர் எதிரான விஷயம் கீதாயி அகராதியில் காணப்படும். கீதாயியில் 'நான்' இல்லாமல் இருக்கவேண்டும் என்ற நிலைக்கு மாறாக கீதாயி அகராதியில் இருப்பது முழுக்க முழுக்க 'நானே'. அதாவது கீதையை நான் அணுகிய அணுகுமுறையே இந்த அகராதியில் வெளிப்பட்டுள்ளது. எல்லோரும் இதே அணுகுமுறையை மேற்கொள்ள வேண்டும் என்று ஒருபோதும் நான் சொல்லமாட்டேன். ஏனெனில் நானே அந்த அணுகுமுறைக்கு கட்டுப்பட்டவன் அல்ல. நாளையே நான் வேறுவித மாகச் சிந்திக்க முற்படலாம். கீதாயியின் சொற்களில் நான் ஏதும் மாற்றம் செய்ய மாட்டேன். ஆனால் அகராதி பொருள்பற்றிய சிந்தனையல்லவா? இந்த சிந்தனை நாள்தோறும் என்னிடமும் மாறக் கூடும். நான்கு ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய அகராதி திருத்தப்பெற்று ஏறத்தாழ புதியதாகவே உருவானது. ஆனால் எங்காவது முற்றுப்புள்ளி வைக்கத்தானே வேண்டும். எனவே அப்போது முற்றுப்புள்ளி வைத்து அச்சிட அனுமதித்து விட்டேன்.

ஆராய்ச்சி மனப்பான்மையுடன் படிப்பவர்களுக்கு அதுபயன் படுகிறது என்பதைக் கண்டேன். ஆனால் சாதாரண வாசகர்களுக்கு அகராதியைப் பயன்படுத்தி பொருள் ஆராய்ச்சி செய்து படிக்கும் ஆற்றலோ ஓய்வோ இருப்பதில்லை. எனவே சுலோக வாரியாக ஒவ்வொரு சுலோகத்திற்குக் கீழே விளக்கம் தரவேண்டும் என்கிற கருத்து உதித்தது. அதுவே 'கீதாயி சிந்தனிகா' வாக வடிவம் பெற்றது.

அகராதியிலிருந்து முக்கிய விளக்கங்கள் அதில் எடுத்தாளப்பட்டுள்-ளன. பல புதிய விளக்கங்களும் சேர்க்கப்பட்டன. அவை தவிர கீதையின் சில சுலோகங்களுக்கு எனக்குத் தோன்றிய குறிப்புரைகளை அவ்வப்போது நான் எழுதிவைத்திருந்தேன். அவற்றிலிருந்தும் தேவையான பகுதிகள் எடுத்தாளப் பட்டன. ஆக கீதை சம்பந்தப்பட்ட என்னுடைய இது வரையிலான சிந்தனை 'கீதாயி சிந்தனிகா' வில் வெளியாகியுள்ளது எனலாம்.

கீதைப் பேருரைகள், ஸ்திதப்ரக்ஞ தரிசனம், கீதாயி சிந்தனிகா மூன்றும் சேர்ந்து நான் உணர்ந்த கீதையின் சாம்யயோக தத்துவத்தை வெளிப்படுத்துகின்றன. என் பிற தொண்டுகளை உலகம் மறந்து போகும். ஆனால் கீதாயியையும், கீதைப் பேருரைகளையும் மறக்காது என்பது என் நம்பிக்கை. அவை உலகத்திற்குத் தொடர்ந்து தொண்டாற்றி வரும். ஏனெனில் கீதாயி எழுதும் போதும் கீதைப்பேருரைகள் ஆற்றிய போதும் நான் முழுமையாக சமாதி நிலையிலேயே இருந்தேன்.

**வின்யாவின் படைப்பு அற்றநிலை**

நான் எழுதியவையும், எழுதுபவையும் என்னுடையவை அல்ல. நான் என் இறைவனுக்கு ஒரு அடிமை மட்டுமே. பெரியோர்களிடமிருந்து எனக்கு கிடைத்தவற்றை நான் பகிர்ந்து கொள்கிறேன், அவ்வளவே. ‘உன் ஞானக் கடலில் நான் மீனாகப்பிறந்தாலும் என் தாகம் அடங்காது’ என்கிறார் ஒரு கவிஞர். எனக்குக் கிடைத்த சிந்தனைச் செல்வத்தை நான் முடிந்தவரை அனைவருக்கும் கொடுக்கிறேன். நான் மொத்த வியாபாரிகளிடம் பொருள் வாங்கி விநியோகிக்கும் ஒரு சில்லறை வியாபாரி.

“சொன்னதெல்லாம் சான்றோரே-
வின்யா வாளாவிருப்பவன் தானே!”

## வாழ்வியல் ஆய்வுக்கூடங்கள்

பதின்மூன்று வருடங்கள் இந்தியாவில் பாதயாத்திரை செய்தேன். பிறகு நான்கு , நான்கரை ஆண்டுகாலம் காரில் சுற்றினேன். இந்தியாவின் எல்லாப் பகுதிகளுக்கும் போனேன். அநேகமாக ஒவ்வொரு மாவட்டத்திற்கும் போனேன் என்று சொல்ல வேண்டும். இந்நிலையில் சில வேலைகள் நிரந்தரமாக மேலும் செயல்படட்டும் என்று ஆறு ஆசிரமங்களை நான் நிறுவினேன். அந்த ஆசிரமங்கள் சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் நன்கு தொண்டாற்றின என்று கூறிக்கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்த ஆசிரமங்களை நான் ஆய்வுக்கூடங்கள் என்று அழைக்கிறேன். ஆய்வுக்கூடங்கள் கடைத்தெருக்களில் நிறுவப்படுவதில்லை. ஏகாந்தமான அமைதியான இடத்தில் நிறுவப்படுகின்றன. ஆனால் அங்கு நடைபெறும் சோதனைகளும், சோதனைக்குரிய பொருட்களும் கடைத்தெருவுக்கு, அதாவது சமுதாயத்திற்கு உரியவை. பரிசோதனைகள் கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலையில் செய்யப்படுகின்றன. ஆனால் அதன் முடிவுகள் சமுதாயம் முழுவதற்கும் பயன் தரக்கூடியவை ஆகும்.

இடைப்பட்ட காலகட்டத்தில் ஆசிரமங்கள் நிறுவி செயல்படுவதே நின்று போனதால் நம் கலாச்சாரம் சீரழிந்தது. ஆசிரமங்களே இல்லாது போயின. ஏதோ சங்கரர், ராமானுஜர் ஆகியோர் கருணையால் சில மடங்கள் மட்டுமே எஞ்சியுள்ளன. அவை ஓரள்வு விழிப்புணர்வைக் காத்து வைத்தன. ஆனால் சமுதாய ஆராய்ச்சி செய்யும் ஆசிரமங்களே இல்லாது போயின. தற்காலத்தில் ரவீந்திரநாத் தாகூர், சுவாமி சிரத்தானந்தர், ஸ்ரீஅரவிந்தர் ஆகியோர் மீண்டும் அவ்வேலையைத் துவக்கினர். ஆனால் நேரடியாக ஆய்வினை காந்திஜிதான் செய்தார். அவர் ஒரு தெளிவான திட்டம் வகுத்து "நாம் உலகநன்மைக்காக தொண்டு செய்வோம். அதற்கு பதினோரு விரதங்கள் காப்போம்" என்றார்.

இன்று நாம் இந்த வேலையை மேற்கொண்டு செய்யவேண்டும். ஆசிரமங்கள் தோற்றத்தில் வேறுபடலாம். ஆனால் உட்பொருள் ஒன்றே. ஆசிரமங்கள் நிறுவும் விஷயத்தில் நான் ஆசிரம ஆய்வுகளும், அவற்றின் பயன்பாடும் (பூதான இயக்கம்) ஒரே செயலின் இரு கூறுகளாகும் என்று கூறியுள்ளேன். அறிவியலிலும் இவ்வாறே முதலில் தனி அறிவியல் வளர்க்கப்படுகிறது. அதாவது பயன்பாட்டு அறிவியலுக்கு தனி அறிவியலின் ஆதாரம் தேவைப்படுகிறது. தனி அறிவியலுக்கு பரப்பவும் பயன்படுத்தவும் பயன்பாட்டு அறிவியல் களம் தேவைப்படுகிறது. ஒன்று மற்றதற்கு இன்றியமையாததாகும். என் ஆசிரமங்கள் என் சமுதாயவேலை களுக்கு

இன்றியமையாத அங்கங்களாகும். அங்கே நடைபெறும் சிந்தனையி னால் வெளிவேலைகள் உத்வேகம் பெறும். அதாவது ஆசிரமங்கள் ஆற்றல் மையங்களாக விளங்கும். வெளிவேலைகள் அந்த ஆற்றல் செல்லும் வாய்க்கால்களாக அமையும். வெளிவேலைகளினாலேயே ஆசிரம வேலை கள் போற்றப்படும். (அதாவது வெளிவேலைகள் ஆசிரமங்களுக்குப் போற்றல் களங்களாகும். தனி அறிவியல் பயன்பாட்டினாலேயே கீர்த்தி பெறுவதுபோல சிந்தனையானது செயலினாலேயே கீர்த்தி பெறும்).

என் ஆசிரமங்கள் நிறுவப்பட்ட இடங்களிலெல்லாம் ஒரு பவர் ஹவுசாக (ஆற்றல் மையமாக) செயல் படவேண்டும். அங்கிருந்து ஆற்றல் சுற்றியுள்ள இடங்களில் பரவவேண்டும். அஹிம்சையுடன் கூடிய அன்பால் ஒன்றுபடுகின்ற, தற்சார்புடைய, பரஸ்பர ஒத்துழைப்பு மிக்க, சிறந்த ஆன்மீக, அறிவியல் கல்வி அமைப்பு கொண்ட, ஒவ்வொரு வீட்டுக்கும் முழுத்தொழில் வசதி கிட்டுகின்ற, கடனே இல்லாத, கிராமமே ஒரு குடும்பமாக விளங்குகின்ற ராமகதையும், கிராமகதையும் (இறையுணர்வும், சமுதாய உணர்வும் – *மொழிபெயர்ப்பாளன்*) இடைவிடாது நடக்கின்ற சமுதாயம் சுற்றிலும் பரவ வேண்டும். இப்படி அந்த ஆற்றல் மையம் செயல்படவேண்டும். இந்த மையத்தின் ஆளுமை எல்லை 20-25 மைல் என்றால் அதன் பிறகு இன்னொரு ஆற்றல் மையம்வேண்டும். இவ்வாறு சமுதாயம் முழுவதையும் ஆட்கொள்ள வேண்டும். இதுவே ஆசிரமம் பற்றிய என் கனவாகும். இதையே நான் எதிர்பார்க்கிறேன். நமது முக்கிய வேலை சமுதாயத்தை அஹிம்சைச் சமுதாயமாக மாற்றுவதாகும். சமுதாயத்தை அஹிம்சைச் சமுதாயமாக, ஆற்றல்மிக்க சமுதாயமாக, தற்சார்பும், தன்னம்பிக்கையும் மிக்க சமுதாயமாக, அச்சமும், பகைமையும் அற்ற சமுதாயமாக மாற்றவேண்டும். ஆனால் இந்த ஆற்றல் மையங்களை நிறுவுவது எங்கே? ஆற்றல் உணரப்படுகின்ற இடத்தில்தான் ஆற்றல் மையங்கள் நிறுவப்பட முடியும்.

நான் ஆங்காங்கே ஆறு ஆசிரமங்கள் நிறுவினேன். இந்தியாவின் மூன்று மூலைகளில் மூன்று, உட்பகுதிகளில் மூன்று. அவற்றில் உயிர்ச்சக்தி இருக்குமானால் இந்தியா முழுவதையும் ஆட்கொள்ள அவை போது மானவையாகும். சங்கராச்சாரியார், தகவல் தொடர்பு மற்றும் போக்குவரத்து வசதிகள் குறைந்த காலத்தில் இந்தியாவில் நான்கு ஆசிரமங்கள் நிறுவினார். அந்த நான்கு ஆசிரமங்களிலும் 'இவர்கள்' தீபங்களாக செயல்படுவார்கள் என்கிற நன்னம்பிக்கையுடன் நால்வரை நியமித்தார். அந்த ஆசிரமங்கள் அவ்வண்ணமே செயல்பட்டன. ஆயிரத்து இருநூறு ஆண்டுகள் சென்றதில் அவற்றின் ஒளி சற்று மங்கிவிட்டது. அது இயல்புதான். ஒட்டுமொத்தத்தில் அவை இந்தியாவுக்குப் பெரும் தொண்டாற்றின என்பதில் ஐயமில்லை. போக்குவரத்து சாதனங்கள் மிகுந்த இந்த காலகட்டத்தில் ஆறு ஆசிரமங்கள் நிறுவுவது பெரிய விஷயமில்லை. இறைவன்பால் பக்தியே இந்த ஆசிரமங்களின் அடிப்படையாக இல்லாவிட்டால் இந்த ஆசிரமங்களால் எந்த வேலையும் செய்ய முடியாமல் போகும். இந்த ஆறு ஆசிரமங்களின் நோக்கங்களும் வெவ்வேறானவை ஆகும்.

**சமன்வய ஆசிரமம், புத்தகயை**

சமன்வய ஆசிரமம் நிறுவ (18-4-1954) புத்தகயை க்ஷேத்திரத்தைத் தேர்ந்தெடுத்ததற்கு ஒரு காரணம் உண்டு. இந்தியாவின் வாழ்க்கையும் கலாச்சாரமும் சமநிலைநோக்கில் மலர்ந்தவை. பிரம்மவித்தைக்கான அடிப்படையும், அனைத்துயிர்களின்பால் தயையும் அச்சமநிலை நோக்கின் அஸ்திவாரக்கருத்துக்களாகும். சமன்வய ஆசிரமத்தில் வேதாந்தக்கருத்துக் கள் ஆராயப்பட்டு நேரடியாக வாழ்வில் அது பரிசோதனைக்குட்படுத்த வேண்டும் என்பதே என் அவா ஆகும்.

ஆசிரமத்திற்கு சங்கரமடத்திலிருந்து நிலம் கிடைத்தது. அந்த இடத்திற்கு நேர் எதிரே புத்தர்கோவில். அமைதியான சந்தடியற்ற இடம். இது சமன்வய (சமரச) ஆசிரமத்திற்கு மிகவும் உகந்த இடம் என்று எனக்குப்பட்டது. புத்தகயையில் சீனா, ஜப்பான், திபேத், இலங்கை முதலிய பலநாடுகளின் புத்தர் கோவில்கள் உள்ளன. அந்நாட்டவருடன் தொடர்பு கொள்ள மிகவும் வசதி. புத்தகயைக்கு வரும் யாத்திரீகர்கள், பிட்சுக்கள் ஆகியோருடன் தொடர்பு கொண்டு, அவர்களது அனுபவங்களைக் கேட்டு, தங்கள் அனுபவங்களை அவர்களுடன் பகிர்ந்து, இந்திய முறைப்படி அவர்களை விருந்தோம்பி வருமாறும், இங்ஙனம் சர்வதேசத் தொடர்பு களை வளர்க்குமாறும் நான் ஆசிரமத்திற்கு வேலைத்திட்டம் அளித்தேன். அவ்வண்ணமே அங்கு வேலை நடக்கவும் நடந்தது. ஒவ்வொரு புத்த பூர்ணிமாவுக்கும் அங்கு பயணம் மேற்கொள்ளும் திட்டத்தையும் நான் வகுத்தேன்.

நான் இன்னொரு விஷயமும் கூறினேன். நம்து கலாச்சாரத்தில் ஒரு குறைபாடு. அது இன்றைய கலாச்சாரத்தில் விளைந்த குறைபாடு. பண்டைய கலாச்சாரத்தில் இருந்தது அல்ல. நமக்குத் தனி நபர் தூய்மையைப் பற்றிய உணர்வு ஓரளவு உண்டு. ஆனால் பொதுத் தூய்மையைப்பற்றிய உணர்வு குறைவு. புத்தகயை க்ஷேத்திரத்தை மிகவும் சுத்தமாகவும் தூய்மையாகவும் வைத்திருக்க வேண்டும் என்பது என் விருப்பம். அப்படி வைத்துக் கொண்டால் வெளிநாட்டிலிருந்து வருபவர்கள் இங்கு தூய்மையைக் காண்பார்கள். நாம் அவர்களுக்கு நம்மால் ஆன தொண்டுகளைச் செய்ய-லாம். நமது சிந்தனைகள் அவர்களுக்கு நேரே புலனாகும். உடலு ழைப்புடன், தூய்மையையும் நாம் நித்தியகர்மமாக ஏற்றுக்கொள்ள வேண்டும்.

அதாவது வெளிநாடுகளிலிருந்து வருவோர்களுடன் சிந்தனைப் பரிமாற்றம், அந்நல்லோருடன் இணக்கம், இவற்றுட்ன் சற்று விருந்தோம்பலும் நடக்கவேண்டும். இதனால் சிந்தனைகளுடன் சேவையும் இணையும்.

மேலும் பீஹாரில் பூதான இயக்கத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு புத்தகயை ஒரு ஓய்வு இல்லமாகவும் விளங்கவேண்டும் என்பதும் என் ஆசை. அவர்கள் இங்கே வந்து ஓய்வும், மன அமைதியும் பெற வசதி இருக்க வேண்டும் என்று நினைத்தேன்.

அங்கு நிரந்தரமாக வசிக்கும் சாதகர்கள் வாழ்க்கை எளிமை யானதாகவும், சமத்துவ உணர்வுமிக்கதாகவும் இருக்கவேண்டும் என்று சொன்னேன். அவர்கள் உடலுழைப்பினாலேயே தம் வாழ்க்கைச் செலவு களை சமாளிக்கவேண்டும். நன்கொடைகளை தம் வாழ்க்கைச் செலவுகளுக் காக வைத்துக்கொள்ளாமல் உழைப்பினால் விளைவதைக்கொண்டு வாழ்க்கை நடத்தவேண்டும். தானம் வாங்கியே தீரவேண்டும் என்றால் சிரமதானம் வேண்டுமானால் ஏற்காலம். ஆனால் அங்கு எழுப்பப்பட வேண்டிய கட்டிடங்கள் முதலியவற்றுக்கு உடலுழைப்பையே நம்ப வேண்டும் என்று நான் வற்புறுத்தவில்லை. ஏனெனில் நாம் ஒரு லட்சிய சமுதாயத்தில் செயலாற்றிக்கொண்டிருக்கவில்லை என்பதை அறிவேன்.

அப்புறம் அக்கம்பக்கத்து இடங்களில் செய்யவேண்டிய தொண்டு வேலைகளும் இன்றியமையாதவையே. நாம் நமது எல்லைகளை மிகவும் பெரிதாக்கிக்கொள்ளவேண்டியதில்லை. சிறியதாகவே வைத்துக் கொள்ள லாம். விளக்கு சிறியதாக இருந்தாலும் அறை முழுவதினின்றும் இருள் அகலுகின்றது. விளக்கு சிறிதோ, பெரிதோ, அது செய்ய வேண்டிய தெல்லாம் தன்னைச்சுற்றி இருட்டு இருக்காமல் பார்த்துக்கொள்வதே. அங்ஙனமே அக்கம்பக்கத்தவருக்கு நாம் தொண்டு செய்து வரவேண்டும். இதனால் நம் குணநலன்கள் வளர்ச்சியுறும்.

1937-ல் நான் பவுனாரை அடைந்து அங்கே வேலைசெய்ய ஆரம்பித்த போது எனக்கு இறையருளால் பரதன்-ராமன் சந்திக்கும் சிலைகிட்டிற்று. சமன்வய ஆசிரமத்திற்கும் அப்படிப்பட்ட ஆசி கிட்டிற்று. அங்கே ஆசிரமம் நிறுவி, தண்ணீருக்காகக் கிணறுக் தோண்டியபோது பூமிக் கடியில் ஒரு அழகிய புத்தர் சிலை கிடைத்தது. ஆசிரமத்தில் அதை பிரதிஷ்டை செய்தோம். என் வேலைக்கு இறைவனின் நல்லாசி கிட்டியது என்று மகிழ்ந்தேன்.

**பிரம்ம வித்யா மந்திர், பவுனார்**

பூதான இயக்கத்தின்போது ஆழ்ந்து சிந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. சங்கரரும், ராமானுஜரும் ஒரு சிந்தனைப் பாரம்பரியத்தை ஏற்படுத்திச் சென்றனர். அவற்றை ஆராய்வதும், கைக்கொள்வதும் பன்னெடுங்காலமாக இன்றுவரை நடைபெற்று வருகிறது. அன்றிலிருந்து இன்று வரையிலான சிந்தனைகளை ஆராய்வதற்கு எனக்கு சந்தர்ப்பம் வாய்த்தது. அந்த பாரம்பரியத்தில் விளைந்த ஒரு முழு வாழ்வியல் சிந்தனையை நான் காந்திஜியின் கருத்துக்களில் கண்டேன்.

இவ்வளவு விரிவான, மதிப்புமிக்க சிந்தனைப் பாரம்பரியம் நமக்குக் கிட்டியிருக்கும்போது அது தொடரும்படியாக ஏற்பாடு செய்வது அவசியம் என்று எனக்குத் தோன்றியது. இந்த ஞானவேர் இன்னும் ஆழமாக எப்படிச் செல்லமுடியும் என்று சிந்தனை செய்து வந்தேன். சங்கரரும், ராமானுஜரும் பரந்த அனுபவமும், பக்தியும், ஞானமும் மிக்கவர்கள். இருவருமே சமூக சீர்திருத்தவாதிகளே, கர்மயோகிகளே. இருவரும் எவ்வளவோ சுற்றுப் பயணம் மேற்கொண்டனர். ஆனால் வாழ்க்கையின் எல்லாக் கூறுகளையும்

கைக்கொள்ளும் அவசியம் அவர் களுக்கு ஏற்படவில்லை. அடிமைப்பட்டிருந்த சூழலில் காந்திஜிக்கு அந்த அவசியம் ஏற்பட்டது. எனவே அவரிடம் கர்மயோகப்பூச்சு மிக அதிகம். அந்தப் பயன் முன்சொன்ன இருவருக்கும் கிட்டவில்லை. ஆனால் பயன் விளைந்த இடத்தில் ஒரு குறைபாடும் விளைந்து விட்டது. அனைத்துச் சமயங்களுக்கும் அடிப்படையான சத்தியம், அஹிம்சை இரண்டையும் நாம் மேற்கொண்டோம். ஆனால் அவற்றுக்கும் அடிப்படையான பிரம்ம வித்தையை நாம் தொடவே இல்லை. அதை நாம் கைக்கொள்ளவில்லை.

சிறுவயதிலேயே என் நாட்டம் பிரம்மவித்தையின்பால் இருந்தது. காந்திஜியின் மறைவுக்குப்பின்னர், "இந்த அடித்தளத்தைச் சென்றடையா விட்டால், மேம்போக்கான மற்ற விஷயங்கள் நிலைத்து நிற்க மாட்டா என்று தோன்ற ஆரம்பித்து உறுதியான நம்பிக்கையாகவே மாறிவிட்டது. ஏனெனில் இந்தியா ஒரு தத்துவஞான பூமியாகும். பிரம்மவித்தையை முழுமையாகக் கைக் கொள்ளாமல் நமது கருத்துக்கள் உலகளாவிய சிந்தனை ஓட்டத்துடன் ஒத்துச்செல்லாது. அவை உலகளாவப் பரவவும் பரவா. இந்தத்தீர்மானத்திற்கு வந்தபின் எனக்கு அந்த அளவு ஆற்றல் உண்டா என்று யோசிக்காமல் நான் பிரம்ம வித்யா மந்திர் துவங்கத் தீர்மானித்தேன். சக்தியைவிட பக்தி பெரிது. என்னிடம் அந்த அளவு சக்தி கிடையாது. ஆனால் அந்தக் கருத்தின் மீது எனக்கு மிகுந்த பக்தி சிரத்தை கட்டாயம் உண்டு. அந்தப் பக்தியை நம்பியே பிரம்ம வித்யா மந்திர் துவங்கப்பட்டது *(25-3-1959)*.

இப்படிப்பட்ட ஒரு ஆசிரமம் சகோதரிகளால் நிர்வகிக்கப்பட வேண்டும் என்றும் எனக்குப்பட்டது. அப்படி ஒரு தாகம் என் மனத்தில் எப்போதும் இருந்துவந்தது. பெண்களின் தவவலிமை எப்போதும் மறை முகமாகவே இருந்து வந்திருக்கிறது. அது யார் மீதாவது தன் தாக்கத்தை ஏற்படுத்தினாலும் வெளிப்படையாக வராமலே இருந்திருக்கிறது. ஆனால் அந்த தவ ஆற்றல் வெளிப்படையாகத் தோன்றுவதும் அவசியம். ஆண்கள் மட்டும் முயன்று உலகஅமைதியைக் கொணர்வது இயலாது. இது காலத்தின் தேவையாகும். புத்தர் துவக்கத்தில் பெண்களுக்கு மடத்தில் அனுமதி தரவில்லை. பிறகு கொடுத்த போதும் 'நான் ஒரு அபாயமான வேலையில் ஈடுபடுகிறேன்' என்றார். ஆனால் அது பழங்காலம். தற்போது எனக்கு ஆணுடன் பெண்ணும் பிரம்மவித்தையில் ஈடுபடாது இருப்பதுதான் அபாயம் என்று தோன்றுகிறது. இதனால் பிரம்ம வித்தை குறைவுபட்டு, நாம் காண விரும்பும் பிரம்மம் சிதையும். இதற்கு மாறாக, பிரம்ம வித்யா மந்திரை நடத்தும் பொறுப்பையே பெண்கள் கையில் ஒப்படைப்பதன் மூலம் நான் அந்த பிரம்மம் சிதையாது காக்கிறேன். இது காலத்தின் கட்டளையாகையால் நிர்வாகம் பெண்கள் கையில் இருப்பதால் பத்திரமாக இருக்கும்.

இந்திய வரலாறறை நாம் அறிந்தவரை பெண்கள் ஆற்றலைத் தட்டியெழுப்பும் வேலையை ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதன் முதலாக விரிவான அளவில் செய்தார் என்று தெரிய வருகிறது. அதன் பின் மகாவீரர்

முயன்றார். விரிவான அளவில் பெண்களுக்கு தீட்சை அளித்தார். இந்த இரு முயற்சிகளுக்குப் பின் மூன்றாவதாக மகாத்மா காந்தி விரிந்த அளவில் முயற்சி செய்தார். இதில் ஓரளவு பாபாவுக்கும் பங்கு உண்டு. பெண்கள் குழுவாக தவமுயற்சி மேற்கொள்ள பிரம்ம வித்யா மந்திரை நிறுவியதே பாபாவின் சிறு பங்காகும்.

பெண்கள் தனிப்பட்ட முறையில் தவமுயற்சி மேற்கொள்வது பழங்காலத்திலிருந்தே நடந்து வந்துள்ளது. தனிப்பட்ட முறையில் சாதித்தால் விரிவான அளவிலும் சாதிக்க வித்திட்டாகி விட்டது என்றே பொருள். அதுவே அறிவியல் நெறி. தனிப்பட்ட முறையில் பரிசோதனை யில் வெற்றிபெற்றபின் விரிந்த அளவில் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. பழங்காலத்தில் பெண்கள் தனிப்பட்டமுறையில் நிறுவிய ஆன்மீக சுற்றலே இன்று நமக்கு ஊக்கமளித்து வருகிறது. வரும் காலம் பெண்களின் காலமாகும். பெண்களின் ஆன்மவலிமை வளரவேண்டும்.

நான் பெண்கள் சாஸ்திரம் படைப்பவர்களாக வரவேண்டும் என்றே சொல்லுவேன். இந்தியாவில் மீராபாய், முக்தாபாய், ஆண்டாள் போன்ற பெண்கள் உதித்திருக்கிறார்கள். அவர்கள் பெரும் பக்தைகளாக விளங்கி சமுதாயத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் சாஸ்திரகர்த்தாக்களாக விளங்கவில்லை. இதுவரை வந்த பிரம்ம வித்யா சாஸ்திரங்கள் ஆண்களால் உண்டாக்கப்பட்டவை. எனவே அவை ஒரு சார்பு மட்டுமே கொண்டவை. அவற்றில் சீர்திருத்தம் செய்து உலகின் முன் வைக்கவேண்டும். இதைப் பெண்கள் செய்யவேண்டும். இந்திய பிரம்ம வித்யா முறை அனைவராலும் போற்றப்பட பெரிதும் வாய்ப்பு உள்ளது. பெண்கள் பிரம்மச்சரியம் பூண்டு, குழுவாக செயல்பட்டு சாஸ்திரம் படைத்தால்தான் இப்போதுள்ள நிலை மாறி அந்த வாய்ப்பு பெருகும்.

நான் பெண்ணாக இருந்தால் எத்தனை முறை புரட்சிக்கொடி உயர்த்தியிருப்பேன் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். நான் பெண்கள் புரட்சி செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன். ஆனால் துறவு மனப்பான்மை கொண்டவர்களே உண்மையான புரட்சி செய்ய இயலும். துறவில்தான் தாய்மை மலரமுடியும். சங்கராச்சாரியார் போன்ற தீட்சண்யமான ஞானமும், துறவுநிலையும், பக்தியும், இறைநாட்டமும் மிக்க ஒரு பெண் சாஸ்திரம் இயற்ற ஆரம்பிக்கும்போதுதான் பெண்கள் கடைத்தேறுவர்.

பிரம்ம வித்யா மந்திரைச்சேர்ந்த சகோதரிகளிடம் நான் சொன்னேன்: "மார்ச், 25 ஆகிய இன்றைய தினத்தில்தான் நான் பிரம்ம வித்யாவின் பெயரால் வீட்டைத்துறந்து கிளம்பினேன். இன்றும் அதற்காகவே உயிர் வாழ்கிறேன். இப்போது கூட்டுமுயற்சி கருதி சகோதரிகள் நடத்தும் பிரம்ம வித்யா மந்திரை ஆரம்பிக்கிறேன். நான் இதுபற்றி எவ்வளவு ஆழ சிந்திக்கிறேன் என்பதை வார்த்தைகளில் வடிக்க இயலாது. வீட்டைத் துறந்தபோது இருந்த தீவிர நாட்டம் இப்போது எனக்குக் குறையவில்லை. ஆனால் பிரம்ம வித்யா பற்றி மனத்தில் அன்று இருந்த சங்கற்பத்தின் வடிவம் இன்று இல்லை. நிறைவேறியதால் சங்கற்பம் மறைந்ததா அல்லது தானாகவே மறைந்ததா என்பதை கடவுளே அறிவார். இன்று கூட்டு

விடுதலை அல்லது சமுதாய விடுதலையின்பால்தான் நாட்டமெல்லாம் தீவிரமாக இருக்கிறது. அன்றும் சமுதாய உணர்வு இருந்தது, ஆனால் சமுதாய தவமுயற்சி என்கிற உணர்வு அன்று எனக்கு இல்லை. அன்று கூட்டாகத் தொண்டு செய்யலாம் என்று மட்டும் எண்ணியிருந்தேன். இன்று கூட்டாக விடுதலை பெறலாம் என்று எண்ணுகிறேன். அதில் தீவிர நாட்டம் ஏற்பட்டிருக்கிறது."

பிரம்ம வித்யா மந்திர் ஏற்படுத்தியதன் நோக்கம் மனம் முற்றாக அழியட்டும் என்பதாகும். பிரம்ம வித்யா மந்திரில் கூட்டுப்பிரக்ஞை ஏற்படவேண்டும். நான் மனம் என்ற சொல்லை விடுத்து பிரக்ஞை என்ற பெயரைப் பயன்படுத்துகிறேன். ஏனெனில் மனம்தான் அழிந்திருக்குமே. மனம் அழிந்தபின் ஏற்படும் கூட்டுணர்வை கூட்டுப் பிரக்ஞை என்று குறிக்கிறேன். மனம் இருக்கவே, மனிதன் அதைப் பொருட்படுத்தாமல் இருப்பின் மனம் அழிய அது நல்ல துவக்கம் என்று வேண்டுமென்றால் சொல்லலாம். ஆனால் நான் மனம் முற்றாக அழியவேண்டும் என்கிறேன். மனவலிமை பெறவேண்டும் என்று சொல்லுகிறார்களே அதற்கும், இதற்கும் சம்பந்தமே இல்லை. இது முழுக்க முழுக்க ஆன்மீக முயற்சியாகும். மனத்தளவிலான முயற்சி அல்ல. மனத்தை அழிக்கும் முயற்சி மனத்தள விலான முயற்சியாக இருக்கமுடியாது அல்லவா!

எனவே இங்கு வரையறுக்கப்படும் வேலைத்திட்டங்களை எல்லோரும் கூடித்தீர்மானிக்கவேண்டும். அனைவரும் அவற்றில் தவறாது பங்கும் ஏற்க வேண்டும் என்று நான் கூறினேன். இது பிரம்ம வித்தைக்கு மிகவும் அவசியம். பெரும்பாலும் உலகத்தினர் மனத்தின்படி ஒழுகுகின்ற- னர். தவமுயற்சியினரோ மனத்துக்கு எதிராக ஒழுகுகின்றனர். ஆனால் நான் சொல்வது வேறு. மனத்தினின்றும் மேலே உயரவேண்டும் என்கிறேன் நான். அதற்கு முதலாவதும், எளிமையானதுமான வழி சர்வசம்மதத்துடன் வேலைகளைத் திட்டமிடுவது தான். இதுவே மனத்தை முற்றாக அழிக்க இட்டுச் செல்லும் வழியாகும்.

ஒரு சிறு முக்கோணத்தில் பலிக்கும் ஒரு தேற்றம் பெரிய முக்கோணத்திலும் அப்படியே பலிக்கும். இன்றைய உலகத்தின் பல்வேறு பிரச்சினைகள், சிறு அளவில் கிராமத்திலும் உள்ளன. உலகப் பிரச்- சினைக்குத் தீர்வு சிறு-சிறு கிராமப் பரிசோதனைகளில் பரிசோதிக்கப் படுவது போல, ஒரு பரிசோதனை, அதனிலும் சிறிய அளவில், ஆனால் ஆழமாக பிரம்ம வித்யா மந்திரில் நடைபெறவேண்டும்.

பழங்காலத்தில் பிரம்ம வித்தை வனங்களில் உண்டானது. உபநிஷதங்- களுக்கு வனங்களிலிருந்தே உத்வேகம் பிறந்தது. அதன் பின் கீதை யுத்தகளத்தில் பிறந்தது. இன்று பிரம்மவித்தை உழைப்பாளர்கள் மத்தியில் எழவேண்டும். உடலுழைப்பையே உபாசனையாகக் கருதவேண்டும். முழு தற்சார்பை வலியுறுத்தி நானும் என் தோழர்களும் பல ஆண்டுகள் வாழ்க்கை நடத்திப் பார்த்திருக்கிறோம். அதற்கு எவ்வளவு நேரம் உழைக்க வேண்டியிருக்கும் என்று கணக்கிட்டோம். எட்டு-ஒன்பது மணி நேரம் உழைக்க வேண்டிவந்தது. அதுவும் பிரம்மவித்தையின் ஒரு ஆராய்ச்சிதான். ஆனால் இப்போது வேறுவித ஆராய்ச்சி மேற்கொள்ளவேண்டும்.

திட்டமிட்டு உழைத்தால் மூன்று, மூன்றரை மணிநேர உழைப்பினால் ஒரு மனிதனுக்கு ஜீவனோபாயம் கிட்டிவிடும் என்பது என் கருத்து. அவ்வளவு உழைத்து கிடைக்கும் தற்சார்பில் திருப்தி அடையும்படி சகோதரிகளுக்கு யோசனை சொன்னேன். எல்லா உழைப்புக்கும் சம மதிப்புத் தரும்படியும் சொன்னேன். இன்று சமுதாயத்தில் உழைப்புக்கு சமமான மதிப்பு இல்லை. ஆனால் நாம் தரவேண்டும் என்று கூறினேன்.

பிரம்ம வித்யா மந்திரில் பெரும்பாலும் சகோதரிகளே. சில சகோதரர் களும் உள்ளனர். இவர்கள் நிலத்தில் சிறிதளவு உழைக்கின்றனர். சமைப்பது, கழிவறை தூய்மை செய்வது, துப்புரவுப்பணி அனைத்தையும் தாமே செய்கின்றனர். இங்கு பெண்களே நடத்தும் அச்சகம் ஒன்று இருக்கிறது. அங்கே ஆன்மீக நூல்கள் அச்சடித்து வெளியிடப்படுகின்றன. அதைத் தவிர அங்கே 'மைத்ரி என்னும் மாத இதழ் வெளியாகிறது. ஒரு கன்னட மொழிப் பத்திரிகையும் தேவநாகரி எழுத்தில் அச்சிட்டு வெளியாகிறது. ஆக இங்கு மூன்று வேலைகள் நடக்கின்றன. ஒன்று கூட்டு தவமுயற்சி, இரண்டாவது உடலுழைப்பு, மூன்றாவது அனைவருடனும் இணைந்து தியானம், பக்தி, அத்யயனம். இவை இங்கு முக்கியமானவை.

பிரம்ம வித்யா மந்திர் இருக்குமிடம் ஒரு சிறு குன்றுபோன்ற மேட்டுநிலப்பகுதி. இங்கே தோண்டும் போது 30 - 32 சிலைகள் கிடைத்தன. அவற்றை இங்கே பிரதிஷ்டை செய்தோம். அவற்றில் ராமர், கிருஷ்ணர், சிவன் சிலைகள் அடக்கம். ஒரு புத்தர் சிலையும், ஒரு மகாவீரர் சிலையும் கூட கிடைத்தன. ஆக, சைவம், வைஷ்ணவம், பௌத்தம், ஜைனம் எல்லா மதச்சிலைகளும் கிடைத்தன. இவை 1400 ஆண்டுகள் பழைமையானவை. குப்தசாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக்குப்பின் வாகாடகர்களின் அரசு இங்கு ஏற்பட்டது. இச்சிலைகள் அக்காலத்தில் செய்யப்பட்டவை. அவற்றில் ஒரு அழகிய கங்காதேவியின் சிலையும் உண்டு. கங்கை ஒரு மீன் மீது நிற்க கீழே 'கங்கா தேவி' என்று பிராம்மி மொழியில் எழுதப்பட்டிருந்தது. இன்று இந்தியாவில் தேவநாகரி இருப்பதுபோல் அன்று பிரம்மி எழுத்து நிலவி வந்தது. இந்த எல்லாச் சிலைகளும் 1400 ஆண்டுகளுக்கு முந்தையவை என்று தொல் பொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். சங்கராச்சாரியார் தோன்றியது 1200 ஆண்டுகளுக்கு முன்பு. அதாவது சங்கரருக்கும் 200 ஆண்டுகள் முந்தையவை இந்தச் சிலைகள். நபிகள் நாயகம் தோன்றியது 1300 ஆண்டுகளுக்கு முன்னால். அவர் பிறந்தபோது இவை செய்யப்பட்டு விட்டிருந்தன அல்லது செய்யப்பட்டுக் கொண்டிருந்திருக்கின்றன. இறையருள் பலவகையில் இந்த இடத்தில் வெளிப்பட்டது. பக்திமொழியில் சொன்னால் இந்த இடமே தெய்வீகமானது என்று சொல்லலாம்.

பிரம்ம வித்யா மந்திரைப் பற்றி நான் சொன்னேன். "இங்கு ஒன்று அதி உன்னதமான கண்டுபிடிப்பு நடக்கும். அல்லது அனைத்தும் வீணாகும். இதைப்போல ஆபத்து மிக்க நிறுவனம் வேறு இருக்கமுடியாது. மற்றவற்றில் வென்றால் பத்து லட்சம், இல்லாவிட்டால் பத்தாயிரமாவது தேறும். இங்கோ கிடைத்தால் எல்லையற்றது, இல்லையேல் சைபர். இங்கு பிரம்ம வித்தைக்குக் குறைவாக எதற்கும் முயற்சி செய்யும் பேச்சே கிடையாது'.

இதைக்குறித்து என்னை யாரும் எச்சரித்தாலும் சைபரே கிடைக்கும் என்றாலும் "நான் இதைச்செய்வேன் என்றே பதில் சொல்வேன். எனக்கு ஐந்து, பத்தில் நாட்டம் இல்லை. ஒன்று எல்லையற்றது கிடைக்கவேண்டும். இல்லையேல் எதுவுமே வேண்டாம்".

**பிரஸ்தான் ஆசிரமம், பதான்கோட்**

காஷ்மீர் யாத்திரை முடித்து மீண்டும் பஞ்சாப் வந்தபோது பிரஸ்தான் ஆசிரமம் என் மனத்தில் உதித்தது. இங்கிருந்து பாகிஸ்தான், காஷ்மீர், பஞ்சாப் மூன்றும் சமீபம். மூன்றுக்கும் அங்கிருந்து போகமுடியும். அங்கே சாந்திசேனை மையம் ஏற்படுத்தலாம் என்று தோன்றியது. அங்கே கற்பித்தல் தொழில் நடக்க முடியும். காஷ்மீரிலிருந்து குளிருக்கு அஞ்சி வரும் பரிதாபத்திற்குரிய தொழிலாளர்களுக்கு சேவை செய்யலாம். குறைந்தபட்சம் அவர்களுடைய துன்பங்களில் உடனிருந்து இதயநேயத் தொடர்பையாவது வளர்க்கலாம். குர்தாஸ்பூரில் கிறிஸ்தவர்களும் ஏராளமாக உள்ளனர். ஆகவே இங்கிருந்தபடி ஹிந்து, முஸ்லீம், கிறிஸ்தவர்களுடன் தொடர்பு கொள்ளமுடியும். இவ்வாறு இங்கு மத ஒற்றுமைக்குப் பாடுபட்டால் நாட்டுக்குப் பெரும் தொண்டாற்றியதாகும். இத்தகைய எண்ணங்களுடன் பதான்கோட்டில் ஆசிரமம் நிறுவப்பட்டது (அக்டோபர், 1959).

**விஸர்ஜன் ஆசிரமம், இந்தூர்**

நான் பாதயாத்திரை துவங்கி ஒன்பது ஆண்டுகள் பூர்த்தி அடைந்திருந்தன. அஸ்ஸாம் நீங்கலாக ஏனைய புகுதிகளுக்குச் சென்று விட்டேன். அப்போது என் மனத்தில் 'இன்று வரை சர்வோதய இயக்கம் கிராமத்தை மையமாக வைத்து செயல்பட்டது, இப்போது நகரங்களிலும் வேலை செய்யவேண்டும்' என்று பட்டது. இவ்வாறு யோசித்தவுடன் என் மனத்தில் இந்தூர் தோன்றியது. இந்தூர் நான்கு மாநிலங்கள் (மகாராஷ்டிரம், குஜராத், ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம்) சந்திக்கும் இடம். அஹல்யாபாய் பிறந்த பூமி. அவருடைய பெயரை நான் சிறு வயதிலேயே கேட்டிருக்கிறேன். சிறுவயதிலேயே கவிமோரோ பந்த் அவர்களின் வசனத்தில் "அஹில்யா பாயி! நீ மூவுலகிலும் சிறந்தவள். நீதியிலும் தர்மத்திலும் நிலைத்த கன்னி உன்போல் கலியுகத்தில் இல்லை" என்று படித்திருந்தேன். பக்தியும், தர்மசிந்தையும் மிக்க ஒரு பெண்மணியின் கையில் அரசுச் செங்கோல் வந்தது இந்தியாவில் ஒரு அற்புதமான விஷயம்தான். கஸ்தூரிபாவுக்கும் அங்கே ஒரு நிறுவனம் உள்ளது. எனவே பெண்கள் ஆற்றலை உருவாக்க அந்த இடம் எனக்கு ஏற்றதாகத் தென்பட்டது. இந்தூர் ஒரு தொழில் நகரமானாலும் இங்குள்ள மக்கள் இயல்பு அழகானது. எனவே நகர்ப்புற முயற்சிகளுக்காக நான் இந்தூரைத் தேர்ந்தெடுத்தேன். அதற்கு உறுதுணையாக விஸர்ஜன் ஆசிரமத்தை நிறுவினேன் (15-8-1960). ஆஸ்ரமத்திற்கு அருகிலேயே ஓடும் ஒரு நதியில் காந்திஜியின் அஸ்திகரைக்கப்பட்டிருந்தது (விஸர்ஜனம்). (எனவே ஆசிரமத்திற்கு இப்பெயர். விஸர்ஜனம் = விடுதல், தியாகம் செய்தல் - *மொழிபெயர்ப்பாளன்*).

அதனைத் துவக்கி வைக்கும்போது நான், "இந்த ஆசிரமத்தின் குறிக்கோள் 'பழையன கழித்து (விஸர்ஜனம்) புதியன படைத்தல் (வி-ஸர்ஜனம்

= நூதனமாக உண்டாக்குதல்), ஆகும். புதிய யுகத்திற்கு ஏற்ப புதிய வாழ்க்கை மதிப்பீடுகள் உண்டாகவேண்டும். அத்யயனம், தூய்மை, பணிவு இவற்றுடன் பதினோரு விரதங்கள் கடைப்பிடிக்கப்படும். பக்தி சிரத்தையுடன் அஹிம்சை வாழ்வு இங்கு மேற்கொள்ளப்படும். இதனால் நகர்வாழ் மக்களிடையே பரஸ்பரம் அன்பும், கருணையும் பெருகும். அவர்களுக்கு ஆன்மவலிமை புலனாகும். அவர்கள் சமத்துவம், ஒத்துழைப்பு ஆகியவற்றை நோக்கி முன்னேறுவார்கள். வேற்றுமையில் ஒற்றுமை காண்பர். ஆசிரமம் தன்னையும், தான் சார்ந்திருக்கும் சமுதாயத்தையும் நம்பி நடைபெற வேண்டும். இந்தூர் நகரவாசிகள் ஆசிரமத்தின் நடவடிக்கைகளிலும், நலன்களிலும் அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும்'' என்றேன்.

**மைத்ரி ஆசிரமம், அஸ்ஸாம்**

இது விஞ்ஞான யுகம். விஞ்ஞான யுகத்தின் அறைகூவல், 'உலக மனிதர்களே ஒன்றுபடுங்கள்' என்பதாகும். ஆனால் மக்கள் மனத்தில் வியாபித்திருக்கும் பழைய அரசியல், சமூக, தார்மீக நெறிகள் இந்த ஒற்றுமைக்குப் பங்கம் விளைவிக்கின்றன. இன்று மனித சமுதாயம் முன்னைவிட அதிகமாக சின்னா பின்னப்பட்டு நிற்கிறது. எனவே இந்தியா-வின் ஒரு எல்லைப்புறப் பிராந்தியத்தில் ஒரு மைத்ரி (நட்புறவு) ஆசிரமம் நிறுவுவது எனக்கு இன்றியமையாததாகப்பட்டது.

அஸ்ஸாம் யாத்திரையின் இறுதி நாட்களில் இங்கே சர்வோதய அடிப்படையை எங்ஙனம் வலுவாக்குவது என்று யோசித்து வந்தேன். அதன் விளைவே மைத்ரி ஆசிரமம். அஸ்ஸாமில் பெண்கள் ஆற்றல் உருவாகி-யுள்ளது. ஆண்களும் செயல்பட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள். அஸ்ஸாமிலும் செயல்படுகிறார்கள். இல்லாவிட்டால் கிராமந்தோறும் கிராமதான வேலையைச் செய்தது யார்? ஆனாலும் இந்தியாவின் மற்ற பாகங்களுடன் ஒப்பிட்டால் இங்கே பெண்கள் ஆற்றலை வளர்க்க நல்ல வாய்ப்பு இருக்கிறது எனலாம். இதனாலும் இப்படிப்பட்ட இடத்தைத் தேர்ந்தெடுத்தேன்.

"இங்கு நல்லுணர்வும், தீவிர துறவு மனப்பான்மையும் வேண்டும்'' என்று நான் சொன்னேன். "பெண்களும் ஆழ்ந்து செயல்படமுடியும். சமுதாய முன்னேற்றத்திற்கு புதிய கண்டுபிடிப்புகளைத் தரமுடியும். இன்று வரை உருவான சமுதாய சாஸ்திரங்களை மாற்றக்கூடும். மாறிய காலத்திற்கேற்ப புதிய நீதி நூல்களைப் படைக்கக் கூடும் என்பதை சமுதாயம் காணட்டும். இதை இதுவரை சமுதாயம் கண்டதில்லை. பெண்-களில் வீராங்கனைகள், அரசியல் விற்பன்னர்கள், பக்தைகள் உண்டாகி-யுள்ளனர். இலக்கியகர்த்தாக்களும் தோன்றியுள்ளனர். இருந்தும் கூட சமுதாயத்துக்கு வழிகாட்டும் சிந்தனைகளை பெண்கள் முன் வைத்தனர் என்றோ, சமுதாயம் அதை ஏற்றது என்றோ ஏற்படவில்லை. இப்போது அது ஏற்படும் தருணம் வந்து விட்டது. இன்று உலகுக்கு வன்முறையின் மீது நம்பிக்கையற்றுப்போய் விட்டது. அதற்கு அஹிம்சை வழியும் புலப்-படாமல் போனால் அது திக்பிரமை அடைந்து விடும். எனவே உலகத்தின் முன் அஹிம்சைப் பாதையை அமைக்கவேண்டும். அதற்கு அடிப்படைச் சிந்தனை மாற்றம் தேவை."

மைத்ரி ஆசிரமத்தைத் துவங்கும் போது (5-3-1962) "இதன் கட்டு திட்டங்கள், நோக்கங்கள், செயல்பாடுகள் அனைத்தும் இந்த 'மைத்ரி' என்ற சொல்லில் வந்து விட்டது. இதன் ஒரே நியதி மைத்ரி, ஒரே நோக்கம் மைத்ரி, ஒரே செயல் மைத்ரி" என்றேன்.

இந்த இடத்தை நட்புறவுக்கான (மைத்ரி) இடமாக நாம் கருதுகிறோம். இந்தக் காலத்தில்தான் சாதாரண பொருளில் 'மைத்ரி' என்ற சொல்லுக்கு அதிகம் மதிப்பு இராது. ஏனெனில் இன்றைய சமுதாயப் பிரச்னைகள் ஆழமானவை. நட்புறவுடன் சமுதாயப் பிரச்சினைகளும் தீரவேண்டும். சாதாரண நட்புறவைப்பற்றித்தான் நாட்டின் பெரிய பெரிய தலைவர்களும் பேசுகிறார்களே! ராணுவம் கூடாது, சண்டை கூடாது என்று சொல்கிறார் களே! ஆனால் அதற்கான வழிமுறைபற்றி யாருக்கும் தெளிவான கண்ணோட்டம் கிடையாது. அதனால்தான் உலகம் மாய வட்டத்திலேயே உழன்று வருகிறது. நட்புறவு என்பது சரியான திசையையும் காட்ட வேண்டும். எனவே இந்த ஆசிரமத்தில் ஞான விஞ்ஞானங்களும் இணைய வேண்டும். ஞான விஞ்ஞானங்களில் உடலும், அறிவும் இணைந்து தவம் செய்யவேண்டும்.

இங்கே பல்வேறு மொழிகளையும், மதங்களையும் ஆராய வேண்டும். சர்வோதயம் மற்றும் பல்வேறு சித்தாந்தங்களை ஆராயவும், கற்பிக்கவும், அத்துறைகளில் நூல்கள் இயற்றவும் இந்த ஆசிரமம் பயன்படவேண்டும். அக்கம்பக்கத்தில் நடைபெறும் கிராமதான வேலைகளில் தொண்டர்களால் செய்ய இயலாத வேலைகளையும் மேற்கொள்ள வேண்டும்.

இந்த இடம் இந்தியாவின் தலைப்பகுதியில் ஒரு மூலையில் இருக்கிறது. விமான நிலையத்திற்கு அருகில் ஆசிரமத்திற்கு இடம் பிடித்தோம். இது அனைத்துலகத் தொடர்புக்கு வசதியாக இருக்கும் என்றும் இங்கு ஒரு அனைத்துலக நட்புறவு மையம் உண்டாகும் என்றும் நினைத்தோம். அங்கே அப்படிப்பட்ட சர்வதேசக் கருத்தரங்குகள் நடைபெறவும் நடைபெற்றன. பல சர்வதேசப் பிரச்சினைகள் அலசவும் பட்டன.

ஆசிரமம் 1962-ல் நிறுவப்பட்டது. அதற்கு ஒரு ஆண்டு கழித்து டில்லியிலிருந்து உலக நட்பு யாத்திரை துவங்கும் என்றோ, அஸ்ஸாமின் எல்லையில் மேற்கொண்டு வழி கிடைக்காததால் அந்த யாத்திரையினர் மைத்ரி ஆசிரமத்திலேயே தங்கி விடுவர் என்றோ அப்போது யாருக்குத் தெரியும்? ஆனால் அவ்வண்ணமே நடந்தது. 'மைத்ரி'க்கு இறைவனின் ஆசியாகவே இதை நான் கருதினேன்.

**வல்லப நிகேதன், பெங்களூர்**

வல்லப ஸ்வாமியின் நினைவாக நான் வல்லப நிகேதன் 1965-ல் ஆரம்பித்தேன். 1957-ல் பெங்களூரிலிருந்து ஏழுமைல் தூரத்தில் 'உலகே ஒரு பறவைக்கூடாகும்' என்ற நோக்கத்துடன் "விஸ்வ நீடம்" ஆசிரமம் துவங்கப்பட்டது. அதன் பொறுப்பு வல்லப ஸ்வாமிக்கு அளிக்கப்பட்டது. அதுவே பின்னர் இடம் மாறி வல்லப நிகேதன் என்று பெயர் பெற்றது.

அவர் ஒரு தூய ஆத்மா. நான் அறிவிற் சிறந்த பலரைக் கண்டிருக்கிறேன் ஆனால் வல்லப ஸ்வாமி போன்ற அறிவார்ந்த மனிதர்கள் மிகச்சிலரையே கண்டிருக்கிறேன். அவருடைய சிறப்பியல்பை மனத்தில் கொண்டு அதற்கேற்ப அவருக்கு நினைவுச்சின்னம் எழுப்ப வேண்டும். எனவே அங்கு அத்யயனம், தியானம், ஆழ்ந்த சிந்தனை ஆகியவை நடைபெறவேண்டும். அங்கு வருபவர்கள் இவற்றில் பங்கு பெற்று அமைதியடைந்து திரும்ப வேண்டும். அங்கே அமைதியான நட்புறவு நிலவவேண்டும். அங்கு நான்கு விஷயங்களின்பால் கவனம் வைக்க வேண்டும்.

1) அமைதியான சூழ்நிலை நிலவ வேண்டும்.

2) எதிர்ப்புணர்ச்சியற்ற தொண்டு நிலவ வேண்டும்.

3) அதில் ஆன்மீகக் கண்ணோட்டம் நிலவ வேண்டும்.

4) அங்கே பக்தி, அன்பு, அமைதி நிலவ வேண்டும்.

மக்கள் அங்கு வந்து அமைதி பெற்றுச் செல்ல வேண்டும். இந்த நோக்கங்களுடன் வல்லபநிகேதன் தொடங்கப்பட்டது.

**தானே தனக்கு வழிகாட்டியாக விளங்குக**

நான் முன்பு ஆசிரமங்களை எப்படி நடத்திவந்தேனோ அப்படி இப்போது நடத்துவதில்லை. என் தோழர்கள் அனைவரும் என் சொல் கேட்டு நடந்தனர். நான் சொன்னதை அக்கணமே செயல்படுத்துவர். நான் நாளையிலிருந்து உப்பை விடவேண்டும் என்று அறிவித்தால் உப்பு அறவே அகன்றுவிடும். யாரும் முணுக்கென்று கூட ஏதும் சொல்ல மாட்டார்கள். நாளையிலிருந்து இனிப்பு கிடையாது என்றால் இனிப்பு அகன்றுவிடும். இங்ஙனம் உணவுப்பரிசோதனைகள். எட்டுமணிநேர விவசாயம், நூற்பு எல்லாம் நடந்தன. கட்டளைகள் உடனுக்குடன் நிறை வேறின. அது பாபாவின் ஒரு தோற்றம். ஆனால் அதில் உருவான ஆளுமையையும், அதன் எல்லைகளையும் நான் கண்டுணர்ந்தேன். என் ஆசிரமத்தில் மட்டுமல்ல காந்திஜியின் ஆசிரமத்திலும் கண்டு கொண்டேன். எனவே இனி வரும் ஆசிரமங்களுக்கு வழிகாட்டி இருக்கலாகாது என்று நினைத்தேன். என் இயக்கங்களுக்கும் நான் ஒரே தாரக மந்திரத்தை அளித்தேன். மக்கள் தொண்டு என்பதே அது. அனைவருக்கும் அந்த மந்திரம் என்னும்போது ஆசிரமங்களுக்கும் அது பொருந்தும். எனவே இப்போது நான் கடிதங்களுக்கு பதில் எழுதுவதுகூடக் கிடையாது. என் ஒரே பதில் 'ஆத்ம தீபோ பவ - தனக்குத்தானே விளக்காகுக' என்பதே ஆகும்.

## விகர்ம யோகம்

சித்தம் ஒன்றாத வரை வெறும் புறச்செயல்களினால் ஆற்றல் பெறாது. கர்மமும், மனமும் ஒன்றவேண்டும். தொண்டில் மனம் ஈடுபடவில்லை என்றால் அதில் அகங்காரம் தோன்றும். தொண்டு கைகளில் மட்டுமல்லாமல் மனத்திலும் இருக்கும்போதுதான் நம்மால் உண்மையாகவே தொண்டாற்ற இயலும். அதற்கு மனத்தைப் பண்படுத்தவேண்டும். மனத்தூய்மைக்காகவே செய்யப்படும் கர்மங்களை கீதை 'விகர்மம்' என்று வர்ணிக்கிறது. அதாவது விசேஷமான கர்மம் என்கிறது. கர்மத்துடன் விகர்மம் கலக்கும்போது பற்றின்மை வருகிறது, ஆற்றல் உருவாகிறது. கீதைப் பேருரைகளில் 'விகர்மம் நிலைக்க ஆற்றல் உருவாகும்' என்று ஒரு சூத்திரமே இருக்கிறது.

**வழிபாடு**

தவமுயற்சியுடைய சாதகனின் வாழ்க்கையில் கர்மயோகத்திற்கு தனி இடம் உண்டு. சிந்தனை, அத்யயனம் ஆகியவற்றுக்கும் இடம் உண்டு. ஆனால் வழிபாட்டுக்கு எல்லாவற்றையும் விட முக்கியமான இடம் உண்டு. வழிபாடு நம்மை இறைவனுடன் இணைக்கிறது. வழிபாட்டு வழக்கம் அதிகம் ஆக ஆக நம்முடைய ஒவ்வொரு செயலும் இறைவனுடன் ஒன்றும் கலையும் கைவரும். இது உடனே கிட்டும் அனுபவம் அல்ல. மெல்ல மெல்லவே கைவரும்.

கூட்டுப் பிரார்த்தனையின் வழக்கம் எனக்கு காந்திஜியின் சத்தியாகிரக ஆசிரமத்தில் சேர்ந்தபின் ஏற்பட்டது. அதற்கு முன்பு நான் அப்படிப்பட்ட பிரார்த்தனை செய்ததில்லை. தனி நபர் பிரார்த்தனைகூட முறையாக குறிப்பிட்ட நேரத்தில் செய்ததில்லை. பக்தியுடன் எதையாவது படிப்பேன், பாடுவேன் அவ்வளவுதான். அது ஒரு இயல்பாக அவ்வப்போது நடக்கும் விஷயம். தவிர கூட்டாக பிரார்த்தனை செய்வதோ குறித்த நேரத்தில் தனிப்பட்டபிரார்த்தனை செய்வதோ கிடையாது. சிறுவயதில் எனக்கு சந்தியாவந்தனம் கற்பிக்கப்பட்டது. அது எனக்கு மனப்பாடமேயாயினும் சந்தியாவந்தனம் நான் செய்வதில்லை. பொருள்தெரியாததை என்னால் உருப்போட்டுக்கொண்டிருக்க முடியாது என்று நான் சொல்லி விடுவேன். அதனால் அந்நாட்களில் என் பக்திநெறி வளர்ச்சி குன்றியிருந்ததாக நான் கருதவில்லை. ஆனால் காந்திஜியின் ஆசிரமத்தில் தினமும் காலை - மாலை வழிபாடு நடந்து வந்தது. பலர் குழுமுவர். அது என் மனத்தைத் தொட்டது. எனக்கு பிரார்த்தனையைவிட அந்த சான்றோர் இணக்கமே பெரிதாகத் தோன்றுகிறது.

காந்திஜியிடம் 'பிராத்தனையில் மனம் ஒருமுகப்படவில்லை என்றால் என்ன செய்வது? தூக்கம் வந்தால் என்ன செய்வது' என்றெல்லாம் கேட்பார்கள். காந்திஜி 'தூக்கம் வருகிறது, அல்லது மனம் ஒன்றவில்லை யென்றால் நின்ற வண்ணம் பிரார்த்தனை செய்யுங்கள். என்பார். வருபவர் கள் உண்மைநெறி படைத்தவர்கள். எனவே தினமும் 3 - 4 பேர் நின்ற வண்ணம் பிரார்த்தனை செய்வர். நிற்பதால் மனம் ஒருமுகப்படும் என்பதற்கு உத்தரவாதம் ஒன்றும் கிடையாது. காந்திஜியும் தன் மனத்தின் நிலையைப் பற்றி விளக்குவார். குழந்தைகளுக்கு அரிச்சுவடி கற்பிப்பது போல பிரார்த்தனை பற்றி வகுப்பு எடுத்தார். அது எனக்கு முன்னெப் போதும் ஏற்படாத ஒரு புதிய அனுபவம்.

காந்திஜியின் காலத்தில் பல பிரார்த்தனைகள் நடந்தன. பிரார்த் தனையில் கூறப்பட்ட பல சுலோகங்கள் எனக்குத் தெரிந்தவையே. அவற்றில் பலவற்றை நான் பிரார்த்தனைக்கு உகந்தவையாகக் கருதவில்லை. அவற்றை நான் உச்சரித்ததும் இல்லை. ஆயினும் கூட்டுப் பிரார்த்தனையின் போது அவற்றையும் பக்தியுடன் கூறிவந்தேன். ஆனால் அவை என்னைக் கவரவில்லை. பிற்பாடு காந்திஜியிடம் அவற்றை பிரார்த்தனையில் வைக்க வேண்டாம் என்று கூறியபோது, வழக்கத்தில் இருப்பது நீடித்துவிட்டுப் போகட்டும் என்று கூறி அவையும் வைத்துக்கொள்ளப்பட்டன.

சிறை சென்ற போது காலைப் பிரார்த்தனையில் நான் அந்த சுலோகங் கள் அனைத்தையும் விட்டு விட்டேன். அவற்றிற்கு பதிலாக ஈஸாவய்ய உபநிஷதத்திற்கு நானே எழுதிய வசன மொழிபெயர்ப்பைப் படித்து வரலானேன். அந்நாட்களில் என் சிந்தனை அதன்பால் லயித்திருந்தது. நான் நடத்திய அந்தப் பிரார்த்தனையில் பலர் கலந்து கொள்வர். மாலைப் பிரார்த்தனையில் இடம் பெற்றிருந்த கீதை சுலோகங்கள் எனக்கு மிகவும் பிடித்திருந்தன. அவற்றை நான் அப்படியே வைத்துக்கொண்டேன். இதெல்லாம் காந்திஜி இருக்கும் போதே ஆரம்பித்துவிட்டது. சிறை-யிலிருந்து விடுபட்டு பவுனார் ஆசிரமம் வந்த பின்பும் ஈஸாவாஸ்யம் ஓதி வந்தேன்.

இந்தியா முழுவதும் அல்லது உலகம் முழுவதும் ஒரே வகையான பிரார்த்தனை நடக்கவேண்டும் என்கிற விசித்திரமான ஒற்றுமைவாதம் எனக்குப் பிடிக்கவில்லை. ஒற்றுமை உள்ளிருந்து வர வேண்டும்.

பிரார்த்தனையில் மொழிபற்றி எனக்கு விசேஷ அக்கறை கிடையாது. எனவே தான் முஸ்லீம்களிடையே தொண்டாற்றியபோது திருகுர்ஆன் வாசகங்களை ஓதினேன். கீதையின் உருது மொழிபெயர்ப்பு படித்தேன். பஜனைகள் கூட உருதுவில் பாடினேன். சமுதாயம் எளிதில் புரிந்து கொள்ளும் மொழியே எனக்குப் பிடித்தமானது.

காந்திஜியின் காலத்தில் சர்வ சமயப் பிரார்த்தனைகளும் நடந்தன. பல சமயத்தினர் இருக்கும் இடத்தில் அது சரியும் கூட. ஆனால் அது அவியல் மாதிரி ஆகிவிடுகிறது. அதில் இறைவனோடு இசைவு காண்பதைவிட மனிதனோடு இசைவு காண்பது முக்கியமாகிவிடுகிறது. மனிதனும்

இறைவனின் வடிவம்தான் என்று வைத்துப் பார்த்தால் இதையும் தவறு என்று சொல்ல முடியாது.

இப்படியெல்லாம் யோசிக்க யோசிக்க மௌனப் பிரார்த்தனையே சிறந்தது என்று எனக்குப் பட்டது. அதில் அனைவருக்கும் ஏற்பு இருக்கும். ஆழமும் அதிகம் இருக்கும். இது என் அனுபவம்.

பூதான யாத்திரையில் துவக்க காலங்களில் மாலைப்பொது பிரார்த்தனையில் ஸ்திதப்ரக்ஞ லட்சண சுலோகங்கள் பாடப்பட்டு வந்தன. ஆனால் ஆந்திராவில் நான் இதற்குப் பதிலாக மௌனப் பிரார்த்தனை துவங்கினேன். கூட்டு மௌனப் பிரார்த்தனையின் மதிப்பு மிகப்பெரிது. அனைவரும் கூடி அமைதியாகப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று பல நாட்களாக என் மனதில் எண்ணம். எண்ணம் மெல்ல வலுப்பெறு கிறது. அனுபவமும் சேர துணிவு வருகிறது.

**மௌனமும், தூக்கமும், கனவும் வசப்படுதல்**

மௌனத்தைப் பொறுத்தவரை அதில் என் பயிற்சி மிகப் பழையது. சிந்தனைக்கு முழு அவகாசம் அளிப்பதே என் துவக்க கால மௌனப் பயிற்சியின் நோக்கமாகும். 1927-ல் நான் மௌன விரதம் மேற்கொள்ள ஆரம்பித்தேன் என்று நினைக்கிறேன். ஆனால் அது ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. முதலில் நான் இரண்டுமாதங்களுக்கு இரவு பிரார்த்தனைக்குப் பின் மௌனம் அனுஷ்டிப்பது என்று தீர்மானித்துக்கொண்டேன். ஆனால் அந்த கெடு முடிந்தபின் அதை எப்போதைக்கும் என்று வைத்துக் கொண்டேன். ஆனால் ஆசிரமத்தில் இருக்கும்போதுதான் இந்த விரதத்தை அனுஷ்டித்து வந்தேன். வெளியே அனுஷ்டிப்பது இல்லை. வெளியில் போகும்போது மௌனவிரதத்தில் பிடிவாதம் காட்டுவதில்லை. பிறகு துலியா சிறையில் ஆழ்ந்து யோசித்து ஆசிரமத்தில் இருந்தாலும் சரி, வெளியில் இருந்தாலும் சரி பிரார்த்தனைக்குப்பின் மௌனம் எப்போதும் அனுஷ்டிக்கவேண்டும் என்று தீர்மானித்தேன்.

என் மௌனவிரதத்திற்கு ஸ்தூலக் காரணம் ஏதும் இல்லை. கீதையின் எட்டாம் அத்தியாயமே அதற்கு முக்கியக் காரணம். கீதையின் எட்டாம் அத்தியாயத்தில் இறுதிக்காலத்தில் இறைதியானத்தின் பெருமை வலியுறுத்தப்பட்டுள்ளது. வாழ்நாள் முழுவதும் இறைவனை தியானித்தால் தான் இறுதிக்காலத்தில் இறைதியானம் கைகூடும். ஏனெனில் வாழ்நாள் முழுவதும் கருத்திற்கொண்டதே இறுதிக்காலத்தில் நினைவுக்கு வரும். இதனாலேயே இறுதிக்காலத்து ஆட்டத்தை தினந்தோறும் ஆடிப்பார்த்து விடவேண்டும் என்று நான் எண்ணினேன். இறுதி என்பது எப்படி வரும், எப்போது வரும் என்பதைச் சொல்ல முடியாது என்றாலும் ஒவ்வொரு நாளும் நம் வாழ்க்கை முடிகிறது என்பதைக் காணலாம். தூக்கமும் மரணத்திற்கு ஒரு ஒத்திகைதானே.

அது தினமும் நிகழ்கிறதல்லவா. எனவே தினமும் தூங்குவதை 'இறுதி' என்று பாவித்து வருவோமானால் இறுதிக்காலத்து 'இறுதி' நம் வசப்படும்.

தினமும் தூங்கச் செல்லும் போது 'சாகிறோம்' என்று கருதி தூய எண்ணங்களுடன் தூங்கப்போகவேண்டும் என்று நான் கருதினேன்.

இந்தத் தீர்மானத்தை மேற்கொண்டபோது தொண்டுக்காரியங்கள், பொதுக்கூட்டங்கள் எனப் பல விஷயங்கள் என் நினைவுக்குவந்தன. வார்தாவில் தினமும் இரவு ஒன்பது மணிக்குக் கூட்டம் ஆரம்பிக்கும். பன்னிரண்டு மணி வரை கூட நீடிக்கும். அக்கூட்டங்களுக்கு நான் செல்ல வேண்டி வருவது வழக்கம். ஆயினும் நான் என் தீர்மானத்தை விடவில்லை. மாலைப்பிரார்த்தனைக்குப் பின் மௌனம் அனுஷ்டிப்பேன் என்று அறிவித்து விட்டேன்.

மௌனவிரதம் ஆரம்பித்த முதல் நாளே எனக்கு அபூர்வ அமைதி கிட்டியது. பேசுவதை நிறுத்தியதால் படிப்பது ஆரம்பமானது. நான் படிப்பது எப்போதுமே ஆன்மீக விஷயங்களே. படித்தபின் தியானமும் சிந்தனையும் தொடங்கும். இதனால் கிட்டும் அமைதியை நான் அதுவரை உணரவில்லை. உண்மையிலேயே அது ஒரு அற்புதமான அனுபவம். அதன் பயனாக சிந்தனை வளர்ச்சி பற்றி ஒரு சூத்திரமே கிட்டியது என்று சொல்லவேண்டும். நிலத்தில் விதையைப் போட்டு, மேலே மண்ணைத் தூவி விட்டால், விதை கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் உள்ளேயே வளர்ச்சி பெற்று மூன்று தினங்கள் கழித்து முளையாக வெளியே தெரிவதுபோல, பிரார்த்தனை, தியானம், சிந்தனை ஆகியவற்றுக்குமேலே தூக்கம் என்கிற மண்ணைத் தூவி விட்டால் நனவில் விளங்காத விஷயங்களும் தூக்கத்தில் விளங்கக்கூடும். சமாதியில் அமர்பவனுக்கு சிந்தனை வளர்ச்சி கைகூடுகிறது. ஆனால் ஆழ்நிலை சமாதியில் கிடைக்காத பலனும் இவ்வகைத் தூக்கத்தில் கிட்டி விடுகிறது. பிரார்த்தனைக்குப்பின் வேறு எண்ணங்களின்றி தூங்கி விட்டால், மௌன விரதம், தியானம், ஆன்மீக சிந்தனை இவை அனைத்து மாக அந்தத் தூக்கம் விளங்கும் என்பது என் அனுபவம். சங்கராச்சாரியார் 'நித்ரா ஸமாதி ஸ்திதிஹி' என்கிறார். இவ்வாறு என் மௌன விரதம் மேலும் மேலும் வலுப்பெற்றது.

தூக்கத்தையும் கனவுகளையும் ஜெயிப்பது என்பது என் கவனத்தை மிகவும் கவர்ந்த ஒன்றாகும். நாம் நாள் முழுவதும் செய்பவற்றை, அவற்றின் தாக்கம் தூக்கத்தின் மீது ஏற்பட்டு கனவுகளுக்கு காரணம் ஆகாவண்ணம் செய்யவேண்டும். எந்த விஷயம் குறித்து கனவுகள் வருகின்றனவோ அவற்றிடம் ஒன்று நமக்கு பற்று அதிகம் அல்லது துவேஷம் அதிகம். நனவுலக பற்றும் துவேஷமுமே கனவை உண்டாக்குகின்றன.

நான் சிறுவனாக இருந்தபோது என் தந்தையின் நண்பர் ஒருவர் அருமையாக சதுரங்கம் (செஸ்) ஆடுவார். என்னையும் கூப்பிடுவார். நானும் அவருடன் விளையாடுவேன். எனக்கு சதுரங்கம் பிடிக்கும். அதில் குருட்டு அதிர்ஷ்டம் எதுவும் இல்லை. இரு தரப்பிலும் சமபலம் இருக்கும். மேலும் சதுரங்கக் காய்கள் எல்லாமே மரத்தால் ஆனவைதானே. அதில் அத்வைதப் பொருளும், காணும் உலகே மாயம் என்னும் பொருளும் தெரிகின்றன. அத்துடன் அது அறிவு விளையாட்டு, அதிர்ஷ்ட விளையாட்டல்ல. எனவே விளையாடப்போவது வழக்கம். ஆனால் ஒரு நாள் கனவில் சதுரங்க

ஆட்டம் வந்தது. மறுநாள் எழுந்தவுடன் இப்போதைக்கு சதுரங்கத்தை விட்டுவிடுவது என்று தீர்மானித்தேன். கனவிலும் வருமளவு சிந்தையைப் பாதிக்கும் விஷயத்தை விட்டு விடவே வேண்டும்.

**தியானம்**

தியானம் பலவகைப்படும். ஒருவன் இறைவனைத் தாயாகக் காண்கிறான். இன்னொருவன் தந்தையாகவும், மற்றொருவன் குருவாகவும் காண்கின்றனர். நான் இறைவனைத் தாயாகக் காண்பது வழக்கம். என் வாழ்க்கையில் நட்புணர்வு அதிகம். மனத்தில் குருபத்தியும் அதிகம். இறைவனிடத்தில் எனக்கு குரு-சிஷ்ய பாவனையும் உண்டுதான். ஆனால் இவை யாவுமே சகுணத்துவம் என்று கருதி மூன்றையும் நான் (1964-ல்) துறந்து விட்டேன். அச்சமயத்தில் நான் டைபாயிடினால் பீடிக்கப்பட்டி-ருந்தேன். அப்போது நான் ஆழ்ந்து சிந்தித்தேன். முதல் நான்கைந்து தினங்கள் சிந்தனையில் மூழ்கியிருந்தேன் என்றே சொல்லவேண்டும். அப்போது இந்த மூன்று பாவனைகளையுமே விட்டு விட்டேன். ஆயினும் பழைய வழக்கத்தின் காரணமாக இறைவனை எங்காவது தாயாகவோ, குருவாகவோ பாவித்து எழுதப்பட்டதைப் படித்தால் கண்களிலிருந்து நீர் பெருகுகிறது. தூயதானாலும் இந்தக் கண்ணீரும் சகுணமயமானதேயாகும்.

ஆனால் இவ்வகை சகுணத்துவங்கள் தியானத்திற்குப் பயன்படும். அவற்றை விட்டு விடுவதால் பயனில்லை. ஒரளவுக்கு இந்த சகுணத்துவங்கள் மனிதனுக்குத் தேவை. இறைவனின் கல்யாண குணங்களை மனத்தில் நிறுத்தி ஆராய்வதற்கு வடிவங்களும் பயன்படுகின்றன. நான் இவ்வண்ணம் உருவங்களையும் தியானித்திருக்கிறேன்.

சிறுவயதில் பரோடாவில் புத்தரை தியானம் செய்திருக்கிறேன். சிறுவயதிலேயே மகாராஷ்டிர சாதுக்களை அறிந்திருந்ததால் மனத்தில் விட்டோ பா (விட்டல் நாதன்) மீதும் பக்தி இருந்தது. விட்டோபாவின் உருவத்தை தியானித்தபோது அது சமுதாயத்தின் நான்காவது நிலையைக் குறிப்பதாக நான் உணர்ந்தேன். சமுதாயத்தின் முதல் நிலையில் ஒவ்வொருவனிடத்திலும் ஆயுதம் இருந்தது. அதனால் ஒருவன் மற்றவனை தாக்கும் உரிமையும் இருந்தது. இரண்டாவது நிலையில் மனிதர்கள் தங்களுக்குள் தண்டனை வழங்கிக் கொள்ளாமல் தண்டனை கொடுக்கும் அதிகாரத்தை நீதிபதி அல்லது அரசனிடம் விட்டுவிட்டனர். மூன்றாவது நிலையில் அரசு நிர்வாகமும் தண்டனை அதிகாரத்தைத் துறந்துவிடும். ஆயுதங்கள் இறைவனுக்கே சமர்ப்பணம். இறைவனே கதாயுதம், சக்கரம் முதலியவற்றினால் தீயோர்களை அழித்து நல்லோர்களைக் காப்பான். நான்காவது நிலையில் இறைவனும் ஆயுதங்களைத் துறந்து விடுவான். தண்டனைக்குப் பதிலாக மன்னிப்பை வழங்குவான். விஷ்ணுவின் விட்டல் நாத் அவதாரத்திடம் ஆயுதங்களே கிடையா. இவ்வாறு உருவ வழிபாட்டினாலும் ஒரு தத்துவத்தை உற்றுணர முடியும்.

இங்கே (பிரம்ம வித்யா மந்திரில்) என் இருப்பிடத்திற்கு முன்பு கங்காதேவி உருவம் இருக்கிறது. நான் இரவும் பகலும் அதனை தியானித்து

வந்தேன். தியானிக்க தியானிக்க அதன் கண்களில் கருணையும், முகத்தில் நிறைவும், நெஞ்சில் தாய்மையும், மெல்லிடையில் உறுதியும் தென்பட்டன. இது ஒரு ஓவியமாகவே மனத்தில் பதிந்துவிட்டது. கல்லால் ஆன உருவத்தில் குண நலன்கள் புலனாயின.

நான் பரதன்-ராமன் உருவங்களையும் தியானித்துள்ளேன். நான் என் அறையில் எந்த ஓவியங்களையும் வைக்க விரும்புவதில்லை. அதாவது ஸ்தூல வடிவில் வைக்க விரும்புவதில்லை. மானசீகமாக வைத்துக் கொள்வது பிடிக்கும். அதில் இடைஞ்சல் ஒன்றும் கிடையாது. ஏசுநாதரைத் தியானிப்பது அன்பின் உருவை தியானிப்பதேயாகும். ஏசுநாதர் சமுதாயத்திற்காகத் தன்னைப் பலிகொடுத்தார். அவரை தியானிப்பதில் இறைவனின் அன்பும் தியாகமும் தியானிக்கப்படுகின்றது.

தூய்மையும் ஒரு தியானயோகமே. நான் தூய்மையை ஆன்மீகக் கண்ணோட்டத்துடன் பார்த்ததால் அதையும் தியானம் என்றே கொண்டேன். நான் பணியை மேற்கொண்டேன். அந்தப் பணியில் என் மனம் அடைந்த நிலை ஏறத்தாழ தியானநிலையை ஒத்தே இருந்தது. ஏறத்தாழ சமாதிநிலை என்றே சொல்ல வேண்டும். எனவேதான் நான் அதை தியானம் என்று அழைத்தேன். மற்ற தியானங்கள் எல்லாம் மனத்தை இழுத்து நிறுத்துவதாகும். 'மனத்தை ஏன் பிடித்து இழுக்கிறீர்கள்' என்கிறேன் நான், அலட்சியமாக இருக்க வேண்டும் என்று நான் சொல்ல வில்லை, மனம் அங்கும் இங்கும் போனால், அதைப் பின் தொடர்ந்து சென்று எங்கெங்கு போகிறது என்பதை வெறும் சாட்சிகளாக நின்று நாம் பார்க்கவேண்டும்.

**மனமொழிந்த நிலை**

உள் மனம், மேல்மனம் இரண்டுக்கும் முரண் இருக்கும் வரை இன்பம் கிட்டாது என்பது என் மனத்திற்குப் பட்டது. உள்ளேயிருக்கும் பரமாத்மாவே வெளியிலும் இருக்கிறான் என்கிற எண்ணம் நிலை பெறவேண்டும். இறைவன் உள்ளேயும், வெளியிலேயும் எல்லாவிடத்திலும் இருக்கிறான். கண்ணுக்குத் தெரியும் இறைவனை, கண்ணை மூடி உள்ளேயும் காணவேண்டும். உண்மையில் நமக்கு உள்ளிருந்தும் பயமில்லை, வெளியேயிருந்தும் பயமில்லை. பயமெல்லாம் சித்தத்தில்தான். சித்தம் முக்திபெற்றால் எல்லாமே முடிந்தமாதிரிதான்.

நான் சிந்திக்கும்போது இயல்பாகச் சிந்திக்கிறேன். மனமே இருப்ப தில்லை. வெறும் 'நான்' மட்டுமே இருக்கிறேன். இன்னும் சரியாகச் சொன்னால் 'நான்' என்பதை விடுத்து 'இருக்கிறேன்' என்று மட்டும் சொல்லவேண்டும். 'நான்' என்கிற தனித்த நிலை அப்போது இருப்பதில்லை. வானம்போல விரிந்த நிலையே நிலவுகிறது.

எனக்கு ஒருமுகப்படுத்துவது என்பது சாதிக்கப்படவேண்டிய ஒன்றல்ல. அது இயல்பாகவே அமைகிறது. பன்முகப்படுத்துவது வேண்டும் என்றால் தான் அதற்கு முயற்சி செய்யவேண்டும். மனத்தை அடக்க

வேண்டும் என்கிறார்கள். அது எனக்கு அடங்கித்தான் கிடக்கிறது. உரையாடும்போது திறக்கத்தான் வேண்டியிருக்கிறது. உரையாடும்போது கூட என்னை தனியே நிறுத்திவைத்தே உரையாடுகிறேன். நீந்துகிறவன் தண்ணீருக்குள் மூழ்கிவிடாமல் மூழ்கினால் தொலைந்தான் - மேலேயே நீந்துவதுபோல பேசும்போதும், நடக்கும் போதும், சிரிக்கும்போதும், வேலை செய்யும் போதும் நான் மேலோட்டமாகவே நீந்துகிறேன். மூழ்கிவிடுவதில்லை.

என் அறையின் சுவற்றில் ஒரு துவாரம் இருக்கிறது. அதன் வழியே தொழிலாளர்கள் கிணற்றடியில் வேலை செய்வது தெரியும். நானும் பார்ப்பதுண்டு. அங்கும் இங்கும் வேறு எதையாவது பார்ப்பதும் உண்டு. அது வெறும் வேடிக்கைப்பொழுதுபோக்கு. ஒன்றைப் பார்த்தால் மனத்தில் ஏற்படும் தாக்கம் ஏதும் என் மனத்தில் ஏற்படுவதில்லை.

**நற்குணத்தை வழிபடுக**

நான் சிறுவயதில் குணங்களையும் குற்றங்களையும் பெரிதும் ஆராய்ந்து வந்தேன். அவனிடம் இது குறை, இவனிடம் இது குற்றம் என்று நாங்கள் நீண்டநேரம் விவாதிப்போம். மூளை எதையாவது நோண்டிக்கொண்டே இருக்கும். ஒவ்வொருவனிடத்தும் ஏதாவது ஒரு குறை இருக்கவே செய்தது. ஆனால் தன் குறை மட்டும் கண்ணில் படுவதில்லை. மற்றவர்களை அல்சிமுடித்தால் அல்லவா தன் மீது கவனம் செலுத்தமுடியும். பிறகு சான்றோர் இலக்கியங்களைப் படித்தேன். துகாராம் ஸ்வாமிகள் "குறைகளை பிறஇடங்களில் தேடுவானேன், என்னிடம் இல்லாத குறைகளா?" என்று கேட்கிறார். பிறகு என் கண் திறந்தது.

காந்திஜி "பிறரின் குணங்களையும், தம் குறைகளையும் பெரிதாகக் காணவேண்டும்" என்று சொல்வார். நான் ஒருமுறை அவரிடம் "சத்தியத்திற்கு இது எப்படி ஒத்து வரும்" என்று கேட்டேன். அதற்கு அவர் "வரைபட அளவீடு போலத்தான். வரைபடத்தில் இரண்டு அங்குலத்தை 50 மைல் என்று கருதுகிறோம். இரண்டு அங்குலம் என்று நினைப்பதில்லை. அதுபோலத்தான் இதுவும். மற்றவர்களின் சிறிய அளவு நற்குணத்தையும் பெரிதாகக் கொண்டால் அதுதான் சரியான அளவீடாகும்" என்றார். மனிதன் பிறரின் குணங்களையும், தன் குற்றங்களையும் பொதுவாக குறைத்தே மதிப்பிடுகிறான். எனவேதான் 'அளவீடு' என்றார் காந்திஜி. ஒரு தர்க்க வினாவிற்கு ஒரு தர்க்க விடை. நான் அதையே கடைப்பிடிக்கலானேன்.

பிறகு 'நம் குறை என்பதும் உண்மையில் நம்முடையது அல்ல' என்று தோன்றியது. இந்தக் குறைகள் இந்த உடலுக்குரியன. நமக்கு உரிமையில்லாதவற்றை 'நமது' என்று எப்படிச் சொல்வது? அப்படியே மற்றவர்களிடம் காணப்படும் குறைகளும் உண்மையில் அவர்களுடையது அல்ல. உடலோடு எரிந்துபோகக் கூடியவை.

வெகுநாட்களுக்கு முன்பு 1918-ல் ஒரு பெரியவரை நான் ஒரு கேள்வி கேட்டேன். அப்போது நான் மஹாராஷ்டிரத்தில் பாதயாத்திரை செய்து

கொண்டிருந்தேன். அப்போது அந்தப் பெரியவர் வடக்கேயிருந்து வந்தார். நான்கு நாட்கள் எங்களுடன் இருந்தார். நாங்கள் அடிக்கடி உரையாடுவோம். பிறகு அவர் தெற்கே போய்விட்டார். நான் அவரிடம் "இறைவன் என்ன இப்படிப் பண்ணி வைத்திருக்கிறான்? குணங்களையும், குறைகளையும் சேர்த்தே ஏன் ஒவ்வொருவரிடத்தும் படைத்து விட்டான்?" என்று கேட்டேன். அதற்கு அவர், "இறைவன் மிகவும் சுயநலம் மிக்கவன். மனிதன் குறைவற்றவனாக, பூரணனாக இருந்தால் இறைவனை நினைக்கவே மாட்டான். அதனால் தன்னலம் கருதியே இறைவன் இந்தத் திருவிளையாடல் செய்கிறான்" என்றார். இது என் மனத்தில் ஆழப்பதிந்தது. அதாவது மனிதனிடம் குறைகள் இல்லையென்றால் பணிவு தோன்றாது என்பது பொருள்.

எனவே நாம் ஒவ்வொன்றையும் போற்றவே செய்யவேண்டும். குணம் இறைசொரூபமாகும். நான் ஒன்றைப் புதிதாகக் கண்டு பிடித்திருக்கிறேன். கிறுக்குத்தனமான கண்டுபிடிப்புதான். மற்றவர்களுடைய குறைகளை மட்டுமல்ல நம்குறைகளையும் காணக் கூடாது என்பது என் கண்டுபிடிப்பு குறைகள் எல்லையற்றவை. ஆனாலும் குணங்களும் ஒன்றிரண்டாவது இல்லாமல் போகாது. ஓரிரு நல்ல குணங்களாவது இன்றி இறைவன் எவரையும் படைக்கவில்லை. இறைவனின் அம்சமாக ஒரு குணமாவது ஒவ்வொருவனிடமும் இருக்கிறது. அதே போல பெரிய மகாத்மாக்களிடமும் ஓரிரு குறை இருக்கிறது. இறைவன் ஒவ்வொருவனுக்கும் குணங்களையும் அளித்துள்ளான் குறைகளையும் அளித்துள்ளான், குணங்கள் வாசல்களாகும் குறைகள் சுவர்களாகும். எவ்வளவு ஏழையின் வீடானாலும், அதற்குள் நுழைய ஒரே ஒரு கதவாவது இருக்கும். அதைப் போலவே ஒரே ஒரு குணநலனாவது இருக்கும். அது வழியேதான் அவனது உள்ளத்துள் பிரவேசிக்க முடியும். குறைகளைப்பற்றி நிற்பது சுவற்றில் முட்டிக் கொள்வதேயாகும்.

அதிலிருந்து நான் என் குணநலன்களையும் போற்ற ஆரம்பித்து விட்டேன். மக்கள், அவன் கர்வி, தற்புகழ்ச்சி செய்து கொள்கிறான் என்று கூறலாம். தன்னை - அதாவது என்னுள் விளங்கும் ஆத்மாவைப் புகழாமல் என்ன செய்வது. நாம் பிறரின் குணங்களையும், நம் குணங்களையும் போற்றவேண்டும். உண்மையில் குணங்களைப் போற்றும்போது இறைவனையே போற்றுகிறோம். குணங்களே உண்மையானவை. உடலோடு எரிந்து போகும் குறைகளை நாம் விவாதிக்க மட்டுமல்ல உச்சரிக்கவும் வேண்டாம். இதனாலேயே நான் பதினோரு விரதங்களுடன் பனிரெண்டாவதாக இகழாமை என்னும் விரதத்தையும் சேர்த்தேன். இது அஹிம்சை என்னும் விரதத்திற்குள்ளேயே வருகிறது. ஆனாலும் இதைத் தனியாக குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியிருக்கிறது என்று எனக்குப் பட்டது.

### நட்புறவு என்னும் வழிபாடு

'ஸ்நேஹேன ஸஹஜீவனம்' என்பது என் சூத்திரம். மனிதன் ஒத்திசைந்து நட்புடன் வாழவேண்டும். இதுவே என் வாழ்வின் முக்கிய

சூத்திரம். இதனால் நான் பிடித்தவர்களை இதுவரை நானாக விட்டதே-யில்லை. என்னைப் பிடித்தவர்களும் இது வரை என்னைப் பொதுவாக விடுவதில்லை. ஆனால் இதுபற்றி எனக்கு கர்வம் வந்துவிடக் கூடாதே என்றோ என்னவோ, சிலர் என்னைவிட்டு நீங்கியுள்ளனர்.

நான் வீட்டைத்துறந்து வெளியேறிய பின் என் இரு தம்பியருக்கும் வீட்டில் இருப்புகொள்ளவில்லை. 2-3 வருடங்களுக்குள் அவர்களும் வீட்டைத்துறந்து என்னிடம் வந்து சேர்ந்தனர். அவர்களும் பிரம்மச்சாரி களாகவே இருந்தனர். இது அன்பின் பலன். பிறகு என் நண்பர்களான கோபால்ராவ் காலே, ரகுநாத் தோத்ரே, பாபாஜி, பகாராம் ஆகியோரும் வீட்டை விட்டு வந்து இறுதிவரை என்னுடன் இருந்தனர். இவர்கள் எல்லோரும் என் பரோடா நண்பர்கள். பிறகு நான் சபர்மதி போனபோது சில மாணவர்கள் கிடைத்தனர். அவர்களில் ஒருவனே வல்லபஸ்வாமி. 13 வயதில் அவன் என்னிடம் வந்தான். 58 வயதில் அவன் மறைந்தான். 45 ஆண்டுகள் அவன் இடைவிடாது என்னுடன் இருந்தான். பெற்றெடுத்த எந்த மகன் எந்த தந்தைக்கு இதைவிட அதிகமாக துணை நிற்க முடியும்? பிறகு நான் வார்தா போய்ச்சேர்ந்தேன். அங்கேயிருந்த பாலுஞ்சகர்ஜி 1924 -லிருந்து என்னுடன் இருக்கிறார். பிறகு பாவூ (பான்ஸே), தத்தோபா (தாஸ்தானே) ஆகியோர் என்னிடம் வந்தனர். 1946-ல் ரண்ஜீத், ராம்பாவூ, கிரிதர்கோபால் ஆகியோர் என்னிடத்தில் வந்தனர். பிறகு விவேகானந்த். இவர்கள் எல்லோரும் இறுதி வரை என்னுடன் இருந்தனர். 1938-ல் பரந்தாம் ஆசிரமம் வந்தபோது நூற்கக் கற்கவேண்டும் என்று ஆரம்பித்தேன். அப்போது பவனார் கிராமத்திலிருந்து சில சிறுவர்கள் வந்தனர். அப்போது அவர்களுக்குக் கூலி அதிகமாக வேண்டும் என்று அவர்களை முன்னால் உட்காரவைத்து இடைவிடாது 7-8 மணிநேரம் நூற்க நான் கற்பித்தேன். மஹாதூ முதலானவர்கள் அவர்களில் சிலர். அப்போதிருந்து அவர்கள் அங்கே அந்த வேலையை பக்தியுடனும் சிரத்தையுடனும் செய்து வருகின்ற-னர். பிறகு பிரம்ம வித்யா மந்திர் ஆரம்பித்தவுடன் அனைத்திந்தியா-விலிருந்தும் சகோதரிகள் வந்தனர். ஆக பாலகோபா, சிவாஜி போன்ற 70 ஆண்டுகால நண்பர்களிலிருந்து 12-13 வருட நண்பர்கள் வரை என்னுடன் உள்ளனர். ஏனெனில் என் முக்கியக் கொள்கை 'நட்புடன் கூடி வாழ்க' என்பதேயாகும்.

இப்போது எதற்கு முயன்று வருகிறேன் தெரியுமா? பாண்டவர்கள் சுவர்க்கம் சென்றபோது ஒவ்வொருவராக இடையில் விழுந்து விட்டனர். இறுதியில் ஒரு நாய் யுதிஷ்டிரனுடன் சுவர்க்கத்தை வந்தடைந்தது. நாய்க்கு சுவர்க்கத்திற்குள் செல்ல அனுமதி கிடைக்கவில்லை. உடனே யுதிஷ்டிரனும் சுவர்க்கத்தினுள் செல்ல மறுத்துவிட்டான். நானும் இப்படிப்பட்ட ஒரு நிலைக்கே பிரயாசைப்படுகிறேன். நண்பர்களைவிட்டு, தனியாக வைகுண்-டம் போய் இறைவன் சந்நிதானத்தில் நான் மட்டும் கொலுவிருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. நற்கதியோ, துர்க்கதியோ எதுவானாலும் இவர் களுடனேயே எனக்கு கூட்டாகக் கிட்டவேண்டும் என்பது என் அவா. வங்காளத்தில் ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸருக்கு முதன்முதலில் சமாதி

கூடிய இடத்தில் நான் "இன்று தனி நபர் சமாதி கூடும் காலம் இல்லை. இப்போது கூட்டுச் சமாதி கைகூட வேண்டும்" என்று சொன்னேன். அன்று எனக்கு ஒரு புதிய சொற்பிரயோகம் - கூட்டுச்சமாதி என்னும் சொற்பிரயோகம் கிட்டியது. கூட்டு முயற்சி, கூட்டுச்சமாதி, கூட்டு விடுதலை இவையே என் இப்போதைய கொள்கைகள்.

இப்போதெல்லாம் நான் தினமும் நம் தோழர்களின் பெயர்களை நினைத்துக் கொள்கிறேன். இது என் விஷ்ணுசஹஸ்ர நாமம் ஆகும். இந்தியா முழுவதிலும் எனக்குத் தெரிந்த மூத்தோர்களை முதலில் தியானிக்கிறேன். பிறகு மற்றவர்களின் பெயர்களை ஸ்மரிக்கிறேன். மூத்தோர்களை முதலில் ஏன் தியானிக்கிறேன் என்றால் அவர்களின் ஆசீர்வாதம் இல்லாமல் மனிதன் முன்னேற முடியாது. இதை நன்கு புரிந்துகொள்ளவேண்டும். நாம் வயதில் இளையவர்கள். எனவே வயதில் மூத்தோர்கள் நமக்கு உதவிகள் நிச்சயம் செய்திருப்பார்கள். எனவே அவர்களின் ஆசீர்வாதம் மிகவும் அவசியம். மூத்தோர்களை தியானித்தபின் தோழர்களை தியானிக்கிறேன். ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள தோழர்களை ஒவ்வொருவராக மனத்தில் கொண்டு வந்து தியானிக்கிறேன். ஆயிரம் நாமங்கள் ஆகிவிடுகின்றன. இது என்ன கிறுக்குத்தனம், இதனால் என்னலாபம் என்று கேட்கலாம். 'ஸ்னேஹேன சஹஜீவனம்' - என்பதுதான் பதில்.

**விரதங்கள்**

நான் உணவில் ஏதாவது பரிசோதனை செய்து கொண்டே வந்திருக்கிறேன். ஆன்மீக நாட்டம் உள்ளவர்களிடம் இது எப்போதும் காணப்படும். ஏனெனில் உடல் ஆன்மாவின் மூர்த்த வடிவமாகும். மூர்த்த வடிவில் அது பயன்படவேண்டும். சூரியனுக்கு ஒளி லட்சணப்பொருளாக விளங்குவது போல ஆத்மா என்கிற தேவதைக்கு உடல் ஒரு மூர்த்த வடிவமாகும். மூர்த்த வடிவத்தைப் பார்த்தவுடன் தேவதை நினைவுக்கு வரும் வகையில் அந்த மூர்த்த வடிவம் அமைய வேண்டும்.

சிறுவயதில் நான் சாப்பாட்டு விஷயத்தில் மிகவும் கவனமின்றி இருந்தேன். சாப்பிட ஒரு குறிப்பிட்ட நேரம் கூட கிடையாது. பசித்தால் அம்மாவிடம் கேட்பது, கொடுத்ததைச் சாப்பிடுவது, இரவு நெடுநேரம் சுற்றிக் கொண்டிருந்துவிட்டு மிகத்தாமதமாக சாப்பிடுவது. இப்படியே போய்க் கொண்டிருந்தது. காந்திஜியிடம் போய்ச்சேர்ந்தேன். அங்கே சாப்பிடும் நேரம் கண்டிப்புடன் வகுக்கப்பட்டிருந்தது. குறித்த காலத்தில் சாப்பிடுவதன் பயன்கள் புலனாயின. பசியும் குறித்த காலத்தில் வரலாயிற்று. குறித்த காலத்தில் சாப்பிடுவதால் உடல் ரீதியாகவும், மன ரீதியாகவும் பயன்கள் விளைந்தன என்பது புலனாயிற்று.

சிறுவயதில் சாப்பாட்டு விஷயத்தில் கவனமற்று இருந்தாலும், எனக்கு பாகற்காய் கறி மட்டும் பிடிக்காது. நான் அதை சாப்பிடுவதில்லை. அம்மா, 'வின்யா சுவையை வெல்வதுபற்றி வாய்கிழியப் பேசுகிறாயே, பாகற்காய் சாப்பிட முடியாதா?' என்று பலமுறை கேட்டு விட்டார்கள். 'எல்லா

சுவைகளையும் வெல்லவேண்டும் என்பது என் தலையெழுத்தா' என்று நான் கேட்பது வழக்கம். ஆனால் காந்திஜியின் ஆசிரமத்திற்கு வந்த துவக்க நாட்களிலேயே இந்தச் சுவையை ஜெயிக்க முடிவெடுத்தேன். அந்நாட்களில் காந்திஜியே உணவு பரிமாறி வந்தார். ஒருநாள் பாகற்காய் கறி. காந்திஜியே பரிமாறும் போது 'வேண்டாம்' என்று எப்படிச் சொல்வது? ஆனால் பிடிக்காது என்பதால் எல்லாவற்றுக்கும் முன்பு அதை எடுத்து விழுங்கிவிட்டேன். காந்திஜி என் தட்டில் கறி இல்லாததைக்கண்டு மீண்டும் பரிமாறிவிட்டார். எதுவும் கூறாமல் அதையும் விழுங்கிவிட்டேன். காந்திஜி இவனுக்கு பாகற்காய் பிடிக்கும் போலும் என்று எண்ணி மூன்றாம் முறை பாகற்காய் பரிமாறினார். அப்போதே நான் இந்த பாகற்காய் பிடிக்காது என்பதை விட்டொழிக்கவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டேன்.

எனக்கு சிறு வயதில் தயிர்சாதம் மிகவும் பிடிக்கும். நான் பிறந்தது கொங்கண் அல்லவா. எனவே தினமும் தயிர்சாதம் சாப்பிடுவது வழக்கம். காந்திஜியின் ஆசிரமத்திற்கு வந்தபின் குடிப்பவர்கள் குடியை விட்டு விடவேண்டும், இவர்கள் இதைவிட்டு விடவேண்டும், அவர்கள் அதை விட்டுவிடவேண்டும் என்றெல்லாம் பேச்சு நடைபெற்றது. அப்போது நாம் நம்முடைய பழக்கம் ஒன்றை விட்டாலொழிய பிறருக்கு அவர்களுடைய வழக்கத்தை விட்டுவிட உபதேசிக்க உரிமையுடைவர்களாக ஆகமாட்டோம் என்று எனக்குப் பட்டது. எனவே எனக்கு மிகப்பிடித்த தயிர்சாதத்தை விட்டுவிட்டேன். இன்று வரை நான் அதைத் தொடவில்லை.

சர்க்கரை உண்பதை நான் 1908-லேயே விட்டுவிட்டேன். அப்போது எனக்கு 13-14 வயது. சுயராஜ்யம் கிட்டும் வரை அந்நிய நாட்டு சர்க்கரை (சீனி) சாப்பிடக்கூடாது என்று தோன்றியது. அப்படியே விரதம் எடுத்துக் கொண்டேன். ஒருமுறை ஒரு இடத்தில் சாப்பிட்டுக்கொண்டிருந்த போது சுதேசி சர்க்கரை என்று கொடுக்கப்பட்டது. சுதேசி அல்ல என்று பட்டது. அப்போது 'விதேசி சர்க்கரையை விட்டு 5-6 மாதம் ஆகிறது, இப்போது சுதேசி சர்க்கரையையும் விட்டுவிட வேண்டும்' என்று தோன்றியது. அப்போதிலிருந்து சர்க்கரையை விட்ட நான் 1947 வரை சாப்பிடவில்லை.

உப்பு விஷயத்திலும் இப்படித்தான் நடந்தது. நெடுங்காலத்திற்கு முன்பு நான் மகாராஷ்டிரத்தில் கால்நடையாக சுற்றிக்கொண்டிருந்த போது ஒருமுறை நாங்கள் 10-12 பேர் தோரண்கர் கோட்டைக்குப் போனோம். உணவுப் பண்டங்களை மேலேயே வாங்கிக்கொள்ளலாம் என்று தீர்மானித்தோம். ஆனால் அங்கே அரிசியைத்தவிர எதுவும் கிடைக்க வில்லை. எனவே வெறும் சாதம் மட்டுமே சமைத்தோம். சாப்பிடும்போது குறைந்தபட்சம் உப்புகூட இல்லாமல் சாப்பிடுவது எப்படி என்று யோசனை வந்துவிட்டது. ஆனால் அன்று உப்பு கூடக் கிடைக்கவில்லை. உப்பு இல்லாமலேயே சாப்பிட வேண்டியதாயிற்று. வயிறு நிறைய சாப்பிட முடியவில்லை. அப்போது என் மனத்தில் ரிஷிகளும், முனிவர்களும் 'இதை விட்டு விடவேண்டும்,' 'அதை விட்டு விடவேண்டும்' என்றெல்லாம் ஏன் பல்வேறு பரிசோதனைகள் செய்து பார்த்தனர் என்பது விளங்கிற்று. நாக்கு

நமக்கு குதிரையாக விளங்கவேண்டும். அது நம்மீது சவாரி செய்யக்கூடாது. உப்பை விடுவதின் மகத்துவம் விளங்கியது. அப்போதிலிருந்து ஒருமுறைதான் உப்பு உண்பேன் என்று விரதம் வைத்துக் கொண்டேன். சில காலம் அப்படிக் கழித்தபின் உப்பை விட்டு விடுவது அப்படி ஒன்றும் சிரமம் இல்லை என்று தோன்றியது. உப்பை ஒரேயடியாக விட்டுவிட்டேன்.'

உணவுப்பரிசோதனையில் நான் நான்குமுகக் கண்ணோட்டத்துடன் சிந்திக்கிறேன்: (1) ஆன்மீகம், (2) உடல்நலம், (3) சுதேசி, (4) பொருளாதாரம். ஒரு பொருள் ஒரு கண்ணோட்டத்தில் உயர்ந்ததாகவும், இன்னொரு கண்ணோட்டத்தில் தாழ்ந்ததாகவும் இருக்கக்கூடும். இந்த நான்கையும் தனித்தனியாக ஆராய்ந்தால் ஆன்மீகமே தலையாயது, மற்றவை வரிசைக்கிரமமாக முக்கியத்துவம் குறைந்தவை எனக்கூறலாம். ஆனால் எனக்கு அப்படி தனிமைப்படுத்துவது சம்மதமல்ல. எல்லாமே அமைந்தது தான் உண்மையான முழு ஆன்மீகக் கண்ணோட்டமாகும் அதுவே உண்மையான முழு சுதேசி, பொருளாதாரக் கண்ணோட்டங்களும் ஆகும்.

திறந்த வெளியில் இருப்பதன் மூலம் மனிதன் குறைந்த காலோரிகளில் வாழ முடியும் என்பது என் அனுபவம். பாத யாத்திரையின் போது என் உணவில் 1200 - 1300 கலோரிகளே இருந்தன. இவ்வளவு குறைவான கலோரிகளில் இவ்வளவு உழைப்பு எப்படிச் சாத்தியம் என்று டாக்டர்கள் வியந்தனர். எனக்கு ஆகாயமே முக்கிய உணவு என்று நான் அவர்களுக்குச் சொல்வது வழக்கம். என் உணவில் முதலிடம் ஆகாயத்திற்கு, இரண்டாவது காற்றுக்கு, மூன்றாவது சூரியக்கதிர்களுக்கு, நான்காவது தண்ணீருக்கு. தண்ணீரை சிறிது சிறிதாக அடிக்கடி நிறைய குடிக்கவேண்டும். தண்ணீரினால் மனிதனின் உயிர் பலம் பெறுகிறது. உணவுக்குக் கடைசி இடம்தான். திறந்த வெளியின் கீழ் இருப்பது மிக அதிக அளவில் இருக்கவேண்டும்.

என் உணவில் நிறைவுதான் முக்கியம். இதுதான் ஆரோக்கியத் திறவுகோலும் கூட. சிறுவயதிலிருந்தே நான் பலஹீனன்தான். உணவு சுவை யானதாக இருக்கவேண்டும். ஆனால் சுவையுணர்விற்காக சாப்பிடக்கூடாது என்பது என் கருத்து. இதில் முதற்பகுதி அனைவருக்கும் பிடிக்கும். பிற்பகுதி பிடிக்காது. பிற்பகுதி பிடித்தவர்களுக்கு முற்பகுதிக்கூற்று பிடிப்பதில்லை என்பதையும் நான் பார்த்திருக்கிறேன். இரண்டும் இணைந்தால் நிறைவு கிட்டும்.

கீதையில் தேவசம்பத்துகளைக் கூறும்போது அச்சமின்மைக்கு முதலிடம் தரப்படுகிறது. ஏனெனில் அது இல்லையேல் எந்த குணமும் தழைக்க முடியாது. உண்மை இல்லையேல் எந்த நற்குணங்களுக்கும் மதிப்பில்லை. ஆனால் அந்த சத்திய நாட்டத்திற்கும் அஞ்சாமை அவசியம். சத்தியம், அஹிம்சை இரண்டையும் அஞ்சாமை இன்றி கைக்கொள்ள இயலாது.

மனிதனின் மிகப்பெரும் பயம் மரணபயமாகும். அதன் பெயரைக் கேட்டாலே மனிதனுக்கு பயம். அந்த பயத்தை வென்றால் எல்லா

பயத்தையும் வென்றது மாதிரிதான். ஆனால் இன்னும் சில சிறுசிறு பயங்களும் உள்ளன. அவற்றையும் வெல்லவே வேண்டும்.

பயத்தை வெல்ல இறைநாமம் நல்ல உபாயம். இறைநாமத்திற்கு முன் எந்த பயமும் நிற்பதில்லை. ஆனாலும் பயத்தை வெல்ல சிறிது முயற்சியும் வேண்டும். பரோடாவில் தினமும் உலாவப்போவது வழக்கம். ஒரு நாள் ஒரு ரயில்பாலத்தின் மீது போனேன். பயமாக இருந்தது. கீழே 30-40 அடி ஆழம். ஒவ்வொரு கட்டையாக தாண்டும் போது அச்சமாக இருந்தது. மெல்ல மெல்ல ஒரு வழியாக பாலத்தைக் கடந்தேன். பிறகு தினமும் அதன் மீது மெதுவாக நடப்பது என்று வைத்துக்கொண்டேன். ஓரிரு மாதங்களில் பாலத்தின் மீது நடக்கும் பயம் போய்விட்டது. ஆசிரமத்திற்கு வந்த பிறகு ஒரு முறை நானும் காகா காலேல்கரும் ஆலூ போயிருந்தோம். ரயில்பாலம் வழியாகத் திரும்பும் போது பின்னால் ரயிலின் 'கடகட' சத்தம் கேட்டது. காலேல்கர் பாலத்தைத் தாண்டிவிட்டார். நான் கண்ணாடி அணிந்திருக்க வில்லை. மாலை நேரம். இருட்டத் துவங்கிவிட்டது. எனக்கு கண் சரியாகத் தெரியவில்லை. ஆனால் இருப்புப்பாதையின் ஸ்லிப்பர் கட்டைகள் சம இடைவெளியில்தான் இருக்கும் என்பது தெரியும். ஆகையால் இறைவன் பெயரை உச்சரித்தபடி ஒரே சீருடன் ஓட ஆரம்பித்தேன். பின்னால் இஞ்சின் மிக சமீபத்தில் வந்து விட்டதை நான் உணர்ந்து கொண்டேன். காலேல்கர் என் கண்ணுக்குத் தெரியவில்லை. ஆனால் அவருடைய குரல் கேட்டது- “இடப்பக்கம் குதி” நான் உடனே இடப்பக்கம் குதித்துவிட்டேன். மறுகணமே ரயில் தாண்டிச்சென்றது. இது பற்றி காகா காலேல்கர் கூறுவது- “விநோபாஜி குதித்தார். நான் தாங்கிக் கொண்டேன். அப்போது ரயில் வண்டியின் சத்தத்துடன் வினோபாவின் வாயிலிருந்து வரும் இறை நாமத்தையும் கேட்க முடிந்தது.” பரோடாவில் ரயில்பாலம் மீது நடந்த பழக்கத்தின் பயன் அப்போது கிடைத்தது. பயந்திருந்தால் கதையே முடிந்திருக்கும். இப்படி சில பயங்கள் பழக்கத்தினால் போகும். ஆனால் முக்கியமானது இறை நாமமேயாகும்.

இது போலவே இன்னொரு நிகழ்ச்சியும் உண்டு. நான் தனிமைச் சிறையில் இருந்தேன். 8 ' x 9 ' பரப்புள்ள சிறிய கொட்டடி. இரவில் மௌன விரதம் அனுஷ்டித்து வந்தேன். ஒருநாள் தூங்க ஆயத்தம் செய்கையில் என் கட்டிலுக்குக் கீழே ஒரு பாம்பைக் கண்டேன். கொட்டடி வெளிப்பக்கம் பூட்டப்பட்டிருந்தது. என்னால் வெளியே செல்ல முடியாது. சிறிது நேரம், 'என்ன செய்யலாம்? மௌன விரதத்தைக் கைவிட்டு யாரையாவது கூப்பிடுவதா' என்று யோசித்தேன். விரதத்தைக் கைவிட மனம் வரவில்லை. வந்திருப்பது விருந்தாளியல்லவா! எப்படி வெளியேற்றலாம் என்று தோன்றியது. 'சரி, இருவருமாக இருந்து கொள்வோம்' என்று யோசித்து தூங்கிவிட்டேன். தினமும் லாந்தரை அணைத்து விடுவேன். அன்று அணைக்கவில்லை, அவ்வளவுதான். இரவில் எழுந்தால் என் கால் அதன் மீது பட்டுவிடக்கூடாது அல்லவா? தினமும் இரண்டு நிமிடங்களுக்குள் உறங்கிவிடுவேன். அன்று இரண்டரை, மூன்று நிமிடங்கள் ஆகியிருக்கும். மற்றபடி கனவற்ற ஆழ்ந்த உறக்கம் வந்தது. காலையில் எழுந்து பார்த்தபோது அது எங்கோ போய்விட்டிருந்தது.

இறைநாமத்தைவிட சிறந்த உபாயம் இல்லையென்றாலும் பயிற்சியினாலும் அஞ்சாமை வளர்கிறது.

**கர்ம வழிபாடு**

கர்மயோகம் என்றால் உடலுழைப்பு, உடலுழைப்பின் வாயிலாக இறைவழிபாடு என்று பொருளாகும். அதாவது உடலால் உழைக்க வேண்டும், அதை இறை வழிபாடாகக் கருதிச் செய்யவேண்டும். உடலுழைப்பே பூசையாக வேண்டும். சாதாரண உடலுழைப்பு போனால் முதலில் இகமும் பிறகு பரமும் பாதிக்கப்படும். வழிபாடு போனாலோ முதலில் பரமும் பிறகு இகமும் பாதிக்கப்படும். எனவே பூரணமான கர்மயோகத்தில் இரண்டும் இருக்க வேண்டும்.

இந்த சிந்தனையின் அடிப்படையில் நமது 24 மணிநேரமும் எங்ஙனம் கழியவேண்டும் என்று நான் சிந்தித்து வைத்திருந்தேன். அதில் எட்டுமணி நேரம் தூக்கம் அல்லது ஓய்வில் கழியும். ஒவ்வொருவரும் எட்டுமணி நேரம் கட்டாயம் தூங்கவே வேண்டும். நான் தூக்கத்தில் பல பரிசோதனைகள் செய்து பார்த்திருக்கிறேன். பல நாட்கள் இரண்டு மணி நேரம் மட்டும், பிறகு நான்கு மணி நேரம் மட்டும் என்று விதம்விதமாக 10 மணி நேரம் வரை தூங்கிப்பார்த்திருக்கிறேன். மழையில்கூட மேலேயிருந்து மழைகொட்ட கம்பளி போர்த்தி தூங்கிப்பார்த்திருக்கிறேன். இப்படி பல பரிசோதனைகள் செய்து சாதாரணமாக ஒரு ஆரோக்கியமான மனிதனுக்கு எட்டு மணி நேரம் ஓய்வு வேண்டும், அதற்கு அதிகம் தேவையில்லை என்று தீர்மனித்தேன். ஆக எட்டு மணிநேரம் தூக்கத்திற்கு.

மீதி 16 மணி நேரத்தில் ஐந்து மணி நேரம் குளியல், சாப்பாடு முதலிய அன்றாட வேலைகளில் போகும். இரண்டுமணி நேரம் பிரார்த்தனை போன்ற சொல் வழிபாடுகளிலும் நூற்பது போன்ற கர்ம வழிபாடுகளிலும் செலவாகும். ஒரு மணிநேரம் மற்ற வேலைகளில் போகும். இது எட்டுமணிநேரம் ஆயிற்று. (பிரம்மவித்யா மந்திரில் விநோபாஜி துப்புரவுப் பணியையும் இத்தகைய வழிபாடாகக் கொள்ளலாம் என்றார். கொஞ்சம் நேரம் அகர்மத்திற்கும் ஒதுக்கப்படவேண்டும் என்றும் சொன்னார்.)

பணியில் மீதியுள்ள எட்டுமணி நேரத்தை சமுதாயம் அதாவது சாதாரண மொழியில் சொல்வதானால் அவரவர் தொழிலில் செலவிட வேண்டும். இதை சமுதாயப்பணி என்றாலும் அவரவர் வேலை என்றாலும் ஒன்றுதான். இறைவன் மனிதன் ஒவ்வொருவனுக்கும் வயிற்றைக் கொடுத்திருக்கிறான். இதற்கு ஒரு பெரிய குறிக்கோள் இருக்கிறது. அற வழியில் வயிறு வளர்ப்பதும், உடலைப் பேணுவதும் ஆன்மீகமே. அதுவும் ஒரு தவமே. மற்றவர்களுக்கு தொண்டு செய்து ஜீவனோபாயம் தேடுவதே தொழில் எனப்படும். மற்றவர்களின் ஜீவனோபாயத்தைப் பறிக்கும் ஜீவனோபாயம் தொழில் அல்ல, திருட்டு ஆகும். ஒரு விவசாயியோ, ஆசிரியனோ, தன் உழவுத் தொழிலையோ, தன் கற்பித்தல் பணியையோ, யாரையும் வஞ்சிக்காமல் நாணயமாகச் செய்தால் அது பொது நலப் பணியேயாகும்.

பாதயாத்திரையின் போது பலர் என்னிடம் 'நீங்கள் ஏன் நடந்தே யாத்திரை செய்வேன் என்று பிடிவாதமாக இருக்கிறீர்கள்?, என்று கேட்பார்கள். நான் "அதற்கு பல காரணங்கள் இருந்தாலும், கொஞ்சம் உடலுழைப்பும் நடக்கட்டுமே என்பதும் ஒரு காரணம். இதுவே 'உழைத்து உண்' கொள்கையை நான் கடைப்பிடிக்கும் விதமாகும். மக்கள்தானே எனக்கு சோறு போடுகிறார்கள். 7 - 8 மைல் நடந்தால் நானும் ஏதோ உண்ட சோற்றுக்கு உழைத்ததாக நினைத்துக் கொள்வேன். இப்படியாக நான் யாத்திரைக்கும், "உழைத்து உண்" கொள்கைக்கும் முடிச்சுப் போட்டேன், அதற்கு முன்பு முப்பது ஆண்டுகள் நான் உழைத்தே உண்டு வந்தேன். சாதாரணமாக எட்டுமணிநேரம் உழைப்பேன். சில சமயங்களில் அதிகநேரமும் உழைப்பேன். ஆசிரியர் வேலையைத் தவிர, விவசாயம், தண்ணீர் பாய்ச்சுதல், மாவரைத்தல், தோட்டிவேலை, நூற்றல், நெசவு, துணிநெய்தல், தச்சு எனப்பல வேலைகளை நான் மணிக்கணக்காக முப்பது ஆண்டுகள் செய்திருக்கிறேன்.

பணத்தினின்றும் விடுதலை என்னும் முயற்சி ஆரம்பித்தபின் 1950-ல் (சர்க்கா துவாதசி திதிக்கணக்கின்படி காந்தி ஜெயந்தி) நான் "இது நாள் வரை என் வாழ்க்கை பிச்சை வாங்கி உண்ணும் வாழ்க்கையாகவே இருந்திருக்கிறது. இனியும் அப்படியேதான் இருக்கும். ஆனால் இனி உழைத்து இடும் பிச்சையையே ஏற்பேன்" என்று தீர்மானித்திருக்கிறேன். நானும் என்னால் முடிந்தவரை உழைப்பேன். அப்போது நான் மூன்று நாள் உண்ணாவிரதமும் இருந்தேன். சிறையிலிருந்து வெளியே வந்ததிலிருந்தே உழைத்து வாழும் எண்ணம் என் மனத்தில் இருந்தது. அந்த எண்ணம் முன்பே என் மனத்தில் இருந்தே வந்தது என்றாலும் சிறையில் அது உறுதிபெற்றது. எதற்கும் ஒரு காலம் உண்டு. சரியான காலம் வரும்முன்பு ஒரு எண்ணம் செயல்வடிவம் பெறுவதில்லை. இப்போது அந்தக் காலம் வந்துவிட்டது என்று தோன்றியது. எனவே காந்தி ஜெயந்தியை ஒட்டி அதை நான் துவங்கி விட்டேன்.

இவ்வாறு உடலால் உழைத்ததனால் என் அறிவாற்றல் வளர்ந்ததே-யன்றி குறையவில்லை. இரவும், பகலும் வெறும் உடலுழைப்பு செய்பவர் களின் அறிவாற்றல் மிக அதிகம் என்று நான் சொல்ல வரவில்லை. எந்த ஒன்றும் அளவுக்கு மிஞ்சினால் இயல்பான வளர்ச்சி தடைப்படும். நான் சொல்லவிரும்புவது எல்லாம் உடலுழைப்புக்கும், சிந்தனைக்கும் சரியான இடம் உள்ள வாழ்க்கையில் அறிவாற்றல் வளரும் என்பதே.

இதை நான் என் அனுபவத்திலிருந்து சொல்கிறேன். சிறுவயதிலேயே என் நினைவாற்றல் நன்றாகவே இருந்தது. அதாவது சாதாரண சராசரி நினைவாற்றலைவிட அதிகம். 60-62 வயதில் அதைவிட அதிகமானது. நினைவில் வைக்கவேண்டிய விஷயத்தை நான் மறப்பதே இல்லை. (இதே போன்ற ஒரு சந்தர்ப்பத்தில் விநோபாஜி, "நினைவில் வைக்க வேண்டாத விஷயத்தை கேட்டுக்கொண்டிருக்கும்போதே அல்லது படித்துக்கொண்டி ருக்கும்போதே நான் மறந்து விடுகிறேன்" என்றார். - *தொகுப்பாளர்)*

ஒரு புத்தகத்தில் ஒரு நல்ல கருத்து படித்து எனக்குப் பிடித்து-விட்டால், அதன் சொல்லாக்கத்துடன் அக்கருத்து என் நினைவில் பதிந்துவிடும். இதற்குப் பல காரணங்கள். ஆனால் வாழ்வில் உடலுழைப்பு இடம் பெற்றதும் ஒரு காரணம். உடலுழைப்பினால் ஜீவனோபாயம் தேடும் ஒரு மாபெரும் சித்தாந்தத்தின் மீது தோன்றியதே காந்திஜியின் புதிய ஆதாரக்கல்வித் திட்டமாகும்.

தனிப்பட்ட வாழ்க்கையை சீரமைத்துக்கொள்ள சமூக வாழ்க்கை துணைபுரிகிறது. காந்திஜியிடம் வந்து சேர்ந்தபின் நான் மணியடித்தவுடன் எழுந்துவிடுவேன். பிரார்த்தனைக்கு ஆஜராகாமல் நான் இருந்ததே இல்லை. அந்தக் கூட்டுப்பிரார்த்தனை இல்லாமல் தனிப்பட்ட வாழ்க்கையை சீரமைத்துக் கொள்வதில் எனக்குக் கிடைத்த வெற்றி கிட்டியிராது.

உண்மையில் தனிப்பட்ட வாழ்க்கை மற்றும் பொது வாழ்க்கை என்று இருமை இருக்கவே கூடாது. இந்த இரண்டும் தனித் தனிப்பகுதிகளாக இருக்கும் வரை வாழ்வில் இரண்டுக்கும் இழுபறி இருந்து கொண்டே இருக்கும். நமது ஒவ்வொரு சொந்தக் காரியமும் பொதுக் காரியமாகவும், ஒவ்வொரு பொதுக் காரியமும் சொந்தக் காரியமாகவும் இருக்கவேண்டும். நமக்கும் சமுதாயத்திற்கும் இடையில் சுவர் ஏதும் இருக்கலாகாது.

என்னைப்பொறுத்தவரை என் உணவையும் உறக்கத்தையும் கூட நான் என் சமுதாயக் கடமை என்றே கருதுகிறேன். இவை என் சொந்தக் காரியங்கள் என்று என்னால் பிரித்துணர இயலவில்லை. அதாவது அதையும் சமுதாயத்தொண்டின் ஒரு அங்கமாகவே நினைக்கிறேன். இரவில் சரியான நேரத்தில் தூங்கப்போவது, கனவற்ற ஆழ்ந்த தூக்கம், சரியான நேரத்தில் எழுவது இவற்றையெல்லாம் பொது வேலைகளின் ஒரு அங்கம் என்றே கருதுகிறேன். நான் இவ்வளவு நேரம் பொதுவேலை செய்கிறேன், இவ்வளவு நேரம் சொந்த வேலை செய்கிறேன் என்று எனக்குப் பிரித்து எண்ணத் தோன்றவில்லை. 24 மணிநேரத்தில் நான் செய்பவை அனைத்தும் சமுதாய வேலைகளே என்று நினைக்கிறேன். சாதாரண மக்களின் தொடர்பு குறைந்தவர்கள் தரிசன வாய்ப்பை இழக்கிறார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இறைவனை மூன்று வகையாக தரிசிக்கலாம். ஒன்று சாதாரண மக்கள் வடிவில், இரண்டாவது பரந்த சிருஷ்டியில், மூன்றாவது அந்தராத்-மாவில். மூன்றும் சேர்ந்தே பூரண தரிசனமாகும்.

## என் அநுபூதிகள்

'விசார் போத்தி'யில் நான் ஒரு விஷயம் எழுதியிருக்கிறேன். ஒருவர் ஒரு சமயம் 'எதிரே இருக்கிற விளக்கைப்பற்றி நிச்சயமாகக் கூறும் அளவிற்கு இறைவன் இருக்கிறான் என்று உங்களால் அறுதியிட்டுச் சொல்ல முடியுமா?' என்று என்னிடம் கேட்டார். நான் "இறைவன் இருக்கிறான் என்பது பற்றி எனக்கு உறுதி உண்டு. ஆனால் எதிரே இருக்கும் விளக்குபற்றி எனக்கு அவ்வளவு உறுதியான கருத்து இல்லை; அல்லது உங்களுக்கு உறுதி கூற முடியாது. அதாவது விளக்கு இருக்கிறது என்பதற்கு என்னால் உத்தரவாதம் தரஇயலாது" என்று பதில் சொன்னேன். இதை நான் விசார் போத்தியில் எழுதியது 1928-ல். இது நடந்து 30 வருடங்கள் ஆகிவிட்டன. இறைவனைக் கண்ணாரக் கண்ட உணர்வு எனக்குப் பலமுறை ஏற்பட்டிருக்கிறது. எங்கள் குடும்பப் பாரம்பரியத்தில் கிடைத்த பக்தியினாலும், சில நூல்களில் நான் வைத்த சிரத்தையினாலும் இது நடந்திருக்கலாம். ஆனால் என் பக்தி இவற்றை மட்டும் சார்ந்திருக்கவில்லை. நான் என் கண்களாலேயே இறைவனைக் கண்முன் கண்டிருக்கிறேன். என் கண் முன் காணும் பல்வேறு பிராணிகள், உயிரினங்கள், மனிதர்கள் அனைவரும் ஈஸ்வர வடிவங்களே.

இறைதரிசனம் என்றால் என்ன என்று அடிக்கடி பலர் கேட்கிறார்கள். இதில் இரண்டு விஷயங்கள் உள்ளன. முதலில் அறிவுக்கு ஏற்புடையதாக இருந்தால் இறை தரிசனத்திற்கு ஒரு அடிப்படையாக அது அமையும். அறிவுக்கு ஏற்புடையதாக இல்லாவிட்டால் இறை தரிசனம் என்னும் பேச்சுக்கே இடமில்லை. முதலில் அறிவு ஏற்கவேண்டும். அறிவு ஏற்றுக்கொண்டபின் அதை உணர்வது என்பது அடுத்த விஷயம். அறிவுக்கு எட்டுவது ஞானம், அதன்பின் உணர்வது விஞ்ஞானம். அதாவது விசேஷ ஞானம். அதுவே இறைதரிசனம். உதாரணமாக கருணையை எடுத்துக்கொள்வோம். உலகத்தில் கருணை நிரம்பியிருக்கிறது என்பதை அறிவு உணரவேண்டும். உலகம் கருணை நிரம்பியதாகவே படைக்கப்பட்டுள்ளது. என் தாய்க்கு என்மீது கருணையில்லை என்றால் என்னை சிராட்டி வளர்த்திருக்க மாட்டாள். என்னை யாராவது வளர்க்க வேண்டியது எனக்கு மிக அவசியம். இவ்வாறு அறிவுக்குக் கருணையின் இன்றியமையாமையும், அது படைப்பில் இருக்கிறது என்பதும் புலனாகவேண்டும். பிறகே கருணையை உணர முடியும். தாய் குழந்தைக்குக் காட்டும் அன்பை நாம் உணரும்போது கருணையின் தரிசனம் கிட்டும்.

### கருணையின் தரிசனம்

என் கருணை தனிமனிதக் கருணை அல்ல; சமுதாயக் கருணையாகும். ஒருவர் நோயுற்றால் அது என்னைச் சிறிதும் பாதிக்காத அளவு நான் கடின சித்தம் கொண்டவன். ஆனால் சமுதாயத்தின்பால் எனக்குள்ள கருணை இல்லாதிருக்குமானால் என் வாழ்வே முடிந்தமாதிரிதான். நாம் யாவரிடமும் ஒரே மாதிரியான அன்பும், இரக்கமும் கொண்டிருந்தால் தனி மனிதக் கவர்ச்சியே இருக்கமுடியாது என்பதே என் கொள்கை. பொறாமையும், போட்டியும் அரசர்களுக்கிடையே மட்டுமல்ல பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படுகிறவர்களிடமும் காணப்படுகின்றன. எனவே உயிரினங்கள் அனைத்தின் பாலும் அன்பும்,தயையும் விரிவடையும்போது அதில் தற்போது அன்பு, பாசம், காதல் ஆகியவற்றில் காணப்படும் ஆரவாரங்கள் இரா. ஆழம் மிக்க தண்ணீர் அமைதியாகக் காணப்படுவது போல ஆழ்ந்த அமைதியுடன் அது காணப்படும். வெளி பரந்துபட்டதால் சூன்யமாக விளங்குகிறது அல்லவா?

கருணையைப் பொறுத்தவரை இதைச் சொன்னேன். இது ஒரு சிறு தரிசனமே. மேலும் விரிவான இறை தரிசனங்களும் உண்டு. அதில் பல பழம்பெரும் சான்றோர்களும் சம்பந்தப்படுகிறார்கள்.

இன்னொரு விஷயத்தையும் கவனிக்கவேண்டும். வானொலி மூலமாக நாம் தூரத்து ஒலியையும் கேட்பது எப்போது சாத்தியமாகிறது? நம்மிடம் வானொலிப்பெட்டி இருக்கும்போதுதானே! வானொலிப் பெட்டி இல்லையானால் நம்மால் ஒலியைக் கேட்கமுடியாது. ஆனால் சுற்றுச்சூழலில் அந்த ஒலி அலைகள் இல்லாமல் இல்லை. அறிவியல் இதை நிரூபித்திருக்கிறது. அங்ஙனமே அப்படி ஒரு 'செட்' இருந்தால்தான் தரிசனம் கிட்டும். பழங்காலத்துப் பெரியோர்களின் குரல் சுற்றுச்சூழலில் பரவிக்கிடக்கிறது. அதை கிரகிக்கும் சக்தி உள்ளவர்களுக்கு அது எட்டும்.

### மறைந்த பெரியோருடன் தொடர்பு

காந்திஜியுடன் இப்போது கலந்துரையாடுவதாக நான் பலமுறை கூறியிருக்கிறேன். அவர் உயிருடன் இருந்தபோது அவரைச் சந்திக்க ஐந்துமைல் நடக்க வேண்டியிருந்தது. இரண்டு மணிநேரம் பிடிக்கும். அதற்கான உடல் சிரமம் வேறு. இப்போதோ கண்ணைமூடினால் ஒரு நொடியில் சந்தித்து விடுகிறேன். கேள்வி கேட்கிறேன், பதிலும் கிடைக்கிறது. எந்தவிதமான சிரமமும் இல்லை. அப்போது உடல் என்னும் தளை இருந்தது. அவருக்கு அதிலிருந்து விடுதலை கிட்டிவிட்டது. அவர் அனைத்தையும் கடந்து கட்டுகளின்றி நிற்கிறார். நான் இன்னும் கட்டுண்டிருக்கிறேன். ஆனால் இந்த உடலில் நான் இருக்கும்வரை அவரிடமிருந்து உத்வேகம் கிட்டியவண்ணம் இருக்கும்.

அவ்வண்ணமே நான் யாத்திரை செய்யும் போது எனக்கு முன்பாக ராமனும், பஞ்சபாண்டவர்களும், புத்தரும், மஹாவீரரும், சங்கரரும், ராமானுஜரும், கபீரும், நாமதேவரும்........ எல்லோரும் போய்க்

கொண்டிருக்கிறார்கள் என்று பலமுறை கூறியிருக்கிறேன். அவர்கள் பின்னால் நான் செல்கிறேன். பாபா தனியாள் இல்லை. இவர்கள் அனைவரின் துணையும் அவனுடன் இருக்கிறது. நான் தனியாக இருப்பதாக எனக்குத் தோன்றுவதேயில்லை. அவர்கள் என்னுடன் இருப்பதாகவே எப்போதும் உணர்கிறேன்.

புயல்வேக யாத்திரையின்போது ஒரு முறை நான் பேத்தியாவில் முகாமிட்டிருந்தேன். இரவு ஒரு கனவு கண்டேன். சாதுவான தோற்றம் கொண்ட ஒருவர் கண்முன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறார். வினயாஞ்சலி (துளசி தாசரின் வினயபத்திரிகாவிலிருந்து விநோபாஜியின் திரட்டு) பற்றி உரையாடல். அவர் இரண்டு பஜனைகளின் பொருளைக்கேட்டு சில சந்தேகங்களை எழுப்புகிறார். நான் விளக்குகிறேன். அவர் மனமொன்றி செவிமடுத்து இடை இடையே ஆமோதித்து தலையசைக்கிறார். சிறிது நேரம் கழித்து என்னுடன் பேசிக்கொண்டிருப்பவர் சாட்சாத் துளசிதாசரே என்று தெரிகிறது. தூக்கம் கலைந்து விட்டது. 'இது என்னடா விசித்திரமான கனவு' என்று யோசித்தால் அன்று துளசிஜயந்தி என்று நினைவுக்கு வந்தது. ஒவ்வொரு ஆண்டும் துளசிஜயந்தியன்று துளசிராமாயணத்தையோ, வினய பத்திரிகாவையோ புரட்டி அவரை நினைவு கூர்வது வழக்கம். அந்த வருடம் எனக்கு மறந்துவிட்டது. எனவே துளசிதாசர் என்னுடன் தானே வந்து உரையாடிச் சென்றார். அன்று அந்த பஜனைகளுக்கு எனக்குப் புதிய பொருள் புலப்பட்டது.

ஒருமுறை மனோஹர்ஜியின் ஒரு வினாவுக்கு பதிலாக ஞானேஸ்வரியில் ஒரு பாடலை விளக்கியிருந்தேன். அன்று இரவு தூக்கத்தில் ஞானேஸ்வரர் என்னுடன் கலந்துரையாடினார். "வின்யா, வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத' என்ற உபநிஷதவாக்கியத்தை அடியொற்றியே நான் 'வாக்குக்கும் புத்திக்கும் எட்டாத' என்று எழுதியிருக்கிறேன் என்று நீ விளங்கிக்கொண்டது சரியே. 'வாக்குக்கும் மனத்திற்கும்' என்பதற்கு பதிலாக 'வாக்குக்கும் புத்திக்கும்' எட்டாத என்று எழுதியிக்கிறேன். இது தற்செயலாக எழுதிவிட்டது அல்ல. உபநிஷதத்தின் 'மனம்' என்னும் சொல்லில் 'அறிவு' புதைந்திருக்கிறது. ஞானேஸ்வரியின் 'புத்தி' என்னும் சொல்லில் 'மனம்' புதைந்திருக்கிறது என்பதை உணரவேண்டும். ஆனால் நான் ஏன் 'புத்தி' என்ற சொல்லை ஆண்டிருக்கிறேன். உபநிஷதத்தில் ஏன் 'மனம்' என்று வருகிறது. இதை யோசித்தால் விளங்கும்" என்றார். நடந்தபேச்சு அவ்வளவுதான். பிறகு நான் அரை மணிநேரம் சிந்தித்தேன்.

**தெலுங்கானா : நேரில் கலந்துரையாடல்**

தெலுங்கானாவில் *(18-4-1951)* போச்சம்பள்ளியில் ஹரிஜனங்கள் நிலம் கேட்டனர். 100 ஏக்கர் தானமாகக் கிடைத்து விட்டது. அன்று இரவு 3 - 4 மணி நேரங்களே நான் உறங்கினேன். நடந்த அற்புதத்தைப்பற்றியே யோசித்துக்கொண்டிருந்தேன். எனக்கு இறைவன் மீது நம்பிக்கை உண்டு. அதற்கு அடுத்தபடியாக கணிதத்தின் மீது நம்பிக்கை. கணக்குப் போட்டுப் பார்த்தேன். இந்தியா முழுவதிலும் நிலமற்றவர்களுக்கு நிலம் அளித்து

அவர்கள் துயரைக் களைந்து மகிழ்விக்கவேண்டுமானால் ஐந்து கோடி ஏக்கர் நிலம் வேண்டும். இவ்வளவு நிலம் வெறுமனே கேட்டால் கிடைத்துவிடுமா? பிறகு இறைவனுடன் நேரே உரையாடினேன். நேரில் இருப்பவரிடம் பேசுவது போலவே பேச்சுவார்த்தை நடந்தது. இறைவன், "இதன் மீது சந்தேகப்பட்டு அச்சம் கொண்டாயானால், அஹிம்சை முதலியவற்றின் மீது உன் நம்பிக்கையை நீ உதறவேண்டும். அஹிம்சையால் முடியும் என்னும் உன் கொள்கையை நீ விட்டுவிடவேண்டும். எனவே நம்பிக்கை வைத்து யாசிக்க ஆரம்பி" என்றான். பிறகு, "குழந்தையின் வயிற்றில் பசியை வைத்தவன், தாயின் மார்பகங்களில் பாலையும் வைத்தான். அவன் ஏற்பாடுகள் அரைகுறையானவை அல்ல" என்றும் கூறினான். எனக்கு மன அமைதி ஏற்பட்டது. மறுநாளிலிருந்து நிலம் யாசிக்க ஆரம்பித்தேன்.

**சாண்டில்: ஆழ்நிலை சமாதி**

பூதான யாத்திரையின் போது சாண்டில் என்னும் இடத்தில் கடும் மலேரியாவால் நான் பீடிக்கப்பட்டேன். ஜுரம் கடுமையாக இருந்தது. நான் மிகவும் பலவீனமுற்றேன். பிழைப்பேன் என்ற நம்பிக்கை போய்விட்டது. இறைவன் என்னை அழைத்துக் கொண்டிருந்தால் எனக்கு சற்றும் துயரம் ஏற்பட்டிருக்காது. ஆனால் அன்று (17-12-1952) போகவேண்டியதே என்று தோன்றிய போது, ஜுரமும் மிக அதிகமாக இருந்தபோது, நான் தோழர்களிடம் என்னைத்தூக்கி உட்கார வைக்குமாறு சொன்னேன். அவர்கள் என்னைத் தாங்கி உட்கார வைத்தார்கள். நான் சிந்தனையில் ஆழ்ந்தேன். 25 - 30 நிமிடம் ஆழ்ந்திருப்பேன். எனக்கு தியானத்தில் பயிற்சி உண்டு. ஆனால் அப்போது எனக்குக் கிட்டிய திவ்ய தரிசனமும், ஆனந்தமும் முன் எப்போதும் நான் காணாதது. எல்லையற்ற, தடங்கலற்ற ஆனந்தமும், அமைதியும் கிட்டின. இறைவனுக்கு அருகில் சென்று நேரில் காண்பது போலத் தோன்றியது. நீங்கள் அதை உருவெளித்தோற்றம் என்றோ மாயை என்றோ எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். சங்கராச்சாரியார் உலகையே மாயம் என்றார். இந்த உணர்வும் உலகைச் சேர்ந்ததே. ஆகையால் இதையும் மாயை என்று சொல்லலாம். அரை மணிநேரம் கழித்து கண் விழித்தேன். என் புதிய உலகிலிருந்து மீண்டு வந்தேன். சாஸ்திரங்களில் ஆழ்நிலை சமாதி என்கிறார்களே அது போன்ற உணர்வு. ஒரு நிர்க்குண நிலையை உணர்ந்தேன்.

என் உடல் வியர்த்துவிட்டிருந்தது. ஜுரம் இறங்கி விட்டிருந்தது. நான் இரண்டுக்கும் தயாராக இருந்தேன். உலகத்தைத் தாங்குபவன் என்னையும் தாங்குகிறான். அவன் என்னை அழைத்தால் போக நான் சித்தமாக இருந்தேன். அதற்கு மாறாக உடல்நலம் பெற்றால் உடல் மற்றும் உள்ளத்து மாசுகள் அகன்று மனோபலம் அதிகமாகும். அதற்கும் நான் சித்தமாக இருந்தேன்.

நான் முன்பே பலஹீனன். இப்போது உடலில் இருந்த வலுவும் குன்றியிருந்தது. ஆனால் மனத்தில் உற்சாகம் மிகுந்திருந்தது. 'உலகத்தைத் தூக்கிப் பந்தாடலாமா' என்கிற வேத மந்திரம் நினைவுக்கு வருமளவு உற்சாகம்.

**உலாவ்: திவ்ய ஸ்பரிஸம்**

பீஹாரில் முங்கேர் மாவட்டத்தில் யாத்திரை நடந்து கொண்டிருந்த சமயம். உலாவ் என்னும் சிற்றூரில் முகாம். ஒரு சிவன் கோவிலின் கீழ்த்தளத்தில் பொதுக்கூட்டம். பெரும்பாலும் சிவன் கோவில் கீழே இருக்கும். சபைக்கூடம் மேலே இருக்கும். இங்கே நேர்மாறாக இருந்தது. நான் உட்கார்ந்த இடம் சிவலிங்கத்திற்கு நேரே கீழே இருந்தது. அங்கே அமர்ந்தபோது சிவன் என் மீது ஆரோஹணித்திருப்பதாகவும், நான் அவருடைய நந்தி என்றும் தோன்றியது. அப்போது யோகாரூடன் என்பதற்கு எனக்குப் புதிய பொருள் தோன்றியது. அதுவரை யோகத்தின்மேல் அமர்ந்தவன் யோகாரூடன் என்று பொருள் கொண்டு வந்தேன். இப்போது யார் மீது யோக நிலை கூடியிருக்கிறதோ அவன் யோகாரூடன் என்று தோன்றியது. இது திவ்ய, சகுணமயமான ஸ்பரிஸம் ஆகும். (பாரதியாரின் வாக்கில் "நின்னைத் தீண்டும் இன்பம்"- *மொழிபெயர்ப்பாளன்*) அது வரை நான் தொண்டர்களை வெறிகொண்டவன்போல் அதட்டி, கண்டித்து வந்தேன். இதற்குப் பிறகு நான் பேசிய பேச்சுக்களில் கூர்ந்து கவனித்தால் பெரிதும் மாற்றத்தைக் காணலாம்.

**கேரளம் : நெஞ்சோடு நெஞ்சணைத்த இன்பம்**

1957 ஆம் வருடம் ஆகஸ்ட் 22 ஆம் தேதி, கர்நாடகத்தில் நுழைய இரண்டு தினங்கள் முன்பு நடந்தது இது. இரவு கொசுவலைக்குள் உறங்கிக் கொண்டிருந்தேன். தேள் கொட்டியது போல் இருக்கவே கொசுவலையை விட்டு வெளியே வந்தேன். படுக்கையை உதறினால் கான் கஜூரா என்னும் பூச்சி ஒன்று வெளிப்பட்டது. பொறுக்கமுடியாத வலி. ஒரு இடத்தில் இருக்கமுடியவில்லை. அங்கும் இங்கும் உலவினேன். தாங்கமுடியாத வலி. சுமார் ஐந்து மணி நேரம் இப்படிக் கழிந்தது. பிறகு படுக்கையில் படுத்தேன். கண்களிலிருந்து கண்ணீர் தாரைதாரையாகப் பெருகியது. வல்லபஸ்வாமிக்கு வலியினால் கண்ணீர் பெருகுகிறது என்று தோன்றியது. 'எனக்கு வலியில்லை, நீங்கள் தூங்குங்கள்' என்று நான் அனைவரிடமும் சொன்னேன். மனத்திற்குள்,

> "உள்ளமிதில் வேறு பற்றில்லைகாண். உள்ளதை உரைக்கின்றேன், உத்தமனே! காமகுரோதம் நீக்கி என் நெஞ்சில் நீங்காத பக்தி நல்குவாய் நாயகனே!"

என்று சொல்லிக்கொண்டிருந்தேன். ஆனால் வலி போகவேண்டும் என்கிற அவா (பற்று) இருக்கத்தான் செய்தது. உள்ளதை உரைக்கிறேன் என்று வாய் சொல்லிற்றே தவிர உண்மையில் 'இல்லாததை இயம்புகிறேன்' என்றே ஆயிற்று. என்ன அகந்தை! நான் மனத்திற்குள் 'எவ்வளவு நேரம் வதைப்பாயோ?' என்று உரத்துக் கூறிக் கொண்டேன். உடனே என் வலி நீங்கியது. யாரோ என்னை நெஞ்சோடு கட்டியணைப்பது போன்று இருந்தது. என் கண்களில் நீர் பெருகியது. நான் படுத்தேன். இரண்டு நிமிடங்களில் தூக்கம் வந்துவிட்டது. இது ஒரு சகுணமயமான உணர்வு.

**பண்டரிபுரம் : நேருக்குநேர் தரிசனம்**

மகாராஷ்டிர யாத்திரையின் போது நான் பண்டரிபுரம் போய்ச் சேர்ந்தேன். அங்கே விட்டல்நாதனின் கோவிலைச் சேர்ந்தவர்கள் சுவாமி தரிசனத்திற்கு எனக்கு அழைப்பு விடுத்தனர். என்னுடன் பல மதத்தினரும் இருந்தனர். அவர்களுடனேயே நான் விட்டலனைத் தரிசித்தேன் (29-5-1958). அன்று நான் கண்டதை வாழ்நாள் முழுவதும் மறக்க இயலாது. அது என் மனத்தில் அவ்வளவு ஆழமாகப் பதிந்தது. விட்டோபாவின் காலடியில் நான் நின்றிருந்தபோது எனக்கு ஏற்பட்ட உணர்வுகளை வார்த்தையில் கூறமுடியாது. கண்களிலிருந்து சுமார் ஒருமணிநேரம் கண்ணீர் பெருகியது. நான் விட்டல்நாதனின் மூர்த்தியைப் பார்த்தேன். அங்கே எனக்கு கல்லாலான சிலை தெரியவில்லை. சாட்சாத் இறைவனே தெரிந்தான். ராமானுஜர், நம்மாழ்வார், ஞானதேவர், சைதன்யர், கபீர், துளசிதாசர் ஆகியோருடன் நான் அங்கே இறைவன் சந்நிதியில் பிரவேசித்ததாக உணர்ந்தேன். சிறுவயதிலிருந்தே இவர்களுடைய நல்லிணக்கத்தில் நான் வளர்ந்து வந்தேன். இவர்கள் அனைவரும் என் நினைவில் பவனி வந்தனர். நான் தலை வணங்கியபோது அங்கே என் தாயைக் கண்டேன், தந்தையைக் கண்டேன், குருநாதரைக் கண்டேன், பிரியமானவர்கள் அனைவரையும் கண்டேன். யாரைத்தான் காணவில்லை? அனைவரையும் கண்குளிரக் கண்டேன்.

நான் இறைவனை ஒரு சைதன்யக் கடலாகக் காண்கிறேன். அந்தக் கடலில் அலைகள் எழுகின்றன, நடனமிடுகின்றன, பின்னர் அதிலேயே மறைகின்றன. மீண்டும் எழுகின்றன, மறைகின்றன. ஜீவாத்மாக்கள் அந்த கடலின் அலைகளே. ஒன்று, இரண்டு, மூன்று ஜன்மங்கள் எடுத்து, பிறகு அதிலேயே மறைந்துபோகின்றன. அதாவது முக்தியை அடைந்து விடுகின்றன. இதில் உயர்வேது, தாழ்வேது? அலைகள் பலவிதம். அவ்வளவே.

# விடுதலைப்பேறு

**உள்முக தியான யோகம்**

பாலின் ஒவ்வொரு துளியிலும் பாலின் கொழுப்பு உள்ளது. பாலைக் காய்ச்சினால் அது ஆடையாக தனியே தெரிகிறது. அதே போல இறைவன் உலகெங்கும் இருக்கிறான். தவமுயற்சியினால் அவனை நாம் வெளிக்கொணரவேண்டும். அதுவரைதான் சாதகனின் வேலை. அதைச் சாதித்தவனுக்கு பாலாடை தனியே எடுத்து வைத்தது போலத்தான். பாலில் ஆடையை தன் ஞானத்தினால் தரிசித்தவனுக்கு பாலைக்காய்ச்சி ஆடையைத் தனியே பிரித்துக் காணவேண்டிய அவசியம்கூட இல்லை.

பெரியோர்களின் கிருபையால் எனக்கு இந்த தரிசனம் கிட்டியது. எனது வாழ்வே எங்கும் பிரம்மத்தை உணர்தல், மன நிறைவே உருவான இயல்பான சொற்பெருக்கு, இடை விடாத உலகநேயம் என்று ஆகிவிட்டது.

உடலின் மீது விருப்பும் இல்லை வெறுப்பும் இல்லை. இப்போது நான் வேறு, மற்ற உயிர்கள் வேறு என்று நினைக்க முயன்றாலும் முடியாது. இறைவன் என் வாழ்வில் ஊடுருவி விட்டான். அதனால் என்னுள் பெருகும் ஆனந்தத்தை அனைவரும்தான் பார்க்கிறீர்களே!

இனி உலகக்காரியங்களின்பால் துறவு மனப்பான்மையும், இடைவிடாத இறை நாமமும் மட்டுமே நிலவுவதாக என் இகபர காரியங்கள் யாவும் முடிந்தன. இறைவன் திருநாமம் ஒன்றையே பற்றி நிற்கிறேன்.

*2-11-1969:* நான் என் வீட்டில் என் அறைக்கு (வார்தா) வந்திருக்கிறேன். ஏழு நாட்கள் சேவா கிராமத்தில் இருப்பேன். அதற்குமேல் கடவுளுக்குத்தான் தெரியும்.

**ஏழுநாள் வேலைத் திட்டம்**

*15-11-1969:* நான் அடுத்த ஏழுநாட்களுக்கு மட்டுமே வேலைத்திட்டம் தீட்டுவது என்று தீர்மானித்திருக்கிறேன். அதற்கு மேற்கொண்டு திட்டம் வகுத்துக்கொள்ள மாட்டேன். இன்று மதியம் மூன்று மணிக்கு இங்கிருந்து (சேவாகிராமம்) கிளம்புவோம். சாந்திகுடி (கோபுரி-வார்தா)யில் அடுத்த முகாம்.

*7-6-1970:* இன்று ஜுன் மாதம் ஏழாம் தேதி பிரம்ம வித்யா மந்திர் போனால் என்ன என்று யோசித்தேன். 54 வருடங்களுக்கு முன்பு இதே

தினத்தில்தான் நான் காந்திஜியிடம் போய்ச் சேர்ந்தேன். நான்கு ஆண்டுகளுக்கு முன்பு எல்லா வேலைகளையும் காந்திஜிக்கு சமர்ப்பணம் செய்து விட்டு இதே தினத்தில்தான் சூட்சுமத்தில் பிரவேசித்தேன். எனவே இன்று பிரம்ம வித்யா மந்திர் போய் ஏழுநாட்கள் அங்கே இருக்கத் தீர்மானித்தேன். உடனே பவுனாருக்குக் கிளம்பினேன். கொஞ்சம் கால்நடை, பிறகு கொஞ்சம் கார் பயணம்.

இங்கே (பிரம்ம வித்யா மந்திர்) சகோதரிகளிடம் "ஏழுநாட்கள் தங்குவதற்காக இங்கே வந்திருக்கிறேன். என்னை நானே எதனுடனும் பிணைத்துக் கொள்ள விரும்பவில்லை. பீஹாரில் நக்சல்பாரிகள் சர்வோதய ஊழியர்களுக்கு மிரட்டல் விடுத்துள்ளார்கள். இச்செய்தி கேட்டு ஜெபி. தன் ஓய்வைக் கைவிட்டு பீஹார் கிராமங்களில் சுற்றிக் கொண்டிருக்கிறார். நாம் நம் மனத்தை மூடி வைத்துக்கொள்ளக் கூடாது. நான் என் மனத்தைத் திறந்து வைத்துள்ளேன்," என்று கூறினேன்.

*14-6-1970:* இன்று இங்கு வந்து ஏழுதினங்கள் ஆகிவிட்டன. அடுத்தவாரமும் இங்குதான் இருப்பேன். ஏழு ஏழு நாட்களுக்குத் திட்டம் வகுப்பதன் உட்பொருள் என்ன என்று சகோதரிகள் கேட்கிறார்கள். அதில் புதுமை இருக்கும் என்பதுதான் விஷயம். ஏழு ஏழு நாட்களாக ஏழுவருடங்கள் கூட ஒரு இடத்தில் இருக்கலாம். ஏழு நாட்களுக்கு மட்டுமே வேலைத்திட்டம் வகுத்துக்கொள்வதால் புதுமையுடன் கூட விழிப்புணர்வு கிடைக்கிறது.

இதை எப்படி வகுக்கிறேன்? இறைவனிடமிருநது சமிக்ஞை கிடைக்கிறதா? அப்படியொன்றும் இல்லை. பொது ஜன இயக்கத்தாலும் இது தீர்மானிக்கப்படுவதில்லை. ஏதோ ஒரு அடையாளம் தீர்மானிக்கிறது என்று சொல்லலாம். குருவி பறக்கிறது. என் கவனம் திரும்பினால் அங்கே இருக்கிறேன். குருவி பறந்துவிட்டது. என் கவனம் அதன்பால் திரும்பவில்லை என்றால் 'சரி, இதுதான் இந்த இடத்தை விட்டுப்போக அடையாளம்' என்று புறப்பட்டு விடுகிறேன். என்னை இங்கு (பிரம்ம வித்யா மந்திர்) இழுக்கும் சக்தி பரத்ராம் சிலையாகும். ஆனால் பரதனும் ராமனும் உலகில் எங்கெங்கும் இருக்கிறார்கள். எனவே அவர்கள் என்னை இங்கேயே கட்டிப்போடுவதில்லை. ஆனாலும் ஒரு ஈர்ப்பு இருக்கத்தான் இருக்கிறது.

**ஓரிட ஒடுக்கம்**

செப்டம்பர், '70: என் மனம் இங்கு நிலை கொண்டு விட்டது. ஏழு ஏழு நாட்களுக்கு வேலைத்திட்டம் என்பதைப் பொறுத்த வரை நான் இன்னும் இந்தியாவில் எங்காவது ஏதாவது நிகழ்ந்தால் போகக் கூடும் என்கிற அளவில் என்னை நானே கட்டுக்கள் இன்றி வைத்துள்ளேன். மற்றபடி என் மனத்தில் இங்கேயே இருக்கும் எண்ணம் நிலை பெற்று விட்டது. பிரம்மவித்தைக்கு வலுப்படுத்துவதில் கவனம் செலுத்தவேண்டும். இங்கு எல்லா வேலைகளும் சர்வ சம்மதத்துடன் நடைபெறுகிறது. தொடர்ந்து அப்படியே நடக்கும். நான் துப்புரவுப்பணி ஒன்றின் மீது மட்டும் நாட்டம் செலுத்துவேன். வருபவர்கள் மனம்திறந்து பேசலாம். தனிப்பட்டமுறையில் கேள்விகள் கேட்கலாம். அவர்களுக்கு விடை அளிப்பேன். மெல்ல மெல்ல உள்முக தியானம் வளரும்.

*6-10-1970:* "இன்று நான் இங்கு (சேவாகிராமம்) எதற்காக வந்திருக்கிறேன் என்றால் நாளையிலிருந்து நான் ஸ்தானகவாசியாகப் போகிறேன். ஜைன மதத்தில் ஸ்தானக வாசம் என்று ஒரு முறை உண்டு. பொருட்கள் பலவற்றைத் துறப்பது போல இடங்களைத் துறப்பது ஸ்தானக வாசம், நாளையிலிருந்து என் ஸ்தானக வாசம் ஆரம்பம். ஒவ்வொரு நாளும் புனிதமானதே. ஆனாலும், நாளையதினம் எனக்கு ஒரு முக்கியமான நாள். நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு அக்டோபர் மாதம் ஏழாம் தேதியன்றுதான் நான் கீதாயி எழுத ஆரம்பித்தேன். எனவே நாளையிலிருந்து நான் 'டிடென்ஷன் கேம்ப்' (Detention Camp) துவங்குகிறேன். ஜைனர்கள் பாஷையில் ஸ்தானக வாசம், ஹிந்துக்கள் மொழியில் க்ஷேத்திர சன்னியாசம், நவீன பாஷையில் டிடென்ஷன் கேம்ப். மனிதன் தன்னைத் தானே ஒரு இடத்தில் நிறுத்திக் கொள்வதால் அனைவருக்கும் சௌகரியம், நாளையிலிருந்து நான் இங்கு வரமாட்டேன். ஆனால் என் நல்லெண்ணம் இங்குள்ள அனைவர்பாலும் இருக்கும். இனி அந்த இடத்திலிருந்து (பிரம்ம வித்யா மந்திர்) அகலுவதாக இல்லை. இது என்னுடைய சொந்தத் தீர்மானம் அல்ல. உள்ளிருந்து ஒரு குரல் ஒலித்தது. அதனை நான் கட்டளை என்று வைத்துக் கொண்டேன். மறு கட்டளை வரும் வரை அங்கே இருப்பேன். நீங்கள் என்னிடம் வந்து கொண்டிருங்கள். ஏதாவது கேட்க வேண்டுமென்றாலும் கேட்பதற்காக வரலாம், வெறுமனே நட்பு முறையிலும் வரலாம். சதுரங்கம் ஆடக்கூட வரலாம்."

**சூட்சுமத்தில் நாட்டம்**

*அக்டோபர் 1970:* இப்போதெல்லாம் என் மனம் மோனத்தை நாடுகிறது. உடலும் மிகவும் தளர்ந்துள்ளது. இறைவன் என்னை அழைத்துக் கொள்ளவேண்டும் என்றே விரும்பினேன். ஆனால் அவன் விருப்பம் வேறாக இருந்தது. இந்த உடலினால் இன்னும் ஏதோ வேலைவாங்க கருதியிருக்கிறான் போலும், என்ன வேலை என்பதற்கும் கட்டளை அவனிடமிருந்தே வரும்.

இதுவரை நடந்த வேலை (கிராம சுயராஜ்ய நிதி திரட்டும்) பணியை மாபெரும் வெற்றி என்றே நான் கருதுகிறேன். திலகருக்கும் சுயராஜ்ய நிதி திரட்டப்பட்டது. ஆனால் அப்போது திலகர் கீர்த்தியின் உச்சத்தில் இருந்தார். நானோ இப்போது அபகீர்த்தியின் உச்சத்தில் இருக்கிறேன். நாட்டில் பாபாவைப் போற்றுபவர் பலர் இருக்கலாம். ஆனால் பாபாவின் வேலை போகஸ் என்று பலர் கூறுவார்கள். பாபா, போகஸ் இரண்டுமே ஆங்கில எழுத்தான 'பி'யில் ஆரம்பிக்கின்றன. நான் இந்த நிலையை எதிர்பார்த்தே இருக்கிறேன். பூதான வேலை ரொக்கம் போன்றது என்று நான் பீஹாரில் கூறினேன். கிடைத்ததைப் பகிர்ந்து விடுவது, தீர்ந்தது கதை. நிச்சயமானது. இவ்வளவு பூமி பகிர்ந்தளிக்கப்பட்டது என்ற பெருமையினால் பாபாவின் புகழை மீண்டும் நிலை நாட்ட முயற்சி செய்து வருகிறார்கள். ஆனால் கிராமதானவேலை அப்படியல்ல. இதிலிருந்து ஒன்று எல்லையற்றது கிடைக்கும் அல்லது ஒன்றுமே கிட்டாது. இடைப்பட்டதாக எதுவும் கிடைக்காது. இன்று அது சூன்யமாகத் தோன்றுகிறது. அதிலிருந்து எல்லையற்றதைப் பெற ஜெயப்பிரகாஷும் மற்ற நண்பர்களும் முயன்று வருகின்றனர். இது காலத்தின் தேவையாகையால் முயற்சி வெற்றி பெறும் என்று நினைக்கிறேன்.

*10-10-1970:* நான் சூட்சுமத்தில் பிரவேசித்திருக்கிறேன். இதனை சேவா கிராமத்தில் அறிவித்தேன். இதன் முழுப்பொருள் போகப்போக விளங்கும். இது என் சொந்தக் கருத்தின் படி மேற்கொண்டதல்ல. உள்ளிருந்து கட்டளை கிடைத்தது. இது என் ஓரிடத்து ஒடுக்கமாகும். பல்வேறு இடங்களில் சஞ்சரிப்பதை விடுத்து ஒரு இடத்தில் இருப்பது என்னும் கருத்து பழைமை யானது. தியானம் மற்றும் ஆன்மீக முன்னேற்றத்திற்காக இப்படி க்ஷேத்திர சன்னியாசம் அனுஷ்டித்து வந்தனர். என் எண்ணம் வேறு. சமுதாயச் சிந்தனைகளுடன் நான் சூட்சுத்தில் பிரவேசித்துள்ளேன். வெளி ஆரவாரங்களே செயல் அல்ல. நம் செயல்பாடு சூட்சுமமாக ஆக ஆக விளையும் வினை பெரிதாக அமையும். இது என்னுடைய பழைய சித்தாந்தம். இப்போது நான் சூட்சுமத்தில் பிரவேசிக்கும் காலம் வந்துவிட்டது. ஐந்து ஆண்டுகளுக்கு முன்பே சூட்சுமத்தில் பிரவேசித்தேன். ஆனால் பீஹார் தான வேலைகளில் ஓரளவு முன்னேற்றம் காணும்வரை நான் அங்கு போக நேர்ந்தது. இப்போது மற்றவர்கள் அந்த வேலையைப் பூர்த்தி செய்து கொண்டுள்ளனர். ஜெயப்பிரகாஷ் உயிரைக் கொடுத்து உழைக்கிறார். எனவே நான் இந்தியாவின் மத்தியப்பகுதியில் வந்து உட்கார்ந்து கொண்டுவிட்டேன்.

சூட்சுமப்பிரவேசம் என்றால் என்ன என்று கேட்கிறார்கள். உலகளாவப் பரவுவதே அது. அதாவது படைப்பு முழுவதையும் முன்னிறுத்தி இறைவன் வடிவத்தை அதில் காண்பதே ஆகும். அதாவது மக்களை முன்னிறுத்தி அந்தராத்மாவில் லயிப்பது. அதன் பயன் என்னவாகும் என்றால் இப்படிச் செய்பவன் மேலும் மேலும் சூட்சுமத்தை நோக்கி முன்னேறுவான். அப்படி முன்னேறுவதே அவன் தன் முயற்சியில் வெற்றிபெற்று வருகிறான் என்பதற்கு அடையாளம். இந்த உணர்வு அவனுக்கு ஏற்படும் பயனாகும். சமுதாயத்திற்கும் அணுசக்தியின் பயனைப் போல சூட்சுமமான செயலினால் பெருத்த பயன் ஏற்படும். இந்த சூட்சுமம் என்பது அணுசக்தி போன்றது. இதுபற்றி ஸ்தூலவிளக்கம் சொற்களால் தர இயலாது.

**துப்புரவுத் தவம்**

மே '71: துப்புரவுப் பணியில் இவ்வளவு நாட்டம் ஏன் என்று மக்கள் கேட்கிறார்கள். 'இறைவன் (பரத்ராம்) நம் வாசலுக்கு வந்திருக்கிறானே. எனவே துப்புரவு செய்யும்போது அவன் சந்நிதியில் நிற்கும் உணர்வு ஏற்படுகிறது' என்று நான் சொன்னேன்.

இறைவன் வாசலில் ஒரு கணம் நிற்போர், நான்கு வித முக்திகளை அடைகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. 1916-லிருந்து 1966 வரை தொண்டு செய்தபின் சூட்சுமத்தில் பிரவேசித்தேன். அது கர்ம முக்தி. அதன்பிறகும் 2 - 3 வருடங்கள் பீஹார் தான வேலை பெரிதாக இருக்கவே அதன்பால் கவனம் சற்று போயிற்று. கொஞ்சம் வேலைகளும் செய்தேன். ஆனால் இனி செய்ய வேண்டி வராது. இப்போது ஓரிட ஒடுக்கம் மேற்கொண்டாயிற்று. பிறகு நூல்களிலிருந்தும் முக்தியும் கிட்டிவிட்டது. நான் பல நூல்களை எழுதியிருக்கிறேன். இப்போதுகூட என் பெயரால் 5 - 6 புத்தகங்கள் வெளி வந்துள்ளன. இனி நான் நூல்கள் எழுதமாட்டேன். இப்போது என்னிடம் இரண்டு நூல்கள்தான் உள்ளன. வேத உபநிஷதத்திரட்டும், ஆக்ஸ்போர்டு

அகராதியும். மற்றவற்றையெல்லாம் அப்புறப்படுத்திவிட்டேன். வேத உபநிஷதத் திரட்டும் அதிகநாள் என்னிடம் இருக்காது. நான் என்ன படிக்கிறேன். ஒன்றுமில்லை. ஆக படிப்பதிலிருந்தும் கூட முக்திகிட்டி விட்டது. நான்காவது கற்பிப்பதிலிருந்தும் விடுதலை. 1911-ல் நான் கற்பிக்க ஆரம்பித்தேன். முதலில் என் வகுப்புத் தோழர்களுக்கு, பிறகு ஆசிரம வாசிகளுக்கு. இப்படியாக சுமார் அறுபது ஆண்டுகளாக ஆசிரியத் தொழில் நடந்தது. இவ்வருட முடிவுக்குள் அதுவும் முடிந்துவிடும். ஆக கற்பித்தலினின்றும் முக்தி கிட்டிவிடும்.

துப்புரவுப் பணிக்குப் பதிலாக ஜபமாலையை உருட்டி ஏன் நேரத்தை வீணாக்குகிறீர்கள் என்று யாரும் என்னிடம் கேட்கமாட்டார்கள். குப்பை பொறுக்குவதும் எனக்கு ஒரு ஜபமாகி விடுகிறது. ஒவ்வொரு துரும்பைப் பொறுக்கும்போதும் இறைவன் நாமம் ஒன்றைச் சொன்னால் தீர்ந்தது. நான் சில சமயங்களில் எண்ணிப் பொறுக்குகிறேன். இன்று 1225 துரும்பு பொறுக்கினேன். அதில் மனமொன்றும் செயல்படுவதில்லை. அது ஒரு தியானயோகமேயாகும்.

இன்னொரு விஷயம். வெளியே குப்பையை அனுமதிக்காதவன் உள்ளேயும் குப்பையை அனுமதிக்கமாட்டான். உள்ளேயிருக்கும் குப்பையை அகற்ற வேகம் பிறக்கும். இது தூய்மையின் ஒரு ஆன்மீகப் பயன். எல்லோருக்கும் இந்த வேகம் பிறக்காமல் இருக்கலாம். ஆனால் ஆழ்ந்த ஈடுபாட்டோடு செய்தால் தியானயோகம் கைகூடக்கூடும்.

நான்காவதாக இங்கு இருப்பவர்களுக்கு சுற்றுப்புறத்தில் அழுக்கு இருக்கலாகாது என்பதை இது சொல்லாமல் சொல்லுகிறது.

ஒருமுறை ஒரு அன்பர், 'உலகத்திலும், நாட்டிலும் இவ்வளவு மோசமான நிலை இருக்க, நீங்கள் அங்கு மிக மிகத் தேவையாக இருக்க, நீங்கள் இந்த வேலை செய்து கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்களே" என்று கேட்டார். "நான் பொறுக்கும் குப்பையில் கொஞ்சம் எடுத்துப்போய் ஒரு பாட்டிலில் போட்டு அதன் மீது 'முட்டாள் பாபா' என்று எழுதிவையுங்கள்" என்று சொன்னேன். இதுதான் பாபாவின் வேலை! ஜெயப்பிரகாஷ் அங்கே அந்த வேலை செய்கிறார். பாபா இங்கே இந்த வேலை செய்கிறார், அவ்வளவுதான்.

**துணை நூலாக**

மே, 1971: இப்போதெல்லாம் எந்தத் தனி மனிதனின் பெயரையும் என் நினைவில் நிறுத்துவதில்லை. இறைவனைத் தவிர சிந்தனை எதுவும் கிடையாது. செய்தித்தாள் மட்டும் பார்க்கிறேன். நாலாபக்கத்திலும் நடப்பவற்றை கவனிக்கிறேன். குறிப்பாக தற்போது கிழக்கு வங்காளத்தில் நடப்பவற்றைக் கவனிக்கிறேன். ஆழ்ந்து கவனித்தேன். மற்றபடி ஒரு துணை நூல் (Reference book) போல இருக்கிறேன். யாராவது பயன்படுத்தினால் அவர்களுக்குப் பயன்கிடைக்கும்.

ஜூன், 1971: யாராவது இறந்துபோனார்கள் என்று கேள்விப்பட்டால் நல்ல செய்தி கேட்டோம் என்று தோன்றுகிறது. மனிதன் சொந்த வீடுபோய்ச்

சேர்ந்தான் என்பது நல்ல செய்தி இல்லாமல் வேறு என்ன? அந்த உலகமே நம்முடையது. இது நம்முடையது அல்ல. இன்று நம்முறை வரக்கூடும். போனால் எப்படி புறப்பட்டுப் போகவேண்டும்? சிரித்துக் கொண்டும், பாடிக்கொண்டும் சந்தோஷமாகப் போகவேண்டும். இந்த வாழ்வை நாலுநாள் விளையாட்டாகக் கருதிப் போகவேண்டும். சிரித்து விளையாடி இந்த நான்கு நாட்களையும் கழிக்கவேண்டும். கீதையில் 'துஷ்யந்தி சரமந்திச' என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்த உடலில் மரணம் விளையும் வினோதத்தைக் கண்டு நான் குதூகலமடைகிறேன். மரணத்திற்குப் பின் என்ன நிகழும் என்று கற்பனை செய்து பார்க்கிறேன். நான் உண்மையில் யார்? கோடிக்கணக்கான மக்கள் மாண்டுபோகிறார்கள். மகாத்மாக்களும் தப்புவதில்லை. மரணத்திற்குப் பின் எஞ்சுவது இறைவனும் உலகுமே. நாம் வருகிறோம், போகிறோம். கடலில் எவ்வளவோ அலைகள் எழுகின்றன. சில சிறியவை, சில பெரியவை. சில உயரமாக எழுகின்றன, சில அப்படி எழுவதில்லை. ஆனால் அவை அனைத்தும் அலைகளே. எனவே யார் எவ்வளவு வேலை செய்தார்கள் என்று கணக்குப் பார்ப்பது வீண்.

செப்டம்பர், 1971: இனி உங்கள் வேலைத்திட்டம் என்ன என்று பாபாவிடம் மக்கள் கேட்கிறார்கள். பாபா இங்கே உட்கார்ந்து கொண்டு என்ன செய்கிறான்? உள்முகதியானம் செய்கிறான். அவ்வளவுதான். தொண்டர்கள்பற்றித் தெரியவரும் செய்திகளைப் படிக்கிறான். நம் தொண்டர்கள் வேலை செய்யும் இடங்களிலெல்லாம் நினைவு சென்றவிடமெல்லாம். அவர்கள் விடுக்கும் செய்தியை எடுத்துச் செல்கிறான். அப்புறம் துப்புரவுப்பணியும் செய்கிறான். இதுதான் பாபாவின் இன்றாகும். நாளை? அது யாருக்குத் தெரியும்?

காந்திஜியின் ஒரு அறிவுரையை பாபா கேட்டதேயில்லை.. அதுதான் தினமும் டைரி எழுதுவது. பாபாவின் மீது நம் பழைய சான்றோர்களின் அருள் இருந்தது. அவர்கள் கடந்தகாலத்தின் மீது பற்றையும், எதிர்காலத்தின் மீது கவலையையும் விடச்சொன்னார்கள். பாபாவின் மனத்தில் இது பதிந்திருக்கிறது. அவன் கடந்ததை நினைப்பதில்லை. வரப்போவதற்கு கவலைப் படுவதுமில்லை.

ஜனங்கள் 'பாபா! நீங்கள் தன் வரலாறு எழுதவேண்டும்' என்கிறார்கள். பாபா தன் வரலாறு எழுதப்போனால் அது 'தான்' அற்ற வரலாறாகவே முடியும். 'தன்' கதையை எழுதமுடியாது. இந்த உடலின் கதையை வேண்டுமானால் எழுதலாம். அது (காந்திஜி எழுதியது போல) சத்திய சோதனை ஆகாது. அது ஞாபகமறதி சோதனையாகவே விளங்கும். முன்னுரையில் 'இதில் எழுதியிருப்பதெல்லாம் உண்மை என்பதற்கு உத்தரவாதம் கிடையாது' என்று பாபா எழுதுவான். ஏனெனில் பாபா ஞாபகமறதி பாபா ஆவான். அவன் நிறைய விஷயங்களை மறந்துவிட்டான். மறந்து கொண்டே இருக்கிறான். பாபா கடந்தகாலச் சுமைகளை சுமந்து திரிவதில்லை. போனது போயிற்று, வருவது வரட்டும்.

பாபாவின் இப்போதைய பரிசோதனை, உலகத்தை மனத்தில் நிறுத்தி மனரீதியாக செய்தி அனுப்புவதாகும். இதை உலக நன்மைக்காக செய்ய வேண்டும். உலக நன்மைக்காக என்றால் என் நன்மைக்காக என்று பொருள். பாபாவின் சித்தாந்தம் அப்படிப்பட்டது. பாபா அனைவரிடமும் மாதம் ஒரு கடிதம் எழுதுங்கள் என்கிறார். பாபா பதில் எழுதமாட்டான். கடிதங்களைப் படித்து சிந்திப்பான். அதில் நல்ல அம்சங்களுடன் தன் நல்லெண்ணத்தையும் சேர்ப்பான்.

இந்த உள்முக தியானம் இரண்டு விஷயங்களைப் பொறுத்தது. ஒன்று பாபாவைப் பொறுத்தது. அங்கே 'தான்' சூன்யமாக இருக்கவேண்டும். மற்றது அந்த முனையைப் பொறுத்தது. அங்கே 'ரேடியோ செட்' வேண்டும். அங்கே மனம் கட்டுக்களின்றி திறந்ததாக இருக்கவேண்டும், அப்போது தான் பயன் விளையும், வேலை நாம் செய்வதில்லை காலமே செய்கிறது. காலம் நமது செயல்களைப் பெரிதும் உந்துகிறது. அது நம் உதவிக்காக எப்போதும் தயாராக இருக்கிறது.

### பாபா ஒரு சோம்பேறி

*பிப்ரவரி, 1972:* ஸ்ரீமன்ஜி சூட்சுமப் பிரவேசத்தின் பயன் என்ன என்று கேட்கிறார். அதன் பயன் என்ன என்றால், பாபா நாளுக்கு நாள் சோம்பேறியாகிக் கொண்டிருக்கிறான் என்பதுதான். மக்கள் பாபாவை பிரம்மச்சாரி என்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு அதன் காரணம் தெரியாது. காரணம் பாபா ஒரு சோம்பேறி என்பதுதான். பொய் சொல்ல வேண்டுமானாலும் மிகவும் யோசித்து சூழ்ச்சி செய்ய வேண்டியிருக்கிறது. யாரையாவது அடிக்கவேண்டும் என்றால் கையைத்தூக்கவேண்டியிருக்கிறது. பாபா சோம்பேறி. வரவர அவன் சோம்பல் அதிகமாகிக் கொண்டேயிருக்கிறது.

நாட்டு நிலையைப் பற்றிச் சிந்திப்பதையும் பாபா நிறுத்தி விட்டான். அதை இறைவன் தலையில் போட்டுவிட்டான். செய்தித்தாளை மட்டும் புரட்டி எங்கே என்ன நடக்கிறது என்று கொஞ்சம் தெரிந்து கொள்கிறான்.

'உங்கள் நுண்ணிய பார்வையில் நம் இயக்கத்தின் எதிர்காலம் எப்படி இருக்கும்' என்று கேட்கிறார்கள். மிகப்பிரகாசமாக இருக்கும். தொண்டர்கள் குறைவற்றவர்கள், சிறப்பானவர்கள் என்பதால் அல்ல. தொண்டர்களில் குறைகளும் இருக்கலாம் நிறைகளும் இருக்கலாம். நம் இயக்கத்தின் எதிர்காலம் பிரகாசமாக இருக்கும் என்பதற்குக் காரணம் இந்தியாவுக்கு இதை விட்டால் வேறு வழியில்லை என்பதேயாகும். இந்தியாவுக்கு இந்த இயக்கம் மிகத்தேவை. எனவே இந்த வேலை நம் கையால் நடக்காவிட்டால் வேறு யாருடைய கைகளிளாவது நடக்கும், நடந்தே தீரும்.

### மேலும் சூட்சுமத்தை நோக்கி

*ஜூலை, 1972:* இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நான் இங்கு வந்தேன். ஒரு வருடம் வரை காரில் அங்கும் இங்கும் போய்க் கொண்டிருந்தேன். ஆனால் ஒருவருடம் முன்பு க்ஷேத்திர சன்னியாசம் வாங்கிக் கொண்டேன்.

அப்போதிருந்து இந்த இடத்திலேயே இருக்கிறேன். நாளையிலிருந்து மூன்றாவது வருடம். எனவே மேலும் சூட்சுமத்தை நோக்கி முன்னேறுவது இயற்கைதான். இரண்டு வருடங்கள் இங்கே துப்புரவுப்பணியில் நிறைய நேரம் ஒதுக்கி வந்தேன். இந்த வளாகம் முழுவதையும் பெருக்கிவந்தேன். பிறகு குடிலுக்கு முன்பு மட்டும் துப்புரவு செய்து வந்தேன். நாளையிலிருந்து துப்புரவுப் பணியை நிறுத்துகிறேன். கீதைப் பேருரைகள் முதலியவற்றில் கையெழுத்திட்டு வந்தேன். நாளையிலிருந்து அதையும் நிறுத்துவேன். நாற்பது ஆண்டுகள் கீதைப்பேருரைகள் பிரச்சாரம் நடந்தது. 1932-லிருந்து 1972 வரை. இனி மக்கள் தங்கள் சக்தியின்படி செய்ய வேண்டியதைச் செய்வார்கள். அதைப்பிரச்சாரம் செய்யவேண்டும் என்கிற பற்று என்னிடம் இருக்கலாகாது. அது தொண்டர்கள் வேலை. இன்னும் சில தீர்மானங்களும் உள்ளன. மெல்ல மெல்ல வெளியிடுவேன்.

சென்ற ஆண்டு மூன்று பருவகாலங்களிலும் நான் நோய் வாய்ப்பட்டேன். இந்த ஆண்டு மூன்றில் எதிலுமே நோய்வாய்ப்படவில்லை. தலைமட்டும் சற்று சுற்றுவது போல இருக்கிறது. ஆயினும் தினம் ஒரு மைல் நடக்கிறேன். காலையில் அரை மைல். பிறகு இருமுறை கால் மைல்தினமும் அதிகாலையில் 15 - 20 நிமிடம் ஆசனங்களும், பிராணாயானமும் செய்கிறேன். புத்தகங்களிடமிருந்து சன்னியாசம் வாங்கிக்கொண்டாயிற்று. ஜப்பானிய அகராதி மட்டும் புரட்டுகிறேன்.- வேத கால நாகரீகத்துடன் ஜப்பானிய மொழிச்சொற்கள் எவ்வளவு தொடர்பு கொண்டுள்ளன என்று பார்க்கும் உத்தேசத்துடன் புரட்டுகிறேன். சுமார் ஒரு மணிநேரம் செஸ் விளையாடுகிறேன். இரவும் பகலும் சேர்த்து மொத்தம் பத்துமணிநேரம் படுத்திருக்கிறேன், அதில் எட்டுமணி நேரம் உறங்குகிறேன். தூக்கத்தில் கனவுகள் வருவதில்லை.

*பிப்ரவரி, 1973:* இப்போதெல்லாம் என் மனத்தில் எதுவுமே இருப்பதில்லை. மனமே இருப்பதில்லை. காலையில் உலவும் போது விடிவெள்ளி தெரிகிறது, பார்க்கிறேன், மக்கள் அங்கும் இங்கும் போகிறார்கள், பார்க்கிறேன். மரத்தைப் பார்க்கிறேன் ஆனந்தம், வெறும் ஆனந்தம். இப்படி என் பெரும்பாலான சமயம் மனமழிந்த நிலையிலேயே கழிகின்றது உரையாடும்போது அறிவு செயல்படுகிறது, மனமல்ல.

**ஷ நா ர க தே**

*25-2-1973:* பாபாவின் உள்முக தியானம் ஐந்து விஷயங்கள் பற்றியது - ஷ நா ர க தே. சங்கராச்சாரியார் தொடங்கிய ஐவகை வழிபாட்டுக்கு ஷ நா ர க தே என்று பெயர். 'ஷ' என்றால் ஷங்கர்; 'நா' என்றால் நாராயணன்; 'ர' என்றால் ரவி, சூரிய பகவான்; 'க' என்றால் கணபதி; 'தே' என்றால் தேவி. பாபாவின் ஷ நா ர க தே எது தெரியுமா? ஷங்கர் என்பது பிரம்ம வித்தை, அதாவது அனைவருக்கும் மங்களம் விளைவிக்கும் சிவன் (சிவம் என்றால் மங்களம் என்றே பொருள்). பிரம்மவித்தை இல்லாமல் நமக்கு மங்களம் உண்டாகாது. நமது இயக்கத்தை பொருளாதார இயக்கம் என்றோ சமுதாய இயக்கம் என்றோ கருதுபவர்கள், இயக்கத்தைப் புரிந்துகொள்ளவேயில்லை என்றே பொருள். அது ஒரு பக்கம் மட்டும் பார்ப்பதாகும். இந்த இயக்கம்

ஆன்மீக இயக்கமாகும். பிரம்ம வித்தையைச் சார்ந்தது ஆகும். எனவே தியானம், பிரார்த்தனை, சிந்தனை, ஆத்ம பரிசோதனை, சித்த சுத்தி முயற்சிகள் ஆகியவை இடையறாது நடைபெறவேண்டும். ஆக பாபாவின் உள்முக தியானத்தில் முதல் விஷயம் பிரம்ம வித்தையாகும். நாராயணன் மக்களைக் காக்கும் தெய்வம் அதாவது மக்களின் தெய்வம். எனவே என் நாராயணன் கிராம சுயராஜ்யமாகும். இது நான் தியானிக்கும் இரண்டாவது விஷயமாகும். சூரிய கிரணங்கள் நான்கு திக்குகளிலும் பரவுவது போல நமது சாந்தி சேனை பாரதம் முழுவதும் பரவ வேண்டும். நான்காவதாக கணபதி கல்வியின் கடவுள். பாபா ஆசார்யகுல் பற்றி தியானிக்கிறான். இது பாபாவின் நான்காவது தியானப் பொருள் ஆகும். ஐந்தாவது தேவநாகரி எழுத்து. இந்த ஐந்து விஷயங்களில் துணைவர்கள் என்ன செய்தனர், என்ன செய்கின்றனர் என்பதில்தான் பாபாவுக்கு ஆர்வம்.

**உபவாச தானம்**

*11-9-1973:* இந்நாட்களில் நான் உபவாசம் இருக்கிறேன். 11 ஆம் தேதி பாதி உபவாசம். 25 ஆம் தேதி பாதி உபவாசம். 11 ஆம் தேதி என் பிறந்த நாள். 25 ஆம் தேதி நான் வீட்டைத் துறந்த நாளாகையால் எனக்கு முக்கியமான நாள். இரண்டுதினங்களுமே சிந்தனைக்குச் சிறந்த தினங்கள். இரண்டு தினங்களும் சேர்ந்து ஒரு உபவாசம். என் உடல்நலமும் பாதிக்காதவண்ணம் இந்த ஏற்பாடு.

என் உணவுச் செலவு தினமும் சுமார் மூன்று ரூபாய். மாதம் மூன்று ரூபாய் மீதமாகும். ஆண்டுக்கு முப்பத்தாறு ரூபாய். சர்வசேவா சங்கத்திற்கு என் சார்பாக அதை தானமாகக் கொடுப்பது என்று தீர்மானித்திருக்கிறேன். நம் நண்பர்கள், தொண்டர்கள். தோழர்கள், சர்வோதயத்தில் ஆர்வம் உடையவர்கள் எத்தனைபேர் இந்தியாவில் இருக்கிறார்களோ, அத்தனைபேரும் சேர்ந்து மாதத்தில் ஒருநாள் உபவாசம் இருந்து, அதனால் ஏற்படும் வருடாந்தர மீதத்தை சர்வசேவா சங்கத்திற்குக் கொடுத்தால் அது ஒரு பெரிய தொண்டாகும் என்று நான் நினைக்கிறேன். இதுவரை நாம் நம் வேலைகளுக்கு எல்லாவிதமான தானங்களையும் பெற்று வந்தோம். அது சர்வ பிரம்ம உபாசனையாகும். இனி நிர்மல பிரம்ம உபாசனை செய்வோம். நிர்மலமான தானங்களைப் பெறுவோம். உபவாசம் தூய்மை தருவது, எனவே உபவாச தானம் தூய்மையானது.

**வெறும் பார்வையாளனாக**

*ஜனவரி, 1974:* பாபா இப்போதெல்லாம் உலகைப் பற்றி சிந்திக்கிறான். ஒருபுறத்தில் கிராமதானம், மறுபுறம் ஜெய்ஜகத். ஜகத் அதாவது உலகம் என்பதற்குக் குறைவாக பாபா பேசுவதே கிடையாது. இன்று உலகம் அறிவியலின் காரணமாக ஒன்றாகிவிட்டது. இதயம் ஒன்றாகவில்லை. அறிவு ஒன்றாகி விட்டது. இது பெரிய அபாயம். அறிவு ஒன்றாகி இதயம் ஒன்றாகா விட்டால் மனித இனத்தினுள் சண்டைகள் மூளும். அறிவுக்கும் இதயத்திற்கும் சண்டை. பெயர்கள் வெவ்வேறு வழங்கலாம். எனவே நாம் உலக அரசியலை கவனித்துவரவேண்டும். இப்போதெல்லாம் பாபா பெரும்பாலும் உலக அரசியலையே கவனிக்கிறான். இதற்காகவே பாபாவிடம் உலகப் படம்

இருக்கிறது. எல்லா நாட்டின் விபரங்களும் - எங்கே எவ்வளவு ஜனத்தொகை., எங்கே எந்த அரசு - முதலிய எல்லா விபரங்களும் பாபா வைத்திருக்கிறான். உலக அரசியலை ஆராயவேண்டும். ஆனால் நம்மை அதிலிருந்து பிரித்து வெறும் பார்வையாளனாக வைத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அரசியலில் பிளவுபடுவது போல நாமும் பிளவுபட்டுவிடுவோம்.

### நாட்டிற்கு அபாயம்

ஏப்ரல், 1974: இந்தியாவில் இன்று பலவகையான அதிருப்திகளும், பிரச்சினைகளும் உள்ளன. ஆனால் எந்தச் சூழ்நிலையிலும், எக்காரணம் கொண்டும் வன்முறையைக் கையாளக்கூடாது. அதற்கு ஊக்கம் தரலாகாது. பாகிஸ்தான், இந்தியா, வங்கதேசம் மூன்றுக்குள்ளும் சமரசம் ஏற்படும் வரை அரசாங்கத்திற்கு எதிராக வன்முறை இயக்கங்கள் கூடவே கூடாது. அது மட்டுமல்ல. அஹிம்சாபூர்வமான எதிர்ப்பு இயக்கங்கள் கூட நடை பெறலாகாது. இல்லையேல் நாட்டுக்கு அபாயம். அமைதியான ஆக்கத்திட்டங்கள் மட்டுமே செய்யப்படவேண்டும். ஆக்க வேலைகள் மூலமாகவும் நாட்டின் வறுமையையும், ஏழ்மையையும் ஒழிக்க எவ்வளவோ செய்யமுடியும்.

### என்னைப்பற்றி

10-7-1974 பக்தியில் ஒருவகை தன்னை சமர்ப்பித்தல். நான் உங்களை ஆராதிக்கிறேன். நீங்கள் என் கடவுள்கள். எனவே தன்னைப்பற்றி கொஞ்சம் சமர்ப்பித்துக்கொள்கிறேன். இப்போது என் வாழ்க்கையை எப்படிக் கழிக்கிறேன் என்று கூறுகிறேன். இரவு பத்துமணிநேரம் படுக்கையில். இதில் 2 - 2½ மணிநேரம் சிந்தனை-தியானம். மீதி தூக்கம். இறைவன் அருளினால் தூக்கத்தில் கனவுகள் கிடையாது. தினசரி அலுவல்களில் பலர் வருகின்றனர். அதுபற்றிய சிந்தனைகள் உண்டுதான். ஆனால் முக்கிய சிந்தனை விஷ்ணு ஸஹஸ்ர நாமம்தான். பாபா அதையே சிந்தித்து வருகிறான். அன்பளிப்பாக புதிய நூல்கள் ஏதும் வந்தால் 7 - 8 நிமிடங்கள் அவற்றைப் பார்வையிடுகிறேன். விஷ்ணுஸஹஸ்ர நாமம் தவிர வேறு ஆன்மீக நூல்கள் பாபாவிடம் கிடையாது. மற்ற செய்தித் தாட்களில் நண்பர்கள் சிவப்பு மையினால் குறியிட்டவற்றை மட்டும் பார்க்கிறேன். 10 - 15 நிமிடங்களில் எல்லா செய்தித் தாட்களையும் பார்த்து விடுகிறேன். ஆங்கிலச் செய்தித்தாட்கள் அதிகம் பார்ப்பதில்லை. ராமகிருஷ்ண பரமஹம்சர் செய்தித்தாளைத் தொடுவது மில்லை. செய்தித்தாட்களில் லௌகிகமே நிரம்பிக்கிடக்கிறது என்பார் அவர். பாபா இன்னும் அவ்வளவு தூரம் போகவில்லை. கொஞ்சம் படிக்கிறான். சாப்பாட்டில் பழங்கள் சாப்பிடுவதில்லை. பாலும், வெல்லமும் சாப்பிடுகிறேன். என் சொந்த வாழ்வில் என்ன படிக்கிறேன். என்ன சாப்பிடுகிறேன் என்பது பற்றி விவரித்தேன். இனி என்ன வேலை செய்கிறேன், செய்ய விரும்புகிறேன் என்பதுபற்றிச் சிறிது கூறுகிறேன்.

இது மஹாவீரரின் 25ஆவது நூற்றாண்டு. அவருடைய வாக்குகளின் பால் என் கவனம் அதிகம் செல்கிறது. 2500 ஆண்டுகளுக்குப் பிறகும் அம் மனிதன் அசைக்க முடியாதபடி நிலைபெற்று நிற்கிறான். இந்தியாவுக்கு

மிகச்சிறந்த வழிகாட்டிய ஒருசிலரில் அவர் பெயரும் இடம்பெறும். எல்லாப்பிரிவினரும் ஏற்கும் ஜைனமதசாரம் ஒன்றைத் தயாரிக்கும்படி நான் ஜைனர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். இது நடந்துவிட்டால் இந்தியாவுக்குப் பெரும் தொண்டாற்றியதாகும். ஜைனமதத்தின் அறிவுரை களை அனைவரும் பூரணமாக சிறுநூலில் அறிந்துகொள்ள முடியும்.எனவே அந்த ஒரு வேலையை நான் எடுத்துக்கொண்டுள்ளேன்.

இன்னொரு வேலை தேவநாகரி எழுத்து வேலையாகும். நானும், நீங்களும் செய்யும் அனைத்து வேலைகளையும் மக்கள் மறந்து விடுவார்கள். ஆனால் இந்தியா முழுமைக்கும் ஒரு எழுத்து ஏற்படுத்தினால் அது ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு மக்கள் நினைவில் நிற்கும். ஒவ்வொரு மொழிக்கும் அதனதன் எழுத்து இருக்கலாம். அதை நாம் எதிர்க்கவில்லை. ஆனால் பாரதத்தை இணைப்பதற்கு அந்த எழுத்துக்களுடன் தேவநாகரியும் இருக்கவேண்டும். அதற்காக இப்போது நான் முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறேன்.

**பாபாவுக்கு அனைவரின் பேரிலும் நம்பிக்கை**

*12-7-1974 :* ஒரு விஷயத்தை பாபா திரும்பத்திரும்பக் கூறி வருகிறார். பாபாவுக்குஜெயப்பிரகாஷ்ஜி மீதும் நம்பிக்கை இருக்கிறது.இந்திராஜி மீதும் நம்பிக்கை இருக்கிறது; ஹேமாவதி பகுகுணா மீதும் இருக்கிறது, எஸ்.எம். ஜோஷி மீதும் இருக்கிறது; வசந்தராவ் நாயக் மீதும் இருக்கிறது; என்ன ஒரு விசித்திரம் பாருங்கள். எஸ்.எம். ஜோஷியும், நாயக்கும் ஒரு கட்சியைச் சேர்ந்தவர்கள் அல்ல. எதிர் எதிர் தரப்பினர். ஆனாலும் இருவரையும் பாபா நம்புகிறான். பாபாவின் நிலையை யோசித்துப் பாருங்கள். சரியோ, தப்போ, அவனுக்கு நம்பிக்கை இருப்பது நிஜம். நீங்களும் நம்பவேண்டும். உங்கள் விரோதிகளையும் நம்ப வேண்டும். அவர்கள் உங்களை எவ்வளவுக்கு நம்பாதிருக்கிறார்களோ அவ்வளவுக்கு அவர்களை நீங்கள் நம்புங்கள். பாபாவுக்கு பூட்டோவின் மீது நம்பிக்கை இருக்கிறது.

சமீபத்தில்தான் நமது ஒரு வாரம் மகாநாட்டு விவாதத்தில் கழிந்தது. சாதாரணமாக என் தூக்கத்தை எதுவும் பாதிப்பதில்லை. ஆனால் ஒருநாள் என் தூக்கம் பாதிக்கப்பட்டது. சர்வசேவா சங்கம் உடைந்து விடக்கூடாதே என்று சிறிது கவலை ஏற்பட்டது. அன்று எனக்கு தூக்கம் சற்று குறைந்தது. நான் எப்போதும் சேர்த்துவைக்க - உள்ளங்களைச் சேர்த்துவைக்க நினைப்பவன். நான் செய்த வேலைகள் யாவுமே - அது கிராமதான வேலை யானாலும் சரி, இலக்கியத் தொண்டானாலும் சரி - அடிப்படையில் உள்ளங்களை இணைக்கும் வேலையே. இதை நான் குர்ஆன் சாரம் என்னும் என் நூலின் முன்னுரையில் எழுதியும் உள்ளேன். உள்ளங்கள் பிரிந்து நிற்பது சரியல்ல என்பது என் எண்ணம். அறிவுவெவ்வேறாகப் பிரிந்து நின்றாலும் உள்ளங்கள் ஒன்றாக இருக்கவேண்டும்.இதற்காக நான் ஒரு காரியம் செய்தேன். அதுதான் சொல்லாற்றல். ஒரு சொல்லின் அடிப்படையில் இதயங்கள் இணையலாம்.

நான் மூன்று சொற்களை அளித்தேன் - சத்தியம், அஹிம்சை, கட்டுப்பாடு. செய்கையில் எப்படி இருந்தாலும் சத்தியம், அஹிம்சை

இரண்டையும் முன்பே நாம் உருப்போட்டுக்கொண்டுதான் இருக்கிறோம். அவற்றுடன் நான் கட்டுப்பாடு என்பதையும் சேர்த்துவிட்டேன். அது மிக முக்கியமானது. கட்டுப்பாடு என்றால் நாவடக்கம். யாரையும் எதிர்த்துப் பேசாமை, மெச்சியே பேசுவது. ஒவ்வொருவரிடமும் ஒரு குணம் இருக்கும். ஒவ்வொருவரிடத்திலும் சத்தியத்தின் ஒரு கூறு இருக்கும். அதைப் பார்க்க வேண்டும். சேர்த்து வைக்கத்தான் உபாயம் தேட வேண்டுமேயன்றி பிரித்துவைக்க அல்ல. (சர்வசேவா சங்கம் முழுவதும் சுமார் 400 - 500 உறுப்பினர்கள் அடங்கியது) உடைய இருந்தது. அவர்களுக்கு ஏகமனதாக ஏற்கப்படும் தீர்மானங்களை மட்டுமே ஏற்கவும், சத்தியம், அஹிம்சை, நாவடக்கம் ஆகியவற்றைக் காத்து தத்தம் விருப்பத்திற்கேற்ப பணிபுரியும் படியும் எழுத்து மூலம் கூறினேன்.

**ஓராண்டு மௌனம்**

*13-12-1974:* மௌன விரதம் பூணவேண்டுமென்று என் மனதுக்குத் தோன்றுகிறது. வரும் 25ஆம் தேதி மார்கழி ஏகாதசியன்று கீதை ஜெயந்தியாகும். கிறிஸ்துமஸ் கூட. நல்ல நாள். அன்றிலிருந்து ஓராண்டு மௌனம்.

இது என் மாதவ பக்தி. பழங்காலத்தில் நம்மவர்கள் ஒவ்வொரு எழுத்தையும் தியானிப்பார்கள். ஒவ்வொரு எழுத்தையும் உபாசிப்பார்கள். 'மாதவ' என்னும் சொல்லில் மூன்று எழுத்துக்கள் உள்ளன. 'மா' என்றால் மௌனம்; 'த' என்றால் தியானம்; 'வ' என்றால் வித்யா அதாவது பிரம்ம வித்தியா.

வேறு செய்யவேண்டிய வேலைகளும் இருக்கின்றன. அவற்றை விட்டு விடுவதா? ஆன்மீகத் தீர்மானம் செய்யும்போது சில விஷயங்களை தகர்த்து விடத்தான் வேண்டும். அந்த வேலையை முடித்து விட்டு மௌனம் இருப்போம், இந்த வேலையை முடித்துவிட்டு மௌனம் இருப்போம் என்பதெல்லாம் நடவாது. சன்னியாசத்தில் சிலவற்றை அறுக்கவே வேண்டும். அறாமல் பெறமுடியாது.

பாபா பேசியபோதும் மௌனமே காத்தான். இப்போது மௌனமாக இருந்து பேசுவான். "குருவின் மௌனமும் விளக்கவுரையே, மாணவர்கள் ஐயம் அகன்றது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த மௌனம் சீடர்களைச் சார்ந்து சும்மா நிற்காது. மௌனம் தானே பலவந்தமாக உள்ளத்தில் பிரவேசிக்கும். சூரிய ஒளி கதவுக்கு வெளியேதான் நிற்கும். கதவு மூடியிருந்தால் உள்ளே போகாது. இந்த மௌனம் அப்படியல்ல. கதவைத் தள்ளித் திறந்துகொண்டு உள்ளே போகும். பலவந்தமாகப் பிரவேசிக்கும்.

*25-12-1974 :* இந்த மௌன விரதத்தில் பேசாமை மட்டுமல்ல. எழுதாமையும் இருக்கும். பாபா எழுதுவதை நீடித்திருந்தால் சௌகரியமாக இருக்கும். ஆனால் அதுவும் நிறுத்தப்பட்டது. 'ராம ஹரி' என்பதைத்தவிர பாபா எதையும் எழுதமாட்டான். பாபா சூட்சுமத்தில் பிரவேசித்தபின்னும் சில நாட்கள் கர்ம நீரோட்டத்துடன் கொஞ்சம் பயணித்தான். பிறகு பிரம்ம வித்யா மந்திர்.வந்து சேர்ந்தான். ஓரிடத்து ஒடுக்கம் மேற்கொண்டான். இங்கும்

எவ்வளவோ லௌகீக விஷயங்களில் ஈடுபட்டு அவைபற்றி உரையாடினான். அதுவும் ஆற்றில் விழுந்த இலை அடித்துக் கொண்டு போவது போன்ற ஒரு தன்னிச்சையற்ற பயணம் என்று கருதியே அவற்றை பாபா மேற்கொண்டான். 8 - 8½ வருடங்கள் அவ்வண்ணம் கழிந்தன. இந்த ஆற்றொழுக்குப் பயணத்தில் கர்மப்பற்று ஏற்படாவிட்டாலும் உள்முக தியானத்தின் ஆற்றல் மேலும் சூட்சுமத்தில் பிரவேசிக்காவிட்டால் வெளிப்படாது என்று பாபாவுக்குத் தோன்றியது. எனவே இனி பேசுவது, எழுதுவது இரண்டையும் நிறுத்துவது என்று முடிவெடுத்தேன்.

பாபாவின் காதுகளை இறைவன் முன்பே மூடி விட்டான். இரண்டு மூன்று காதுகேட்கும் கருவி பாபாவிடம் அனுப்பப்பட்டன. பாபா அதைப் பொருத்திக் கேட்டுப் பார்த்தான். பிரமாதமாகக் கேட்டது. 10 - 12 நாட்கள் பொருத்தியிருந்தேன். பிறகு விட்டு விட்டேன். இறைவன் செவிப்புலனைப் போக்கியருளியிருக்கும் போது இந்தக் கருவி எதற்கு? இறைவன் அருளால் பாபா மூன்றிலொரு குரங்காக முன்பே ஆகிவிட்டான். இப்போது இன்னொரு குரங்காக வாய்பொத்திய குரங்காக பாபா ஆகிக்கொண்டிருக்கிறான். மூன்றாவது, கண்பொத்திய குரங்கு பாபா கண் பொத்திய குரங்காவதற்கு பதிலாக கைகட்டிய குரங்காகிறான். கையினால் எழுதமாட்டான். அதாவது கைகட்டிய குரங்காக விளங்குவான். கண்ணை இன்னும் திறந்தே வைத்திருக்கிறான். எதற்காக? சில நண்பர்கள் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை அல்லது மாதம் ஒரு முறை, சில நண்பர்கள் எப்போதாவது திடீரென்று நினைத்துக் கொண்டு தேவைக்கேற்ப எழுதுகிறார்கள். அதைப்படித்து தியானத்தில் இருத்தி சிந்திப்பதற்காக கண்ணைத்திறந்து வைத்திருக்கிறேன். கடிதங்களில் உள்ள நுண்ணிய விஷயங்களின் மீதும், அவிழ்ந்த இதய முடிச்சுகளின் மீதும் உள்முக தியானம் தாக்கம் ஏற்படுத்துகிறது. இப்போது பேசுவதும் நின்றபின், டிரான்ஸ்மிட்டர் செட் இல்லாதவர்களுக்கும் செய்தி போய்ச் சேர்ந்து விடும். கதவு மூடியிருந்தாலும் பலவந்தமாக தள்ளித் திறந்து கொண்டு அச்செய்தி எழுதியவரைச் சென்றடைந்துவிடும். இது 8 - 9 வருடங்களாக நடந்து வருகிறது.

ஏன் ஒரு வருடம்தான் மௌனம் என்று சிலர் கேட்கலாம். இப்படிப் பட்ட கடுமையான ஆன்மீக சோதனைகளை அனுபவத்தின் மீதுதான் மேற்கொண்டு தொடர முடியும் என்பதே பதில். ஒரு சிற்றடி எடுத்துவைக்கிறேன். அவ்வளவுதான். வெறும் ஒரு ஆண்டுக்குத்தான். அதற்குப் பிறகு என்ன செய்வது என்று யோசிக்கவில்லை. அனுபவத்தின் அடிப்படையில் தீர்மானிக்கப்படும். (25-12-1974-லிருந்து 25-12-1975 வரை மௌனம்).

**சுயக்கட்டுப்பாடு**

*25-12-1975* : என் அனுசாசன பருவம் அல்லது சுயக்கட்டுப்பாட்டுக்காலம் என்றால் என்னவென்று சுருக்கமாகக் கூறுகிறேன். அனுசாசன பருவம் என்ற சொல் மகாபாரதத்தில் வருகிறது. ஆனால் அதற்கு முன்பே அது உபநிஷதத்தில் கையாளப்பட்டுள்ளது. பழங்காலத்தில் மாணவன் ஆசிரியரிடம் 12 வருடம் கல்வி பயில்வான். கல்விபூர்த்தியானபின் வீடு திரும்பும் முன் ஆசிரியர் இறுதி உபதேசங்கள் நல்குவார். அது பற்றி உபநிஷத்தில் வருகிறது. அதன்படி

வாழ்நாள் முழுவதும் மாணவன் ஒழுகவேண்டும். ஆசிரியர்கள் வழங்குவது சுயக்கட்டுப்பாடு. ஆட்சியாளர்கள் வழங்குவது புறக்கட்டுப்பாடு. புறக்கட்டுப்பாடே உலகை வழிநடத்தினால் உலகில் அமைதியே இராது. புறக்கட்டுப்பாட்டினால் என்ன விளையும்? பிரச்சினைகள் தீருவதுபோல தோன்றி மீண்டும் சிக்கலாகும். இந்த நாடகம்தான் உலகம் பூராவும் தற்போது நடைபெற்று வருகிறது. 'ஏ'யிலிருந்து 'இஸட்'வரை - ஆஃப்கானிஸ் தானத்திலிருந்து ஜாம்பியா வரை - சுமார் 300 - 350 ஆட்சிகள் உலகில் இருக்கும். அவைகள் குழுக்களாக அணிசேர்கின்றன, பிரிகின்றன. எங்கும் அமைதியின்மையும், வன்முறையும். ஆட்சியாளர்களின் கட்டளைப்படி நடப்பவர்கள் நிலை இது. இதற்கு மாறாக அறிஞர்களின் சுயக்கட்டுப்பாட்டுக் கொள்கைப்படி உலகம் நடக்குமானால் உலகில் அமைதி நிலவும். அறிஞர்கள் யார் என்று குருநானக்கின் மொழிவாயிலாக பாபா விளக்கியிருக்கிறான். அறிஞர்கள் அச்சமும், பகையும் அற்றவர்களாக இருக்கவேண்டும். அத்துடன் பாபா எத்தரப்பும் சாராமை அல்லது நடுநிலைமை என்பதையும் சேர்த்தான். அவர்கள் மனத்தில் அமைதியின்மையும், கொந்தளிப்பும் ஒருபோதும் ஏற்படாது. எந்த ஒரு விஷயத்தையும் அவர்கள் அமைதியாக சிந்திப்பார்கள். ஏகமனதாக உண்டாகிய சிந்தனையை மட்டும் மக்கள் முன்பு வைப்பார்கள். அவர்களின் வழிகாட்டுதலில் உலகம் நடந்தால் மக்கள் நன்மை பெறுவார்கள். உலகில் அமைதி நிலவும். இதுவே சுயக்கட்டுப்பாட்டின் அதாவது அறிஞர் கூறும் சுயக்கட்டுப்பாட்டின் பொருள். இப்படி அச்சமற்ற, பகையற்ற, ஒரம் சாராத அறிஞர்கள் காட்டும் வழியை ஆட்சியாளர்கள் எதிர்த்தால் அதற்கு எதிராக சத்தியாகிரகம் செய்யும் அவசியம் ஏற்படும். ஆனால் இந்திய ஆட்சியானது அறிஞர்கள் கூறும் சுயக்கட்டுப்பாட்டு நெறிக்கு எதிராக ஏதும் செய்யாது என்று பாபா நம்புகிறான்.

### ராம நாமமே மூச்சு

பிப்ரவரி, 1976 : உபநிஷதம் 'முற்றாக நூல்களை விடுக' என்று கட்டளையிடுகிறது. பாபா பல நூல்கள் படித்திருக்கிறான். ஆனால் பெரும்பாலானவற்றை மறந்துவிட்டான். விஷ்ணுசகஸ்ர நாமம் மட்டும் வைத்திருந்தான்; அதையும் விட்டுவிட்டான். இப்போது ராம ஹரி ஜபம் மட்டும் நடக்கிறது. 'மூச்சை வீணாக்காமல், மூச்சோடு ராம நாமத்தை ஜபியுங்கள்' என்ற பாடலைப் பின்பற்ற முயற்சி நடக்கிறது.

### எல்லாம் கனவு போல

18-4-1976 : பூதான வெள்ளி விழா : இந்தியாவில் நடந்த பூதான யாத்திரையின் வரைபடம் எதிரே உள்ளது. பாபாவுக்கு எல்லாம் கனவு போலத் தோன்றுகிறது. பாபாவுக்கு யாத்திரை செய்ததாகவே தோன்றவில்லை. யாரோ செய்வித்தமாதிரி இருக்கிறது. இந்தப் பாதயாத்திரையில் எவ்வளவு நிலம் பங்கிடப்பட்டது என்றெல்லாம் பாபா கணக்குப் பார்ப்பதில்லை. எவ்வளவு நட்புறவு வளர்ந்தது என்பதே பாபாவின் முக்கிய சிந்தனை. பாபாவுக்கு மிகவும் பயன் விளைந்தது. இந்தியாவின் பல்வேறு மொழிகளையும் கற்கவும் அம்மொழிகளின் தலைசிறந்த இலக்கியங்களை ஓதி உணரவும் வாய்ப்புக் கிடைத்தது. பாபாவுக்கு ஆயிரக்கணக்கானவர்களின் நட்பும் கிடைத்தது.

**தாயின் கட்டளை**

*31-5-1976:* ஏப்ரல் 25ஆம் தேதி பவுனார் ஆசிரமத்தில் மஹாராஷ்டிர ஆசார்யகுல் மகாநாட்டில் பேசும்போது நான் பசுப் பாதுகாப்பை மிகவும் வலியுறுத்தி ஆசிரியர்கள் (ஆச்சார்யர்கள்) அதற்கான பொறுப்பை ஏற்கவேண்டும் என்று சொன்னேன். இதுபற்றி ஒரு சிற்றறிக்கையும் வெளியாகி உள்ளது.

இதன்பின் மே 17ஆம் தேதி மகாராஷ்டிராவின் முதன் மந்திரி சங்கர் ராவ் சவாண் அவர்கள் என்னைக்காண பவுனார் வந்தார். அவருடன் உரையாடும்போது. நாட்டு முன்னேற்றத்திற்கு பசுவதைத்தடுப்பு அவசியம் என்று வலியுறுத்தி இது விரைவில் நடக்காவிட்டால் நான் சாகும் வரை உண்ணா விரதம் இருக்கவேண்டி வரும் என்று சொன்னேன்.

மே 29ஆம் தேதி சில தொண்டர்கள் மத்தியில் உரையாடும் போது நாடு முழுவதும் பசுவதைத்தடுப்புக்கு தீர்மானம் உருவாகாவிட்டால் என் பிறந்த நாளான செப்டம்பர் 11ஆம் தேதி நான் உண்ணாவிரதம் இருப்பேன் என்று தெளிவாக அறிவித்தேன். அதற்கு 3½ மாத காலம் அவகாசம் இருந்தது. சம்பந்தப்பட்டவர்கள் ஒரு முடிவுக்கு வர அவ்வளவு அவகாசம் போதும்.

*2-6-1976:* இந்த 1976ஆம் வருடம் பாபாவின் தாயார் பிறந்த நூறாவது ஆண்டாகும். பாபா தன் தாயை நினைக்காத நாள் ஒன்றாவது இருந்ததாக பாபாவுக்கு நினைவில்லை. சிறுவயதிலேயே அவர் எங்களுக்கு முதலில் துளசிக்குத் தண்ணீர் ஊற்றவும், பிறகு பசுவுக்குத் தீனி அளிக்கவும், பிறகே தான் சாப்பிடவும் கற்பித்தார். துளசிக்குத் தண்ணீர் ஊற்றாமல், பசுவுக்கு உணவளிக்காமல் சாப்பிடக்கூடாது என்பார். பாபாவின் தாய் பாபாவிடம் 'பசுவுக்காக ஏதாவது செய், ஆவினம் பிழைத்தால் பாரதம் பிழைக்கும்' என்கிறாள்.

இன்று இந்தியாவில் தினமும் லட்சக்கணக்கான பசுக்கள் கொல்லப்படுகின்றன. அவற்றின் இறைச்சியை வெளிநாடு அனுப்பி டாலர் சம்பாதிக்கிறார்கள். பாபாவுக்கு 81 ஆண்டுகள் நிறைய இன்னும் 3 மாதங்கள் உள்ளன. எவ்வளவு வாழ்நாள் மீதமுள்ளன என்று தெரியாது. மீதமுள்ள நாட்களை பசுவிற்கு அர்ப்பணிக்க பாபா தீர்மானித்திருக்கிறான். இதில் பாபா இறந்து பசு பிழைத்தால் நல்லதே. உயிரைக்கொடுத்தும் பசு காப்பாற்றப்படவில்லையென்றாலும் இறைவனை தியானித்த வண்ணம் பாபா சந்தோஷமாகவே போவான். பாபா தன் கடனைச்செய்தான் என்றாகும். பசுவைக்காப்பது இறைவன் திருவருளைச் சார்ந்தது அல்லவா?

*13-6-1976 :* பாபாவின் உண்ணாவிரத விஷயம் 'மைத்ரி' யில் வெளியானது. மைத்ரி இதழ்கள் கட்டுக் கட்டாக பறிமுதல் செய்யப்பட்டது. இதழ்கள் பறிமுதல் நடந்தபோது பாபா என்ன செய்தான் தெரியுமா? எட்ட நின்று கைகொட்டிச் சிரித்தான். 'ஜெய் ஜகத்' என்று கோஷித்தான். உபவாசச் செய்தியை வெளியிடும் துணிவில்லாத பத்திரிகைகள் வாழ்க! ஆனால் இன்றைய காலம் துணிந்திருக்கிறது, கிராமம் துணிந்திருக்கிறது, இம்மண்ணின் மைந்தன் துணிந்திருக்கிறான், இந்த தாய்பூமி துணிந்திருக்கிறது.

பத்திரிகையாளர்கள் துணிவதில்லை. சங்கரர் காலத்தில் பத்திரிகைகள் இருந்தனவா? புத்தர், மகாவீரர், ஏசுகிறிஸ்து காலங்களில் பத்திரிகைகள் இருந்தனவா? ஆனால் அவர்கள் கருத்து பரவியது போல வேறு எவரின் கருத்தும் பரவவில்லையே!

**மரணத்தின் மரணம்**

ஜுலை '76: பாபா பல விஷயங்களை மறந்து விடுகிறான். தினமும் மாலை தூங்கும்போது செத்துப்போகும் பயிற்சியை மேற்கொள்கிறான். மரணத்திற்குப்பின் நடக்கவேண்டியதை இன்றே இப்போதே நடத்துங்கள் என்கிறான் பாபா. மரணம் செத்து நாம் அமரத்துவம் பெறவேண்டும். தன் மரணத்தைத் தானே காணவேண்டும். எனவே தினமும் பாபா மரண ஒத்திகை பார்க்கிறான். அப்படி தினமும் 'சாகும்' போது பழைய விஷயங்களை எல்லாம் மறக்கிறான். காந்திஜிக்குத் தன் வாழ்க்கையின் பல நினைவுகள் இருந்திருந்தால் கடைசியில் சாகும்போது 'ஹே ராம்' என்று இறைவன் நாமத்தை உச்சரித்திருக்கமாட்டார்.

**அரை உணவு**

ஜுலை '76: நான் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து என் உணவை பாதியாகக் குறைத்துவிட்டேன். என் தாயார் என்னிடம் "நீ எவ்வளவு நாள் வாழ்வாய் என்பது தெரியாது. ஆனால் உன் உணவு இவ்வளவுதான் என்று தீர்மானிக்கப் பட்டுள்ளது" என்று சொல்வார் என்று பலமுறை சொல்லியிருக்கிறேன். "அந்த உணவை அதிகமான அளவில் விரைவாகத் தின்று தீர்த்து விட்டால் சீக்கிரம் செத்துவடுவாய். கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிட்டு வந்தால் பல நாட்கள் வாழ்வாய்" என்பார் அவர்.

உணவைக் குறைத்ததற்கு இன்னொரு காரணம், உண்ணாவிரதத்திற்கு ஆயத்தப்படுத்திக் கொள்வதாகும். முழு உணவிலிருந்து முழு உண்ணா விரதத்திற்குப் போவதை விட அரை உணவிலிருந்து முழு உண்ணாவிரதத்-திற்குப் போவது எளிது. (68 தோலா பாலும், 16 தோலா வெல்லமும் மட்டும்) (ஒரு தோலா- சுமார் 12 கிராம் - *மொழி பெயர்ப்பாளன்*)

நீருபாய், நான் நெய் - வெண்ணை சேர்த்துக் கொள்ள வேண்டும் என்கிறான். நான் கிருஷ்ணன் போல 'நான் வெண்ணை தின்னவில்லை அம்மா' என்று விளையாட்டாகச் சொல்லிவிட்டேன். "68 தோலாவும் 16 தோலாவும் சேர்ந்து 84 தோலா ஆகிறது. அதிலேயே 84 கோடி ஜன்மங்களையும் கடந்து விடலாம்" என்று சொன்னேன். உண்மை என்னவென்றால் 11-9-1976-லிருந்து முழு உண்ணாவிரதம் தொடங்க நேரிடலாம். முழு உணவிலிருந்து முழு உண்ணாமைக்குத் தாவுவது அதிர்ச்சியாக இருக்கும். எனவே நெய் முதலியவற்றை சேர்ந்துக்கொள்வது பற்றி 11-9-1976 க்குப்பின் யோசிப்போம்.

**சாத்வீக ஒத்துழைப்பு**

*10-8-1976 :* ஆகஸ்ட் 11 ஆம் தேதி நாடு முழுவதும் (பசுப்பாதுகாப்புக்காக) உண்ணாவிரதமும், பிரார்த்தனையும் நடைபெறும். இடைப்பட்ட ஒரு

மாதத்திற்கு பசுப்பாதுகாப்புப் பிரச்சாரம் நிறுத்தி வைக்கப்படும். இது அஹிம்சை சத்தியாகிரக முறையாகும். ஒருமுறை அஹிம்சை பற்றி உரையாடல் நடைபெற்றது. ஒருவர் சாத்வீக எதிர்ப்பு மேற்கொள்ளவேண்டும் என்று கூறினார். சாத்வீக ஒத்துழைப்பு - சரியாக சிந்திக்கவைப்பதில் சாத்வீக ஒத்துழைப்பு - அவசியம்; சாத்வீக எதிர்ப்பு அல்ல என்று நான் சொன்னேன். அவ்வண்ணமே நாம் ஒரு மாதம் பிரச்சாரத்தை நிறுத்தி வைத்திருந்தால் அதற்கு மிக நல்ல பயன் விளையும். அரசும் அமைதியடைந்து நிதானமாக இதுபற்றி ஆலோசிக்கும்.

*8-11-1976:* இந்தியாவில் பசுவதைப்பிரச்சினை பெருமளவு தீர்ந்துவிட்டது. இதற்கான காரணகர்த்தர்கள், இறைவனும், அன்னை ருக்மணி தேவியும், காந்திஜியும், இந்திராஜியும் ஆவர்.

முதலில் கூறிய மூவரும் மேலுலகத்தில் வாழ்கின்றனர். இந்திராஜி இப்பூமியில் இருக்கிறார். அவருக்கு நன்றி.

செப்டம்பர் 11ஆம் தேதி பாபா முழு உணவை மேற்கொள்வான்.

**காந்திஜியின் நிர்மாணப்பணிகளை மேற்கொள்வோம்**

*2-11-1976:* இப்போதெல்லாம் பாபா சொல்வதெல்லாம் ஒன்றுதான். அஸ்ஸாமில் சங்கரதேவ் என்று ஒரு மாபுருஷர் இருந்தார். அவர் ‘அரசியல், அரக்கர் சாஸ்திரம்’ என்று கூறியுள்ளார். எனவே அரசியலை மறந்து விடுங்கள். எத்தனையோ அரசர்களும், பேரரசர்களும் வந்தார்கள், போனார்கள், ஆனால் இந்தியா பெரியோர்களின் வாக்குகளைத்தான் நினைவில் வைத்திருக்கிறதே-யன்றி அந்த அரசர்களை அல்ல. எனவே பாபா, காந்திஜி நமக்களித்த நிர்மாணப்பணிகளை மேற்கொள்ள வேண்டும் என்று மட்டும் கூறுகிறான். ஊர்கள்தோறும் கதர், கிராமத்தொழில்கள், பசுப்பாதுகாப்பு, சாணஎரிவாயு நிலையம் முதலியனவற்றை ஏற்படுத்துங்கள். கிராமங்களை குடியினின்றும், வழக்காடு மன்றங்களி னின்றும் விடுவியுங்கள்.

1916-ல் நடந்த விஷயம் இது. பாபா கோச்ரப் ஆசிரமத்தில் காந்திஜியிடம் போய்ச் சேர்ந்துவிட்டான். காந்திஜி தினமும் உலாவப்போவார். பாபாவும் அவருடன் போவது வழக்கம். ஒரு நாள் வழியில் இருவரும் உரையாடினோம். காந்திஜி சொன்னார், “இதோபார் விநோபா, இந்தியாவில் ஏழுலட்சம் கிராமங்கள் உள்ளன. (அப்போது இந்தியா - பாகிஸ்தான் பிரியவில்லை). ஒவ்வொரு ஊரிலும் நாம் ஒரு கிராம ஊழியரை ஏற்படுத்தவேண்டும். அவனது வாழ்க்கை சமுதாயம் சார்ந்ததாக இருக்கவேண்டும். அவன் மக்களுக்கு வழிகாட்டி கிராம ஆற்றலை உருவாக்குவான். ஏழு லட்சம் கிராமங்களுக்கு ஏழுலட்சம் ஊழியர்கள் தேவை.” அது காந்திஜியின் கனவு. ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்து அதில் காந்திஜியின் செயல்திட்டங்களை முழுமையாக நிறைவேற்றிக் காட்டவேண்டும் என்று பாபா கூறுகிறான்.

*24-12-1976:* இன்று நான் சர்வோதய சம்மேளனக்காரர்களிடம் சொன்னேன், “இங்கே வந்து அரசியலை விவாதித்துக் கொண்டிருந்

தீர்களானால் நீங்கள் நலிவுற்று விடுவீர்கள். நீங்கள் கருத்து வேற்றுமை கொண்டு துண்டுகளாகச் சிதறுவீர்கள். அரசியலுக்கு உடைக்கத்தான் தெரியும். இணைக்கத் தெரியாது. ஆன்மீகம் இணைக்கிறது, அரசியல் பிரிக்கிறது. மெல்ல மெல்ல இந்த சர்வோதய அமைப்பே மறைந்துவிடும். மாறாக நீங்கள் ஆக்கப்பணிகளை மேற்கொண்டால், அரசியல் நினைவுகளை அகற்றி திட சித்தத்துடனும், சிரத்தையுடனும், ஈடுபாட்டுடனும் ஆக்கப்பணிகளில் ஆழ்ந்தால் உங்களுக்கும் நல்லது, உலகுக்கும் நல்லது. அதன் பயன் உலகம் முழுவதற்கும் ஆயிரம் வருடங்களுக்கு நீடிக்கும். இது என் யோசனை."

### பாபாவை முற்றாக மறந்துவிடுக

"உங்கள் கூற்றுப்படி காந்திஜியின் பெயர் வரலாற்றிலிருந்து அழிந்துவிடும் என்றாகிறது. எனில் உங்கள் பெயர் மட்டும் நீண்டகாலம் நிலைக்குமா" என்று பாபாவிடம் கேள்வி கேட்கப்பட்டுள்ளது. பாபா இறந்த 20 - 25 வருஷங்களுக்குள் பாபாவின் பெயரை நீங்கள் மறந்து விடுவீர்கள். ஒருவேளை ஒரு நூற்றாண்டு நினைவு வைத்துக்கொள்ளலாம். அதன்பின் யாரும் நினைவில் கொள்ளமாட்டார்கள். துகாராம் சுவாமிகள் இறைவனிடத்திலும், சான்றோர்களிடத்திலும் தன்னை மறந்துவிட வேண்டாம் என்று வேண்டிக்கொள்கிறார். பாபாவின் வேண்டுகோள் என்ன தெரியுமா? 'இறைவனே! என்னை முற்றாக மறந்து விடு. என்பதுதான்.' பாபா என்று ஒருவன் தோன்றினான் என்பதையே நினைவில் வைக்கவேண்டாம். காந்திஜிக்கும் தன் பெயர் நிலைப்பது பற்றிக் கவலை இருந்ததில்லை. ஆனால் ஒரு ஊரையாவது நீங்கள் தற்சார்பு உடையதாக ஆக்குவீர்களானால் காந்திஜியின் பெயரும், தொண்டும் நிற்கும். இல்லையென்றால் காந்திஜியின் கதை முடிந்துபோன கதை என்றே கொள்ள வேண்டும்.

### கர்ம விடுதலை

*25-12-1976:* இன்றைய புனித (கிறிஸ்துமஸ்) நாளில் பாபா அறிவிப்பதாவது -

"இன்றிலிருந்து பாபா எந்த ஸ்தாபனத்திற்கும் தாளாளனாக இருக்கமாட்டான். மைத்ரி ஆசிரமத்திலிருந்து வல்லபநிகேதன் வரை தான் ஏற்படுத்திய எந்த நிறுவனத்திற்குமோ, அல்லது வேறு நிறுவனத்திற்குமோ ஆலோசனைகளும் வழங்கமாட்டான்."

உரையாடல்கள் தனிப்பட்ட முறையில் தனி நபர்களுடன் மட்டுமே நடக்கும். பாபாவின் உரையாடல் விஷயங்கள் அனைவருக்கும் தெரியும் அறிவியலும், ஆன்மீகமும். அறிவியல் இப்போது மிக முன்னேறிவிட்டது. எனவே இப்போதெல்லாம் பாபா அறிவியல் பின்னால் போய் ஆராய்வதை விட்டுவிட்டான். உடல்நலம் பற்றிய அறிவியலை மட்டும் இன்னும் வைத்திருக்கிறான். இன்னொன்று ஆன்மீகம் என்றால் பிரம்மம், மாயை, ஜீவன் இவற்றைப்பற்றிய சொல், பொருள் ஆராய்ச்சியல்ல. 'இதய முடிச்சுகளை அவிழ்க்கும் ஆன்மீகம்'. இந்த இரண்டு விஷயங்களைப் பற்றி சொல்லவோ, கேட்கவோ விரும்புபவர்கள் வரலாம். 3-4 பேராக சேர்ந்தும் வரலாம்.

உரையாடல் தனிமையில் நிகழாது. பாபாவின் துணைவர்கள் அமர்ந்திருப்பர். அவர்களின் நடுவேதான் உரையாடல் நிகழும். இன்னொரு விஷயம். தாங்கள் செய்யும் தொண்டுகளைப்பற்றி நண்பர்கள் எழுதுகிறார்கள். அவைகள் வருகின்றனவேயன்றி, அதற்குப் பதில் எழுதுவதில்லை. ஆனால் அக்கடிதங்களை மனத்தில் இருத்தி பாபா சிந்திக்கிறான். அதனால் அக்கடிதம் எழுதுவோர்க்கு பலன் விளையக்கூடும்.

நல்வாழ்த்துக்கள் முதலியவற்றைக்கூட பாபாவிடமிருந்து எதிர்ப் பார்க்கவேண்டாம். வேறு ஒன்றும் கூறுவதற்கில்லை."

**வினோபா மதப்பிரிவு என்று ஒன்று உருவாக முடியாது**

*ஜூலை 1977:* பாபா மதப்பிரிவு என்று உருவாகி விடாமல் இருக்க என்ன முன்னெச்சரிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். என்று கேட்கப் பட்டுள்ளது. பாபா மதப்பிரிவு என்று ஒருபிரிவு ஏற்படவே முடியாது. பாபா ஹிந்து மதத்தை மட்டும் ஆராய்ந்து அதன் சாரம் எழுதியிருந்தால் அப்படி ஒரு பிரிவு தோன்றக்கூடும் ஆனால் பாபா தம்மபதம், கிறிஸ்தவமத சாரம், திருகுர்ஆன் சாரம் என்று பல மதங்களின் சாரத்தைத் தொகுத்திருக்கிறான். ஜபுஜிக்கு விளக்கவுரை எழுதியிருக்கிறான். இவ்வாறாக எல்லா தர்மங்களையும் ஆராய்ந்திருக்கிறான். எனவே பாபாவுக்கு ஒரு மதத்திற்குள் ஒரு தனிப்பிரிவு ஏற்படுவது நடைபெறாத காரியம்.

இன்னொரு விஷயமும் இருக்கிறது. தனக்குப் பின்னால் சிஷ்யனை தயார் செய்பவனுக்குத்தான் மதப்பிரிவு ஏற்படும். பாபாவுக்குச் சீடர்களே கிடையாது. பாபாவின் ஆசிரமங்கள்கூட. கூட்டுத் தவமுயற்சி மையங்கள் மட்டுமேயாகும்.

**ராம ஹரியே மூச்சு**

*11-9-1977:* டிசம்பர் 25ஆம் தேதியிலிருந்து பாபா கர்ம முக்திபெற்றான். யாருடனாவது உரையாடினால், அது தனிப்பட்ட முறையில் உடல்நலம், ஆன்மீகம் இரண்டைப் பற்றி மட்டுமே உரையாடுகிறான். பிறப்பு அறும் வழி பார்த்து பாபா "மூச்சை விரையமாக்காமல் மூச்சுதோறும் இறைநாமம் கூறும்" முயற்சியில் ஈடுபட்டுள்ளான். ராம ஹரி மட்டுமே சிந்தையில் நிற்க பாபா இடைவிடாது முயன்று வருகிறான். சாப்பிடும் போதும், உலவும்போதும், பிற வேலைகள் செய்யும்போதும் பாபாவின் இந்த முயற்சி இடையறாது நடைபெறுகிறது. இனி செய்யவேண்டியது ஒன்றும் இல்லை. இரவு தூங்கும் முன்பு பாபா பிரார்த்தனை செய்கிறான். "இறைவனே, உன் திருவடிகளில் தஞ்சம் புகுந்து விட்டேன். நாளை மறுபடி புதிதாகப் பிறந்தால் மீண்டும் உனக்குத் தொண்டு செய்வேன்" என்கிறான். பாபாவின் தனிச் சைதன்யம் அழிவது அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியையே தரும். மகிழ்ச்சியுடன் 'ராம ஹரி' என ஜபித்துக் கொண்டு அவன் உயிர் விடுவான் என்பதில் அவனுக்கு ஐயம் கிடையாது. இதுவே பாபாவின் இடையறாத சிந்தனை.

மூச்சை இழுக்கும்போது 'ராம்' என்று வெளிக்காற்றை உள்ளே இழுக்கவேண்டும். 'ஹரி' என்று உள்காற்றை வெளியே விடவேண்டும்.

வெளியே உள்ள தூயகாற்றை இழுப்பதுடன் ராம நாம உச்சாடனம் நிறைவு பெறுகிறது - உள்ளே ராமன் நிறைகிறான். உள்காற்றை விடுவதுடன் பாபங்களை நீக்கும் ஹரி நாம உச்சாடனம் நிறைவு பெறுகிறது. அத்துடன் பாபங்கள் அகலுகின்றன. இவ்வாறு 'ராம ஹரி' ஜபத்தை முடிந்த வரை செய்யவேண்டும். இதை பாபா எல்லோருக்கும் தெரிய கூறியிருக்கிறான்.

இது வாயால் ஜபிப்பது அல்ல. மூச்சை வாங்குவதும் விடுவதும், உயிர் இருக்கும் வரை நீடிக்கும். அத்துடனேயே ராம ஹரி பாவனையும் இருக்கவேண்டும். அதை உச்சரிக்க வேண்டும் என்பதில்லை. பாவனை இருந்தாலே போதுமானது.

டிசம்பர்.1977: பாபாவுக்கு வரும் கடிதங்களை 'இபுவே' எனலாம். சில கடிதங்களில் 'எவ்வளவு மட்டமான வேலை செய்திருக்கிறார்' என்று இகழ்ச்சி (இ) இருக்கும். சிலவற்றில் 'எவ்வளவு சிறப்பான வேலை செய்திருக்கிறாய் என்று புகழ்ச்சி (பு) இருக்கும். சிலவற்றில் இவ்விரண்டையும் விடுத்து வேண்டுகோள்கள் (வே) இருக்கும். சில மிகச்சிறந்தவை. அவற்றில் இ, பு, வே ஒன்றும் இருக்காது. 'ராம ஹரி' ராம ஹரி—, என்று மட்டுமே எழுதியிருக்கும். அவையே மிகச் சிறந்தவை.

**பாபா கட்டளையிடுவது இல்லை**

*25-3-1978:* பிரம்ம வித்யா மந்திர் ஆரம்பித்து இன்றோடு 19 ஆண்டுகள் நிறைந்தன. 19, இருபதாகும்; 20, இருபத்தொன்றாகும். இப்படியே மெல்ல மெல்ல வளரும். இங்கு இருப்பவர்கள் ஒருமைப்பாட்டுடனும் திடசித்தத்-துடனும் இருப்பார்களானால் பிரம்ம வித்தையைப் பரப்புவதற்காக எங்கும் அவர்கள் செல்ல வேண்டாம் என்பது பாபாவின் நம்பிக்கை. இவர்கள் ஓரிடத்தில் அமர்ந்திருக்கவே பிரம்மவித்தை உலகம் முழுவதும் சென்றடைந்து விடும். இதில் ஐயம் ஏதும் இல்லை.

கோவில், மடங்கள் ஆகியவற்றில் மூன்று விஷயங்கள் பொதுவாக காணப்படும் - பிரம்மச்சரியம், வலிந்தேற்ற எளிமை, கீழ்ப்படிதல். கிறிஸ்தவ மிஷனரிகளில் இது காணப்படுகிறது. இங்கும் மூன்று விஷயங்கள் உள்ளன. பிரம்மச்சரியம் இருக்கிறது. வலிந்தேற்ற எளிமை இருக்கிறது - உடலுழைத்தே வாழ்கிறார்கள். மூன்றாவது விஷயமாகிய கீழ்ப்படிதலுக்கு பதிலாக, கீழ்ப்படிதல் சம்பந்தமாக முழுச் சுதந்திரம் உள்ளது. இங்கே பாபா கட்டளை யிடுவதில்லை. இங்கு இருப்பவர்கள் முழுச் சுதந்திரம் உள்ளவர்கள். முழுச் சுதந்திரம் இருந்தும் கீழ்ப்படிந்து நடந்தால் அது சிறப்பு, இல்லாவிட்டால் கீழ்ப்படியக் கட்டளையிட்டதாகும்.

**மரண நினைவு தூய்மை தரும்**

*மே, 1978 :* பாபா மூத்தோர்கள் பட்டியல் ஒன்று தயாரித்திருக்கிறான். அதில் 24 பெயர்கள் உள்ளன. அதில் இப்போது 16 பேரே உயிரோடு உள்ளனர். மற்றவர்கள் மேலுலகம் சென்று விட்டனர்.

பாபா குளுகோஸ் கலந்த தண்ணீர் அருந்திவருகிறான். அதன் மொத்த கலோரி 640 ஆகும். மொத்தம் 16 தோலா குளுகோஸ். தொடர்ந்து இவ்வளவு குளுகோஸ் சாப்பிட்டு தண்ணீர் குடித்து வருவதாக வைத்துக் கொண்டால் பாபா எத்தனை நாள் உயிர் வாழ்வான்? 84 வருடங்கள் முழுமையாக வாழ்ந்து விடுவானா? அதற்கு இன்னும் 16 மாதங்கள் உள்ளன.

கீதைப் பேருரைகளில் 'மரண நினைவு தூய்மைப்படுத்தும்' என்று எழுதியுள்ளது. மரணத்தை நினைவு கூர்வது நல்லது. பாபாவின் தோழர்கள் பாபாவிடம் 'நீங்கள் ஏன் உணவின் அளவைக் குறைத்து விட்டீர்கள்?, என்று கேட்கிறார்கள்.பாபா தன் தாயார் கூற்றுப்படி உணவைக் குறைத்து விட்டான். 'குறைவாக உண்டு நிறைவாக வாழ்' என்று அவர் கூறுவது வழக்கம்.

**மரணத்தை வழிநோக்கி**

ஆகஸ்ட், 1978: வீட்டை விட்டுப் புறப்பட்டபோது தனிமையில் தியானம் பழகுவது, தவம் செய்வது என்பது பாபாவின் நோக்கம். ஆனால் காந்திஜியிடம் போய்ச் சேர்ந்தான். அவருடன் இருந்து அவர் கட்டளைகளை நிறைவேற்றினான்.

இப்போது பாபாவின் ஒரே வேலை மரணத்தை எதிர்நோக்கிக் காத்திருப்பதுதான். செய்ய வேண்டியதெல்லாம் செய்தாகிவிட்டது என்று தோன்றுகிறது. இப்போது செய்ய வேண்டியதெல்லாம் கர்ம முக்தி அடைந்து உங்களைப் போன்றவர்களின் வினாக்களுக்கு விடையளிப்பது. தன் எண்ணங்களை வெளிப்படுத்துவது, விளக்குவது, அவ்வளவுதான்.

உள்முக தியானம் பற்றி முன்பே பலமுறை விளக்கப்பட்டுள்ளது. பாபாவுடன் தொடர்பு கொண்டவர்களை மனத்தில் இருத்தி பாபா சிந்திக்கிறான். இப்படி 300 - 400 பேர்கள் உள்ளனர். நேற்று பாபா 'மைத்ரி' பத்திரிகையின் சந்தாதாரர்களின் பட்டியலைப் பார்த்தான். சுமார் 4000 சந்தாதாரர்கள் உள்ளனர். அவற்றில் 1000 பேர் நினைவுக்கு வந்தனர் - விஷ்ணுவின் சஹஸ்ர நாமங்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். இப்படி பரிச்சயம் ஏற்பட்டவர்களின் பெயர்கள் நினைவுக்கு வருகின்றன. அவர்களின் காமகுரோதங்கள் முதலான மன விகாரங்கள் குறையும் படி உள்முக தியானம் செய்கிறேன். பலன் கிடைக்கிறது.

11-9-1978: பாபா ஒரு மிக நல்ல விஷயம் சொல்லியிருக்கிறான்- "பாபாவை மறந்து விடுங்கள். கீதையை நினைவில் வையுங்கள்".

**அரை உபவாசம்**

டிசம்பர், 1978: இன்று வங்காளம், கல்கத்தா, கேரளா ஆகிய இடங்களில் நடந்துவரும் பசுவதையினால் பாபாவின் இதயம் துயரம் அடைகிறது. எனவே ஜனவரி முதல் தேதியிலிருந்து அரை உபவாசம் இருக்கத் தீர்மானிக்கிறான். முதலில் அது அரை உபவாசமாகவே இருக்கும். ஆனால் கோமாதா திருப்தியடைந்துவிடமாட்டாள் என்று பாபாவுக்குத் தெரியும். எனவே முழு

உபவாசம் இருப்பது பற்றியும் பாபா யோசித்து வருகிறான். பசுவைக் காப்பது இறைவன் வேலை. எனவே பாபா பசுப்பாதுகாப்பு என்று பேசுவதில்லை. மாறாக பசுவுக்கு சேவை என்றே கூறுகிறான். முடிந்தவரை பசுவுக்குத் தொண்டு செய்யவேண்டும். அவசியமானால் உயிரையும் தியாகம் செய்யவேண்டும், அவ்வளவுதான்.

**வாழ்வையும் போற்றோம், சாவையும் போற்றோம்**

*14-12-1978:* பாபா இப்போது கர்மமுக்தி பெற்றுவிட்டான். செய்ய வேண்டுவது என்று குறிப்பாக ஏதும் இல்லை. இப்படிப்பட்ட நிலையில் பாபா மரணத்தை சிந்திக்கிறான். இதனால் இறவாமை கைகூடும். மனுஸ்மிருதியில் 'வாழ்வையும் போற்றற்க, சாவையும் போற்றற்க, ஏவலன் போல் காலத்தின் கட்டளை எதிர்நோக்குக' என்று வருகிறது. பாபாவின் மனப்பாங்கு அத்தகையதே. வேலையாள், எஜமான் கட்டளையை எதிர்பார்த்து நிற்கிறானேயன்றி சாவையோ, வாழ்வையோ நாடி நிற்பதில்லை. வேலையாள், எஜமானின் கட்டளையை எதிர்நோக்குவதுபோல, காலனின் வழியை பாபா எதிர்நோக்கி நிற்கிறான்.

பாபா இரவுதோறும் சாவதற்கு ஒத்திகை பார்த்துக் கொள்கிறான். "இன்று இரவு என்னை அழைத்துக் கொண்டாயானால், பக்தியுடன் வந்து சேர நான் தயார். நான் செய்ய வேண்டியது எதுவும் குறிப்பிடப்படும்படியாக பாக்கி இல்லை. நாளை மீண்டும் பிறப்பு அளித்தாயானால் முடிந்த தொண்டை - முக்கியமாக வாக்கினால் ஆற்றக்கூடிய தொண்டை - செய்வேன்" என்று இறைவனிடம் கூறுகிறான்.

சாவு எதற்கு ஏற்படும்? உடலுக்கு. நாம் இறவாமை அடைவோம். ஏனெனில் பொய்யுடம்பு போய்விடுகிறதல்லவா? எக்காரணத்திற்காக தனியானதொரு இவ்வடிவத்தைத் தாங்கினோமோ அது முடிவடைந்து விடுகிறதல்லவா?

**தொடக்கம் -- வாழ்க வையகம்**

*25-12-1978:* சிலர் பசுவதைத் தடுப்பு பிரச்சாரத்திற்காக சற்று அவகாசம் கேட்கிறார்கள். இதற்கு 111 நாட்கள் தரப்படுகின்றன. உண்ணாவிரதம் ஏப்ரல் 22ஆம் தேதி நடைபெறும். அதுவரை பாபா சாப்பிடுவான் - அதாவது இப்போது எவ்வளவு சாப்பிடுகிறானோ (அரை உணவு) அவ்வளவு சாப்பிடுவான்.

*22-4-1979:* நான் சிறுவயதிலிருந்து இன்றுவரை குடித்துவரும் பாலை அளிக்கும் கோமாதாவை இறைவனே காப்பாற்றவல்லவன். நம்மால் ஆவது அவளுக்குத் தொண்டு செய்வதுதான். பாபா இறுதிவரை அவளுக்காக முழு உண்ணாவிரதம் இருக்க எண்ணுகிறான். மேற்கொண்டு இறைவன் சித்தப்படி நடக்கும். நாடுமுழுவதும் அனைத்து மாநிலங்களுக்கும், மக்களுக்கும், தொண்டர்களுக்கும், கோசேவைக்கு எழுச்சி கிட்டுவதாக! இனி பாபா வழக்கம்போல் 'முடிவு பெற்றது - ஜெய்ஜகத்' என்று கோஷிக்கமாட்டான். 'ஆரம்பம் - ஜெய்ஜகத்' என்று கூறுவான்.

*26-4-1979:* பிரதம மந்திரியும், காங்கிரஸ்காரர்களும் நாடுமுழுவதும் பசுவதையை நிறுத்த முழுமுயற்சி எடுப்பதாக பாபாவுக்கு வாக்களித்துள்ளார்கள். 'உடலுக்கு சுவாசம் எப்படியோ அப்படியே சமுதாயத்திற்கு விசுவாசம் முக்கியம்' என்று பாபா பலமுறை கூறியிருக்கிறான். விசுவாசம் அல்லது நம்பிக்கையே சமுதாயத்தின் உயிர்நாடி. பாபாவுக்கு வாக்களித்தார்கள். பாபா நம்புகிறான். அதன் பயனாக பாபாவின் உண்ணாநோன்பு 5 நாட்களில் முடிந்தது. இங்கே பரத்ராம் கோவில் இருக்கிறது. பரத்ராம் என்ற சொல்லில் 5 எழுத்துக்கள்; 5 தினங்களில் உண்ணாவிரதமும் முடிந்தது.

சுப்ரீம் கோர்ட் தீர்ப்பின்படி பசுவுக்கு முழு பாதுகாப்பும், காளைக்கு பதினைந்து வருடப் பாதுகாப்பும் அளிக்கப்பட வேண்டும். காளைமாட்டுக்கும் முழுப் பாதுகாப்பு கிட்ட வேண்டும் என்று பாபா விரும்பினாலும் இதை உண்ணவிரதத்திற்கான ஒரு பிரச்சினையாக ஆக்கமுடியாது. அதற்கு இன்னும் பிரச்சாரம் செய்யவேண்டும். உண்ணாவிரதம் குறைந்தபட்ச கோரிக்கைக்காகவே இருக்கமுடியும். பசுவுக்கு பூரண பாதுகாப்பும், காளைக்கு 15 வருட பாதுகாப்புமே குறைந்தபட்சக் கோரிக்கை.

இதை மொரார்ஜிபாய் செய்தார். அவருக்கு நன்றி.

பாபா விடுக்கும் செய்தி

*மே, 1980:* இப்போதெல்லாம் பாபா அனைவருக்கும் விடுக்கும் செய்தி ஒன்று தான் - 'பகலில் முடிந்தவரையிலும் ஏழைகளுக்குத் தொண்டு, இரவில் இறைநாமத்துடன் தூக்கம்.' "கூட்டு தவமுயற்சிகளுக்குள் தனிமனித தவமுயற்சிகள் வருமா? இரண்டும் எப்படிக் கைகூடும்" என்று ஒருவர் பாபாவிடம் கேட்டார். அதற்கும் இதுவே பதில் - 'பகலில் கூட்டு முயற்சி - அதாவது ஏழைகளுக்குத் தொண்டு. இரவில் தனி முயற்சி - அதாவது இறைநாம தியானம்.'

*ஜுன் 1980:* நம் வேலைத்திட்டம் என்னவாக இருக்கவேண்டும்? என்று பாபாவைக் கேட்கிறார்கள். பாபா பிரம்மவித்தை, கிராமராஜ்யம், சாந்திசேனை, ஆசார்யகுல், தேவநாகரி என்கிற பஞ்சமுக உபாசனையை முன்பே கூறியிருக்கிறான். ஆசார்யகுல் அமைப்பை வலுப்படுத்தலாம். சாந்திசேனை நிறுவலாம். ஆசார்யகுல் மற்றும் சாந்திசேனை உறுப்பினர்கள் எந்த ஒரு நிலையிலும் ஓட்டளிக்கக்கூடாது என்றும் பாபா கூறியிருக்கிறான். யாருக்குமே ஓட்டளிக்கக்கூடாது. நமக்கு சற்று பரந்த கண்ணோட்டம் வேண்டும். உலகப்பிரச்சினைகள் அனைத்துமே அடிப்படையில் ஒன்றுதான் என்பதை உணர்ந்து, சிந்தனையை உலகளாவியதாக வைத்துக்கொண்டு ஆனால் ஆற்றலை வட்டம், மாவட்டங்களில் செலுத்த வேண்டும். முழு ஆற்றலையும் முழு பக்தியுடன் ஈடுபடுத்தவேண்டும். இப்படிச் செய்தால் நாட்டில் ஆற்றல் பெருகும். ஒரு பக்கத்தில் வாழ்க வையகம், மறுபக்கத்தில் வளர்க கிராமதானம் என்பது நமது கோஷமாக இருக்கவேண்டும்.

**கடமைகள் முடிந்தன**

*11-9-1981:* இன்று பதினொன்றாம் தேதி, வெள்ளிக் கிழமை பாபாவுக்கு வயது 86. இந்த உடல் காலத்திற்கு உரியது. இறுதியில் போகக்கூடியது. இதை பற்றி நிற்பதில் என்ன இன்பம் இருக்கிறது?

இன்று பாபாவின் பிறந்தநாள் அவன் சாகும் அன்றும் இப்படியே அமைதியாக இருங்கள்.

*டிசம்பர், 1981 :* பாபா செய்வதற்கு இனி ஒன்றும் பாக்கியில்லை. அதனால்தான் பாபா தன் புத்தகத்தில் 'அவன் வேலை முடிந்தது, உங்கள் வேலை இனி ஆரம்பம்' என்று எழுதி வைத்திருக்கிறான்.

**பசுவதை எதிர்ப்பு சத்தியாகிரகத்திற்கு கட்டளை**

*24-12-1981:* தேவனாரில் மாடுகள் கொல்லப்படுகின்றன. இந்நாட்டில் எந்தவயது பசுவோ, காளையோ கொல்லப்படலாகாது என்பதற்கு பம்பாயில் சத்தியாகிரகம் செய்வீர்களாக. 1-1-1982-லிருந்து தேவனாரில் சத்தியாகிரகம் தொடங்கியது *(தொகுப்பாளர்)*.

*ஜுன் 1982:* 'ஒருவன் சாகிறான், மற்றவன் வருந்துகிறான். ஆனால் அவனும் ஒரு நாள் போய்ச் சேர்ந்து விடுகிறான். ஆனால் மராட்டிய பக்தர் ஒருவர் மகன் இறந்தபோது 'நல்லதாகப் போயிற்று, பந்தங்கள் அற்றன, இனி நிம்மதியாக இறைவனை பூஜிக்கலாம்' என்கிறார்.

எல்லோரும் சாகத்தான் போகிறோம். ஆனால் சாகும்போது இறைவன் நாமம் மனத்தில் இருக்குமா என்பதே கேள்வி. கடைசி நிமிடத்தில் இறைவன் நாமம் நினைவில் இருப்பதற்கு வாழ்நாள் முழுவதும் அதற்காக முயற்சியில் ஈடுபடுதல் வேண்டும்.

*11-9-1982:* இன்று பாபாவின் உடலுக்கு பிறந்தநாள். பிறந்தநாள் பாபாவுக்கு அல்ல; பாபாவின் உடலுக்காகும். உங்களுக்கு எப்போதுதான் பிறந்தநாள் என்று மணி கேட்கிறான். பாபா பிறப்பதேயில்லை. இன்று கூட்டத்தில் பாபா என்ன சொன்னான் தெரியுமா?

"வாழ்க வையகம் என்று அறை கூவிச் செல்
பிறருக்காக தன்னலம் மறந்து செல்".

அக்டோபர், 1982: சங்கராச்சாரியார் கீதைக்கு உரை எழுதி பதினோராம் அத்தியாயத்தின் இறுதி சுலோகத்தை கீதையின் சாரம் என்று கூறியிருக்கிறார்.

"மனத்தில் ஆழ்ந்த பக்தியுடன் எனக்காகவே கர்மம் ஆற்றுபவன், உலகில் பற்றும் துவேஷமும் அற்று என்னையே சார்ந்திருப்பவன், இறுதியில் என்னையே அடைகிறான்."

## சமாதி

'உடல் மிகத்துன்புறும்போது சித்தமானது அதிலிருந்து முற்றுமாக விலகுவது எவ்வளவு தூரம் சாத்தியம்? தியானயோகத்தில் இது ஓரளவு சாத்தியமே. ஆனால் நான் அதைப் பெரிதாக மதிக்கவில்லை. துன்பம் மரப்பு மருந்துகளாலும்கூடக் குறைய முடியும். அறுவை சிகிச்சையின்போது குளோரோபார்ம் கொடுத்து உடல் உறுப்புகளை அறுக்கிறார்கள். ஆயினும் அது மனிதனுக்குத் தெரிவது கூட இல்லை. தியானயோகத்தில் இவ்வளவு தூரம் சாதிக்க முடியும் என்று அனுபவரீதியாக யாரும் காட்டியதாக எனக்குத் தெரியாது. ஆயினும் ஓரளவாவது தியானயோகி துன்பத்திலிருந்து சித்தத்தைத் தனியே வைக்கமுடியும் என்று நான் அறிவேன். அப்படியும் இதை நான் பெரிதாக நினைக்கவில்லை. துன்பத்தை அறிந்தும், அதை உணர்ந்தும், நாம் அதிலிருந்து வேறுபட்டவர்கள், அதற்கு நாம் வெறும் சாட்சிகள் மட்டுமே என்று கருதி உள்ளம் கலங்காதிருப்பதுதான் பெரிய விஷயமாகும்.'

நவம்பர் 5ஆம் தேதி பாபாவுக்கு நாள் முழுவதும் இலேசான ஜுரம் இருந்தது. இரவு 8-15 க்கு அதிகமாக சுகவீனமுற்றார். மூச்சு வேகம் அதிகரித்தது. நாடி வேகமாக துடித்தது. உடல் முழுவதும் வியர்த்து நடுங்கியது. டாக்டர்கள் 'ஹார்ட் அட்டாக்' என்று கணித்தனர். வைத்தியம் துவங்கியது. ஏழாம்தேதி டாக்டர்கள் 'உடல்நலத்தில் திட்டவட்டமான முன்னேற்றம் காணப்படுகிறது' என்று கூறினர்.

எட்டாம் தேதி இரவு 8-15 க்கு தண்ணீரோ, மருந்தோ அருந்த மறுத்து விட்டார். ஒன்பதாம் தேதியும் நீர், மருந்து, உணவு எதையும் உட்கொள்ள மறுத்துவிட்டார். வாய் திறந்து ஒன்றும் கூறவில்லை. ஆனால் தண்ணீர், மருந்து அல்லது உணவு எதிரில் வந்தாலோ அல்லது அவற்றை அருந்துமாறு வேண்டிக்கொண்டாலோ மறுத்துவிட்டார். டாக்டர்களின் அறிக்கை, "உடல்நலத்தில் திட்டவட்டமான முன்னேற்றம் காணப்படுகிறது. முழு உடல் நலம் பெறுவதற்கான சாத்தியக் கூறுகள் அனைத்தும் உள்ளன. ஆனால் தண்ணீர், உணவு, மருந்து உட்கொள்ள மறுப்பதால் உடல்நலத்திற்கு பெரும் அபாயம் ஏற்பட வாய்ப்பு உள்ளது" என்று கூறியது.

மிகுந்த களைப்பான சூழ்நிலையிலும் அருகில் வருபவர்களிடம் ஓரிரு வார்த்தைகள் பேசினார். சிலரின் தொண்டு வேலையை நினைவுகூர்ந்தார். சிலரின் பெயர்களை நினைவுகூர்ந்தார். இந்த கருணைப் பெருக்கு தடைபடாது பெருகிய வண்ணமே இருந்தது.

12ஆம் தேதி டாக்டர்களின் அறிக்கை 'உடல் நலத்தில் சீர்கேடு இல்லை' என்று கூறியது. 14ஆம் தேதி "பலகீனம், களைப்புக்கிடையில் அவர் முழு பிரக்ஞையுடன் இருக்கிறார். அவருடைய முகம் ஆன்மீக தேஜஸினால் ஒளி வீசிக் கொண்டிருக்கிறது. 14ஆம் தேதி மாலை நாடித்துடிப்பு மங்கியது. ரத்தஅழுத்தம் ஒரேயடியாகக் குறைந்தது. டாக்டர்கள் பெரும் அபாயம் என்று கூறினர். ஆனால் 1½ மணி நேரம் கழித்து ரத்தஅழுத்தமும், நாடித்துடிப்பும் சாதாரணமாயிற்று. உடலின் வெப்பநிலையும் சாதாரணமாகி விட்டது. காலை நான்கு மணி வரை டாக்டர்கள் நாடி மற்றும் ரத்த அழுத்தத்தைப் பரிசோதித்த வண்ணம் இருந்தனர். எல்லாம் முற்றிலும் சாதாரணமாக இருந்தது. பிறகு அவருடைய நிலை விந்தையானது என்று கூறி அவரைப் பரிசோதிப்பதை நிறுத்திவிட்டனர்.

*15, நவம்பர்:* காலை 7-30 மணிக்கு முந்தைய இரவு ஆசிரமம் வந்திருந்த ஒரு பிரான்ஸ் நாட்டுச் சகோதரி அவரை தண்ணீர் அருந்துமாறு வற்புறுத்தினார். அதற்கு விளையாட்டாகவும் முகமலர்ச்சியுடனும் அவர் "நீயே குடி" என்று சைகை செய்தார். பிறகு 'ராம ஹரி' என்று எழுதப்பட்ட பலகையைச் சுட்டிக் காட்டினார்.

*காலை 9-30 மணி:* முகத்தில் முழு அமைதி. கண்கள் மூடியிருந்தன. உடல் தூய்மையாகவும் அப்பழுக்கற்றும் இருந்தது. மூச்சு வந்து போய்க் கொண்டிருந்ததே ஒரே சலனம். கால்கள் 'ராம ஹரி' என்று தாளமிட்டுக் கொண்டிருந்தன. அது மிக நெருக்கடியான நிலையிலும் இடைவிடாது நடைபெற்றுக்கொண்டிருந்தது. சரியாக 9-30க்கு மிக மிக இயல்பாக அவர் தன் இறுதி மூச்சை விட்டார்.

நிறைவு.

வாழ்க வையகம் - அனைவருக்கும் வணக்கம்.

"ராம ஹரி"

- தொகுப்பாளர்

நான் ஒரு வழியை சோதனை செய்து கொண்டிருக்கிறேன். அகிம்சையைப்பற்றி ஆராய்வது என்னுடைய வாழ்க்கைப் பணியாக இருந்து வருகிறது. நான் தொடங்கிய ஒவ்வொரு செயலும், மேற்கொண்ட ஒவ்வொரு பணியும் அந்த ஒரு சோதனைக்காகவே நடைபெற்றன, இன்னும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அகிம்சையின் முழுமையான ஆராய்ச்சிக்காக, உண்மையில், உடம்பையே விட்டுவிட வேண்டும். அந்த நிலை கைகூடாத வரைக்கும், முடிந்த அளவு உடம்பிலிருந்தும் நிறுவனங்களிலிருந்தும் பணத்திலிருந்தும் தனித்திருந்து பணி செய்வதே என்னுடைய போக்காக இருந்திருக்கிறது. சமுக வாழ்வில் அகிம்சை எங்ஙனம் பெருமைக்குரிய இடம்பெற்று நிலைபெறும் என்ற சோதனைதான் அது.

– வினோபா